ஸ்ரீ:



ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிய

# சில்லரை ரஹஸ்யங்கள்

## மூன்றும் பாகம்

(மூலம், கீழ்க்குறிப்பு, பிற்சேர்க்கை)


மூலக்ரந்த பரிசோதனை :

ஜனாதிபதி விருது பெற்ற ஸ்ரீ. உ. வே. வித்வான்

வ. ந. ஸ்ரீராமதேசிகாசார்யர் ஸ்வாமி

ஒப்பிலியப்பன் ஸந்நிதி.

கீழ்க்குறிப்பு :

ஸ்ரீ உ. வே. வித்வான்

தி. ஈ. ரங்கநாதாசார்யர்

நங்கநல்லூர்.



புத்தக அமைப்பு :

ஸ்ரீ. S. பார்த்தஸாரதி

பெஸன்ட் நகர்.

வெளியீடு :

பௌண்டரீகபுரம் ஸ்ரீமதாண்டவன் ஆச்ரமம்

ஸ்ரீரங்கம்.

First Edition : 1995

Copies : 1000



**Price Rs.** 150

This book is published with the Financial Assistence of he Tirumala - Tirupati Devasthanams, Tirupati, under the scheme "Aid to Publish Religious Books".

Printed at

Elango Achukoodam,
166, R. H. Road,
Mylapore, Madras - 4.
Phone : 4991821

# பொருளடக்கம்


| | |
|---|---|
| ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீமுகம் | v |
| பதிப்புரை | ix |
| குறியீட்டு விளக்கம் | xv |
| ப்ரதாநசதகம் | 2 |
| உபகார ஸங்க்ரஹம் | 41 |
| பூர்வோபகாரபரம்பராதிகாரம் | 42 |
| ஸாதநாதிகாரம் | 66 |
| நிர்யாணாதிகாரம் | 74 |
| ஸாரஸங்க்ரஹம் | 93 |
| விரோத பரிஹாரம் | 111 |
| மூலமந்த்ராதிகாரம் | 120 |
| த்வயாதிகாரம் | 284 |
| சரமச்லோகாதிகாரம் | 301 |
| நிகமநாதிகாரம் | 3-0 |
| முநிவாஹநபோகம் | 336 |
| அமலனாதிபிரான் | 339 |
| உவந்த உள்ளத்தனாய் | 352 |
| மந்திபாய் வடவேங்கடமாமலை | 356 |
| சதிரமாமதிள்சூழ் | 362 |
| பாரமாய பழவினை | 367 |
| துண்டவெண்பிறையன் | 372 |

கையினார் சுரிசங்கனலாழியர் 376
பரியனாகிவந்த அவுணனுடல் 380
ஆலமாமரத்தினிலை மேல் 382
கொண்டல்வண்ணனை 386

ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் 397

ஸ்ரீ பரமபதஸோபாநம் 446
விவேக பர்வம் 452
நிர்வேத பர்வம் 458
விரக்தி பர்வம் 474
பீதி பர்வம் 494
ப்ரஸாதந பர்வம் 500
உத்க்ரமண பர்வம் 515
அர்ச்சிராதி பர்வம் 525
திவ்யதேச ப்ராப்தி பர்வம் 535
ப்ராப்தி பர்வம் 550

பிற்சேர்க்கை—A 593
(A—1): திருப்பாணாழ்வார் வைபவம் 593
(A—2) குறும்பறுத்த நம்பி சரிதம் 594

பிற்சேர்க்கை—B 594

பிற்சேர்க்கை—C 662

ப்ரமாண சுலோகங்கள் அகராதி 687

ப்ரமாணப் பாசுரங்கள் அகராதி 695

பிழைத் திருத்தம் 700



வழுததூா ஆணடவன
ஸ்ரீ வேதாநதராமாநுஜ
மஹாதேசிகன
ஆவணி-பூரடடாதி

திருததுறைபபூணடி ஆணடவன
ஸ்ரீ நிவாஸராமாநுஜ
மஹாதேசிகன
ஐபபசி - உததிரடடாதி

பெரியாணடவன
ஸ்ரீ ஸ்ரீ நிவாஸ
மஹாதேசிகன
மாசி - புஷயம



வேளியநல்லூர் ஸ்ரீ மதாண்டவன்
ஸ்ரீ நாராயண மஹாதேசிகன்
புரட்டாசி - திருவாதிரை.



பௌண்டரீகபுரம் ஸ்ரீ மதாண்டவன்
ஸ்ரீ ஸ்ரீ நிவாஸ மஹாதேசிகன்
ஆடி-பூராடம்.



மன்னார்குடி ஸ்ரீ மதாண்டவன்
ஸ்ரீ ரங்கநாத மஹாதேசிகன்
வைகாசி - மிருக சீர்ஷம்.



(விண்ணாற்றங்கரை) ஸ்ரீ மதாண்டவன் ஸ்ரீநிவாஸ
மஹாதேசிகன்.
(பங்குனி - அனுஷம்)

ஸ்ரீ।

    

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

श्रीमते रामानुजाय नमः।

माहयास्यं उपासेऽहं मन्मानस विलासकम्।
अभीष्टदान-कोशाक्षमाला-पद्मकरैर्युतम्॥

श्रीनिवासं परं ब्रह्म तन्नाम्नश्च गुरूत्तमान्।
नारायणं रङ्गनाथौ प्रणम्येदं विलिख्यते॥

ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் (வழுத்தூர்) வேதாந்த லக்ஷ்மண முனிவரின் ஸாக்ஷாத் ஸந்யஸ்த குருபரம்பரையாம் மணிஹாரத்தில் நாயகரத்நமான பௌண்டரீகபுரம் ஸ்ரீமதாண்டவனின் ஆச்ரமத்தில் எழுந்தருயிளிருக்கும் (பறவாக்கோட்டை) ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீ கோபால தேசிக மஹாதேசிகன் அருளிய

## ஸ்ரீமுகம்

இவ்விருள்தருமாஞாலத்தில் பிறந்த ஒவ்வொருவனும் இன்பமாக வாழவே விரும்புகிறான். இதற்காக பௌதிக விஜ்ஞாநத்தில் இழிந்து பூதங்களில் மறைந்து நிற்கும் கனிமங்களை யும் ஆற்றலையும் கண்டு பிடித்து அவற்றைக் கொண்டு பல்வகை இயந்திரங்களை உருவாக்கி இயக்கி, அவற்றின் மூலம் மனித ஸமுதாயத்தின் வாழ்விற்குத் தேவையான அனைத்தையும் செய்வித்து, தான் உழைக்காமலேயே உலகியல் இன்பங்களை நுகர்ந்து வருகிறான். இப்புதிய கண்டுபிடிப்புகளோ இன்பத்தை

அளிப்பது போல் தோன்றி மாற்றுருத் துன்பங்களை அளித்து, அழிவுப் பாதையில் இட்டுச் சென்று மீளாத்துயரில் ஆழ்த்திவிடுகின்றன.

ஆன்மவிஜ்ஞானமோ இவனை இன்பப் பாதையிலேயே அழைத்துச் சென்று, அமிழ்தமாம் ஆனந்தக் கடலில் ஆழ்த்தி அழிவில்லாத ப்ரஹ்மானந்தத்தையே நுகரச் செய்து உய்விக்கிறது. இத்தகு பேரின்பத்தைப் பெற சித்-அசித்-ஈச்வரதத்துவ ஞானமும், உபாய ஞானமும் தேவை. இவ்வறிவை உபநிஷத்துக்கள், ப்ரஹ்மஸூத்ரங்கள், ஸ்ரீ பாஷ்யம் போன்ற பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகள் ஆகியவை நமக்கு அளிக்கின்றன.

ஸ்வாமி தேசிகன் உரைநூல்கள், ப்ரகரண க்ரந்தங்கள், காவ்ய நாடகங்கள், ஸ்தோத்ரங்கள், ரஹஸ்ய க்ரந்தங்கள், தமிழ் ப்ரபந்தங்கள் ஆகிய நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களை இயற்றியும், பூர்வர்களின் ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களை உபதேசித்தும், நம் தலைமுறைவரை வேதாந்த தத்துவ அறிவு கிடைக்கும்படி செய்தபடி.

ஆத்ம தத்துவ அறிவைப் புகட்டும் நூல்களைக் கற்றறிய ஓரளவு ஸாமான்ய சாஸ்த்ர ஞானம் தேவை. தர்க்கம்-வ்யாகரணம்-மீமாம்ஸா முதலிய சாஸ்த்ர அறிவு இல்லாத பாமரர்களும் தத்வங்களைப் பற்றியும், ரஹஸ்யங்களைப் பற்றியும் நன்கு உணர்ந்து உய்ய ஸ்வாமி தேசிகன் அருளியவை சில்லரை ரஹஸ்யங்கள். இவற்றுள் இரண்டு பாகங்கள் ஸ்ரீ உ.வே. நவநீதம் ஸ்வாமி - விபவத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில் அன்றாலேயே வெளியிடப்பெற்று பண்டிதர்கள்-பாமரர்கள் அனைவராலும் பாராட்டப்பெற்றன. இவ்விரு பாகங்களினின்றும் பயனைப் பெறாத ஆஸ்திகர் எவருமே இலர் எனத் துணிந்து கூறலாம்.

இம்மஹான் "பரமபதம் எய்துவதற்குச் சின்னாள் முன் "மூன்றும் பாகத்தினை ஓரளவு சுமாராக (Rough copy) எழுதி வைத்திருக்கிறேன். இதையும் சிறிது பரிஷ்கரித்து வெளியிட்டு

விட்டால் தொடங்கிய கைங்கர்யம் பூர்த்தியடையும். நம்மனமும் நிம்மதியைப்பெற்று மகிழ்வுறும்." என்று ஒரு ஸந்தர்பத்தில் அடியேனிடம் பூர்வாச்ரமத்தில் ஸாதித்தார். அப்பொழுது யான் "பகவத் ஸங்கல்பம் அனுகூலிக்கும்" என்றேன். இப்பொழுது தான் பரமனின் ஸங்கல்பம் கனிந்தது. ஸ்ரீரங்கதிவ்ய தம்பதிகளும், திருவிண்ணகரப்பனும் இதை வெளியிட ஸங்கல்பித்திருப்பதை திருமாமணி மண்டபத்தில் நித்யஸூரி-முக்த பரிஷத்திலிருந்து நவநீதம்-ஸ்வாமியும் கடாக்ஷித்து மகிழ்ந்து அருளுவார் என்பதில் சிறிதேனும் ஐயமுண்டோ!

தன் சிரமங்களைச் சிறிதும் பொருட்படுத்தாது கீழ்க்குறிப்புகளை எழுதியும் அச்சுக்கூடத்திற்கு ஏற்ற வகையில் கை எழுத்துப் பிரதிகளைத் தயாரித்தும் அச்சுப் பிழைகளைத் திருத்தியும் கொடுத்தவரும் தேசிக கைங்கர்யத்தை ஸ்வரூபமாகக் கருதுபவருமான ஸ்ரீ உ. வே. தி. ஈ. ரங்கநாதாச்சாரியார் (நங்கநல்லூர்) அவர்கட்குத் தூப்புல்வள்ளலும் ஸ்ரீரங்கதிவ்யதம்பதிகளும் ஸர்வாபீஷ்டங்களையும் அளிக்க நாராயண ஸ்மரணம் பண்ணுகிறோம்.

தூப்புல் வள்ளலின் இவ்வரிய நூலினை "ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தின் பதிப்பினைப் போன்று இதுவும் ஓர் அழகிய பதிப்பு" என ஆஸ்திகர்கள் வித்வான்கள் அனைவரும் போற்றி மகிழும் வண்ணம் உருவாக்கித் தந்த தில்லைஸ்தானம் டாக்டர் எஸ். பார்த்தஸாரதி (சென்னை-பெஸண்ட்நகர்) அவர்கட்கு ஸ்ரீரங்கதிவ்யதம்பதிகள் மேலும் பல ஸம்ப்ரதாய நூல்களை வெளியிட ஊக்கத்தையும் - ஆக்கத்தையும், பகவத்-பாகவத-ஆசார்ய பக்தியையும், நீண்ட ஆயுளையும், நோயற்ற திடமேனியையும், ஸர்வாபீஷ்ட ஸித்தியையும் அளித்து அருளுமாறு நம் பூர்வாசார்ய ஸந்ததியைப் பிரார்த்தித்து நாராயண ஸ்மரண பூர்வமாக சுபமங்களங்களை ஆசாஸனம் பண்ணுகிறோம்.

இந்நூலினை அச்சிடுவதற்கும் ஆச்ரமத்திற்கும் பலவகைகளில் பேருதவி புரிந்துவரும் ஒப்பிலியப்பன் ஸந்நிதி வ. ந. வேங்கடநாதன (T.V S.) அவர்கட்கும், ரஹஸ்யார்த்த விவரணம் அச்சிட சேஷசாயிபேப்பர் மில்ஸ் காகிதம் பெற உதவிய ஆஸ்திகாக்ரே

ஸரரும் ஸம்ப்ரதாயப் பற்றுடைருயமான ஸ்ரீK. வெங்கடேசன் அவர்கட்கும், இப்பதிப்பிற்குப் பொருளுதவி அளித்து ஊக்கியவர் கட்கும். இந்நூலை சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த இளங்கோ அச்சுகூடத்திற்கும், அலமு பிரிண்டிங் ஒர்க்ஸ்க்கும், நூல் வெளியீட்டுக் குழு உறுப்பினர்களுக்கும், மற்றும் பல்வகையில் துணை நின்றவர்கட்கும், திருவரங்கனின் திருவருளும் ஸகல ஸௌபாக்யங்களும் கிட்ட மீண்டும் நாராயண ஸ்மரணம் பண்ணுகிறேம்.

நாராயண நாராயண.





(பறவாக்கோட்டை) ஸ்ரீமத் ஆண்டவன்
ஸ்ரீ கோபால தேசிக மஹாதேசிகன்
பங்குனி - ரோஹிணி.

ஸ்ரீமதே கோபால தேசிக மஹாதேசிகாய நம:

# பதிப்புரை

## சில்லரை ரஹஸ்யம் மூன்றும் பாகத்தின் தோற்றம்

ஸ்ரீமத் வேதமார்க்கேத்யாதி-ஜ்ஞாந வைராக்யாநுஷ்டான பரிபூர்ண பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய (மன்னார்குடி) ஸ்ரீமதாண்டவன் ரங்கநாத மஹாதேசிகன் நியமனப்படி ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தின் முதற்பதிப்பு ஸ்ரீ உ. வே. வித்வான் வங்கீபுரம் நவநீதம் ஸ்ரீராமதேசிகாசார்யர் ஸ்வாமியால் பரிசோதிக்கப்பட்டு ஸ்ரீ உ. வே. V.R. ராமஸ்வாமி அய்யங்கார் அவர்களால் 1960ம் ஆண்டு வெளியிடப்பட்டது. முதல் முதலில் நாகரலிபியில் வெளியிடப்பட்ட இப்புத்தகத்தின் ஏற்றத்தைக் கண்ணுற்றவர்கள் "ஸ்வாமி தேசிகன் அருளிய சில்லரை ரஹஸ்யங்களையும் அதே முறையில் வெளியிடவேண்டும்" என்று ப்ரார்த்தித்ததை ஏற்று ஸ்ரீ உ. வே நவநீதம் ஸ்வாமி பரிசோதித்துக் கொடுத்த பதினாறு அம்ருதரஞ்சனி ரஹஸ்யங்களை முதற்பாகமாகவும், அம்ருதாஸ்வாதினி ரஹஸ்யங்களில் ஸாரஸாரம் - அபயப்ரதாநஸாரம் - ரஹஸ்யசிகாமணி - அஞ்சலி வைபவம் என்ற நான்கை இரண்டாம் பாகமாகவும் முறையே 1972, 1980ம் ஆண்டுகளில் ஸ்ரீ V. R. R ஸ்வாமி வெளியிட்டார்.

இவற்றைப் போலவே மற்ற சில்லரை ரஹஸ்யங்களையும் வெளிக்கொணர வேண்டுமென்று, பலரும் பலமுறை வேண்டிக் கொண்டதற்கிணங்க ஸ்ரீ.உ.வே. நவநீதம் ஸ்வாமி தன் திருமேனி - கண் உபாதைகளையும் பொருட்படுத்தாது, நன்கு பரிசோதித்து மூலத்தையும்,ரஹஸ்யார்த்த விவரணத்தையும் அழகுற எழுதி முடித்த திருப்தியோடு திருநாட்டினை அலங்கரித்தார். மூன்றும்பாக சில்லரை ரஹஸ்ய வெளியீடு ஸ்ரீ. V. R. R. ஸ்வாமியையே நம்பியிருந்தபோது, அவரும் திருநாடு அலங்கரிக்க, வெளியீடு தடைப்பட்டு நின்றது. ஆயினும் வெளியீட்டின் இன்றியமையாமையை பக்தர்கள் வலியுறுத்திக் கொண்டிருந்தனர்.

## ப்ரக்ருதம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீமத்கோபால தேசிக மஹாதேசிகன் ஆர்வமும் உறுதிப்பாடும்

ஸ்ரீரங்கம், பௌண்டரீகபுரம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆச்ரமத்தில் எழுந்தருளியிருக்கும் ப்ரக்ருதம் ஆண்டவன் (பறவாக் கோட்டை) ஸ்ரீ கோபாலதேசிக மஹாதேசிகன் பூர்வாச்ரமத்தில் ஸ்ரீகார்யமாக இருந்து தொண்டு பல புரிந்தமை யாவரும் அறிந்த தொன்றும். அவற்றில் முக்கியமானவற்றுள் சில்லரை ரஹஸ்யம் மூன்றும் பாகத்திற்கு ஸ்ரீ உ. வே. நவநீதம் ஸ்வாமி எழுதி வைத்திருந்த பிரதிகளை அவர் திருக்குமாரர் ஸ்ரீ. உ. வே V.N. கோபாலதேசிகாசார்யர் ஸ்வாமியை சந்தித்துப் பெற்றது போற்றத்தக்கது. துரீயாச்ரம ஸ்வீகாரத்திற்குப் பின் மிக அரிதான திருந்திய பதிப்பாக ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தை வெளியிட்டபின், தற்போது சில்லரை ரஹஸ்யம் மூன்றும் பாகம் வெளியிடத் திருவுள்ளம் பற்றிய நூல் உங்கள் கரகமலங்களில் விளங்குகிறது.

## ஸ்ரீ உ.வே. C. R. வெங்கடேச அய்யங்கார் ஸ்வாமியின் ஊக்கமும், ஆக்கமும்

இச்சமயத்தில் ஸ்வாமி தேசிகனின் பரம பக்தரான சென்னை - அடையாறு - பத்மநாபநகர் ஸ்ரீ உ. வே. வெங்கடேச அய்யங்கார் ஸ்ரீ தேசிகன் விஷயமான ஒரு நூல் வெளியிடச் சேமித்து வைத்திருந்த பொருளைத் தந்து ஊக்கமளித்ததோடு, அவ்வப்போது தூண்டிக் கொண்டுமிருந்தார். அவர் தந்த அறிவுரைப்படி ''சில்லரை ரஹஸ்ய வெளியீட்டுக் குழு'' அமைக்கப்பட்டது. அக்குழுவில் ப்ரக்ருதம் ஸ்ரீமத் ஆண்டவன் (பறவாக் கோட்டை) ஸ்ரீ கோபால தேசிக மஹாதேசிகன் தலைவராகவும், சென்னை-அடையாறு-பத்மநாபநகர் ஸ்ரீ உ.வே. R. கிருஷ்ணன் அய்யங்கார் உபதலைவராகவும், சென்னை-பெஸன்ட்நகர் Dr. S. பார்த்தஸாரதி, செயலர்-பொக்கிஷதாரராகவும், சென்னை-நங்கநல்லூர் ஸ்ரீ உ.வே. T.E. ரங்கனுதாசார்யர் ஸ்வாமி, சென்னை-அடையார்-பத்மநாபநகர் C.R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், சென்னை ஷெனய்நகர் ஸ்ரீ உ. வே ரங்கனுத தாதாசார்யர், சென்னை-இந்திராநகர் ஸ்ரீ உ. வே. S. ராஜகோபாலய்யங்கார் ஆகியோர் உறுப்பினர்களாகவும் இருந்து அரும்பணி ஆற்றினர்.

## ஸ்ரீ உ. வே. தி. ஈ. ரங்கநாதாசார்யர் ஸ்வாமியின் அருந்தொண்டு

பரவாக்கோட்டை ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமிகளின் நியமனத்தை உள்ளன்போடு ஏற்று நங்கநல்லூர் ஸ்ரீ உ. வே. தி. ஈ. ரங்கநாதாசார்யர் ஸ்வாமி ஸ்ரீ உ. வே. நவநீதம் ஸ்வாமி எழுதி வைத்திருந்த பிரதிகளில் சிலவற்றை அச்சுக்குக் கொடுக்க ஏற்ற வகையில் எழுதியும், பாராக்களுக்கு ஏற்ற தலைப்புகளைக் கொடுத்தும், குமார நயினாசார்யர் அருளிச் செய்த "விரோத பரிஹார:" என்ற வடமொழி நூலை க்ரந்தலிபியிலிருந்து நாகர லிபியில் எழுதியும், மூலகிரந்தங்களுக்குக் கீழ்க்குறிப்புகளைத் தயாரித்தும், அவ்வப்போது அச்சுப்பிரதிகளில் பிழைகளைத் திருத்திக் கொடுத்தும் பேருதவி புரிந்தார். தன் சொந்த காரியங்களை விட்டு, உடல் சிரமத்தையும் பாராது இவர் ஆற்றிய தொண்டு ஸ்வாமி தேசிகனிடம் இவருக்கு உள்ள பக்திக்கு எடுத்துக்காட்டாக அமைந்தது என்றால மிகையாகாது.

## ப்ரக்ருதம் ஸ்ரீமதழகியசிங்கரின் ஆர்வம்

45-வது பட்டம் ஸ்ரீமதழகியசிங்கர் பூர்வாச்ரமத்தில் அடியேனுடைய க்ருஹத்தில் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார காலக்ஷேபம் ஸாதித்த பொழுது ஒரு நாள் குமாரநயினாசார்யர் அருளிய "விரோத பரிஹார:" என்னும் வடமொழி நூலைக் காட்டி, அதையும் ஸ்ரீமதாண்டவன் அனுமதி பெற்று ஸ்வாமி தேசிகன் அருளிய "விரோத பரிஹாரம்" என்னும் மணிப்ரவாள க்ரந்தத்துடன் வெளியிட்டால் மிகவும் பயனுள்ளதாக இருக்கும்" என்று அறிவுரை கூறினார். ஸ்ரீமதாண்டவனும் அதை ஏற்றருளினார். அறிவுரை கூறிய ஸ்ரீமதழகியசிங்கர் திருவடிகளில் அநந்த ப்ரணாமங்களை ஸமர்ப்பிக்கிறேன்.

## புத்தக அமைப்பும் குறியீடுகளும்

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தின் ஆச்ரமப் பதிப்பில் பயன் படுத்தப்பட்ட முறைகள் இந்நூலிலும் கையாளப்பட்டுள்ளன. ஆயினும் படிப்பவர்களின் சௌகர்யத்தைக் கருதி பொதுவாக மூலக்ரந்தம் இடது கைப்பக்கத்திலும் கீழ்க்குறிப்புகள் இடது-வலது கைப் பக்கங்களிலும் தரப்பட்டுள்ளன. தனியாக விளக்கம் தேவைப்படும் விஷயங்கள் A, B, C என்ற மூன்று பிற்சேர்க்கைகளில் தரப்பட்டுள்ளன. மேலும் இந்நூலில் கையாளப் பட்டுள்ள குறியீடுகள் (xv), (xvi) பக்கங்களில் விளக்கப் பட்டுள்ளன. இந்நூலைப் பயன்படுத்துவோர் இப்பகுதியை முதலில் படித்து அறிவது அவசியம்.

## அடியேன் செய்யும் விண்ணப்பம்

எவ்வளவு முயன்றும் அச்சுப்பிழைகள் தவிர்க்க முடியாமல்போயிற்று. இதற்காக அடியேனை க்ஷமிக்கும்படி ப்ரார்த்திக்கிறேன். இந்நூலைப் பயன்படுத்துவோர் இதில் காணும் குறைபாடுகளை எங்களுக்கு எழுதினால் எம்பெருமான் ஸங்கல்பத்தால் அடுத்த பதிப்பு வெளிவரும் போது அக்குறைபாடுகளை நீக்க இவை பயன்பெறும். இவ்வாறு செய்பவர்களுக்கு நான் கடமைப்பட்டவனாகவும் ஆவேன்.

## உளமார்ந்த நன்றி

இம்மூன்றாம் பாகம் வெளியிட மூல காரணமாக இருந்து, தமது திருமேனி சிரமத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அல்லும் பகலும் கண்ணும் கருத்துமாக, கையெழுத்துப் பிரதிகளை சோதித்து விளக்கம் தேவைப்படுவனவற்றிற்கு நுட்பமாக கருத்துக்களைத் தந்து அருளியும், ஸ்ரீ உ. வே. ரங்கநாதாசார்யர் ஸ்வாமி தயாரித்த குறிப்புகளை மறுபடியும் பரிசோதித்தது மட்டுமின்றி பெரும்பாலான பிற்சேர்க்கைப் பகுதிகளைத் தயாரித்துக் கொடுத்தும், அச்சுப் பிரதிகளில் இருந்த பிழைகளை மூலத்தோடு ஒப்பிட்டுப் பார்த்துத் திருத்தியும் (proof correction), இதையும் மீறி நேர்ந்துவிட்ட பிழைகளைப் பட்டியல் புத்தகத்தில் பல இடங்களில் எடுத்து பிழைதிருத்தம் தயாரித்தும், இன்னும் வெளியீடு விஷயமான பற்பல நிர்வாகப் பணிகளை ஆற்றியும் வந்த ப்ரகிருதம் (பறவாக்கோட்டை) ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்ரீ கோபால தேசிக மஹாதேசிகன் ஸ்வாமிகளுக்கு ஸ்ரீ தேசிகபக்தர்களான ஆஸ்திகப் பெருமக்கள் ஸஹஸ்ரச: ப்ரணம்ய க்ருதஜ்ஞதையைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளனர்.

இந்நூலுக்கு "ரஹஸ்யார்த்த விவரணம்" என்னும் விளக்க நூலை எழுதி அருளி மூலத்தில் வரும் மிகக் கடினமான பகுதிகளையும் மிக எளிதில் புரிந்து கொள்ள வகை செய்த ஸ்ரீ உ.வே. வித்வான் வங்கீபுரம் நவநீதம் ஸ்ரீராமதேசிகாசார்யர் ஸ்வாமிக்கும், மூலக்ரந்தத்திற்குக் கீழ்க்குறிப்பு எழுதியதோடு கீழ்க் கூறியவாறு மற்ற உதவிகளையும் செய்த ஸ்ரீ உ.வே. தி.ஈ. ரங்கநாதாசார்யர் ஸ்வாமிக்கும் வணக்கத்துடன் உளமார்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன்.

திருமலை சதுர்வேத சதுக்ரது நாவல்பாக்கம் வித்வான் ஸ்ரீ உ.வே. வரதாச்சாரியார் ஸ்வாமி தம் முன்னோர்கள் காலக்ஷேபம் செய்தபோது திருத்தி வைத்திருந்த குறிப்புக்களுடன் கூடிய "விரோத பரிஹாரம்" என்னும் நூலைத் தந்துதவியதற்கு தலையல்லாமல் கைம்மாறிலேன்.

ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமியோடு உடனிருந்து பல்வேறு அலுவல்களுக்கிடையிலும் ஆச்ரமத்திற்கு வந்து அச்சுப் பிரதிகளைத் மூலக்ரந்தத்தோடு ஒப்பிட்டும், உடனடியாக அச்சுப் பிழைகளைத் திருத்தியும் (proof correction) உதவி செய்த கூத்தப்பாக்கம் ஸ்ரீ உ.வே. தேசிகாச்சாரியார் ஸ்வாமிக்கு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

ஸ்ரீ உ.வே. நவநீதம் ஸ்வாமி எழுதி வைத்திருந்த கையெழுத்துப் பிரதிகளைத் தந்துதவிய அவர் குமாரர் ஸ்ரீ உ.வே. V.N. கோபாலதேசிகாசார்யர் ஸ்வாமிக்கும், இந்நூல் வெளியிடக் காரணமாக இருந்து ஊக்கமளித்த C. R. வெங்கடேச அய்யங்கார் ஸ்வாமிக்கும், மற்றும் வெளியீட்டுக் குழுவினருக்கும், ரஹஸ்யார்த்த விவரணத்தின் அச்சுப்பிழைகளைத் திருத்திஉதவிய சென்னை-பெஸண்ட் நகர் ஆசூரி ஸ்ரீ உ.வே. ராமபத்ராச்சாரியார் ஸ்வாமிக்கும், பலவிதத்திலும் மார்க்கதரிசியாக இருந்து உதவிய திருப்பதி கேந்த்ரீய ஸம்ஸ்கிருத வித்யாபீட முன்னாள் துணைவேந்தர் ஸ்ரீ உ. வே. வித்வான் N.S. ராமானுஜ தாதாசார்யர் ஸ்வாமிக்கும், இந்நூலுக்கு மதிப்புரை கொடுத்து உதவிய சென்னைப் பல்கலைக்கழக வைணவத்துறை பேராசிரியர் Dr. M. நரஸிம்மாச்சாரியார் ஸ்வ மிக்கும், அவ்வப்போது ஊக்கமளித்து வந்தவரும் மிகவும் பரிச்ரமப்பட்டு ஆசார்யர்களின் படங்களைத் தயாரித்துத் தந்தவருமான வில்லிவாக்கம் ஸ்ரீ உ.வே. N.K. ராமஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமிக்கும் அடியேனுடைய மனப்பூர்வமான ப்ரணமங்களும் நன்றியும் உரித்தாகுக.

இந்நூல் வெளியீட்டுக்கு நிதி உதவிசெய்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கும், சுந்தரம் சாரிடீஸ், சென்னை சூரலக்ஷ்மம்மா சாரிடீஸ் ஆகிய நிறுவனங்களுக்கும், விளம்பரங்கள் கொடுத்துதவிய ஹரிதா பைனான்ஸ், லக்ஷ்மீ மோட்டார் க்ரெடிட் நிறுவனங்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் பொருளுதவி செய்த ஸ்ரீ உ.வே. V.N. வேங்கடநாதன் ஸ்வாமி (T.V.S) திருமதி ராஜலக்ஷ்மி சந்தானம் (சாரதாம்பாள் தெரு, கோகுலம் காலனி, சென்னை), திருமதி ராஜலக்ஷ்மி ஸந்தானம் (C.P. ராமஸ்வாமி அய்யர் ரோடு, சென்னை) Dr. M.S. லக்ஷ்மிகுமாரி, (சென்னை), பெஸண்ட் நகர் ஸ்ரீ உ. வே. கண்ணன் அய்யங்கார் குமாரர் K. ரகுநந்தன் (USA) ஆகிய ஸ்ரீ வைஷ்ணவப் பெருந்தகையோருக்கும், இந்நூலை வாங்குவதற்கு முன்பணம் செலுத்தி ஊக்குவித்ததுடன் வெளியீட்டில் ஏற்பட்ட கால

த்ராமதத்தையும் பொறுத்துக்கொண்ட ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் அடியேனுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ரஹஸ்யார்த்த விவரணம் அச்சிட காகிதம் ஸஹாயம் செய்து கொடுத்த சேஷசாயி பேப்பர் மில்ஸ்க்கும், குறிப்பாக ஸ்ரீ உ.வே. K. வெங்கடேச அய்யங்கார் அவர்கட்கும், கடைகளில் பேப்பர் கிடைப்பது அரிதாயிருந்த போதும் மூலக்ரந்தத்திற்குத் தேவையான காகிதத்தை உடனடியாக ஸஹாயவிலையில் கொடுத்ததோடு ஆசார்யர்களின் படங்களுக்குத் தேவையான ஆர்ட் பேப்பரை நன்கொடையாகவும் நல்கிய முத்துராமன் அண்டு சன்ஸ் ஏஜன்ஸியின் உரிமையாளர் திரு M. ஏகப்பன் அவர்கட்கும், பெரியபெருமாள் - தேவாதிராஜன் - ஸ்வாமிதேசிகன் படங்களை இலவசமாகக் கொடுத்த ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா டிரஸ்ட்டுக்கும், குறிப்பாக ஸ்ரீ உ. வே. R. ராஜன் அய்யங்கார் அவர்கட்கும் வெளியீட்டுக்குழுவின் சார்பிலும் அடியேனுடைய சார்பிலும் நன்றியைத் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

பலவித அடையாளச் சின்னங்களுடன் கூடிய கீழ்க்குறிப்புகளை உடையதாலும், தமிழ் எழுத்தும் நாகரலிபியும் பின்னிப் பிணைந்து இணைந்த மணிப்ரவாள நடை நூலாகையாலும் அச்சுக் கோப்பதற்குக் கடினமான இந்நூலைப் பலரும் பாராட்டும் வண்ணம் நல்ல முறையில் அச்சிட்டுக் கொடுத்த இளங்கோ அச்சுக்கூடத்திற்கு என் உளமார்ந்த நன்றி உரித்தாகுக. மேலும் இப்புத்தகத்தை பயிண்ட் செய்ய ஏற்பாடு செய்த ஸ்ரீ உ. வே. N. S. பார்த்தஸாரதி அய்யங்கார் (Hindu) அவர்கட்கு மிகவும் கடமைப் பட்டுள்ளேன். இம்மூலநூலுக்கு விவரண நூலான "ரஹஸ்யார்த்த விவரணம்" என்னும் தமிழ் நூலை மிக அழகாகவும் கைங்கர்ய உள்ளத்தோடும் அச்சிட்டுத் தந்த அலமு பிரிண்டிங் ஒர்க்ஸ்க்கும் நன்றி கூறக் கடமைப் பட்டுள்ளேன்.

எல்லாவற்றிற்கும் மேலாக, இந்நூல் வெளிவர உதவிய அனைவருக்கும் ஸ்ரீரங்க திவ்ய தம்பதிகளின் திருவருளும்-ஸ்வாமி தேசிகனின் திருவருளும் - பௌண்டரீகபுரம் ஸ்ரீமதாண்டவன் ஆச்ரமம் ப்ரகிருதம் ஸ்ரீமத் ஆண்டவன் பரமஹம்ஸேத்யாதி (பறவாக்கோட்டை) ஸ்ரீ கோபால தேசிக மஹாதேசிகனின் அனுக்ரஹமும் கிட்டி, யாவரும் இன்புற்றிருக்கப் பிரார்த்திக்கிறேன்.

'ஸ்ரீ தேசிக ஸதனம்'' — ஸ்ரீ பார்த்தஸாரதி தாஸன்
24, 28-வது குறுக்குத் தெரு
சென்னை 600 090



ஸ்ரீ உ வே. வித்வான் ஒப்பிலியப்பன் கோவில்
வங்கீபுரம் நவநீதம்
ஸ்ரீ ராமதேசிகாசார்ய ஸ்வாமி

# குறியீட்டு விளக்கம்

| குறியீடு | விளக்கம் |
|---|---|
| □ | முன்பக்கக் கீழ்க்குறிப்பின் தொடர்ச்சி இப்பக்கத்தில் முடிவடையும் இடத்தைக் குறிப்பது. |
| மூலக்ரந்தத்தில் சொல்லின் மேல் வரும் எண் | மூலத்தில் வரும் கடினச்சொல்லையும் கீழ்க் குறிப்பில் தரப்பட்டுள்ள அதன் பொருளையும் இணைத்துக் காட்டுவது. |
| மூலக்ரந்தத்தில் சொல்லின் மேல் *என்ற குறியுடன் வரும் எண் | மூலத்தில் வரும் பிரமாணத்தையும், கீழ் குறிப்பில் உள்ள அதன் முழுபாகம்-பொருள் ஆகியவற்றையும் இணைத்துக் காட்டுவது. |
| (எண்) | அடைப்புக் குறியினுள் உள்ள 'எண்' மூலக்ரந்தத்தில் இதே ப்ரமாணம் வரும் பக்கத்தைக் காட்டுவது. |
| (B—எண்) | மூலத்தில் விளக்கம் தேவைப்படுவது பிற்சேர்க்கை Bல் குறிப்பிட்ட எண் வரிசையில் உள்ளதைக் காட்டுவது. இவ்வாறே Bக்குப் பதில் A,C என்பனவும் தேவைக்கு ஏற்ற பிற்சேர்க்கைகளைக் காட்டுவன. |
| பிற்சேர்க்கையில் (B — முதல் எண்) — இரண்டாவது எண் | (B—முதல் எண்) காட்டும் விளக்கம் மூல க்ரந்தத்தில் தேவைப்படும் பக்க எண்ணைக் குறிப்பது' இரண்டாவது எண். உதாஹரணம்: (B—24)—278 என்பது (B—24)ல் உள்ள விளக்கம் 278ம் பக்கத்தில் தேவைப் படுவதைக் காட்டுகிறது. |
| †n<br>n = எண் | மூலத்தையும், கீழ்க்குறிப்பில் அதன் பாட பேதத்தையும் இணைத்துக் காட்டுவது. |
| கீழ்க்குறிப்பில் † என்ற குறியில் வரும் இறுதிச் சொல்லின் மேல் உள்ள எண். | இந்த எண் பாடபேதம் ஸம்பந்தமான க்ரந்தத்தைக் குறிக்கும். பாடபேதம் ஸம்பந்தமான க்ரந்தங்களும் அவற்றைக் குறிக்கும் எண்களும் மேலே தரப்படு கின்றன. |

## பாடபேதங்களுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட க்ரந்தங்கள்

*புதுக்கோட்டை ஸ்ரீ உ. வே. A. ஸ்ரீநிவாஸராகவாசார்யர் ப்ரசுரித்த க்ரந்தங்களைக் கொண்டு பாடபேதங்கள் தயாரிக்கப் பட்டுள்ளன.*

i) பரமபதஸோபாநத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டவை

*1. ப்ரகாசகர்: சின்னமு ரெ. ஸ்ரீநிவாஸ பாட்ராசார்யர் ஸ்வாமி, (1931), ஸ்ரீகோமளாம்பா ப்ரஸ்; கும்பகோணம்.*

*2. பரிசோதகர்: கொ ஸ்ரீநிவாஸராகவாசார்யர் ஸ்வாமி, (1897). ஸ்ரீநிகேதன அச்சுக்கூடம், சென்னை.*

*3. மஹாமஹோபாத்யாய சேட்டலூர் ஸ்ரீ நரசிம்மாசார்யர் ஸ்வாமி. (1926). கலாரத்னகரம் முத்ராக்ஷரசாலை.*

*4. பௌண்டரீகபுரம் ஸ்ரீமதாண்டவன் ஆச்ரம ஓலையேடு.*

ii) பரமபதஸோபாநம் தவிர மற்றவற்றிற்கு எடுத்துக்கொள்ளப் பட்டவை

*1. பதிப்பித்தவர்: சுண்டப்பாளையம் ஸ்ரீ அ.ரா. திருவேங்கடாசார்யர். (1911). பாகவதவர்த்தினி முத்ராக்ஷரசாலை.*

*2. பரிஷ்கரித்தவர்: கொத்தமூர் ஸ்ரீமத் ராகவாசார்யர். பதிப்பித்தவர்: திருக்குடந்தை தட்டை கிருஷ்ணமாசார்யர் ஸ்வாமி. (1900). கலாநிதி அச்சுக்கூடம், சென்னை.*

*3. தெலுங்கு எழுத்தில் அச்சிடப்பட்டது.*

*4. திருக்கோஷ்டியூர் ஸ்ரீ உ. வே. ஸ்ரீராமதேசிகாசார்யர் ஸ்வாமி திருமாளிகையில் உள்ள தாளபத்ரகோசம.*

*5. பரிசோதகர்: புதுக்கோட்டை ஸ்ரீ உ. வே. A. ஸ்ரீநிவாஸராகவாசார்யர் ஸ்வாமி. (1937). ஸ்ரீஜநார்த்தன ப்ரிண்டிங் ஒர்க்ஸ், கும்பகோணம்.*

*6. திருக்கோஷ்டியூர் ஸ்ரீ ஸ்வாமியிடம் மாம்பாக்கத்திலிருக்கும் மற்றொரு ஏடு.*



श्री:

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# சில்லரை ரஹஸ்யங்கள்

## மூன்றும் பாகம்

---

### பொதுத் தனியன்

*குமார நயினராசார்யர் அருளியது*

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किक-केसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ।।

*ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி அருளியது*

रामानुज-दया-पात्रं ज्ञान-वैराग्य-भूषणम् ।
श्रीमद्वेङ्कटनाथार्यं वन्दे वेदान्त-देशिकम् ।।

*பிள்ளை உலகாசிரியர் அருளியது*

சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

# ५. प्रधान-शतकम्

# 5. ப்ரதாந சதகம்‡

[மோக்ஷமடைய விரும்புமவா அறியவேண்டியவறறில் முக்கியமான நூறு பொருளகளைத் தொகுத்துக் கூறும் ரஹஸ்யம்]

சிறப்புத் தனியன்—உரை

**यः प्रधानः प्रपन्नानां[1] प्रधानशतकं व्यधात् ।**
**तं नौमि वेङ्कटाचार्यं धुर्यं मार्गे यतीशितुः ॥**

ப்ரபந்நர்களுள் தலை சிறந்தவராய், யதிராஜரான ஸ்ரீபாஷ்ய காரருடைய ஸித்தாந்தத்தை முன்னின்று நடத்திச் செல்ப வராய், இந்த ப்ரதாநசதகம் என்னும் ரஹஸ்யத்தை அருளிச் செய்தவரான ஸ்ரீவேங்கடேசனென்னும் ஸ்ரீவேதாந்த தேசிகனைப் போற்றுகின்றேன்.

[விஷயச் சுருக்கம்: முன்னுரை—எம்பெருமானைக் காட்டும் ப்ரமாணங்களுள் முக்கியமானவை; பகவந் மந்த்ரங்களுள் முக்கிய மானவை; பிறவிகளுள் முக்கியமானது. திருமந்திரப் பொருள் களில் முக்கியமானவை—நாராயணனே ப்ரணவத்தின் முக்கியப் பொருளாதல், விளக்கம்; ஆத்ம-பரமாத்ம விஷயமாக ப்ரணவத் தில் முக்கியமாய் அநுஸந்திக்க வேண்டியவை; ப்ரணவத்தில் பிறநத தத்துவஞானத்தின் முக்கியத்துவம். நம: சப்தத்தில் முக் கிய அம்சங்கள்—ப்ரபத்தி பற்றிய முக்கிய விஷயங்கள்; நம: சப் தத்தின் ஸ்தூல-ஸூக்ஷ்ம-பரயோஜனை ஒவ்வொன்றிலும் முக்கிய மான பொருள்கள். நாராயண சப்தத்தில் தத்புருஷ ஸமாஸத் தின் முக்கியததுவம்; திருமநதிர வாக்ய யோஜனைகளுள் முக்கிய மானது. சரணாகதி மந்திரங்களுள் த்வயம் முக்கியமாதல்; த்வயத் தின் பொருள்களுள் முக்கியமானவை; ப்ரபத்தி சாஸ்த்ரார்த் தத்தை விளக்குமவற்றில் முக்கியமானவை; சரமசுலோகத்தின் பொருள்களில் முக்கியமானவை. ப்ரபந்நருள் முக்கியமானவர்.

---

‡ ரஹஸ்யங்களில் 24-வது; அம்ருதாஸ்வாதிநீ ரஹஸ்யங்களில் 5-வது.

† 1-तदीयानां[4]

கதிசிந்தனம், அந்திம-ப்ரத்யயம் பற்றிய விஷயங்கள். கைங்கர்யங்கள் பற்றிய முக்கிய விஷயங்கள்; விலக்க வேண்டிய சீடர்களுள் முக்கியமானவர்; ஏற்க வேண்டியவர்களுள் முக்கியமானவர்; பாகவத கைங்கர்யத்தின் முக்கியத்துவம்; பாகவதர்களில் ஸத்கார - ஸல்லாப - ஸஹவாஸ - பீதி-ப்ரீதி - யோக்யர் என்ற பிரிவுகள் ஒவ்வொன்றிலும் முக்கியமானவர்; பகவத் - பாகவத- ஆசார்ய கைங்கர்யங்கள் பற்றிய முக்கிய விஷயங்கள்; கைங்கர்யத்தில் பாவ-விசேஷத்தின் முக்கியத்துவம்; கைங்கர்ய பலனில் முக்கியமானது; பகவத் ரூபங்களில் முக்கியமானது; யுகங்களில் முக்கியமானது; கைங்கர்ய - உபகரண - தேச - தீர்த்த - தசைகள் ஒவ்வொன்றிலும் முக்கியமான அம்சங்கள்; தோஷங்கள், அவற்றை விலக்குதல் அவற்றில் முக்கிய அம்சங்கள்; அபசாரங்கள், அவற்றின் பரிஹாரங்கள் பற்றிய முக்கிய விஷயங்கள்; ஆசார்யர் ப்ராசார்யர் பற்றிய முக்கிய விஷயங்கள்; ஆசார்யர் அநுமதித்த பகவத் கைங்கர்யத்தின் முக்கியத்துவம்; எம்பெருமான் ஸந்நிதியில் ஏற்படக்கூடிய அபசாரங்களில் முக்கியமானது; ஏகாந்திகளில் முக்கியமானவரும், அவர் செய்யும் கைங்கர்யங்களில் முக்கியமானதும், அவர் செய்ய நேரிடும் காம்ய கர்மங்களின் முறையும்; ஞானம் முதிர்ந்தவருக்குச் செய்யும் பணிவிடையின் முக்கியத்துவமும் அதன் பயனும்: ஸுகங்களில் முக்கியமானது.]

परविदुपदर्शितं नः प्रधान-शतकं प्रमाण-सिद्धमिदम् ।
भजति शतकोटि-भावं परपक्षे च प्रयोजने च सताम् ।।

परवित्—பரப்ரம்ஹத்தை அறிந்தவர்களால்; उपदर्शितम्—காட்டப்பட்டதும்; प्रमाणसिद्धम्—ப்ரமாணங்களினால் ஏற்பட்டதுமான (ப்ரமாணங்களைத் தழுவியதான); नः—நம்முடைய; इदं—இந்த; प्रधानशतकम्—ப்ரதாந சதகம் என்ற ரஹஸ்யமானது; परपक्षे च—பிற மதத்தைக் கண்டிப்பதிலும்; सतां प्रयोजने च – ஸாதுக்களுக்குப் பயனை அளிப்பதிலும்; शतकोटि-भावं—நூறு கோடியாய் இருத்தலை; भजति—அடைகிறது. [அதாவது, ஸாதுக்கள் விஷயத்தில் நூறு மடங்கு அதிகமாய் இருக்கும்; பிற மதங்களைக் கண்டிப்பதில் நூறு கோடிகளாக (யுக்திகளாக) இருக்கும்.]

பொங்கு புனலாறுகளில் புவனமெல்லாம்
  பொன்கழலால் அளந்தவன் தன் தாளால் வந்த
கங்கையெனும் நதி போலக் கடல்களேழில்
  கமலே பிறந்து அவனுகந்த கடலே போல
சங்குகளில் அவனேந்தும் சங்கே போலத்
  தாரில் அவன் தண்துளவத் தாரே போல
எங்கள் குலபதிகள் இவை மேலாமென்றே (25)
  எண்ணிய நல்வார்த்தைகள் நாம் இசைகின்றோமே.

'வார்த்தை அறிபவர் மாயவற்காளன்றி ஆவரோ'*[1] என்று ஆழ்வார் ஓரவதாரத்தில் வார்த்தையை†[1] **उदाहरि**த்த[1] இது மற்றும் ஆசார்யார்கள் முமுக்ஷுக்களுக்கு†[2] அருளிச்செய்யும் **प्रधान-निष्कर्ष**வாக்யங்களுக்கும[2] உபலக்ஷணம் (C-1). அவை எல்லாம் கூட இங்கே விவக்ஷிதங்களாகவுமாம்[3]. அவை எவை என்னில்—

§I: எம்பெருமானைக் காட்டும் ப்ரமாணங்களுள முக்கியமானவை

1. **प्रत्यक्षादि** ப்ரமாணங்களிற் காட்டிலும் '**वेदात् शास्त्र परं नास्ति**'*[2] **इत्यादि**களிற்படியே மற்றுள்ள சாஸ்த்ரங்களிற் காட்டிலும் **पारलौकिक-पुरुषार्थ-तदुपाय**ங்களை[4] **यथावस्थित**மாகக்[5] காட்டுகிற **वेद**ம் **प्रधान**ம்.

---

1—எடுத்துக்கூறிய. 2—முக்கிய அம்சங்களை வரையறுத்துக் கூறும் வாக்கியங்களுக்கும். 3—சொல்ல விரும்பியவை. 4—மறுமையில வரும் பலன்களையும், அவற்றுக்கு உபாயங்களையும். 5—உள்ளவாறு.

† 1-प्रत्यक्षादि வார்த்தையை[1]. 2-முமுக்ஷுக்களுக்கும்[1].

25. பொங்குபுனல் ஆறுகளில்—பெருகிவருகின்ற ஜலத்தை உடைய (உலகிலுள்ள)ஆறுகளுக்குள்; புவனம் எல்லாம்—உலக முழுவதும்; பொன் கழலால் அளந்தவன்தன—(த்ரிவிக்ரமாவதாரத்தில் தன்னுடைய) அழகிய திருவடிகளால் அளந்த எம்பெருமானுடைய; தாளால் வந்த—திருவடிகளிலிருந்து வந்த; கங்கையெனும் நதி போல—கங்கை என்னும் நதி (சிறப்புற்றது)

போலவும்; கடல்கள் ஏழில்—ஏழு ஸமுத்ரங்களுக்குள்; கமலே பிறந்து—பிராட்டி அவதரித்ததனல்; அவன் உகந்த கடலே போல—அவ்வெம்பெருமானுக்கு ப்ரியமான திருப்பாற்கடல் (சிறப்புற்றது) போலவும்; சங்குகளில்—சங்குகளுக்குள்; அவன் ஏந்தும் சங்கே போல—அவ்வெம்பெருமான் (திருக்கையில்) ஏந்துகின்ற (பாஞ்சஜந்யம் என்னும்) சங்கம் (உயர்ந்தது) போலவும்; தாரில்—புஷ்ப மாலைகளுள்; அவன் தண்துளவத் தாரே போல—அந்த பகவான் அணியும் குளிர்ந்த திருத்துழாய் மாலை (சிறப்புற்றது) போலவும்; எங்கள் குலபதிகள்—எங்கள் ப்ரபந்த குலத்திற்குத் தலைவர்களான ஆழ்வார் முதலியவர்கள்; இவை மேல் ஆம் என்றே எண்ணிய—இவையே சிறந்தவை ஆகும் என்று நிச்சயித்து அநுஸந்தித்த; நல் வார்த்தைகள்—நல்ல உபதேசங்களை; நாம் இசைகின்றோம்—நாம் அங்கீகரித்து நடத்துகின்றோம். [கடல் ஏழு—உப்பு, பால், தேன், நெய், கருப்பஞ்சாறு, தயிர், சுத்தஜலம் இவற்றால் ஆகியவை.]

*1. வார்த்தையறிபவர் மாயவற்காளன்றியாவரோ?*
போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை
பேர்த்து* பெருந்துன்பம் வேரற நீக்கித் தன் தாளின் கீழ்ச்
சேர்த்து* அவன் செய்யும் சேமத்தை எண்ணித்தெளிவுற்றே.

திருவாய். (7-5-10): ராமன், கிருஷ்ணன், வராஹம் முதலிய அவதாரங்களில் அவன் உபதேசித்ததும் மற்றவையுமான வார்த்தைகளை நன்கு அறிந்தவர்கள் ஆத்மஸ்வருபங்கள் தெரியாதபடி போர்வை போன்று மறைக்கும் பிறப்பு, நோய், மூப்பு, இறப்பு இவற்றை அடியோடு அழித்தும், பகவதநுபவம் சிறிதும் இல்லாமையாகையாலே மிக்க துக்கமென்றே சொல்லாம்படியான கைவல்யத்தை முற்றிலும் போக்கியும் நம்மைத் தன் திருவடிகளில் சேர்த்துகொண்டு மீண்டும் பிறவியில்லாதபடி செய்யும் ப்ரஹ்மாநந்தத்தை சாஸ்த்ரஙகளின் மூலம் அறிநது பகவத் கல்யாணகுணங்களை அநுபவிப்பதில் ஈடுபட்ட பிறகும் இப்பேருதவியைப் புரிந்த எம்பெருமானுக்கு அடிமை ஆகாமலிருப்பாரோ?

*2. सत्यं सत्यं पुनः सत्यं उद्धृत्य भुजमुच्यते ।
वेदात् शास्त्रं परं नास्ति न दैवं केशवात् परम् ॥

நா. பு. (8-32): பார. (சாந்தி-360-5): வேதத்தைக் காட்டிலும் சிறந்த சாஸ்த்திரம் இல்லை, கேசவனைக் காட்டிலும் சிறந்த

2. அதில் पर-अवर-तत्व-हित-पुरुषार्थங்களில்[1] अन्यथा-सिद्ध-प्रमाणान्तरங்களால் வரும் கலக்கங்களை எல்லாம் தீர்க்கவல்ல **वेदान्तம் प्रधानம்.**

3. அது தன்னில் 'इदं पुरुषसूक्तं हि सर्ववेदेषु पठ्यते'*[1] என்கிறபடியே सर्ववेद-पठितமாய்க் கொண்டு **श्रियःपति** யான மஹாபுருஷனை மூலகாரணமாகவும் மோக்ஷோபாயமாகவும் காட்டுகிற புருஷஸூக்தம் **प्रधानம்.**

§II: பகவந்மந்த்ரங்களுள் முக்கியமானவை

4. இம்மஹாபுருஷனை ஆராதிப்பார்க்கு மந்த்ரங்களாகச் சொன்னவற்றில் व्यापकवर्गம்[2] **प्रधानம்.**

5. அதிலும் सर्व-आचार्य-परिग्रह-अतिशयத்தாலும்[3], शेष-शेषि-सर्वतत्व-कण्ठोक्तिயாலும்[4] 'न मन्त्रोऽष्टाक्षरात् परः'*[2] என்னும் படியான ஸ்ரீமதஷ்டாக்ஷரம் **प्रधानம்.**

§III பிறவிகளுள் முக்கியமானவை

6. இம் मन्त्रोक्ति மாதாவாக, ஆசார்யன் பிதாவாகப் பிறக்கிற†[1] विद्याஜன்மம்[5] ஜன்மங்களெல்லாத்திலும் **प्रधानம்.**

§IV: திருமந்திரப் பொருள்களில் முக்கியமானவை

§IV (a): ப்ரணவத்தின பொருள்களுள் முக்கியமானவை

7. இம்மந்த்ரத்தில் पदங்கள் மூன்றில் **गिरामस्मि एकमक्षरं'***[3], **'प्रणवो ह्यक्षरं परं'***[4] என்கிற மூலமாகிய ஒற்றை எழுத்து **प्रधानம்.**

8. त्र्यक्षर-ब्रह्मமான[6] இதில்[6] श्रुतिகள் பிரித்துக் காட்டின அக்ஷரங்கள் மூன்றில் (C-2) **'अक्षराणां अकारोऽस्मि'***[5] என்கிற सर्व-वाचकजात-प्रकृतिயான[7] **प्रथमाक्षरம் प्रधानம்.**

---

தெய்வம் இல்லை என்று கையை உயர்த்தி இதுவே உண்மை, உண்மை, உண்மை எனக் கூறப்படுகிறது. □

1—மேம்பட்ட தத்துவம், தாழ்ந்த தத்துவம், பயனுக்கு உபாயம், பயன் இவற்றில். 2—எம்பெருமான் எங்கும் பரவியிருத்தலைக் கூறும் மந்திரத் தொகுதி (திருமந்த்ரம், ஷடக்ஷரம், த்வாதசாக்ஷரம் என்பவை வ்யாபக மந்த்ரங்களாகும்). 3—எல்லா ஆசார்யர்களும் மிகவும் ஏற்றுக்கொண்ட சிறப்பாலும். 4—கண்டோக்தியாலும்=தெளிவாகக் கூறுவதாலும். 5—அறிவைப் பெறுதலாகிய பிறவி. 6—மூன்றெழுத்தையுடைய ப்ரணவ மந்திரத்தில். 7—(பொருள்களைக் கூறும்) சொற்கள் அனைத்திற்கும் மூலமான.

† 1—கற்பிக்கிற[1].

*1—. (?): இந்த புருஷஸூக்தம் எல்லா வேதங்களிலும் ஓதப்படுகிறது.

*2. यथा सर्वेषु देवेषु नास्ति नारायणात् परः ।
तथा सर्वेषु मन्त्रेषु न मन्त्रोऽष्टाक्षरात् परः ॥

அஷ்டா-ப்ர. (1-41): எப்படி எல்லாத் தேவர்களுக்குள்ளும் நாராயணனைக் காட்டிலும் உயர்ந்தவன் இல்லையோ அப்படியே எல்லா மந்திரங்களுக்குள்ளும் அஷ்டாக்ஷரத்திலும் சிறந்த மந்திரம் இல்லை.

*3. महर्षीणां भृगुरहं गिरामस्मि एकमक्षरम् ।
यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥

கீதை (10-25): மஹர்ஷிகளுள் நான் ப்ருகுவாகவும், சொற்களுள் ஒற்றை எழுத்தான ப்ரணவமாகவும், யஜ்ஞங்களுள் ஜப யஜ்ஞமாகவும், அசையாப் பொருள்களுள் இமயமலையாகவும் நான் இருக்கிறேன்.

*4. (?): ப்ரணவம் (என்னும் ஓங்காரம்) அன்றோ உயர்ந்த எழுத்து.

*5. अक्षराणां अकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।
अहमेवाक्षयः कालो धाताहं विश्वतोमुखः ॥

கீதை (10-33): எழுத்துக்களிடையே நான் அகாரமாக உள்ளேன். பல ஸமாஸங்களிடையே த்வந்த்வ ஸமாஸமாக உள்ளேன்.

9. இதில் लुप्त-विभक्ति-अंशத்திற் காட்டில் सर्व-वाच्यजात-प्रकृतिயான[1] ஸர்வரக்ஷகனைச் சொல்லுகிற प्रकृत्यंशம் प्रधानம்.

10. இதில் धात्वर्थங்கள்[2] பல உண்டானாலும் उपयुक्ततमமாகையாலே[3] ரக்ஷணம் प्रधानம்.

11. ரக்ஷகமாக இங்கு प्रथमोपात्त விசேஷ்யத்தினுடைய[4] रक्षकत्व-उपयुक्त விசேஷணங்களில் மூலமந்த்ரவிவரணமான[5] द्वयத்தில் முற்பட்ட विशेषणம் प्रधानம்.

12. இப்படி ஸ்ரீமானாய் अकार-वाच्यனான विश्वपतिயை सर्व-परविद्या-वेद्यன்[6] என்று நிர்ணயிக்கிற நாராயணானுவாகம் तत्व निर्णायक[7](†[1]) வாக்யங்களில் प्रधानம்.

13. 'अस्या मम च शेषं हि विभूतिरुभयात्मिका'[1] इत्यादिகளிற்படியே विभूतिயைப்பற்ற[8] விஷ்ணுபத்நியும் श्रियःपतिயும் प्रधानர்கள்.

14. एकமான இச் शेषित्वं उभयाधिष्ठानமானாலும்[9] दम्पतिகளில் पति-प्राधान्यம் लौकिक-वैदिक-मर्यादैயின்படியே[10] नित्य-नियतமாகையாலே पतिகளுக்கும் परमனான पति என்னும்படி நின்ற நாராயணனே सर्व-प्रधानனும்.

15. இவனை बृहत्व-बृंहणत्वங்களுடையவை[11] (†[2]) எல்லாத்திலும் प्रकृष्टனாகையாலே[12] "परब्रह्मம்'' என்றும், स्वनिष्ठ-तत्वமாகையாலே[13] ''பரதத்வம்'' என்றும், ப்ரகாசகங்கள் தமக்கும் प्रकाशकனாகையாலே "परं ज्योतिस्" என்றும், ஸர்வ ஆத்மாக்களுக்கும் அந்தராத்மாவாகையாலே ''பரமாத்மா'' என்றும், தேவதைகள் தங்களுக்கும் आराध्यனாகையாலே "परदेवதை'' என்றும், मुक्तருக்

கும் **प्रधान-प्राप्य**னைகையாலே[14] "**परा गति**" என்றும், முமுக்ஷுக்களுக்கு **वशीकरणीय-वर्ग**த்தின் ஸீமாவாகை யாலே[15] "**परा काष्ठै**" என்றும், **सवं-उपाय-प्रसादनीय सिद्धोपाय** மாகையாலே[16] "**परायण**ம்[17]" என்றும், **सिद्धि-हेतु**க்களில் **सवं-सिद्धि-हेतु**வாகையாலே[18] "பரமதபஸ்" என்றும். பாவநங்கள்[19] தமக்கும் **पावनत्व-शक्ति-प्रद**னைகையாலே

---

அழியாத காலத்ரவ்யமும் நானே; திசைமுசனை படைக்கும் பிரமனும் நானே.
□

1—சொற்களின் பொருள் அனைத்துக்கும் மூலகாரணமான. 2—வினைச் சொல்லின் பொருள்கள். 3—மிகவும் பயன்படுவதால். 4—முதலில் எடுத்த அகாரத்தின. 5—திருமந்திரத்தின் பொருளை விளக்குவதான. 6—எல்லா ப்ரஹ்ம வித்யைசளாலும் அறியப் படுபவன். 7—நிர்ணயக = நிச்சயிக்கும். 8—விபூதி = ஐச்வர்யம் (= சொத்து = ஸம்ஸாரமண்டலமும், ஸ்ரீ வைகுண்டலோகமும்). 9—இருவரிடமும் (ஸமமாய்) இருந்தாலும். 10—உலகிலும் வேதத்திலும் உள்ள வரையறையின்படி. 11—ப்ருஹத்வம் = ஸ்வரூபத்தினால் பெரியதாய் இருப்பது. ப்ரும்ஹணத்வம் = கல்யாண குணங்களால் எல்லையற்ற பெருமையைப் பெற்றிருப் பது. 12—மிக உயர்ந்தவனாகையால். 13—தனக்கு ஓர் ஆதார மின்றியே தானே அனைத்துக்கும் ஆதாரமாய் நிற்றலால். 14—முக்கியமாய் அடையப்படும் பயனாகையால். 15—ஸீமா = எல்லை. 16—எல்லா உபாயங்களாலும் மகிழ்விப்பதற்கு ஏற்ற முன்பே உள்ள உபாயமாகையால். 17—மிக மேம்பட்ட உபாயம். 18—எல்லாப் பலன்களையும் அளிப்பவனாகையால். 19—தூய்மைப்படுத்துபவை.

† 1–तत्त्व-निर्णय[4]. 2–ब्रह्मत्व-बृंहणங்களுடையவை[1].

*1. अस्या मम च शेषं हि विभूतिरुभयात्मिका ।
इति श्रुतिशिरस्सिद्धं मच्छास्त्रेष्वपि मानद ॥

விஷ்வக். ஸம்(?): இந்த லீலாவிபூதியும் நித்யவிபூதியுமாகிய ப்ரபஞ்சம் எனக்கும் பிராட்டிக்கும் ஆளுகைக்குட்பட்ட சேஷ மாயிருப்பது என்று வேதாந்தங்களிலும் என் சாஸ்த்ரமான ஸ்ரீ பாஞ்சராத்ரத்திலும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

'**पवित्राणां पवित्रं**''[1] என்றும், '**गुणायत्तं**'*[2] **इत्यादि**களிற்படியே, தன் **गुण**ங்கள் முதலான **मङ्गल**ங்களுக்கெல்லாம் **मङ्गलत्व-आवह**னுகையாலே "**मङ्गलानां च मङ्गलम्**''[1] என்றும்—இப்படி ஸர்வ ப்ரகாரத்தாலும் வரும் **प्राधान्य**ங்கள் எல்லாத்தையும் நினைத்து "**लोक-प्रधान**ன்'' என்று சொல்லுகிறது.

16. மற்றும் லோகத்திற்குப்†[1] **प्रधान**ராய்த்தோற்றுமவர்கள் **द्वार-शेषि**களாகையாலே[1] அவர்களைப் பற்றி நித்யமாகவாதல், **कादाचित्क**மாகவாதல் **शेष**மாமவற்றுக்கும் **सर्वेश्वर**னே **निरुपाधिक**[2]-**प्रधानशेषि**யாய் நிற்கும்.

17. இப்படி **विश्व-शेषि**யானர்†[2] நாராயணனையும் **शेष-भूत**னை நரனையும் **अर्जुन-रथं** போலே முன்னும் பின்னுமாகக் காட்டுகிற ப்ரணவத்தில் சேஷமாகச் சொல்லப்பட்ட ஜீவன் **शब्द-वृत्ति**யாலே[3] **प्रधान**னையத் தோற்றும்.

18. இஜ்ஜீவனுக்கு†[3] **निरूपक**னாய்†[4] நின்றாலும் **राजपुरुष-रामानुजादि-शब्द**ங்களில் போலே **अर्थ-स्वभाव**த்தாலே[4] **सर्वशेषि**யே **प्रधान**னும்.

19. இச் **शेषशेषि**களை **समानाधिकरण-शब्द**ங்களாலே[5] சொல்லுமிடத்திலும்†[5]**अपृथक्-सिद्ध-विशेषण-वाचिशब्द**ங்கள்[6] **निष्कर्ष-पर्यवसायि**யல்லாத[7] போது **विशेष्यपर्यन्त**ங்களாகிற ந்யாயத்தாலே ஜீவனுடைய **अत्यन्तपारतन्त्र्यादि**களை **अनुसन्धि**கைகை **प्रधान**ம்.

20. இங்கு **व्यधिकरण**மாகச்[8] சொல்லுகிற இது **रक्ष्यत्व-रक्षकत्व-अणुत्व-विभुत्व-आदि वैधर्म्य-अनुसन्धान**த்தில்[9] **प्रधान**ம்.

21. இப் ப்ரணவத்தில் பிறந்த **तत्व-ज्ञान**ம் **मोक्ष-उपाय-अधिकार-अनुप्रविष्ट-ज्ञान**ங்களில்[10] **प्रधान**ம்.

1—இடைப்பட்ட சேஷிகள் (நம்மைப் படைத்த நான்முகன் (பிதாமஹன்) நமக்குச் சேஷி. நமக்கும், நான்முகனுக்கும், மற்றவர்கட்கும் சேஷியான நாராயணன் ஸர்வசேஷி. இங்கு நான்முகன் நமக்கு இடைப்பட்ட சேஷியாகிறான்). 2—எவ்வித காரணமுமின்றி (இயற்கையாகவே). 3—சொல் அமைந்த வகையால். 4—பொருளின் போக்கால். 5—ஒரே வேற்றுமையில் வைத்துச் சொல்லும் சொற்களால். 6—ஒன்றை விட்டுப் பிரித்துப் பார்க்க முடியாத நிலையைச் சொல்லும் உரிச் சொற்கள். 7—நிஷ்கர்ஷ பர்யவஸாயி = முடிவான பொருள் வரை சென்று கூறுவது. 8—வெவ்வேறு வேற்றுமையில். 9—எதிர்த்தன்மைகளைச் சிந்திப்பதில். 10—மோக்ஷத்துக்கு உபாயத்தைச் செய்யத் தகுதிகளில் சேர்ந்த ஞானம்.

† 1—லோகத்திற்கும்[1]. 2—नित्य-शेषियान[4]. 3—இஜ் ஜீவன்[4]. 4—இங்கு प्रधानனாய். 5—சொல்லுமிடம்[1].

*1. पवित्राणां पवित्रं यो मङ्गलानां च मङ्गलम् ।
दैवतं देवतानां च भूतानां योऽव्ययः पिता ॥

பார. (ஆநு-149-10): பரிசுத்தமானவற்றிற்கு பரிசுத்தியை அளிப்பவன் எவனோ, எவன மங்களமானவற்றுக்கு மங்களத் தன்மையை அளிக்கிறானோ, எவன் தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமோ, எவன் எல்லாப் பிராணிகளுக்கும் அழிவில்லாத தந்தையோ.

*2. गुणायत्तं लोके गुणिषु हि मतं मङ्गलपदं
विपर्यस्तं हस्ति-क्षितिधर-पते ! तत् त्वयि पुनः ।
गुणाः सत्य-ज्ञान-प्रभृतय उत त्वद्गततया
शुभीभूयं याता इति हि निरणैष्म श्रुतिवशात् ॥

வரத. ஸ்த. (11): பேரருளாளப் பெருமாளே! உலகில் நற்குணமுள்ளவர்களைக் குறித்து நல்லவர்கள் என்று சொல்லுவது அவர்களிடம் உள்ள குணங்களைப் பொறுத்ததாகும். இதற்கு மாறாக ஸத்யம், ஞானம் முதலிய குணங்கள் உன்னிடம் சேர்ந்ததால் நற்குணங்களெனப் போற்றப்படுகின்றன என்று சுருதியும் முடிவு செய்துள்ளது.

§IV (d): நம: சப்தத்தில் முக்கிய அம்சங்கள்

22. இப்படி **सिद्ध-स्वरूप**னை[1] **अधिकारि**யினுடைய **उपाय-अनुष्ठान**ங்களில்†[1] **मध्यम-पद-संगृहीत**மான[2] **साङ्ग-प्रपदन**ம் **प्रधान**ம்.

23. இதில் **'न्यास: पञ्चाङ्ग-संयुत:'***[1] என்கையாலே **आनुकूल्य-सङ्कल्पादि**களைப்பற்ற ஸமர்ப்பணம் **प्रधान**ம்.

24. ஸமர்ப்பணம் தன்னில் **'वपुरादिषु'***[2], **'मम नाथ'***[3], **'फले स्वाम्यवियुक्तता'***[4] **इत्यादि**களிற்படியே **तत्वज्ञानरूप**மாய்க் கொண்டு அந்வயிக்கிற **स्वरूप-समर्पणादि-भाग**த்திற் காட்டில்[3] **'आत्मात्मीय-भरन्यासो हि अत्मनिक्षेप उच्यते'***[5] என்கிற **भरन्यास**ம்[4] **प्रधान**ம்.

25. இது **विधिवाक्य**த்தில் **साध्य**மாகச்[5] **चोदित**மான[6] **रूप**த்தாலே **प्रधान**ம்

26. இத்தாலே **वशीकरणीय**மான[7] **सिद्धोपाय**ம்[8] **सर्व-कारणत्व-स्वतन्त्रत्व-अव्यवहित-उपायत्वादि**களாலே[9] **प्रपत्ति** தன்னையும் பற்ற **प्रधान**ம்.

27. இந்த நமஸ்ஸில் **स्थल-योजनै**யில்[10] **साध्योपाय**ம் **प्रधान**ம்.

---

*1—ஸ்வரூபத்தில் தெளிவு பெற்றவனை. 2—நடுப்பதத்தில் சுருக்கிக் கூறப்பட்ட. 3—ஸ்வரூபத்தை ஸமர்ப்பித்தல், பலனை ஸமர்ப்பித்தல் ஆகிய பகுதிகளை விட. 4—காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்தல். 5—செய்ய வேண்டியதாக. 6—விதிக்கப்பட்ட. 7—வசப்படுத்த வேண்டிய. 8—முன்பே உள்ள உபாயம் (எம் பெருமான்). 9—அவ்யவஹித=இடையிடாத (நேர்). 10—தெளிவான பகுதி விகுதிகளால் பொருள் கொள்ளும் போது.*

† 1—अनुष्ठानங்களில்[1]. 2—ப்ரகாரத்தாலே[4].

*1. निक्षेपापर-पर्यायो न्यास: पञ्चाङ्ग-संयुत: ।
संन्यासस्त्याग इत्युक्त: शरणागतिरित्यपि ॥

ல. த. (17-74): ஐந்து அங்கங்களுடன் கூடிய ஸமர்ப்பணம் என்று மறுபெயருள்ள ந்யாஸமே ஸந்யாஸம் எனறும், தயாகம் என்றும், சரணுகதி என்றும் சொல்லப்படுகிறது.

*2. वपुरादिषु योऽपि कोऽपि वा गुणतोऽसानि यथातथाविधः।
तदय तव पादपद्मयोरह अद्यैव मया समर्पितः ॥

ஆள. ஸ்தோ. (52): சரீரம் முதலியவைகளுள் நான் ஏதாவது ஒன்ருக இருக்கக் கடவேன். குணத்தாலும் எப்படிப்பட்டவனுக வாவது ஆகிறேன். ஆதலால இந்த நான் இப்பொழுதே உன் திருவடித் தாமரைகளில் என்னுல் ஸமர்ப்பிக்கப்பட்டேன்.

*3. मम नाथ! यदस्ति योऽस्म्यहं सकलं तद्धि तवैव माधव!।
नियतस्वमिति प्रबुद्धधीरथवा किं नु समर्पयामि ते? ॥

ஆள. ஸ்தோ. (53): நாதனே! மாதவனே! நான் என்றும், என்னுடையவை என்றும் சொல்லப்படும் வஸ்துக்கள் எவையோ அவை அனைத்தும் உனக்கு எப்பொழுதும் சேஷபூதம் என்று நன்கு அறிந்த நான் உனக்கு எதை ஸமர்ப்பிப்பேன்? [அதாவது, எனக்காக ஒன்றும் இல்லாமையால் என்னிடம் உனக்கு ஸமர்ப்பிக்க ஒன்றும் இல்லை. உன்னுடையதை உன்னிடம் கொடுக்கிறேன்.]

*4. तेन संरक्ष्यमाणस्य फले स्वाम्यवियुक्तता ।
केशवार्पण-पर्यन्ता हि आत्मनिक्षेप उच्यते ॥

ல. த. (17-73): எம்பெருமானுல் ரக்ஷிக்கப்படும் ஆத்மாவை பயனிலும் தனக்கு உரிமையில்லை என்ற துணிவுடன எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பதே ஆத்மநிக்ஷேபம் எனப்படுகின்றது.

*5. सर्वज्ञोऽपि हि विश्वेश. सदा कारुणिकोऽपि सन् ।
संसारतन्त्र-वाहित्वात् रक्षापेक्षां प्रतीक्षते ॥
आत्मात्मीय-भरन्यासो ह्यात्म-निक्षेप उच्यते ॥

ல. த. (17-79): எல்லாவற்றையும் நியமிக்கும் எம்பெருமான் எல்லாம் அறிந்தவனுயும் எப்போதும் கருணையுள்ளவனுயுமிருந்தாலும் ஸம்ஸார தந்த்ரத்தை நடத்துகிறவனுதலால், ரக்ஷிக்க வேண்டுமென்ற ப்ரார்த்தனையை எதிர்பார்க்கிருன். ஆத்மா, அதைச் சேர்ந்தவை ஆகிய இவற்றைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பதுதான் ஆத்மஸமர்ப்பணம் எனறு சொல்லப்படுகிறது.

28. सूक्ष्मयोजनैயில்[1] निरपेक्षस्वातन्त्र्यादि-निषेधம்[2] प्रधानம்.

29. पर-योजनैயில்[3] 'नमन नामवान्'[1] என்கிற இதின் ஸ்வாரஸ்யத்தைப் பார்த்தால், முன்பு சொன்ன साध्योपायம் प्रधानம்.

30. 'तत्प्राप्तये प्रधानोऽयं पन्था नमन नामवान्'[1] என்று ஈச்வரன் தன்னையே விவக்ஷித்தால்[4] सिद्धोपायமான†[1] அவன்தானே प्रधानம்

§IV (c). நாராயணசப்தத்தில் தத்புருஷஸமாஸத்தின் முக்கியத்துவம்

31. இஸ் सिद्धोपायத்தை सुप्रसिद्ध-विशेषनामமாய்க் கொண்டு विशदीகரிக்கிற[5] तृतीय-पदத்தில் समास-द्वयத்தில் उत्तर-पदार्थ-प्रधानமாய் उपायभावத்தையும் कण्ठोक्ति பண்ணுகிற[6] तत्पुरुषसमासம் प्रधानம்.

§IV (d). திருமந்திர வாக்கிய யோஜனைகளுள் முக்கியமானது

32. திருமந்திரத்திலே योजना-भेदங்களாலே[7] स्वरूप-उपाय-पुरुषार्थங்களில் ஒரொன்றும், இவ்விரண்டும், மூன்றும் சேரவும் (C-3) प्रधानம்.

§V. சரணாகதி மந்திரங்களுள் த்வயம் முக்கியமாதல்

33. இதில் சொன்ன सिद्ध-साध्य உபாயங்கள் இரண்டையும் இதன் फलविशेषத்தையும் विशिष्टமாக[8] विशदीகரிக்கிற द्वयம் शरणागतिமந்த்ரங்களில் प्रधानம்.

§V(a). த்வயத்தின் பொருள்களில் முக்கியமானவை

34. இங்குத் திருவடிகளை உபாயமாகச் சொன்ன இது ப்ரபத்திக்கு இலக்கான श्रियःपतिயினுடைய ஸ்வரூபத்திற்காட்டில் शुभाश्रयविग्रहத்திற்கு[9] प्रतिपत्ति ஸௌகர்யத்தாலே[10] 'सालम्बनो महायोगः'*[2] என்னும்படி

1—நிருக்தம் என்னும் வேதாங்கத்தால் பொருள் கொள்ளும் போது. 2—அவனை எதிர்பாராத சுதந்திரம் முதலியவற்றை மறுத்தல். 3—ரஹஸ்ய சாஸ்த்ரங்களில் சொல்லுகிற அக்ஷர நிகண்டு முறையில் பொருள் கொள்ளும் போது. 4—கருத்தாகக் கொண்டால். 5—தெளிவாய்க் காட்டுகிற. 6—வெளிப்படையாய்க் கூறுகிற. 7—கொண்டு கூட்டும் வேறுபாடுகளால். 8—சிறப்பாக. 9—பாபத்தைப் போக்கவல்ல சிந்தனைக்கு எளிய அர்ச்சைத் திருமேனி. 10—சிந்தனைக்கு எளிதாயிருப்பதால்.

† 1 —என்னும்[4].

1. इति ते सूक्ष्म उद्दिष्टः परमन्यं निशामय ।
पन्था नकार उद्दिष्टो मः प्रधान उदीर्यते ॥
विसर्गः परमेशस्तु तत्रार्थोऽयं निरुच्यते ।
अनादिः परमेशो यः शक्तिमान् पुरुषोत्तमः ॥
तत्प्राप्तये
इति ते त्रि

அஹிர். (52-30, 3
கூறப்பட்டது. பரம என்ற மற்றொரு பொருளைக் கேள். 'ந' என்பது உபாயத்தையும், 'ம' எனபது முக்யமானதென்பதையும், விஸர்க்கம்(:) எம்பெருமானையும் சொல்லுகின்றன. அநாதியாய் மிகவும் உயர்ந்த ஈச்வரனாய்ச் சக்தியுள்ளவனுயிருக்கிற புருஷோத்தமனை அடைவதற்கு 'நமநம்' என்பதே முக்கியமான உபாயம். இப்படி நமஸ்ஸின் மூன்று விதங்களான அர்த்தங்கள் உனக்குச் சொல்லப்பட்டன.

2. सालम्बनो महायोगः सबीजो यत्र संस्थितः ।
मनस्यव्याहते सम्यक् युञ्जतां जायते मुने ! ॥

வி. பு. (1-22-62): "யோகிகள் தவம்புரியும் காலத்தில் பகவத் ஸ்வரூபத்தை
கடினம்; பண்ணிஞு
நிலைத்து நிற்காது. எ
மாக இருக்கும்பொழு
ஸௌந்தர்ய லாவண்
ஸ்வரூபத்திலுள்ள தீ

யான **प्राधान्य**த்தையும், அதுதன்னில் '**अनतिक्रमणीयं हि चरणग्रहणम्**'[1] **इत्यादि**களிற்படியே திருவடிகளைப் பற்றுமதுக்கு **कृपोत्तम्भकत्व-अतिशय**த்தால் உண்டான **प्राधान्य**த்தையும் ப்ரகாசிப்பித்தபடி.

35. இப்படிச் சொன்னாலும், இத்தாலே **विशिष्ट**னவனே **फल-प्रदान-संकल्प-आश्रय**மான **प्रधानोपाय**ம்.

36. **गुणादि**களால் வரும் **वैशिष्ट्य**ம்[1] **सिद्धोपाय-ऐक्य**த்திற்கும்[2] **सिद्ध-प्राप्य-ऐक्य**த்திற்கும்[3] **विरुद्ध**மல்லாமையாலே உபநிஷத்துக்களின்படியே (C–4) இங்கும் **सिद्ध-उपाय-फल-भाग**த்தில்[4](†[1]) **उपाय-प्राप्य-ऐक्य**ம்[5](†[2]) **प्रधान**மாகலாம்.

§IV. ப்ரபத்தி சாஸ்த்ரார்த்தத்தை விளக்குமவற்றில் முக்கியமானவை

37. திருமந்த்ரத்திலும் **द्वय**த்திலும் ப்ரகாசித்த **प्रपत्ति-शास्त्र**த்தை **उपबृंहि**க்குமவற்றில்[6] **भगवच्छास्त्र**ம்[7] **प्रधान**ம்.

38. இவ் **अर्थ**த்தை **चित्तरञ्जन**த்தோடே[8] ஸர்வரையும் எளிதாகத் தெளிவிக்குமவற்றில் தொண்டர்க்கு அமுதுண்ணலாய் "பொய்யில் பாடலான(†[3])" ஆழ்வார்கள் அருளிச்செயல் **प्रधान**ம்.

39. இதற்கு இதிஹாஸங்களில் **शरण्य-दम्पति-वाक्यविशेष-भूषित**மான **श्रीमद्रामायण**ம் **प्रधान**ம்.†[4]

40. **न्यास-उपासनादिरूप-सर्व-शास्त्रार्थ - उपबृम्हण**ங்களில் '**चत्वार एकतो वेदाः भारतं चैकमेकतः**'[k2] என்னும்படி நிற்கிற **महाभारत**ம் **प्रधान**ம்.

---

குணங்களையும், இவற்றை விளக்கும் மந்த்ரங்களோடு தியானம் செய்தால் யோகம் நிலைத்து நீடித்து நிறகும்'' என பராசர முனிவர் மைத்ரேயருக்கு உபதேசிக்கிறார். □

1—சிறப்பு. 2—முன்பே உள்ள உபாயம் அவன் ஒருவனே என்பதற்கும். 3—முனபே உள்ள பலன் அவன் ஒருவனே என்பதற்கும். 4—முன்பே உள்ள உபாயம் முன்பே உள்ள பலன என்ற பிரிவில். 5—உபாயமும் பலனும் ஒன்ருயிருத்தல். 6—விளக்கிக் கூறுமவற்றில். 7—ஸ்ரீபாஞ்சராத்ரம். 8—உள்ளத்துக்கு இனிமையூட்டிக்கொண்டு:

† 1—सिद्ध-फल-भागத்தில்[1]. 2—அநேகாகாரங்களில் उपाय-प्राप्य ऐक्यம்[4]. 3—பொய்யில் பாடலாழ்வார்கள்[4]. 4—இவ் अर्थक्रमத்தைச் சொல்லுகிற இதிஹாஸங்களில் शरण्य-दम्पतिகளை विशेषित्துச் சொல்லுகிற श्रीमद्रामायणம் प्रधानம்[4].

*1. ஸ்ரீபாஷ்யகாரரின் முக்தகம் (எந்த நூலிலும் சேராத வாக்யம்): ஒருவனுடைய பாதத்தைப் பிடித்து விட்டால அதை மீறி அவன் செல்லமுடியாதன்ருே.

*2. चत्वार एकतो वेदाः भारतं चैकमेकतः ।
समागतैः सुरर्षिभिः तुलां आरोपितं पुरा ।
चतुर्भ्यः सरहस्येभ्यः वेदेभ्योऽधिकं यदा ॥

तदा प्रभृति लोकेऽस्मिन् महाभारतमुच्यते ।
महत्वे च गुरुत्वे च भ्रियमाणं ततोऽधिकम् ॥

महत्वात् भारत्वाच्च महाभारतमुच्यते ।
निरुक्तमस्य यो वेद सर्वपापैः प्रमुच्यते ॥

பார. (ஆதி-1-293 முதல் 296 வரை): ஒரு சமயம் தேவர்களும் ரிஷிகளும் சேர்ந்து நான்கு வேதங்களை ஒரு தட்டிலும், பாரதத்தை ஒரு தட்டிலுமாக வைத்துத் தராசில் நிறுத்தனர். உபநிஷத்துக்களடங்கிய நான்கு வேதங்களைக் காட்டிலும் பாரதம் அதிகமாக இருந்தது. அது முதல் இவ்வுலகத்தில் இது மஹாபாரதம் என்று சொல்லப்படுகிறது; நிறுக்கப்படும் போது மகத்தாகவும் பாரம் என்று சொல்லப்பட்ட அர்த்த கௌரவமுள்ளதாகவுமிருந்ததாலும் மஹாபாரதம் என்று பெயர் பெற்றது. இந்தப் பெயர் வந்த காரணத்தை அறிகிறவன் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவான்.

41. 'धर्मे चार्थे च कामे च मोक्षे च भरतर्षभ'*[1] इत्यादिகளிற் படியே चतुर्विध पुरुषार्थ-स्थापकமான இதில் अध्यात्म-भागம்[1] प्रधानம்.

42. அதிலும் 'अत्रोपनिषदं पुण्यां कृष्णद्वैपायनोऽब्रवीत्'*[2] என்னும்படி ஸர்வ - உபநிஷத - ஸாரமான गीता-शास्त्रம் प्रधानம்.

43. அது தன்னில் 'सर्व-गुह्यतमं'*[3] என்று प्रशंसित्து[2], अनन्तरம் शास्त्र-सारार्थ-सङ्ग्रहம் பண்ணுகிற இரண்டு श्लोकம்*[4] प्रधानம்.

44. அவை இரண்டிலும் द्वयार्थமான प्रपदनத்தி னுடைய अधिकारि-नैरपेक्ष्य-विषय-स्वरूप-फल-विशेषங்களைச்[3] சுருங்கத் தெளிவிக்கையாலே சரமச்லோகம் प्रधानம்.

§VIII. சரம சுலோகத்தின் பொருள்களில் முக்கியமானவை

45. இதில் வாக்யங்கள் மூன்றில் उत्तर-वाक्यங் கள் विधिशेषங்களாய் அங்வயிக்கின்றனவாகையாலே पूर्व-वाक्यம் प्रधानம்.

---

1—ஆத்மாவைப் பற்றிக் கூறும் பகுதி. 2—புகழ்ந்து. 3—ப்ர பத்திக்கு அதிகாரி, அது வேறொன்றையும் எதிர்பாராமை, அதற்கு இலக்கான எம்பெருமான், அதன ஸ்வரூபம், அதன் பயன் ஆகியவற்றை.

*1. பார. (ஆதி-3-26?): தர்மத்தையும், அர்த்தத்தையும், காமததையும, மோக்ஷத்தையும இந்நூல் (மஹாபாரதம்) சிறப்பாகக் கூறுகிறது.

*2. अत्रोपनिषदं पुण्यां कृष्णद्वैपायनोऽब्रवीत् ।
लोकानां च हितार्थाय कारुण्यात् मुनिसत्तमः ॥

பார. (ஆதி-1-274): சிறந்த முனிவரான வ்யாஸர் உலகி லுள்ளோரின நன்மையின பொருட்டு கருணையினுல் இந்த மஹாபாரதத்தில் எல்லாப் பாபங்களையும் போக்குகிற உபநிஷத் தைச் (கீதா சாஸ்த்ரத்தைச்) சொன்னுர்.

*3. सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः ।
इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥

கீதை (18-64): ரஹஸ்யமான இந்த மூன்று யோகங்களுக்குள்ளும் பக்தியோகம் மிகச் சிறந்ததாதலின் அது இன்னும் மிக ரஹஸ்ய மானது என்று முன்பே சொல்லப்பட்டது. மிக ரஹஸ்யமானதை நேரிடையாக நிச்சயிப்பதற்காக அந்தப் பக்தியோக விஷயமாய் இனிக் கூறவேண்டியது இல்லையாம்படி மறுபடியும் நான் கூறும் மிகச்சிறந்த வார்த்தையைக் கேள். பரம ரஹஸ்யத்தைக் கூறும் படி எனது எல்லையற்ற அன்பிற்கு இலக்காயிருக்கிறாய். ஆதலின் உனக்கு நன்மையானதைக் கூறுகிறேன்.

*4. இரண்டு ப்ரதாந ச்லோகங்களாவன:

i. मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥

கீதை(18-65): அர்ஜுந! என்னிடத்தில் நீ எல்லையற்ற அன்புடையனாதலின் என்னைப் பற்றி இடைவிடாத பக்தி யோகத்தைச் செய். எனக்குப் பரிபூர்ண கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டிரு. நீயும் உன்னைச் சேர்ந்தவையும் பகவானான என்னுடையனவே என்று அநுஸந்தித்துக்கொண்டே என்னை வணங்கு. இவ்வாறு செய்யும் நீ என்னையே அடைவாய். இது ஸத்யமென்று உனக்கு ப்ரதிஜ்ஞை செய்கிறேன். நீ என் அன்பிற்குரியனல்லனோ!

ii. सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥

கீதை (18-66): (சேதநனே!) அற்பமான ஞானமும் சக்தியும் அற்பகால வாழ்வும் மோக்ஷம் பெறுவதில் ஆர்வமும் உள்ள நீ தாமதித்துப் பலன்தரும் பக்தியோகம் முதலிய மற்ற உபாயங்களைக் கைவிட்டு, ஸுலபனாய் ரக்ஷகனாய்க் கல்யாண குணங்களை உடையனான என்னிடமே ப்ரபத்தி செய். உன் கடமை தீர்ந்து விடும். பின் பொறுப்பு என்னுடையது. எனக்கு உன்பால் அன்பும் கருணையும் மிகச் சுரந்துவிடும். என் சுதந்திரம் தடையற்றது. எனக்கு ஸங்கல்பமே துணை. உனக்குள்ள அளவற்ற விரோதி வர்க்கத்தையெல்லாம் வேரறுத்து மோக்ஷத்தைத் தந்து எனக்கு ஸமமான போகத்தையும் பரிபூர்ண கைங்கர்யத்தையும் உனக்குச் சாச்வதமாய்க் கொடுப்பேன். இனி நீ ஒன்றுக்கும் சோகிக்கவேண்டாம்.

46. फल-वाक्यத்தில் சொன்ன प्रतिबन्धक-निवृत्तியைப் பற்ற अर्थ-स्वभावத்தாலே 'मामेवैष्यसि' (19[4]) इत्यादिகளிற் சொன்ன स्वतः-प्राप्त-स्वामि-लाभம் प्रधानம்.

47. அர்ஜுனனுடைய शोक-निवर्तक-वाक्यங்களில் द्वितीय-अध्याय-उक्तமான अस्थान-स्नेहादि[1]-निबन्धन-शोक-निवर्तनத்திலும் षोडशाध्यायத்தில் சொன்ன अनधिकारत्वशङ्का-निबन्धन-शोक-निवर्तनத்திலும்[2] காட்டில்[2], இங்கு சொல்லுகிற शीघ्रकारि सुकर-उपाय-उपदेशத்தாலே[3] विलम्बित-फल-कृच्छ्र-साध्य-उपाय-उपदेश-जनित-शोक-निवर्तनம்[4] प्रधानம்.

§IX. ப்ரபந்நருள் முக்கியமானவர்

48. இப்படி रहस्य-त्रयार्थம் தெளிந்து भरन्यासம் பண்ணுகிற अधिकारिகளில் दृप्तரைக்[5] காட்டில் आर्तர்[6] प्रधानர்†[1].

49. आर्तர்தங்களில் क्षणान्तरादि-कालक्षेप-क्षमतै-तारतम्यத்தாலே प्रधानதாரதம்யமுண்டாம்.

§X. கதிசிந்தனம் அந்திமப்ரத்யயம் பற்றிய விஷயங்கள்

50. दृप्तனுக்கு स्वयंप्रयोजन गतिचिन्तनादिகளில்[7] "மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம் ஏகமெண்ணும்"*[1] "வாங்கு எனை நீ மணிவண்ணா"*[2] என்று இருக்குமது प्रधानம்.

51. இவனுக்கு अन्तिम - प्रत्ययம்[8] 'मदीययैव दयया अतिप्रबुद्धः'*[3] என்கிறபடியே स्वयत्न-निरपेक्षமாக[9] (†[2]) सिद्धिக்கும்படி அப்போதைக்கு இப்போதே சொல்லி வைக்குமது प्रधानம்.

† 1—प्रधानம்[1]. 2—स्वयत्न-निरपेक्ष फलமாக[1].

1—தகாத இடத்தில் கொள்ளும் அன்பு முதலியவற்றால். 2—தன் தகுதியற்றமையை நினைத்தலால் வரும் துன்பத்தைத் துடைப்பதை விட. 3—விரைவில் செய்யக் கூடியதாய் (பலன் தருவதாய்) செய்தற்கு எளிதாயுள்ள உபாயமாகிய ப்ரபத்தியை உபதேசிப்பதாலே. 4—தாமதித்துப் பலன் தருவதாய் செய்தற்குக் கடினமான பக்தியோகமெனும் உபாயத்தை உபதேசித்த தால் ஏற்பட்ட துன்பத்தைத் துடைத்தல். 5—த்ருப்தர்=இந்தச் சரீரத்தின் முடிவில் மோக்ஷம் பெற விரும்புமவர். 6—உடனேயே சரீரம் கழிந்து மோக்ஷம் பெற விரும்புமவர். 7—கதிசிந்தனம்= அர்ச்சிராதி மார்க்கத்தைச் சிந்தித்தல். 8—மரண காலத்தில் வரும் எம்பெருமானைப் பற்றிய நினைவு. 9—தன் முயற்சியை எதிர்பாராமல்.

*1. ஆகம் சேர் நரசிங்கமதாகி* ஓர்
ஆகம் வள்ளுகிரால் பிளந்தானுறை*
மாகவைகுந்தம் காண்பதற்கு* என் மனம்
ஏகம் எண்ணும் இராப்பகலின்றியே.

திருவாய் (9-3-7): நரசிம்மனாக அவதரித்து இரணியனின் மார்பைப் பிளந்த எம்பெருமான் நித்யவாஸம் செய்கின்ற பரமாகாசமான பரமபதத்தைக் கண்டு அநுபவிப்பதற்கு இரவு பகல் என்ற பேதமின்றி எப்பொழுதும் எனது மனம் அவன் ஒருவனையே நினைத்து வருகிறது.

*2. வாங்கு நீர்மலருலகில் நிற்பனவும் திரிவனவும்* (ணும்*
ஆங்கு உயிர்கள் பிறப்பிறப்புப் பிணிமூப்பால் தகர்ப்புண
ஈங்கு இதன்மேல் வெந்நரகம் இவையென்ன உலகியற்கை?*
வாங்கு எனை நீ மணிவண்ணா ! அடியேனை மறுக்கேலே*

திருவாய் (4-9-5): எல்லா வஸ்துக்களையும் தனக்குள்ளே வாங்கிக்கொள்கின்ற நீரிலே தாமரைப்பூப் போல மலர்ந்த பூமியில் அந்தந்த இடங்களில் ஸ்தாவரங்களாயும் ஜங்கமங்களாயும் பிறக்கும் உயிர்கள் இவ்வுலகில் பிறப்பு இறப்பு பிணி மூப்பு முதலிய பல துன்பங்களை அநுபவிக்கின்றன. பிறகு கொடிய நகரத்தில் துனபங்களை அநுபவிக்கின்றன. (ஆகையால்) மணிவண்ணா! என்னை நீ இவ்வுலகினின்று மீட்க வேண்டும். தாஸனான என்னை இங்கே சுழலவிட வேண்டாம்.

*3. शरीरपात-समये तु केवल मदीययैव दयया अतिप्रबुद्धः मामेव अवलोकयन्... ।

§XI: கைங்கர்யங்கள் பற்றிய முக்கிய விஷயங்கள்

52. இவனுக்கு இங்கிருந்த காலம் **प्राप्त**மான **आज्ञा-अनुज्ञा-सिद्ध**ங்களான கைங்கர்யங்களில்[1] **आज्ञासिद्ध** மானவை **अकरण**த்தில்[2] **अधिकार-उचित-प्रायश्चित्त**ம் பண்ண வேண்டும்படி நிற்கையாலே **प्रधान**ங்களாம்†[1].

53. அவை தம்மில் '**श्रूयतां धर्म-सर्वस्वं**'*[1], '**पररन्ध्रेषु जात्यन्धाः**'[2] **इत्यादि**களிற்படியே **विहित-करण**ங்களிற் காட்டில்[3] **निषिद्ध-वर्जन**ம்[4] **प्राचुर्येण**[5] **प्रधान**ம்.

54. **अनुज्ञा-सिद्ध-कैङ्कर्य**ங்களில் **क्रियांश**த்தில் **ज्ञानांश**ம் **प्रधान**மானபடியாலே **ज्ञान-उपयुक्त-प्रबन्ध-परिशीलन**மும்[6] **ज्ञातार्थ-प्रतिसन्धान-हेतु**வான[7](†[2])**द्वयवचनादि**களும் **प्रधान**ங்கள்.

§XII. விலக்க வேண்டியவர்களுள் முக்கியமானவர்

55. **परोपदेश-रूप**த்தாலே இவற்றைப் பரிசீலிக்கும் போது[8] கேட்கிற சிஷ்யர்களில் '**नास्तिको भिन्न-मर्यादः**'*[3], '**विद्यचोरो गुरुद्रोहि**'*[4],

---

ச. கத். (சூர். 21): சரீரத்தை விடும் காலத்தில் என்னுடைய (ரங்கநாதனுடைய) கருணையினாலேயே தத்வஜ்ஞாநம் (பகவத் ஜ்ஞாநம்) மேலிட்டு என்னைப் ப்ரத்யக்ஷீகரித்து. □

1— ஆஜ்ஞா கைங்கர்யம்=சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டு, செய்யாவிடில் குற்றமாகும் கைங்கர்யங்கள். அநுஜ்ஞா கைங்கர்யம்=சாஸ்த்ர வரையறைக்கு உட்பட்டு, தன் விருப்பத்தால் செய்யும் கைங்கர்யங்கள் (தீபம், மாலை ஸமர்ப்பித்தல் முதலியன). இதைச் செய்யாவிடில் குற்றமில்லை. 2—செய்யாவிடில். 3—சாஸ்த்ரம் விதித்த செயல்களைச் செய்வதை விட. 4—சாஸ்த்ரங்களால் தடுக்கப்பட்டவைகளைச் செய்யாமை. 5—மிகவும். 6—அறிவு பெறுதற்கு ஏற்ற ஸூக்திகளை ஆராய்தல். 7—அறிந்த விஷயத்தைச் சிந்திக்கக் காரணமான (பாடபேதம்—அறிந்த விஷயத்தைச் சிந்திப்பதில் இன்பம் விளைவிப்பதான). 8—ஆராயும் போது.

† 1—आज्ञाकैङ्कर्यங்கள் प्रधानங்களாம்[4]. 2—ज्ञातार्थ-प्रति-सन्धान-रसहेतुவான[1].

*1. श्रूयतां धर्मसर्वस्वं श्रुत्वा चैवावधार्यताम् ।
आत्मनः प्रतिकूलानि परेषां न समाचरेत् ॥

பார. (உத் ?), பஞ்சதந்த்ரம் (3-10-3): தர்மத்தின் முக்கிய மான தாத்பர்யமானது கேட்கத்தக்கது; கேட்டும் அறியத்தக்கது; தனக்குத் தீங்கு விளைவிப்பவைகளை பிறருக்குச் செய்யக்கூடாது.

*2. पररन्ध्रेषु जात्यन्धाः परदारेषु अपुंसकाः ।
परिवादेषु ये मूकाः तेऽतीव दयिता मम ॥

வி. தர். (76-22): பிறருடைய குற்றம் காண்பதில் பிறவிக் குருடராகவும, பிறர் மனைவியர் விஷயத்தில் நபும்ஸகர்களாகவும், பிறரைப் பழிப்பதில் ஊமையாகவும் இருப்பவர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்சள்.

*3. देवद्विजगुरूणां च हैतुको दूषकोऽशुचिः ।
नास्तिको भिन्नमर्यादः पापकृत् पापचिन्तकः ॥
मूर्खः क्षुद्रोऽतिदुर्मानी कामक्रोधवशंगतः ।
बह्वाशी कुत्सितान्नाशी विरूपः कुलदूषकः ॥
अस्नानभोजी निर्लज्जो ब्रह्मस्वहरणे रतः ।

ப்ரஹ்மாண்டபு. ஸ்ரீஹஸ்திகிரி மாஹாத்ம்யம் (6-89, 90, 91): தேவர்கள் ப்ராஹ்மணர்கள் ஆசார்யர்கள் இவர்களை தூஷிப்பவன், எதற்கெடுத்தாலும் ஏன் ஏன என்று வாதம் பண்ணுபவன், தூய்மை இல்லாதவன், தெய்வம் இல்லை என் பவன், உலக ஒழுக்கத்தை மீறுபவன், பாபத்தைச் செய்பவன், பாபச் செயல்களை நினைப்பவன, முட்டாள், தாழ்ந்தவன், மிகவும் அஹங்காரமுள்ளவன், காமம் கோபம் இவற்றின் வசப்பட்ட வன், வயிறு புடைக்க உண்பவன், கெட்டுப்போனவற்றை உண் பவன், விகாரமானவன, குலத்தைக் கெடுப்பவன், ஸ்நானம் செய்யாமல் உண்பவன், வெட்கம் கெட்டவன், ப்ராஹ்மணர் களின் பொருளை அபஹரிப்பவன்.

*4. विद्याचोरो गुरुद्रोही वेदेश्वर-विदूषकः ।
त एते बहुपाप्मानः सद्यो दण्डया इति श्रुतिः ॥

(?): ஆசார்யனது அநுமதியின்றி மறைந்திருந்து அவனது உபதேசத்தை க்ரஹித்து வித்யையைத் திருடுபவன், குருவுக்கு த்ரோஹம் செய்பவன், வேதத்தையும் கடவுளையும் தூஷிப்பவன்

'न स्थास्यन्ति उपदेशे च' *1 'उपदिष्टेष्वविश्वस्ताः' *2 इत्यादिகளிற் சொன்ன दोषமுடையவர்களிற் காட்டிலும்†1 अन्तर्यामि-पर्यन्त-नित्य-कर्म-बहिर्भूत-देवतान्तरस्पर्शம்1 விடாதவன் வர்ஜநீயரில்2 **प्रधान**ன்.

§ XIII. ஏற்க வேண்டியவருள் முக்கியமானவர்

56. **यथोपदेशம் प्रतिष्ठित-बुद्धि**யாய் **यथा-शास्त्र**ம் **आच**ரித்து, அடைந்தவர்களையும் **आच**ரிப்பிக்கைக்கு ருசியும் சக்தியும் உடையனாய், '**ब्रह्मविद्भिः परं भूतं न किञ्चिदिह विद्यते**' *3என்று†2 கொண்டாடும் படியானவன் **उपादेय**ரில்3 **प्रधान**ன்.

57. **चत्वारिंशत्** ஸம்ஸ்காரங்களெல்லாம் (B-1) உடையவனேயாகிலும் '**दया सर्वभूतेषु**' *4, '**अमानित्वमदम्भित्वं**' *5

---

ஆகிய இவர்கள் மஹாபாபிகளாவர்; கண்டவுடனேயே இவர்களை தண்டிக்கத் தக்கவராவர் என சாஸ்த்திரம் கூறுகிறது. □

1—நித்யகர்மங்களைச் செய்யும் போது கூறும் தேவர்களின் பெயருக்கு எம்பெருமானையே முக்கிய இலக்காகக் கொள்ள வேண்டும்; ஆனால் அதற்கு வெளிப்பட்ட காரியங்களிலும் வேறு தெய்வத்தின தொடர்பு. 2—விலக்க உரியரில். 3—ஏற்றுக் கொள்ள உரியரில்.

† 1—दोषமுடையவர்களிலும்1. 2—என்றும்1.

*1. (?): உபதேசம் செய்யப்பட்டதைப் பின்பற்றுதவர்கள்.

*2. (?): உபதேசம் செய்யப்பட்டதிலும் நம்பிக்கையில்லாதவர்கள்.

*3. (?): ப்ரம்ஹத்தை அறிந்தவர்களைவிட மேலானவர் இங்கு எவருமில்லை.

*4. अथाऽष्टा आत्मगुणाः । दया सर्वभूतेषु शान्तिः अनसूया शौचं अनायासः मङ्गल अकार्पण्यं अस्पृहा च इति ।

கௌதம தர்மஸூ. (1-8): எல்லா உயிர்களிடத்திலும் கருணை, பொறுமை, பொறாமையின்மை, பரிசுத்தம் (தூய்மை), வருந்தாமை, நன்மையை நினைத்தல், லோபமின்மை, ஆசையின்மை என்பன எட்டு ஆத்மகுணங்கள்,

*5. अमानित्वं अदम्भित्वं अहिंसा क्षान्तिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ।। (i)
इन्द्रियार्थेषु वैराग्यं अनहङ्कार एव च ।
जन्म-मृत्यु-जरा-व्याधि-दुःख-दोषानुदर्शनम् ।। (ii)
असक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वं इष्टानिष्टोपपत्तिषु ।। (iii)
मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वं अरतिर्जनसंसदि ।। (iv)
अध्यात्म-ज्ञाननित्यत्वं तत्वज्ञानार्थ-चिन्तनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्तं अज्ञानं यदतोऽन्यथा ।। (v)

*கீதை (13-7 முதல் 11 வரை):* (i) பெரியோரை அவமதியாமை, டம்பத்திற்காக தர்மத்தைச் செய்யாமை, மனம் வாக்கு காயம் இவற்ருல் பிறரைத் துன்புறுத்தாமை, பிறர் துன்புறுத்திஞலும் மனம் கலங்காமை, முக்கரணங்களில் நேர்மை, ஆசார்யனுக்குப் பணிவிடை முதலியன செய்தல், ஆத்ம ஜ்ஞாநத்தைப் பெறுவதிலும் அதற்கான உபாயத்தைச் செய்வதிலும் தகுதியுடைமை, வேதாந்தத்தின் முழுப்பொருளில் உறுதிப்பாடு, ஆத்மாவைத் தவிர்த்த மற்ற விஷயங்களில் மனம் செலுத்தாமை; (ii) கண் காது முதலிய புற இந்திரியங்களால் உணரப் பெறும் விஷயங்களில் பற்றின்மை, உடலை ஆத்மாவாகக் கருதாமை, பிறப்பு - இறப்பு - மூப்பு - பிணி இவற்ருல் உண்டாகும் துக்கமாகிற தோஷத்தை அடிக்கடி நினைத்துப் பார்த்தல்; (iii) ஆத்மாவைத் தவிர மற்ற பொருள்களில் பற்றின்மை, மனைவி மக்கள் வீடு இவற்றில் அதிகப் பற்றின்மை, தன்னைச் சேர்ந்தவருக்கும் சேர்ந்தவைகட்கும் நன்மை தீமை எது நேர்ந்தாலும் மனம் ஒரு நிலையில் இருக்கை (விகாரமற்றிருக்கை); (iv) ஈசுவரஞகிய என்னிடத்தில் மற்ற பலனகளுடன தொடர் பற்ற நிலையான பக்தி, ஜநங்கள் இல்லாத இடத்தில் வசித்தல், துஷ்டஜநத் திரளில் வெறுப்பு; (v) ஆத்மவிஷய ஜ்ஞாநத்தில் நிலை பெற்றிருத்தல், தத்துவ ஜ்ஞாநத்தைப் பெற ஆராய்ச்சி செய்தல்—என்ற இவை எல்லாம் ஆத்மஜ்ஞாநத்துக்கு ஸாதனம் என்று கூறப்பெற்றுள்ளன. இவற்றைவிட வேருனவை ஆத்ம ஜ்ஞாநத்திற்கு விரோதிகளே.

इत्यादिகளிற் சொன்ன आत्मगुण -पूर्तिயில்லாதவனிற் காட்டில் ஸம்ஸ்காரங்களில் एकदेशமுடையவனே யாகிலும்[1] अधिकार-अनुगुण-कैङ्कर्य-पर्यन्त-आत्मगुण-पूर्तियுடையவன்[2](†[1]) प्रधानன்.

§XVI. பாகவத கைங்கர்யத்தின் முக்கியத்துவம்

58. இக்கைங்கர்யம் स्व-निदान-भूत-शेषत्वம்[3] போல भागवत-पर्यन्तமாய் நின்றால் 'स्वाराधनं विहायापि'*[1] इत्यादिகளிற் படியே भागवत-कैङ्कर्यம் प्रधानம்.

§XV: பாகவதர்களில் ஸத்கார - ஸல்லாப - ஸஹவாஸ-பீதி-ப்ரீதி, யோக்யர் என்ற பிரிவுகள் ஒவ்வொன்றிலும் முக்கியமானவர்

59. भागवतரில் सम्यक्-ज्ञानाधिकர்[4] सत्कार-योग्यரில்[5] प्रधानர்.

60. निर्वेद-अधिकர்[6] सल्लाप-योग्यரில்[7] प्रधानர்.

61. वैराग्य-अधिकர் सहवास-योग्यரில்[8] प्रधानர்.

62. अपराध-भीरुக்களாய், அவதாரங்கள் போலே, स्वमाहात्म्यத்தை மறைத்து वर्तिக்குமவர்கள் भीति-योग्यரில்[9] प्रधानர்.

63. 'आह्लाद-शीत'*[2] इत्यादिகளிற்படியே भक्ति-परवशர் प्रीति-योग्यரில்[10] प्राधानர்.

§XVI. பகவத்-பாகவத-ஆசார்ய கைங்கர்யங்கள் பற்றிய முக்கிய விஷயங்கள்

64. இப் भागवतருடைய கைங்கர்யங்களில் 'गुरोः गुरुतरं नास्ति'*[3] इत्यादिகளிற் சொன்ன ஆசார்ய கைங்கர்யம் प्रधानம்.

65. உத்தமமான இது[11] मध्यमத்தோடே[12] கூடினால் प्रधानतरம்.

66. **प्रथम-मध्यम**ங்கள்[13] இரண்டோடும் கூடினால் **प्रधानतम**ம்.

67. இவர்களுடைய கைங்கர்யங்களில் தனக்குப் பலவும் **अशक्य**மானால்[14] **शास्त्र-अनुगुण**மாக **शक्य**மான வற்றில் **प्रतिसम्बन्धि**[15] உகந்தது **प्रधान**ம்.

---

*1—ஏகதேசம்=சிறு பகுதி. 2—தன் தகுதிக்கு ஏற்ற கைங்கர்யம் வரை கொண்டுவிடக் கூடிய ஆத்மகுணங்கள் நிரம்பப் பெற்றவன். 3—கைங்கர்யம் செய்தற்குக் காரணமான அடியனாந் தன்மை. 4—சிறந்த ஞானம் மிக்கவர். 5—உபசரிக்கத் தகுந்தவர். 6—மனம் மிக நொந்தவர். 7—உரையாடத் தகுந்தவர். 8—உடன் பழகத் தகுந்தவர். 9—அச்சத்தோடு பழகவேண்டியவர். 10—அன்புவைக்க உரியவர். 11—ஆசார்ய கைங்கர்யம். 12. நடுவான பாகவத கைங்கர்யம். 13—முதலாவது பகவத் கைங்கர்யம், நடுவானது பாகவதகைங்கர்யம். 14—செய்ய இயலாவிடின். 15—ஏற்றுக்கொள்பவன் (எம்பெருமான்).*

† *1*—**कैङ्कर्योपयुक्त-आत्मगुण-पर्ति**யுடையவன்[4].

*1. स्वाराधनं विहायापि स्वभक्तानर्चयन्ति ये ।
तेभ्यः प्रसन्नो भगवान सिद्धिमिष्टां प्रयच्छति ॥

*(?): எம்பெருமானுக்குச் செய்யும் ஆராதனத்தைக் கைவிட்டாவது அவனடியார்களை பூஜிப்பவர்களிடம் பகவான் மிக்க மதிப்புக் கொண்டு அவன் விரும்பிய பலனை அளிக்கின்றான்.*

*2. आह्लादशीतनेत्राम्बुः पुलकीकृतगात्रवान् ।
सदा परगुणाविष्टो द्रष्टव्यः सर्वदेहिभिः ॥

*வி-தத்: குளிர்ந்த ஆநந்தக் கண்ணீர் நிரம்பிய கண்களுடனும், மகிழ்ச்சியால் மயிர்க் கூச்செறியும் உடலுடனும், எப்பொழுதும் எம்பெருமானது கல்யாண குணங்களை அநுபவிக்கும் மனத்துடனும் கூடிய பகவத் பக்தன் எல்லோராலும் பார்க்கப்பட வேண்டியவன்.*

•*3. ஸாத்யகிதந்த்ரம் (?): ஆசார்யனைவிட மேலானது ஒன்றுமில்லை.*

68. இப்படி உகப்பிக்குமவற்றில் भाव விசேஷம்[1] प्रधानம் என்னுமிடத்தை 'செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை'*[1] முதலான ப்ரமாணங்களிலே கண்டுகொள்வது.

69. चेतन-व्यापारங்களெல்லாம் स्वप्रयोजनार्थங்கள் என்கிற ந்யாயத்தாலே கைங்கர்யத்தில் தன் உகப்பும் ப்ரயோஜநமானாலும், இதுதானும் पर-शेषம்[2] என்று தெளிகையாலே 'प्रहर्षयिष्यामि'*[2] என்கிற परன் உகப்பே प्रधानம்.

§XVII. பகவத் ரூபங்களுள் முக்கியமானது

70. கைங்கர்ய-லக்ஷ்யங்களான भगवद्विग्रहங்களில் परव्यूहादि-क्रमத்தாலே प्राधान्य-क्रमம்.

71. அவை எல்லாவற்றிலும் परत्व-प्रतिपत्ति-दार्ढ्यமுடையவனுக்கு[3] தனக்கு रुचित्त भगवदवतारமெல்லாம் प्रधानம்.

§XVIII. யுகங்களுள முக்கியமானது

72. अच्छिद्रமாக[4] இவனுக்கு ஸர்வ காலங்களும் यथा-शास्त्रம் ஏதேனுமொரு प्रवृत्ति-निवृत्ति-रूप-कैङ्कर्य-योग्यங்களானாலும்[5] सत्त्वादिகளாலுண்டான औचित्य-अतिशयத்தாலே[6] कृतयुगादिகளுக்கு प्राधान्यம்.

73. 'ध्यायन् कृते यजन् यज्ञैः त्रेतायां'*[3] इत्यादिகளிற்படியே लघुவான[7] आनुकूल्य-व्यापारம் गुरुவான[8] भगवत्-प्रीतिயைப் பிறப்பிக்கையாலே कलि-प्राधान्यம் சொல்லப்பட்டது.

---

1—தூய மனப்பான்மை. 2—எம்பெருமானது உகப்பில் அடங்கியது. 3—பரரூபத்தைச் சார்ந்ததே என்கிற திடமான உறுதி உடையவனுக்கு. 4—இடைவிடாது. 5—உரிய செயலைச்

செய்தல், தகாத செயலைக் கைவிடுதல் ஆகிய கைங்கர்யம் செய்ய ஏற்றவைகளாலும். 6—பொருத்த மிகுதியால். 7—அற்பமான. 8—மிகுதியான.

*1. செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்*
தம்மையுகப்பாரை தாமுகப்பரென்னும் சொல்*
தம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆர் இனியே?

நாச்சியார் திரு. (11-10): (மநோவாக்காயஙகள் மூன்றும் ஒரு படிப்பட்டிருக்கையாகிற) ஆர்ஜவகுணமுடைய ஸ்ரீரங்கநாதர் (முன்பு) தம் வாயாலே அருளிசசெய்த ஸத்யமானதும் பெருமை பொருத்தியதுமான (சரம ச்லோக ரூபமான) வார்த்தை (என திருத்தகப்பனாரான) பெரியாழ்வார் (குரு முகமாகக்) கேட்டு அதில் சொல்லியிருக்கிறபடி நிர்பரராயிருப்பர். 'தம்மை விரும்பினவர்களைத் தாமும் விரும்புவர்' என்ற பழமொழியானது தம்மிடத்திலேயே பொய்யாய்ப் போய்விட்டால் அதற்குமேல் (அவர் தம்மை) நியமிப்பார் ஆர்? (யாருமில்லை).

*2. भवन्तमेवानुचरन् निरन्तरं
प्रशान्त-निश्शेषमनोरथान्तरः ।
कदाऽहमैकान्तिक-नित्यकिङ्करः
प्रहर्षयिष्यामि सनाथजीवितः? ॥

ஆள. ஸ்தோ. (46): இடைவிடாமல் உம்மையே அடிமைக்காகப் பின் தொடர்பவனாய், மற்றெல்லா ஆசைகளும் முற்றும் நீங்கப் பெற்றவனாய், ஒரே விஷயமான நித்ய கைங்கர்யத்தைச் செய்து கொண்டு அதையே பரம ப்ரயோஜநமாகப் பெற்று ஆத்ம ஸத்தையை உடையவனாய் அடியேன் உம்மை எப்பொழுது மகிழ்விக்கப் போகிறேன்?

*3. ध्यायन् कृते यजन् यज्ञैः त्रेतायां द्वापरेऽर्चयन् ।
यदाप्नोति तदाप्नोति कलौ सङ्कीर्त्य केशवम् ॥

வி. பு. (6-2-17): கிருத யுகத்தில் தியானம் செய்தும், திரேதா யுகத்தில் யாகங்கள் செய்தும், துவாபர யுகத்தில் அர்ச்சித்தும் எந்த பயனை ஒருவன் அடைவானோ அப்பயனைக் கலி யுகத்தில் பகவானுடைய திருநாமங்களைச் சொல்லுவதால் அடைகிறான்.

§ XIX. கைங்கர்ய உபகரணம்-தேசம்-தீர்த்தம்-தசை இவை ஒவ்வொன்றிலும முகிக்ய அம்சங்கள்

74. कैङ्कर्य-उपकरणங்களில், 'विचित्रा देह-सम्पत्तिः'*[1] इत्यादिகளிற் சொன்ன உள்ளம் உரை செயல் உள்ள இம்மூன்றும் प्रधानம்.

75. இவை अनुगुणங்களாகில்[1], तुलसी-तोयादि बाह्य-उपकरणங்களில்[2] शास्त्र-अविरुद्धமாகப் பெற்றது प्रधानம்.

76. कैङ्कर्य-देशங்களில் अनापत्தில் भागवतोत्तरமான[3] भगवत्क्षेत्रம் प्रधानம்.

77. அதில் स्वयंव्यक्त-सैद्ध-आर्ष-मानुष-वैष्णवங்களில் (B—2) पूर्वपूर्वம்[4] प्रधानம்.

78. இவை கிட்டாத காலத்தில் கருந்தடமுகில் வண்ணனைக் கடைக்கொண்டு தொழும் பத்தர்கள் இருந்த ஊர்தானே "வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்"*[2] என்னும்படி प्रधानம்.

79. कैङ्कर्य-योग्यता-आपादक-तीर्थங்களில்[5] यथाधिकारம் अवगाहनादिகளைப்[6] பண்ணுமவனுக்கு मानस-तीर्थமும்[7] அத்தீர்த்தத்திலே अवगाहित्तவர்களும் प्रधानர்.

80. कैङ्कर्यदशैகளில் शाण्डिल्यादिகள் சொன்ன (C-5) करणत्रय-शुद्धियுள்ள[8] दशा-विशेषம்[9] प्रधानம்.

§ XX. தோஷங்கள் அவற்றை விலக்குதல் பற்றிய முகிக்ய அம்சங்கள்

81. 'रागाद्यपेतं हृदयं'*[3] इत्यादिகளாலே करण-त्रय-दोषகளில் प्रधानங்களும்†[1] காட்டப்பட்டன†[2] आन्तर-शत्रुக்களாய்[10] जेतव्यங்களான இத் दोषங்கள் எல்லா

1—ஒருமித்திருப்பின். 2—திருத்துழாய் தீர்த்தம் முதலிய புறக்கருவிகள். 3—பாகவதர்கள் மிகுந்து வாழ்கின்ற. 4—பிந்தியதற்கு முந்தியது என்ற முறையில். 5—கைங்கர்யம் செய்யத் தகுதியை உண்டாக்கும் தீர்த்தம். 6—அவகாஹநம் = மூழ்குதல். 7—எம்பெருமான் திருமேனியைச் சிநதிததல எனனும் ஸ்நானம். 8—மனம், வாக்கு, உடல் எனற மூன்றும் தூய்மை பெறறுள்ள. 9.—விசேஷச் சூழ்நிலை. 10—உள்ளே உள்ள பகைவர்களாய்.

† 1—प्रधानम்[4]. 2—காட்டப்பட்டது.[4]

*1. विचित्रा देहसंपत्तिः ईश्वराय निवेदितुम् ।
पूर्वमेव कृता ब्रह्मन् हस्तपादादिसंयुता ॥

விஷ்ணுதத். (?); பிரமனே! கை கால் முதலிய அவயவங்களுடன் சரீரத்தை ஆச்சரியமாய் முன்பே அமைந்திருப்பது எம்பெருமானுக்கு ஸமர்ப்பிப்பதற்காகவே.

*2. இரைக்கும் கருங்கடல் வண்ணன் கண்ணபிரான்தன்னை*
விரைக்கொள் பொழில் குருகூர்ச் சடகோபன் சொன்ன*
நிரைக்கொளந்தாதி ஓராயிரத்துள் இப்பத்தும்
உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்.

திருவாய். (5-3-11): மணம் கமழும் சோலைகளை உடைய திருநகரியில் அவதரித்த ஆழ்வார் அலைகளையெறிந்து கோஷிக்கும் கறுத்த கடலின் ஸ்வபாவமுடைய கண்ணபிரானைப் பற்றி அருளிச்செய்த சொற்சுவை பொருட்சுவை மிகுந்த அந்தாதித் தொடரான ஆயிரம் பாசுரங்களில இத் திருவாய்மொழியை சொல்லவல்லவர் வசிக்கும் இடமெலலாம் பரமபதமாகும்.

*3. रागाद्यपेतं हृदयं वागदुष्टाऽनृतादिना ।
हिंसादिरहितः कायः केशवाराधनं त्रयम् ॥

விஷ்ணுதர். (9-9): மனதை ஆசை முதலியவை அற்றதாயும், வாக்கை பொய் முதலிய குற்றங்களற்றதாயும், உடலை (பிறருக்கு) துன்பம் தராததாயும் வைத்திருத்தலே சிறந்த பகவதாராதனமாகும்.

வற்றிலும் 'क्रुद्धः पापं न कुर्यात् कः'*[1] इत्यादिகளிற்படியே क्रोधமாய் பரிணமிக்கும்படி अतिप्रवृद्धமான காமம் प्रधानம்.

82. दोषங்கள் புகுராதபடி பண்ணுமவற்றில்[4] अनुशासनத்தாலும்[1] अनुग्रहத்தாலும் शिक्षकரான[2] ஸாத்விகரோடு உண்டான सहवासம் प्रधानம்.

## §XXI. அபசாரங்களை அவற்றின் பரிஹாரங்களை பற்றிய முக்கிய விஷயங்கள்

83. दोषமூலகங்களாய் 'न क्षमामि'*[2] என்னப் பண்ணும் அபசாரங்களில் அஸஹ்ய-அபசாரம்[3] प्रधानம்.

84. அது தன்னில் कृतघ्नதை[4] அடியாக வரும் आचार्य-द्रोहம் प्रधानம்.

85. 'न क्षमामि'*[2] என்கிறவனைக் கடுகப் प्रसादिப்பிக்குமவற்றில்[5] 'अन्तरेणाञ्जलिं बद्ध्वा'*[3], 'अञ्जलिः परमा मुद्रा'*[4] इत्यादिகளிற்படியே अनुताप-कृतज्ञत्वादि-युक्तமான[6] अञ्जलि-बन्धம் प्रधानம்.

86. भागवत-அபசார-பரிஹாரங்களில் भागवतரை முன்னிட்டே க்ஷமிப்பிக்குமது प्रधानம்.

87. अनुतापादिகள்[2] இல்லாதபோது, முடிவில் अधः-पातिயாகாதபடி[8] பண்ணுமவற்றில் ஆசார்யனுடைய आनृशंस्यம்[9] प्रधानம்.

88. இது தனக்கு மூலமாய் 'தீர்ந்த அடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல' सर्व-परमाचार्यனு

டைய वानर-रक्षास-वर्ग-ஸாக்ஷிகமான, व्रत-विशेषம்†[1](B-3) अनुतप्तரைத் தேற்றுமவற்றில் प्रधानம்.

---

1—உபதேசத்தாலும். 2—திருத்துமவர். 3—பொறுக்க முடியாத குற்றம். 4—நன்றி கொன்றமை. 5—உள்ளம் குளிரச் செய்யுமவற்றில். 6—பச்சாத்தாபம், நன்றியறிவு முதலியவற்றுடன் கூடிய. 7—அநுதாபம்=தீச்செயலை புரிந்ததற்குப் பின்னர் வருந்துவது. 8—அதோகதியடையாதபடி. 9—கருணை (க்ருர மற்ற தன்மை).

† 1—वृत्तविशेषம்[4].

*1. क्रुद्धः पापं न कुर्यात् कः क्रुद्धो हन्याद्गुरूनपि ।
क्रुद्धः परुषया वाचा नरः साधूनधिक्षिपेत् ॥

ராமா. (5-55-5): கோபங்கொண்டவன் எவன் பாபத்தைச் செய்யமாட்டான்? கோபங்கொண்டவன் குருவையும் கொல்லுவான. கோபங்கொண்ட மனிதன் கொடிய சொற்களால் நல்லோர்களை இகழ்வான். (இது ஹநூமான் திருவாக்கு)

*2. पद्मपत्र-शतेनापि न क्षमामि वसुन्धरे! ।
उपचार-शतेनापि न क्षमामि वसुन्धरे! ॥

வராஹபு: பூமியே! நூறு தாமரைப் பூக்களால் பூஜித்தாலும் மன்னிக்கமாட்டேன். நூறு உபசாரங்களைச் செய்தாலும் மன்னிக்கமாட்டேன்.

*3. कृतापराधस्य हि ते नान्यत् पश्याम्यहं क्षमम् ।
अन्तरेणाञ्जलिं बद्ध्वा लक्ष्मणस्य प्रसादनात् ॥

ராமா. (4-32-17): அபராதம் செய்த நீ கைகளைக் கூப்பிக் கொண்டு லக்ஷ்மணனைப் பொறுக்கும்படி கேட்பதைத் தவிர வேறு ஒரு பரிஹாரத்தை நான் காண்கிலேன். (சுக்ரீவனுக்கு ஹநூமான் உபதேசம்)

*4. एषा मुद्रा समाख्याता दिव्या च शिरसो नृप! ।
अञ्जलिः परमा मुद्रा क्षिप्रं देवप्रसादिनी ॥

விஷ்ணுதர்மோ. (3-33-115): விரைவில் எம்பெருமானுடைய அருளைப் பெறுவிக்கும் கைகூப்புதலாகிற அஞ்சலி என்கிற உயர்ந்த சின்னம் (முத்திரை) முத்திரைகளுள் தலைசிறந்தது.

§ XXII: ஆசாரயன்-ப்ராசார்யன் பற்றிய முக்கிய விஷயங்களை

89. 'आचार्यः श्रेष्ठो गुरूणां'*[1] என்கையாலே गुरुवर्गத்தில் आचार्यன் (B–4) प्रधानன்.

90. अध्यात्म-उपदेष्टाக்கள்[1] (†[1]) பலருண்டானபோது, मूल-मन्त्रादि-मुखத்தாலே†[2] अव्यवहित-மோக்ஷோபாயத்தை[2] உபதேசித்தவன் प्रधानன்.

91. आचार्य-प्राचार्य-समवायத்தில்[3] प्राचार्य-अनुवर्तनம்[4] प्रधानம்.

§ XXIII: ஆசார்யன் அநுமதித்த பகவத் கைங்கர்யத்தின் முக்கியத்துவம்

92. 'तमिमं सर्वसम्पन्नं'†[2] इत्यादिகளிற்படியே ஸர்வ-பரமாசார்யனை ஸர்வேச்வரன்-सन्निधियில் आचार्य-अनुशिष्टமான[5] भगवत्-अनुवर्तनம்[6] प्रधानம்.

§XXIV: பகவத் ஸந்நிதியில் ஏற்படக்கூடிய அபசாரங்களுள் முக்கியமானது

93. भगवत्-सन्निधिயில் 'राजा वा राजपुत्रो वा'*[3], 'एकान्तिनो महाभागाः'†[4] इत्यादिகளிற்படியே एकान्ति-व्यतिरिक्त-उपचारம் அபசாரங்களில் प्रधानம்.

§XXV: ஏகாந்திகள், அவர்கள் செய்யும் கைங்கர்யம் இவை பற்றிய முக்கிய விஷயங்கள்

94. एकान्तिகளில்[7] மோக்ஷ-மாத்ர-ப்ரயோஜநன் प्रधानன்.

95. कृत-कृत्यனை அநந்ய-ப்ரயோஜநனுடைய கைங்கர்யம் मुक्त-கைங்கர்யஸமமாகையாலே முமுக்ஷு-கைங்கர்யங்களில் प्रधानம்.†[3]

96. भगवत्-भागवत-समृद्धியையும் भक्ति-तत्व-ज्ञानங்களையும் तद्विरोधि-पाप-निवृत्तியையும் பற்றக் காம்ய கர்மம் प्राप्तமானாலும்[8], भगवान् தன்னையேயாதல் அவனுக்கு असाधारणரையேயாதல்[9] அபேக்ஷிக்குமது प्रधानம்.

---

1—ஆத்மாவைப் பற்றிய வேதாந்தத்தை உபதேசித்தவர். 2—மோக்ஷத்துக்கு நேர் உபாயத்தை. 3—ஆசார்யனும் அவருக்கு ஆசாரயனும் சேர்ந்திருக்கும் போது. 4—ஆசார்யனுக்கு ஆசார்யனை வழிபடுதல. 5—ஆசார்யனால் நியமிக்கப்பட்ட. 6—எம்பெருமானை வழிபடுதல். 7—ஸ்ரீமந்நாராயணனையே பரதேவதையாக உறுதி கொணடவர்கள். 8—ஸ்வரூபத்துக்கு ஏற்றதானாலும். 9—அந்தரங்கர்.

† 1—अध्यात्मज्ञानத்தை उपदेशिத்தவர்கள்[4]. 2-रहस्यत्रय-मुखத்தாலே[4]. 3—कृत-कृत्यனான அநந்யப்ரயோஜநனுடைய கைங்கர்யங்களில் மோக்ஷமும் फलம் என்று நினையாதே मुक्तஸமமாகப் பண்ணும் கைங்கர்யம் प्रधानம்[4].

*1. கௌதம தர்ம ஸூ. (1-2): குருக்களுக்குள் ஆசார்யன் உயர்ந்தவன்.

*2. केशवं केशिहन्तारं अप्रमेयमरिन्दमम् ।
सर्वलोकेश्वरं कृष्णं विज्ञाय पुरुषोत्तमम् ॥
तमिमं सर्वसम्पन्नं आचार्यं पितरं गुरुम् ।
अर्घ्यमर्चितमर्चामः सर्वे समन्तुमर्हथ ॥

பார. (ஸபா-41-23): பிரமன் ருத்திரன் இவர்களைப் படைத்தவனும், கேசி என்ற அசுரனைக் கொன்றவனும், பகைவர்களை அடக்குபவனும், உலகனைத்துக்கும் ஈசுவரனும், புருஷோத்தமனும், எளிதில் அறியமுடியாதவனுமான கிருஷ்ணனை முதல் பூஜையை அடைவதற்கு ஏற்ற எல்லா குணஙகள் நிறைநதவனும், ஆசார்யனும், தந்தையும், குருவும், பூஜிக்கத் தக்கவனுமாக அறிந்து அவனையே பூஜை செய்வதற்கு இசையுங்கள். (இது ராஜஸூய யாகத்தில் ஸ்ரீகிருஷ்ணனுக்கு முதல் பூஜை செய்ய ஸபையோர்களைப் பார்த்து ஸஹதேவன் சொன்னது)

*3(?) ; அரசனானாலும் அரசகுமாரனானாலும்.

*4(?) : பரமைகாந்திகள் மிகவும் சிறந்தவர்கள்.

§XXVI. ஞானம் முதிர்ந்தவருக்குச் செய்யும் பணிவிடையின் முக்கியத்துவமும் அதன் பயனும்

97. **सम्यक्-ज्ञानादि-वर्धक**ங்களில் ஸர்வகாலத்திலும் **'मानं त्यक्त्वा यो नरो वृद्धसेवी'**[*1] **इत्यादि**களிற் சொன்ன **ज्ञान-वृद्ध** - உபாஸநம்[1] **प्रधान**ம்.

98. இஸ் **सम्यक्-ज्ञान-अभिवृद्धि**யாலே[†1] வரும் ஸத்த்வ-உந்மேஷம்[2] **भगवत्-अनुभव-रस-विरोधि-मानस-व्याधि**[†2] பரிஹாரங்களில் **प्रधान**ம்.

§XXVII. ஸுகங்களுள் முக்கியமானது

99. **गुणाधीन-सुख**ங்களில்[3] **शमदमादि-सहित**மான[4] **सात्विक-सुख**ம் **प्रधान**ம்.

100. இப்படி இவன் பெறும் **प्रयोजन-परम्परै**யில் முமுக்ஷுக்களுடைய **परोक्ष-अपरोक्ष-विच्छिन्न-अनुभव**த்தில்[5] **संभावित**மான **स्वातन्त्र्य-उन्मज्जन** - ப்ரஸங்கமில்லாத[6] **अविच्छिन्न-साक्षात्कार** - பரீவாஹமாய்[7], நாராயண சப்தத்தில் **चतुर्थि**யிலே விவக்ஷிதமாய்[8], நமஸ்ஸாலே **शोधित**மாய்[9](†[3]), **नित्य-निर्दोष-निरुपाधिक** - கைங்கர்யத்தாலே[10] வரும் **निरतिशय-आनन्द-रूप**மான[11] **मुक्त-सुख**ம் **सर्वसुख**ங்களிலும் **प्रधान**ம்.

101. இஸ் **सुख**ம் **ईश्वर-सुख**ங்களிலும் காட்டிலும் ந்யூநமில்லாதபடியை[12] 'தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே ஒக்க அருள் செய்வர்'[*2] என்கிறதாகையாலே **मुक्त**னுக்கு வரும் **स्वातन्त्र्य**மும் இக்கைங்கர்யத்தளவிலேயாய் **पराधीन**மாய்

நிற்கையாலே, मोक्ष-प्रदனை सर्व-शरीरिக்கு पूर्वोक्त-नित्य-सिद्ध-निरुपाधिक-प्राधान्यம்[13] सुप्रतिष्ठितம்[14].(†[4])

---

1—அறிவில் முதிர்ந்தவர்களை வழிபடுதல். 2—ஸத்துவகுணம் தலையெடுத்தல். 3—ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் ஆகிய குணங்களால் வரும் ஸுகங்களில். 4—வெளி இந்திரியம் உள் இந்திரியம் (புலன்கள்) இவற்றின் அடக்கத்தோடு கூடிய. 5—மனத்தாலும் நேரிலும் பல தடைகளுடன் பெறும் அநுபவத்தில். 6—சுதந்திர உணர்ச்சி எழுவதற்கு இடமில்லாத. 7—இடையறுது நேரில் கண்டு பெறும் அநுபவத்துக்குப் போக்குவீடாய். 8—பொருளாகக் கொள்ளப்படுவதாய். 9—கலக்கமின்றித் தெளிவிக்கப்பட்டதாய். 10—எந்நாளும் குற்றம் கலவாது பயனை விரும்பாது செய்யும் கைங்கர்யத்தாலே. 11—இதற்கு மேம்பட்டது இல்லை என்னும் படி வரும் ஆநந்த வடிவமான. 12—குறைவற்றபடியை. 13—முனபு கூறப்பட்ட நித்யமாய் இயற்கையான முக்கியத் தன்மை. 14—நன்கு நிலைநாட்டப் பட்டது.

† 1—இஸ் सम्यक्-ज्ञानाद्यभिवृद्धिயாலே[4]. 2—विरोधि[4]. 3—शोधितமான[1]. 4—''ஆக விஷயங்கள் 101'' என்று அதிக பாடம்[1].

[1](?) : எவன் வெட்கத்தை (கர்வத்தை) விட்டு ஜ்ஞாநம் முதிர்ந்தவர்களை அடிபணிகிருனே.

[2]. தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்கு*
தம்மையேயொக்க அருள் செய்வராதலால்*
தம்மையேநாளும் வணங்கித் தொழுதிறைஞ்சி*
தம்மையே பற்றுமனத்து என்றும் வைத்தோமே.

பெரிய திரு. (11 - 3 - 5) : எப்பொழுதும் தம்மையே (எம்பெருமானையே) 'வணங்கித் தொழுவோர்க்குத் தம்மையே ஒத்திருக்கும்படி அருள்செய்வான பரமன். எனவே அருள் செய்யும் பரமனையே நாளும் வணங்கி, தொழுது, இறைஞ்சி மனதில் எப்பொழுதும் அவரையே ப்ராப்யமாக வைத்தோம்.

சீர்க் கடலின் திரையென்னத் தகவால் மிக்க
தேசிகனாய்†[1] திணி இருளாம் கடலை நீக்கி
பாற்கடலோன் திருவணையாய் நின்று பாரம்
காணாத பவக்கடலைக் கடத்துகின்றான்
நீர்க்கு மரக்கலமென்ன விறைவர் இன்பம்
எழுந்தழியும் குமிழியென இகழ்ந்தொழிந்தோம்†[2]
ஆர்க்கினி நாமென் கடவோம் நமக்கும் ஆரென்
கடவாரென்று அடைந்தவர்கட்கு
அறிவித்தோமே. (26)

---

26. **பாற்கடலோன்**—*திருப்பாற்கடலில் பள்ளிகொண்ட எம்பெருமான்;* **சீர்க் கடலின் திரை என்ன**—*சிறப்புற்ற ஸமுத்ரத்தின் அலையென்னும்படி (மேல் மேல் வருகினற);* **தகவால் மிக்க தேசிகர் ஆய்**—*கருணை மிகுந்த ஆசார்யராக அவதரித்து;* **திண் இருள் ஆம் கடலை நீக்கி**—*(நம்மை அஜ்ஞாநமாகிய) வலிய இருள் என்னும் கடலினின்றும் நீக்கி,* **திரு அணையாய் நின்று**—*சிறந்த அணையாய்த் தானே நின்று;* **பாரம் காணாத**—*கரை காண முடியாத;* **பவக் கடலைக் கடத்துகினறான்**—*ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தினின்றும் (நம்மை) கரையேற்றுகின்றான்.* **நீர்க்கும் மரக்கலமென்ன**—*(மனிதரை) இழுத்துச் செல்லுகின்ற ஓடமென்னப்படுமவரான;* **இறைவர் இன்பம்**—*(ப்ரஹ்மா முதலிய) தேவர்களின் ஸுகமும்;* **எழுந்து அழியும் குமிழி என**—*(நீரில்) கிளம்பி அமிழும் நீர்க்குமிழி (போல் நிலையாதது) என்று (நினைத்து);* **இகந்து ஒழிந்தோம்**—*(அதில் விருப்பத்தை) விட்டொழித்தோம்.* **அடைந்தவர்கட்கு**—*(நம்மை வந்து) அடைந்தவர்களுக்கு;* **நாம் இனி ஆர்க்கு என் கடவோம்**—*(ப்ரபந்நரான) நாம் இனி யாருக்கு எவ்விஷயத்தில் கடமைப் பட்டுள்ளோம்?* **நமக்கும் ஆர் என் கடவார்**—*நமக்கும் யார் எவ்வகையில் கடமைப் பட்டுள்ளார்? (எம்பெருமானும் நாமுமே ஒருவருக்கொருவர் கடமைப்பட்டுள்ளோம்);* **என்று அறிவித்தோம்** — *என்று உபதேசித்தோம்.*

† 1—தேசிகனும்[1]. 2—இகந்தொழிந்தோம்[1].

காசினியில் மணியனைத்தும் காயாவண்ணன்
கடைந்தெடுத்த கௌத்துவத்தின்சீர்மைக்கு ஒவ்வா
காசி முதலாகிய நன்னகரியெல்லாம்
கார்மேனி அருளாளர் கச்சிக்கு ஒவ்வா
மாசில் மனந்தெளி முனிவர் வகுத்தவெல்லாம்
மாலுகந்த ஆசிரியர் வார்த்தைக்கு ஒவ்வா
வாசியறிந்து இவையுரைத்தோம் வையத்துள்ளீர்!
வைப்பாக இவை கொண்டு மகிழ்மின் நீரே. (27)

श्रीमद्वेङ्कटनाथः सहृदय-हृदय-प्रसादनं श्रेष्ठम् ।
व्यक्तं प्रधानशतकं व्यतनुत कवि-कथक-करि-घटा-सिंहः ॥[1]

---

27. காசினியில் மணி அனைத்தும்—பூமியிலுள்ள ரத்நங்கள் அனைத்தும், காயா வண்ணன் கடைந்து எடுத்த—காயாம் பூவைப் போன்ற நிறமுடைய எம்பெருமான் (கடலைக்) கடைந்து (தனக்காக) எடுத்த; கவுத்துவத்தின் சீர்மைக்கு ஒவ்வா—கௌஸ்துபமென்னும் ரத்நத்தின் சிறப்புக்கு ஒப்பாகா. காசி முதலாகிய நல் நகரி எல்லாம்—காசி முதலிய புண்ய ஸ்தலமெல்லாம்; கார்மேனி அருளாளர் கச்சிக்கு ஒவ்வா—மேகம் போன்ற திருமேனியை உடைய பேரருளாளர் எழுந்தருளியிருக்கும் காஞ்சீபுரத்திற்கு ஈடாகா. (அவை போல) மாசு இல்—குற்றமற்ற; மனம் தெளி முனிவர்—மனத்தெளிவையுடைய மஹர்ஷிகள்; வகுத்த எல்லாம்—வெளியிட்ட (வேதம், ஸ்ம்ருதி, புராணம்) எல்லாம்; மால் உகந்த ஆசிரியர்—எம்பெருமானுடைய க்ருபைக்கு உரியரான (நம்மாழ்வார் முதலிய) ஆசார்யர்களின்; வார்த்தைக்கு ஒவ்வா—ஒரு வார்த்தைக்கு ஸமமாகா. வாசி அறிந்து இவை உரைத்தோம்—(பொருள்களின்) தாரதம்யம் அறிந்து இவ்விஷயங்களை (ஏற்றத் தாழ்வுகளை)க் கூறினோம். வையத்துள்ளீர்!—உலகத்திலுள்ளோர்களே! நீர் இவை வைப்பாகக் கொண்டு மகிழ்மின்—நீங்கள் இவ் விஷயங்களைச் சேமநிதியாக ஏற்றுமகிழ்வீர்களாக.

1. कवि-कथक-करि-घटा-सिंहः—கவிகளும் தார்க்கிகர்

प्रधाने सर्वशास्त्राणां प्रधान-शतके स्थिते ।
अप्रधानेषु शास्त्रेषु किं मनोऽन्येषु धावसि ॥[1]

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

**प्रधानशतकं सम्पूर्णम् ।**

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

---

களுமாகிய யானைக் கூட்டத்திற்கு ஸிம்மம் போன்ற; श्रीमद्वेङ्कटनाथः—ஸ்ரீமத் வேங்கடநாதன்; सहृदय हृदय प्रसादनं—பாகவதர்களின் மனத்திற்கு இன்பமூட்டும்; श्रेष्टं—உத்தமமான; प्रधानशतक—ப்ரதாந சதகம் என்னும் (க்ரந்தத்தை); व्यक्तं—தெளிவாக; व्यतनुत—விரித்துரைத் தார். □

1. मन.—மனமே !; सर्वशास्त्राणां—எல்லா சாஸ்த்ரங் களுக்குள்ளும்; प्रधाने—முக்கியமான; प्रधानशतके स्थिते—ப்ரதாந சதகம் என்னும் நூல் இருக்கும்பொழுது; अप्रधानेषु—முக்கியமற்ற; अन्येषु शास्त्रेषु—மற்ற சாஸ்த்திரங் களை நோக்கி; किं धावसि—ஏன் ஓடுகிருய் ?

ப்ரதாந சதகம் முற்றிற்று



அடியேன் ஒருவர்க்கு உரியேனோ''*1 इत्यादिகளிற் படியே संशयादि-रहितமான सदसत्-विवेकं பிறந்து[1], அதடியாக 'அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன்''*2 इत्यादिகளிற் சொன்ன तीव्रமான संसार-निर्वेदமும்[2], 'ஐங்கருவி கண்ட இன்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்...ஒழிந்தேன்''*3 என்னும்படி सर्व-सुखान्तर-विरक्तियும், दुरन्तமாய்[3] दुर्निवारமான[4] दुष्कृत-फल-प्रवाहத்தைப்பற்ற[5] 'மாற்றமுள''*4 इत्यादिகளிற்படியே மற்றொரு प्रवृत्तिபண்ணவொட்டாத महाभीतिயும் பிறந்த அதிகாரிக்கு மேல் செய்ய அடுப்பதேதென்னில்:—

---

என்றால் வித்யைகளில் அறியப்பட்டவை எல்லாம் நீயே; இனி அறியப்படப் போகின்றவையும் நீயே. நன்மை பொருந்திய செயல்களையுடைய நாராயணனாயிற்றே நீ! இதை நான் நன்கு அறிந்து கொண்டேன். □

1—நன்று தீதென்ற பகுத்தறிவைப் பெற்று. 2—உலக வாழ்க்கையில் உத்ஸாஹமின்மையும் (ஊக்கமின்மையும்). 3—முடிவில்லாததாய். 4—தவிர்க்கமுடியாத. 5—தீச்செயல்களினால் வரும் தீமைகளின் தொடர்ச்சியைக் குறித்து.

*1. விடையேழன்றடர்த்து வெகுண்டு விலங்கலுற
படையால் ஆழிதட்ட பரமன் பரஞ்சோதி*
மடையார் நீலம்மல்கும் வயல்சூழ் கண்ணபுரமொன்று
உடையானுக்கு* அடியேன் ஒருவர்க்கு உரியேனோ ?

பெரிய திரு.(8-9-3): முன்னொருகாலத்தில் (நப்பின்னைப் பிராட்டியைப் பெறுதற்காக) ஏழு காளைகளை சீறிக்கொண்டு அடக்கியவனும், வாநரஸேனையைக் கொண்டு த்ரிகூடபர்வதமளவும் கடலை அடைத்தவனும், எல்லாரினும் சிறந்தவனும், சிறந்த தேஜஸ்ஸ்வரூபியும், மடைகளெங்கும் நிரம்பிய நீலோத்பல மலர்கள் நிறைந்திருக்கும் கழனிகளால் சூழப்பட்ட திருக்கண்ணபுரம் என்கிற ஒரு சிறந்த திவ்யதேசத்தை இருப்பிடமாகவுடைய எம்பெருமானுக்கு சேஷபூதனான நான் வேறொருவருக்கு உரிமைப் படுவேனோ ?

*2. முந்நீர் ஞாலம் படைத்த எம் முகில்வண்ணனே!'
அந்நாள் நீ தந்த ஆக்கையின்வழி உழல்வேன்*
வெந்நாள் நோய் வீழ வினைகளை வேரறப் பாய்ந்து'
எந்நாள் யான் உன்னை இனிவந்து கூடுவனே?

திருவாய். (3-2-1) : ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் என்ற மூன்று விதமான நீருள்ள கடல் சூழ்ந்த பூமியை (எங்களிடம் கொண்ட கருணையால்) உண்டாக்கிய காளமேக ஸ்வபாவ முடையவனே! ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் என் நன்மைக்காக நீ உடலை அருளினாய். அது இழுத்துச் செல்லும் வேறு வழியிலே சென்று இன்னும் ஸம்ஸாரத்தில் உழன்று கொண்டிருக்கிறேன். உன்னைவிட்டுப் பிரிந்திருக்கிற நாட்கள் மிகவும் உஷ்ணமாய், வியாதிபோல் மிகவும் பொறுக்க முடியாதனவாய் இருக்கின்றன. இப்பிரிவிற்குக் காரணமான கர்மங்களை வாஸனையுடன் ஒழித்து என்றுதான் உன்னோடு சேருவேன் ?

*3. கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி
கண்ட இன்பம்' தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்*
ஒண்தொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்ப*
கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேன் உன் திருவடி (யே.

திருவாய். (4-9-10) : நீயும் அழகிய வளையல்களை அணிந்த பிராட்டியுமாயிருக்கும் கோலத்தை ஸேவித்தேன். அதன் பயனாக கண், காது, த்வக் (தோல்), மூக்கு, நாக்கு என்ற ஐம்புலன்களால் நுகரப்படும் இன்பங்களையும் விட்டொழித்தேன். இப்புலன்களால் அறிய முடியாததும், இவைகளால் நுகரப்படும் ஸுகம் போல் அளவுடையதாய் இல்லாததும், பகவதநுபவத்தைப் பற்ற மிகவும் அற்பமுமான ஆத்மாநுபவமாகிற கைவல்ய ஸுகத்தையும் விட்டொழித்தேன். உன் திருவடிகளை அடையவும் பெற்றேன்.

*4. மாற்றமுள ஆகிலும் சொல்லுவன்* மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொல் ? என்று இன்னம்*
ஆற்றங்கரைவாழ் மரம்போல் அஞ்சுகின்றேன்*
நாற்றச்சுவை ஊறு ஒலியாகிய நம்பீ !

பெரியதிரு. (11-8-1): ஐந்து இந்திரியங்களால் அறியப்படும் விஷயங்களை நியமிக்கும் பரிபூர்ணனே ! ஆற்றின் கரையின் நிற்கும் மரம் (எப்பொழுது வெள்ளம் வந்து விழுந்து விடுவோமோ என்று பயப்படுவது) போல் இந்த ஸம்ஸாரத்தில் என்னை மறுபடி பிறக்க வைப்பாயோ என்று அஞ்சுகின்றேன்.

போன நீருக்கு அணைகோலாதே, வேண்டாத நீரைத் தேக்கவும் பாராதே, விளைநிலத்திற்கு அபேக்ஷித மான நீரை விரகாலே தேக்கிக் கொள்ளுமவர்களைப் போலே தனக்கு स्वरूप-अनुरूपமான परम-पुरुषार्थத்திற்கு தன் अधिकार-अनुरूपமான शरण्यवशीकरण-विशेषத்தை[1] நிஷ்கர்ஷித்து[2], शरण्यனுடைய आभिमुख्य-विशेष हेतुவாக[3] அவன் தானே முன்பு செய்த उपकार-परंपरैயை முகப் பச்சையாக்கி[16], மேற்செய்ய வேண்டும் உபகார பரம் பரையை आकिञ्चन्य-अनन्यगतित्वங்களை முன்னிட்டுக் கொண்டு அபேக்ஷிக்குமது[4] பரமஹிதம்.

### §2. ஜீவனுக்கு எம்பெருமான அநாதிகாலமாயச செய்யும் நான்கு அடிபபடை உபகாரங்கள

सर्वेश्वरன் நமக்கு முன்பு செய்த உபகாரபரம்பரை எது? மேல் அபேக்ஷிக்கப்படும் உபகாரபரம்பரை எது? என்னில் :—

(i) 'इच्छात एव तव विश्व-पदार्थसत्ता'[1] என்கிறபடியே ஸர்வ வஸ்துக்களுடையவும் स्वरूप-स्वभाव-प्रवृत्ति-फलங் கள் தான் இட்டவழக்காம்படி நிற்கிற ஸர்வேச்வரன் தன் औदार्य-अतिशयத்தாலே[5] மேல் நமக்குத் தருகைக் குத் தானே ஸங்கல்பித்துவைத்த नित्य-निर्दोष-निरतिशय-महा-आनन्द-अनुभवத்திற்கு†[1] आश्रयமான अहं-अर्थத்தை[6] अन्यथाकरिக்க[7] வல்லவனாயிருக்க, नित्य-इच्छैயாலே अन्यथाकरिயாதே, "இது நித்யமாகக் கடவது" என்று நிலைநிறுத்தி வைத்தது स्वरूप-सत्ता-रक्षणरूपமான[8] नित्य सिद्ध-उपकारம்[9].

(ii) இந்த प्रत्यक्-आत्म-स्वरूपத்திற்கு परम-पुरुषार्थ-

अनुभवरूपமாயும், तत् - विरोधि-निवर्तन-व्याजरूपமாயும் பரிண மிக்கக்கடவ धर्मभूतज्ञानத்தை மாற்றுதே[10], नित्य-इच्छै யாலே இத்தை अहं-अर्थத்திற்கு नित्य-धर्मமாக்கி வைத்தது[11] स्वभाव-रक्षणरूपமான[12] नित्योपकारம்.

(iii) இப்படி நின்ருல் अनादियान अविद्या-कर्मादि-चक्र-परिवृत्तियாலே परिभ्रामिத்து[13], अनुचित-भोगங்களிலே ஆழங்கால்பட்டு[14], आज्ञा-अतिलङ्घन-रुचियாய்[15] அஸ மஞ்ஜஸன்படியே (B–5) अनर्थहेतुக்களை அநுஷ்டித்து,

---

*1—தஞ்சமாயிருப்பவனை வசீகரிக்கும் உபாயங்களுள் ஒன்றை. 2—தீர்மானித்து. 3—முகம் கொடுத்தற்கு முக்கிய காரணமாக. 4—எதிர்பார்ப்பது. 5—வாரி வழங்கும் தன்மையாலே. 6—ஆத்மாவை. 7—வேருகச் செய்ய (மாற்ற). 8—ஸ்வருபத்தின் இருப்பைக் காத்தலாகிற. 9—எப்போதுமுள்ள உபகாரம். 10—அழிக்காதே. 11—என்றுமுள்ள (இயலபான) தன்மையாகச் செய்து வைத்தது. 12—இயல்பைக் காப்பதாகிற. 13—சுழன்று. 14—மூழ்கி, அழுந்தி. 15—கட்டளையை மீறுவதில் விருப்பமுடையவனுய். 16—முகப்பச்சை = காணிக்கை.*

† 1—निरतिशय-पदार्थानुभवத்திற்கு[3].

*1. इच्छात एव तव विश्व-पदार्थ-सत्ता
नित्यं प्रियास्तव तु केचन ते हि नित्याः ।
नित्यं त्वदेक- परतन्त्र-निजस्वरूपा
भावत्क- मङ्गलगुणा हि निदर्शनं नः ।।

*வைகுண்ட ஸ்தவம் (36): ஓ பகவானே ! எல்லாப் பொருள்களுடையவும் இருப்பு தேவரீரது ஸங்கல்பத்தால்தான் ஏற்படுகிறது. இவற்றுள் சில தேவரீருக்கு எப்பொழுதும் விருப்பமானவை; அவைகளே நித்யமானவை எனப்பட்டன. எப்பொழுதும் தேவரீருக்கே அடங்கின தங்கள் இயல்புடன் கூடிய தேவரீருடைய கல்யாணகுணங்கள் எங்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.*

श्री:

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# ६. उपकार-संग्रहः‡

# 6. உபகார-ஸங்க்ரஹம்

[எம்பெருமான் சேதநர்களுக்கு அநாதிகாலமாகவும், மோக்ஷோபாயத்தை அநுஷ்டிப்பித்தல் முதல் பரமபதத்தை அடைவித்தல் வரையிலும், பரமபதத்தில் நித்யமாகவும் செய்யும் உபகாரங்களைச் சுருக்கி வெளியிடும் ரஹஸ்யம]

[விஷயச்சுருக்கம்: I. பூர்வோபகார பரம்பராதிகாரம் : *பரமஹிதம்: விளக்கம்—எம்பெருமான் ஜீவனுக்கு அநாதிகாலமாய்ச் செய்யும் நான்கு அடிப்படை உபகாரங்கள்—அஜ்ஞாத ஸுக்ருதத்தைத் தோற்றுவித்தலாகிய உபகாரம்—தண்டித்தலாகிய சிக்ஷா ரூப உபகாரம்—மோக்ஷோபாயத்தில் மூட்டும்வரை செய்யும் பற்பல உபகாரங்கள்.*

II. ஸாதநாதிகாரம் : *ஸாத்யோபாயத்தைக் கைக்கொள்வித்தல் ஸம்பந்தமான ஐந்து உபகாரங்கள்—பக்தியையோ ப்ரபத்தியையோ செய்பவனுக்கு இங்கு இருக்கும் நாள் வரை செய்யும் உபகாரங்கள்—மோக்ஷோபாயத்தைச் செய்து முடித்தவனுக்கு சரீரம் விடும்போது செய்யும் உபகாரங்கள்.*

III. நிர்யாணாதிகாரம் : *மோக்ஷோபாயத்தைச் செய்து முடித்தவனுக்குச் சரீரத்தினின்று புறப்பட்ட பின் செய்யும உபகாரங்கள் (விரஜா நதிக்கரையை அடையும் வரையும் அதற்குப் பிறகும் செய்யும் உபகாரங்கள்) — பொய்ந்நின்ற என்னும் திருவிருத்த முதற்பாட்டில் எம்பெருமான் ஜீவனுக்குச் செய்யும் உபகாரங்களை நம்மாழ்வார் காட்டியருளல்; பாசுரத்தின் பொழிப்புரை; அதில் அநுஸந்திக்க வேண்டிய பொருள்கள்; அதின் முக்கிய கருத்து.*]

---

*‡ரஹஸ்யங்களில் 25-வது; அம்ருதாஸ்வாதிநீ ரஹஸ்யங்களில் 6-வது.*

# I. பூர்வோபகார பரம்பரை என்னும் முதல் அதிகாரம்

அந்தமிலாப் பேரின்பம் அருந்த ஏற்கும் †[1]
அடியோமை அறிவுடனே என்றும் காத்து
முந்தை வினை நிரைவழியில் ஒழுகாதெம்மை
முன்னிலையாம் தேசிகர்தம் முன்னேசேர்த்து
மந்திரமும் மந்திரத்தின் வழியும் காட்டி
வழிப்படுத்தி வான் ஏற்றி அடிமைகொள்ள
தந்தையென நின்ற தனித் திருமால்தாளில்
தலைவைத்தோம் சடகோபன் அருளினாலே, (28)

## §1. பரமஹிதத்தின் விளக்கம்

ஸர்வாத்மாக்களுக்கும் **सर्वविधबन्धु**வான **सर्वेश्वर**னுடைய **शासन-रूप**மாய்க் கொண்டு[1] **प्रवृत्त**மாய் '**शास्त्रं हि वत्सलतरं मातापितृ-सहस्रतः**'*[1] என்னும்படி ஸர்வருக்கும் ஸர்வதேசத்திலும் ஸர்வகாலத்திலும் ஸர்வ-அவஸ்தையிலும் ஸர்வ-அஹித-**निवृत्ति**யையும் ஸர்வ-ஹித-**प्रवृत्ति**யையும்†[2] உண்டாக்குகைக்குத் திருமுகமாய்[2] நின்ற **शास्त्र**த்தில் **प्रधान**மான **उपनिषत्-भाग**த்திலே **सम्यङ्न्याय-अनुगृहीत-सदाचार्य-उपदेश**த்தாலே[3] 'இனி அறிந்தேன்'*[2], 'கண்ணபுரம் ஒன்றுடையானுக்கு

---

1—ஆணையாய்க் கொண்டு. 2—காரணமாய். 3—சரியான நீதிவழி நின்ற (தர்க்கங்களைத் துணைகொண்ட) நல்லாசிரியர் உபதேசத்தாலே.

† 1—அறிந்த பேர்க்கும்[4]. 2—ஸர்வ-ஹித-நிவ்ருத்தியையும் ஸர்வ-அஹித-ப்ரவ்ருத்தி[4].

28. **அந்தம் இலாப் பேர் இன்பம்**—அளவற்ற பெரிய மோக்ஷாநந்தத்தை; **அருந்த ஏற்கும் அடியோமை**—அநுபவிப்பதற்குத் தகுதியுள்ள தாஸர்களான எம்மை; **என்றும் அறிவுடனே காத்து**

—எப்பொழுதும் நித்யமான தர்மபூதஜ்ஞாநத்துடன் ரக்ஷித்து; எம்மை—எங்களை; முந்தை நிரை வினைவழியில் ஒழுகாது—அநாதியாய்த் தொடர்ந்துவரும் கர்மப் பெருக்கில் (கரையேறாமல்) ஆழ்ந்து செல்லாதவாறு; முன் நிலை ஆம்—(நமக்கு அருள்புரிய) முதல் ஸ்தாநத்தில் நிற்கின்ற; தேசிகர் தம் முன்னே சேர்த்து—ஆசார்யர்கள் பக்கல் கொண்டு சேர்த்து; மந்திரமும்—திருமந்த்ரம் முதலிய மந்த்ரத்தையும்; மந்திரத்தின் வழியும் காட்டி—அந்த மந்த்ரத்தில் சொல்லப்படும் (ப்ரபத்தி யென்னும்) உபாயத்தையும் உபதேசித்து; வழிப்படுத்தி—அவ்வுபாயத்தை அநுஷ்டிக்கும்படியும் செய்து; வான் ஏற்றி—பரமபதத்தில் சேர்ப்பித்து; அடிமை கொள்ள—(நாம் செய்யும்) கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளுவதற்கு; தந்தை என நின்ற—(இவ்வளவு மஹோபகாரம் செய்ய முற்பட்டதால்) தகப்பன் என்னும்படி நின்ற, தனித் திருமால் தாளில்—நிகரற்ற எம்பெருமான் திருவடிகளில், சடகோபன் அருளினால்—நம்மாழ்வாருடைய க்ருபையாலே; தலைவைத்தோம்—தலைவணங்கப் பெற்றோம்.

'அடியோமை எனறும் காத்து', 'அடியோமை என்றும் அறிவுடனே காத்து' என்று இரண்டு தொடராக்கிக் கொள்க. எம்பெருமான் ஜீவனுடைய ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும் மாற்றவல்லவனாயினும், தன் நித்யமான ஸங்கல்பத்தாலே ஜீவனை நித்யனாக்கி ஜீவஸ்வரூபத்தையும், தர்மபூதஜ்ஞாநத்தை ஜீவனைப் பிரியாத நித்யகுணமாக்கி ஜீவஸ்வபாவத்தையும் காக்கின்றான் என்று தாத்பர்யம் கொள்க.

உபகாரஸங்க்ரஹம் என்னும் இந்நூல் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவிருத்தத்தின் முதற் பாசுரத்தின் வ்யாக்யாநமாகும். எனவே இங்கு ஆழ்வாரைப் பற்றிக் குறிக்கலாயிற்று.

*1. (?): ஆயிரம் தாய்தந்தையரைவிட சாஸ்த்ரம் அதிக வாத்ஸல்யம் உடையதன்றோ.

*2. இனி அறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்!
இனி அறிந்தேன் எம்பெருமான்! உன்னை*—இனி அறிந்தேன்
காரணன நீ கற்பவை நீ* நற்கிரிசை
நாரணன நீ நன்கறிநதேன் நான்.

நான்முகன் திரு. (96): எம்பெருமானே! சிவனுக்கும், பிரமனுக்கும் தெய்வமாக உன்னை அறிந்தேன்; மேலும் அவர்களுக்கும் நீயே காரணம் என்பதையும் அறிந்தேன். இதுவரையில்

அடியேன் ஒருவர்க்கு உரியேனோ'¹[1] इत्यादिகளிற் படியே संशयादि-रहितமான सदसत्-विवेकं பிறந்து[1], அதடியாக 'அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன்'*[2] इत्यादिகளிற் சொன்ன तीव्रமான संसार-निर्वेदமும்[2], 'ஐங்கருவி கண்ட இன்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்...ஒழிந்தேன்'*[3] என்னும்படி सर्व-सुखान्तर-विरक्तियும், दुरन्तமாய்[3] दुर्निवारமான[4] दुष्कृत-फल-प्रवाहத்தைப்பற்ற[5] 'மாற்றமுள'*[4] इत्यादिகளிற்படியே மற்றொரு प्रवृत्तिபண்ணவொட்டாத महाभीतियும் பிறந்த அதிகாரிக்கு மேல் செய்ய அடுப்பதேதென்னில்:—

என்றால் வித்யைகளில் அறியப்பட்டவை எல்லாம் நீயே; இனி அறியப்படப் போகின்றவையும் நீயே. நன்மை பொருந்திய செயல்களையுடைய நாராயணனாயிற்றே நீ! இதை நான் நன்கு அறிந்து கொண்டேன். □

1—நன்று தீதென்ற பகுத்தறிவைப் பெற்று. 2—உலக வாழ்க்கையில் உத்ஸாஹமின்மையும் (ஊக்கமின்மையும்). 3—முடிவில்லாததாய். 4—தவிர்க்கமுடியாத. 5—தீச்செயல்களினால் வரும் தீமைகளின் தொடர்ச்சியைக் குறித்து.

*1. விடையேழன்றடர்த்து வெகுண்டு விலங்கலுற
படையால் ஆழிதட்ட பரமன் பரஞ்சோதி
மடையார் நீலம்மல்கும் வயல்சூழ் கண்ணபுரமொன்று
உடையானுக்கு அடியேன் ஒருவர்க்கு உரியேனோ ?

பெரிய திரு.(8-9-3): முன்னொருகாலத்தில் (நப்பின்னைப் பிராட்டியைப் பெறுதற்காக) ஏழு காளைகளை சீறிக்கொண்டு அடக்கியவனும், வாநரஸேனையைக் கொண்டு த்ரிகூடபர்வதமளவும் கடலை அடைத்தவனும், எல்லாரினும் சிறந்தவனும், சிறந்த தேஜஸ்ஸ்வரூபியும், மடைகளெங்கும் நிரம்பிய நீலோத்பல மலர்கள் நிறைந்திருக்கும் கழனிகளால் சூழப்பட்ட திருக்கண்ணபுரம் என்கிற ஒரு சிறந்த திவ்யதேசத்தை இருப்பிடமாகவுடைய எம்பெருமானுக்கு சேஷபூதனான நான் வேறொருவருக்கு உரிமைப் படுவேனோ ?

'2. முநநீர் ஞாலம் படைத்த எம் முகிலவண்ணனே!'
அந்நாள் நீ தந்த ஆக்கையினவழி உழல்வேன்'
வெந்நாள் நோய் வீழ வினைகளை வேரறப் பாய்ந்து'
எநநாள் யான் உன்னை இனிவந்து கூடுவனே?

திருவாய். (3-2-1) : ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் என்ற மூன்று விதமான நீருளள கடல் சூழ்ந்த பூமியை (எங்களிடம் கொண்ட கருணையால) உண்டாக்கிய காளமேக ஸ்வபாவ முடையவனே! ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் என் நன்மைக்காக நீ உடலை அருளினாய். அது இழுத்துச் செல்லும் வேறு வழியிலே சென்று இனனும் ஸம்ஸாரத்தில் உழன்று கொணடிருக்கிறேன். உனனைவிட்டுப் பிரிந்திருக்கிற நாட்கள் மிகவும் உஷ்ணமாய், வியாதிபோல் மிகவும் பொறுக்க முடியாதனவாய் இருக்கின்றன. இப்பிரிவிற்குக் காரணமான கர்மங்களை வாஸனையுடன் ஒழித்து என்றுதான் உன்னோடு சேருவேன் ?

'3. கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி
கண்ட இன்பம்' தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்'
ஒண்தொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்ப' (யே.
கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேன் உன் திருவடி

திருவாய். (4-9-10) : நீயும் அழகிய வளையல்களை அணிந்த பிராட்டியுமாயிருக்கும் கோலத்தை ஸேவிததேன். அதன் பயனாக கண், காது, த்வக் (தோல்), மூக்கு, நாக்கு என்ற ஐம்புலன் களால் நுகரப்படும் இன்பங்களையும் விட்டொழித்தேன. இப் புலன்களால் அறிய முடியாததும், இவைகளால் நுகரப்படும் ஸுகம் போல் அளவுடையதாய் இல்லாததும், பகவதநுப வத்தைப் பற்ற மிகவும் அற்பமுமான ஆத்மாநுபவமாகிற கைவல்ய ஸுகத்தையும் விட்டொழித்தேன். உன் திருவடிகளை அடையவும் பெற்றேன்.

*4. மாற்றமுள ஆகிலும் சொல்லுவன்* மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொல்? என்று இன்னம்*
ஆற்றங்கரைவாழ் மரம்போல் அஞ்சுகின்றேன்*
நாற்றச்சுவை ஊறு ஒலியாகிய நம்பீ!

பெரியதிரு. (11-8-1): ஐந்து இந்திரியங்களால் அறியப்படும் விஷயங்களை நியமிக்கும் பரிபூர்ணனே! ஆற்றின் கரையின் நிற்கும் மரம் (எப்பொழுது வெள்ளம் வந்து விழுந்து விடுவோமோ என்று பயப்படுவது) போல் இந்த ஸம்ஸாரத்தில் என்னை மறுபடி பிறக்க வைப்பாயோ என்று அஞ்சுகின்றேன்.

போன நீருக்கு அணைகோலாதே, வேண்டாத நீரைத் தேக்கவும் பாராதே, விளைநிலத்திற்கு அபேக்ஷிதமான நீரை விரகாலே தேக்கிக் கொள்ளுமவர்களைப் போலே தனக்கு स्वरूप-अनुरूपமான परम-पुरुषार्थத்திற்கு தன் अधिकार-अनुरूपமான शरण्यवशीकरण-विशेषத்தை[1] நிஷ்கர்ஷித்து[2], शरण्यனுடைய आभिमुख्य-विशेष हेतुவாக[3] அவன் தானே முன்பு செய்த उपकार-परंपरैயை முகப் பச்சையாக்கி[16], மேற்செய்ய வேண்டும் உபகார பரம்பரையை आकिञ्चन्य-अनन्यगतित्वங்களை முன்னிட்டுக் கொண்டு அபேக்ஷிக்குமது[4] பரமஹிதம்.

## §2. ஜீவனுக்கு எம்பெருமான் அநாதிகாலமாய்ச் செய்யும் நான்கு அடிப்படை உபகாரங்கள்

सर्वेश्वरன் நமக்கு முன்பு செய்த உபகாரபரம்பரை எது? மேல் அபேக்ஷிக்கப்படும் உபகாரபரம்பரை எது? என்னில் :—

(i) 'इच्छात एव तव विश्व-पदार्थसत्ता' *1 என்கிறபடியே ஸர்வ வஸ்துக்களுடையவும் स्वरूप-स्वभाव-प्रवृत्ति-फलங்கள் தான் இட்டவழக்காம்படி நிற்கிற ஸர்வேச்வரன் தன் औदार्य-अतिशयத்தாலே[5] மேல் நமக்குத் தருகைக்குத் தானே ஸங்கல்பித்துவைத்த नित्य-निर्दोष-निरतिशय-महा-आनन्द-अनुभवத்திற்கு†1 आश्रयமான अहं-अर्थத்தை[6] अन्यथाकरिக்க[7] வல்லவனாயிருக்க, नित्य-इच्छैயாலே अन्यथाकरिயாதே, "இது நித்யமாகக் கடவது" என்று நிலைநிறுத்தி வைத்தது स्वरूप-सत्ता-रक्षणरूपமான[8] नित्य सिद्ध-उपकारம்[9].

(ii) இந்த प्रत्यक्-आत्म-स्वरूपத்திற்கு परम-पुरुषार्थ-

अनुभवरूपமாயும், तत् - विरोधि-निवर्तन-व्याजरूपமாயும் பரிண மிக்கக்கடவ धर्मभूतज्ञानத்தை மாற்றுதே[10], नित्य-इच्छै யாலே இத்தை अहं-अर्थத்திற்கு नित्य-धर्मமாக்கி வைத்தது[11] स्वभाव-रक्षणरूपமான[12] नित्योपकारம்.

(iii) இப்படி நின்றால் अनादियान अविद्या-कर्मादि-चक्र-परिवृत्तियாலே परिभ्रामिத்து[13], अनुचित-भोगங்களிலே ஆழங்கால்பட்டு[14], आज्ञा-अतिलङ्घन-रुचियாய்[15] அஸமஞ்ஜஸன்படியே (B–5) अनर्थहेतुக்களை அநுஷ்டித்து,

---

1—தஞ்சமாயிருப்பவனை வசீகரிக்கும் உபாயங்களுள் ஒன்றை. 2—தீர்மானித்து. 3—முகம் கொடுத்தற்கு முக்கிய காரணமாக. 4—எதிர்பார்ப்பது. 5—வாரி வழங்கும் தன்மையாலே. 6—ஆத்மாவை. 7—வேறாகச் செய்ய (மாற்ற). 8—ஸ்வரூபத்தின் இருப்பைக் காத்தலாகிற. 9—எப்போதுமுள்ள உபகாரம். 10—அழிக்காதே. 11—என்றுமுள்ள (இயல்பான) தன்மையாகச் செய்து வைத்தது. 12—இயல்பைக் காப்பதாகிற. 13—சுழன்று. 14—மூழ்கி, அழுந்தி. 15—கட்டளையை மீறுவதில் விருப்பமுடையவனாய். 16—முகப்பச்சை = காணிக்கை.

† 1—निरतिशय-पदार्थानुभवத்திற்கு[3].

1. इच्छात एव तव विश्व-पदार्थ-सत्ता
नित्यं प्रियास्तव तु केचन ते हि नित्याः ।
नित्यं त्वदेक- परतन्त्र-निजस्वरूपा
भावत्क- मङ्गलगुणा हि निदर्शनं नः ।।

வைகுண்ட ஸ்தவம் (36): ஓ பகவானே ! எல்லாப் பொருள்களுடையவும் இருப்பு தேவரீரது ஸங்கல்பத்தால்தான் ஏற்படுகிறது. இவற்றுள் சில தேவரீருக்கு எப்பொழுதும் விருப்பமானவை; அவைகளே நித்யமானவை எனப்பட்டன. எப்பொழுதும் தேவரீருக்கே அடங்கின தங்கள் இயல்புடன் கூடிய தேவரீருடைய கல்யாணகுணங்கள் எங்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.

'அருநரகத்து அழுந்தும் பயன் படைத்தேன்'[1]
என்கிறபடியே **अतिघोर**ங்களான நரகங்களிலே விழுந்து அழுஞ்சிறையிலே†[1] கிடக்குமவனுக்கு **நாய்களோ டொக்க நடுவே சில தீனி இடுமாப்போலே नरक-तुल्य**ங் களாய் வருகிற **स्वर्गादि-विषमधु**க்களை புஜித்தும், **नित्य-नैमित्तिक-प्राकृत-प्रळय**ங்களிற்படியே (B-6) **मूर्च्छ**த்த சிறையின்படியாய் அநேக காலம் மூச்சடங்கிக் கிடந்தும், இவற்றில் **अनुतापादि**களுமற்றுப்†[2] போந்த நம்மைப் பற்ற **अव्याज-कृपै**யாலே[1] **अवसर-प्रतीक्ष**ராய்[2] நின்றதுவும்;

(iv) இப்படி நின்றால் **अपराध-प्रवाह**த்தில் விலக் கற்று, விலக்குவாரையும் விலக்கிப் போருகிற நம்மை ஸர்வஸமராய் **कर्म-अनुरूप-फल-प्रद**ராய்க் கொண்டு **स्वच्छन्द-लीला-प्रवृत्त**ரானதானே விலக்கி விளையாடுகைக்கு **अज्ञात-सुकृतादि**கள்[3] என்று சில **अल्प-व्याज**ங்களை **अन्य-फल-हेतु**க்கள் அல்லாதபடி **अमोघ**ங்களாக **सङ्कल्पित्त** துவும்†[3]— **स्वेच्छा-मात्र-अनुबन्धि**களுமாய்[4] **अनादि**களுமான உபகாரங்கள். இவை நாலும் மேலுள்ள உபகார நிலங்களுக்கெல்லாம் **अधिष्ठान**ங்களாய்[5] நிற்கின்றன.

### §3: அஜ்ஞாத ஸுக்ருதத்தைத் தோற்றுவித்தலாகிய உபகாரம்

இந்நினைவு உண்டானாலும் தவிர்ந்தாலும் தனக்கு ஒரு **छेद**மற்றிருக்க[6](†[4]), ஓர் அவஸரத்திலே[7] நமக்கு **अज्ञात-सुकृतादि**களை உண்டாக்கின இது **मोक्षोपयुक्त**ங் களான[8] உபகாரங்களில் **प्रथम-उपकार**ம்.

### §4: தண்டித்தலாகிய சிக்ஷாரூப உபகாரம்

**अवसर-अनुगुण-सर्वकार्य-कर्ता**வான[9] **ईश्वर**ன் பண்ணுகிற

कादाचित्क-उपकार-आरम्भத்திலே[10], 'இன்றென்னைப் பொருளாக்கித் தன்னை என்னுள் வைத்தான், அன்று என்னைப் புறம்போகப் புணர்த்தது என் செய்வான்'*2

---

1—காரணமில்லாத (இயல்பான) கருணையாலே. 2—தக்க தருணத்தை எதிர்பார்த்து. 3—அறியாமல் செய்த நற்செயல் முதலியவை. 4—தன்னுடைய விருப்பத்தோடு மட்டும் சம்பந்த முடைய. 5—இருப்பிடங்களாய் (ஆதாரங்களாய்). 6—குறை யற்றிருக்க. 7—சமயத்திலே. 8—மோக்ஷம் பெறப் பயன்படும். 9—சமயத்திற்குத் தக்கபடி எல்லாக் காரியங்களையும் செய்ப வனே. 10—எப்பொழுதாவது செய்யும் உபகாரத்தின் ஆரம்பத் திலே.

† 1—அழுக்குச் சிறையிலே[4]; அழுகுஞ்சிறையிலே[2]. 2—अनुतापादिகளுமன்றிக்கே[4]. 3—उच्छ्रितத்தும்[1]. 4—भेद மற்றிருக்க[3].

(ளத்து
*1. சாந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணரின்ப வெள்
ஆழ்ந்தேன்' அருநரகத்து அழுந்தும் பயன்படைத்தேன்*
போந்தேன புண்ணியனே! உனனையெய்தி என் தீவினைகள்
தீர்ந்தேன்* நினனடைந்தேன் திருவிண்ணகரானே!

பெரியதிரு. (6-3-4): திருவிண்ணகரானே! குங்குமம் அணிநத மெல்லிய முலைகளையுடையரான மாதர்களது பருத்ததோள் களோடே அணைவதனால் உண்டாகும் இன்பசாகரத்தில் (கீழ் நாட்களில்) மூழ்கிக் கிடந்தேன். (அதனால்) கொடிய ஸம்ஸார நரகத்தில் அழுந்திக் கிடப்பதாகிற பலனைப் பெற்றேன. புண் ணிய வடிவெடுத்திருக்கும் பிரானே! உன் திருவடிவாரத்தில் வந்து சேர்ந்து எனமே எனது கொடும்பாவங்கள் தொலையப் பெற்றேன். எனவே இறுதியில உன்னையே அடையும் பேறு பெற்றேன்.

*2. இன்று என்னைப் பொருளாக்கித் தன்னை என்னுள் வைத்தான்*
அன்று என்னைப் புறம்போகப் புணர்த்தது என் செய்வான்?*
குன்றென்னத் திகழ் மாடங்கள் சூழ் திருப்பேரான்*
ஒன்று எனக்கருள்செய்ய உணர்த்தலுற்றேனே.

திருவாய். (10-8-9): மலைகள் போல் விளங்குகின்ற மாடங்களால்

என்கிற विचारத்தை[1] வைத்து, सर्व-तन्त्र-सिद्धமான[2] अनादि-सामग्री-प्रवाह-विशेष-वैचित्रिக்கு[3] अनुगुणமாகஅல்லாத भोग-व्यवस्थादिகளிற்போல[4](†[1]) இங்கும் कार्य-दर्शनத்தாலே[5] ஒரு व्यवस्थापकம்[6] உண்டு என்று பொதுவிலே बुद्धि பண்ணி 'நடுவே வந்து உய்யக் கொள்கின்ற நாதன்'*[1] என்கிறபடியே இக்கால விசேஷத்தில் அவனுடைய उपकारकत्वமே अनुसन्धेयம். ईश्वरன் கீழும் மேலும் பண்ணும் दण्ड-विशेषங்களெல்லாம் शिक्षा-विशेष-रूपங்களான उपकारங்களாம். இவற்றால் ஒருவனுக்கு அப்போது புரித்தலன்றிக்கே ஒழிந்தாலும் पुरुषान्तरத்திற்கும் அவன்தனக்கும்†[2] தெளிவு வருவது ஒரு காலத்திலும் இவை शिक्षैயாய்த் தலைக்கட்டும்[7].

### §4.1 நிபுணர் செய்யவேண்டியது

முற்பட†[3] முக்தரானவர்களைப் பார்த்து, मोक्षप्रदனைப்பற்ற இன்னதாகாதே[8] 'अधोऽधो दर्शने कस्य महिमा नोपजायते'*[2] என்கிற ந்யாயத்தாலே பிற்பட்டிருக்கிறவர்களைப் பார்த்து அவர்களுக்கு முன்னே நம்மை அங்கீகரிக்கும்படிககு உகந்து, 'என் முடிவு காணாதே என்னுள் கலந்தான்'*[3] என்று அறிந்து उचित-शेषवृत्तियை†[4] அபேக்ஷிக்குமது निपुण-कृत्यம். இப்ப்रकारம்†[5]

---

சூழப்பெற்ற திருப்பேர் நகரநாதனானவன் (கோவிலடி அப்பக்குடத்தான்) அநாதிஸம்ஸாரியான என்னை இப்பிறவியில் ஒரு வஸ்துவாகச் செய்து (—ப்ரஹ்மஜ்ஞாநம் உள்ளவனாகச் செய்து) தன்னை என்னுள் வைக்கைக்குக் காரணம் என்ன ? இதற்கு முன் (தன்னைவிட்டு) என்னை விஷயாந்தரங்களில் அலையும்படி செய்தது எதற்காக?—என்று அவனை நான் கேட்கிறேன். இதற்கு ஒரு விடை அருளிசெய்ய அவனிடம் வேண்டுகிறேன். □

1—விசாரத்தை = வாதப்ரதிவாதங்களை (எண்ணத்தை).
2—எல்லா சாஸ்த்ரங்களிலும் (மதங்களிலும்) ஒப்புக் கொள்ளப்

பட்ட. 3—வியக்கத்தகுதொன்று தொட்டுவரும் புண்யபாபரூப காரணதொடருக்கு. 4—போகத்தின் பாகுபாட்டில் போலே. 5—விளைவைக் காண்கையாலே, 6—வரையறைசெய்வது; ஒழுங்கு படுத்துவது. 7—தண்டனையாய் முடியும. 8—வேண்டாத வனாகாதே.

† 1—भोग्यவஸதுக்களிற் போலே[3]. 2—அவன் தனக்கு[1]. 3—முற்பட்ட[1]. 4—उचितवेषवृत्तियை[3]. 5—இவ்வுபகாரம்[4].

1. விடுவேனோ? என் விளக்கை என்னாவியை*
நடுவேவநது உய்யக் கொள்கின்ற நாதனை*
தொடுவே செயது இளவாய்ச்சியர் கண்ணினுள்*
விடவே செய்து விழிக்கும் பிரானையே.

திருவாய. (1-7-5): என் அஜ்ஞாநத்தைப் போக்கியவனும், என் ஆத்மாவாயிருப்பவனும, நிர்ஹேதுகமாக தானே நான் இருக்குமிடம் வநது என்னை உஜ்ஜீவிக்கும்படி ஸ்வீகரித்தருளும் ஸ்வாமியும், வெண்ணெயைக் களவுசெய்து முறையிட வந்த இடைப் பெண்களின் கண்ணுக்கு மாத்திரம் தெரியும்படி விடனுடைய செயலைச் செயது ஸவிலாஸமாகக் கடாக்ஷிக்கும் பரமோபகாரனுமானவனை நான் விடுவேனோ ?

2. (?): தன்னைவிடத் தாழ்நதவர்களைக் கண்டால் எவனுக்கு பெருமை உண்டாகாது.

3. பொன்முடியம்போரேறறை எம்மானை, நால்தடநதோள்*
தன்முடிவொன்றில்லாத தண்துழாய்மாலையனை*
என் முடிவு காணாதே என்னுள் கலந்தானை*
சொல்முடிவுகாணேன நான் சொல்லுவது என்? சொல்லீரே.

திருவாய். (2-5-8), பொற்கிரீடததை உடையவனாய், அழகுள்ளவனாய், போரில காளைபோன்றவனாய், என ஸவாமியாய், நான்கு பருத்த புஜங்களை உடையவனாய், தன்னுடைய ஸ்வரூபகுண விபூதிகளொன்றுக்கும் எல்லை அற்றவனாய், குளிர்நத திருத்துழாய் மாலையை அணிந்தவனாய், என்னுடைய மிக்க ஈனத்தன்மையைப் பொருட்படுத்தாமல் என் மனத்தில் புகுந்தவனாய் இருக்கிற எம்பெருமானின் பெருமைகளை விடாமல் சொல்லுவது எப்படி முடியும் ? நீங்களே சொல்லுஙகள். அவன் விஷயமான சொற்களுக்கு முடிவை நான் கண்டிலேன்,

"இன்றென்னைப் பொருளாக்கி" (49[2]), 'உற்றேன் உகந்து பணி செய்து'[1] इत्यादिகளிலும் अभिप्रेतம்.

§5. மோக்ஷோபாயத்தில் மூட்டும் வரை செய்யும் 27 உபகாரங்கள்

(1) இவ் अज्ञात-सुकृतादिகளுக்கு प्रसन्नனாய் 'जन्मान्तर-सहस्रेषु या बुद्धिर्भाविता पुरा'*[2] इत्यादिகளிற்படியே विपरीत-वासना-दार्ढ्यத்தாலே[1] उपदेश-नैरर्थक्यம்பிறவாதபடி[2], 'यं तु कर्मणि यस्मिन्सः न्ययुङ्क्त प्रथमं प्रभुः'[3] इत्यादिகளிற்படியே विशेषिத்து நம்மை सुकृत-वासना-प्रवाह-हेतुவான[3] सात्त्विक-सृष्टिயிலே கூட்டினதுவும்;

(2) அடியிலே वेदங்களை प्रवर्तिப்பித்ததுவும்;

(3) இவற்றுக்குப் परिकरங்களான[4] शास्त्रங்களை स्वमुखத்தாலும் ऋषिமுகங்களாலும் உண்டாக்கினதுவும்;

(4) प्रवर्तक-परंपरैயை सृष्टिத்ததுவும்;

(5) सात्त्विक-विरुद्ध-व्यामोहनार्थமாக[5] (†1) 'நின் மாட்டாய மலர் புரையும் திருவுருவம் மனம் வைக்கமாட்டாத பல சமய மதிகொடுத்தாய்'[4] என்கிறபடியே अन्य

1—திடமான விபரீத (கர்ம) வாசனையாலே. 2—உபதேசம் வீணாகாதபடி. 3—நல்வினை வாஸனையின் தொடர்ச்சிக்குக் காரணமான. 4—அங்கங்களான (உறுப்புக்களான). 5—ஸாத்விகர்களுக்கு எதிரானவர்களை மயக்குவதற்காக.

† 1—सात्त्विक-विरुद्ध-व्यामोहமான[1].

[1]1. உற்றேன் உகந்து பணிசெய்து உனபாதம்*
பெற்றேன்* ஈதே இன்னம் வேண்டுவது எந்தாய்!*
கற்றார் மறைவாணர்கள்வாழ் திருப்பேராற்கு*
அற்றாரடியார் தமக்கு அல்லல நில்லாவே.

திருவாய். (10-8-10); என் ஸ்வாமியே! உன்னுடன் சேர்ந்து ... மிகக ப்ரீதியுடன் (திருவாய்மொழி பாடுவதாகிய)

கைங்கர்யத்தை இதுவரை செய்து உன் திருவடிகளை இப்போது அடைந்துவிட்டேன். உனக்குப் பணி செய்வதே வரப்போகிற எல்லாக் காலத்திலும் எனக்கு வேண்டியதாகும். ஆசார்யர்களிடம் தெளிவாகக் கற்று வேதத்தின் பொருளை நிர்வஹித்து வாழ்கின்ற மகான்கள் வசிக்கும் திருப்பேர் நகரத்தின் நாதனுக்கு அற்றுத் தீர்ந்தவர்களுமானவரின் தாஸர்களானவர்களுக்கு எவ்வித துக்கமும் நிற்கமாட்டா.

*2. (?): ஆயிரக்கணக்கான பிறவிகளில் முன்பு எந்த எண்ணம் தோன்றியதோ.

*3 यं तु कर्मणि यस्मिन्स न्ययुङ्क्त प्रथमं प्रभुः ।
स तदेव स्वयं भेजे सृज्यमानः पुनः पुनः ॥

மநு. (1-28) நான்முகன் (ப்ரஜாபதி) ப்ரளயத்திற்குப் பிறகு ஜீவராசிகளை மீண்டும் படைக்கும் பொழுது அவரவர்கள் செய்த செயலுக்கு (கர்மாவுக்கு) ஏற்ப படைக்கிறானே ஒழிய தனது விருப்பு வெறுப்பிற்கு ஏற்ப படைப்பதில்லை. அதாவது, ஒரு ஜீவனை முற்பிறவியின் வினைக்கு ஏற்ப மான் முதலிய விலங்குகளைக் கொல்லும் புலி ஜாதியில் படைக்கிறான். அதே ஜீவனை மீண்டும் மீண்டும் படைக்கும் பொழுது அது பிறவற்றைக் கொல்லும் புலி ஜாதியையே பெறுகிறது.

*4. மட்டாதேயாகிலும் இம்மலர்தலை மாஞாலம்* நின்
மட்டாய மலர்புரையும் திருவுருவம் மனம் வைக்க*
மட்டாத பல சமய மதிகொடுத்தாய்* மலர்த்துழாய்
மாட்டே நீ மனம் வைத்தாய் மாஞாலம் வருந்தாதே?

திருவாய். (3-1-4): உன் நாபியிலிருக்கிற தாமரையை ஆதி காரணமாக உடைய இவ்வுலகமானது (இவ்வுலகத்தினர்) உன்னிடத்தில் இருக்கும் பூவைப்போல் மிருதுவாயிருக்கும் அழகிய உன் திருமேனியை மனதில் வைக்க முடியாமலிருக்கிறது. நீயோவெனில் உன் திருமேனியை நினைக்க முடியாதபடி செய்யும் பல விதமான கெட்ட மதங்களுடைய அறிவை உலகுக்குக் கொடுத்துவிட்டாய். அதுவுமன்றி மலர்களுடன் கூடிய திருத்துழாய் பக்கலிலே உன் மனத்தைச் செலுத்தி நின்றாய். நீ இப்படி இருந்தால் இந்தப் பெரிய உலகம் ஸம்ஸாரத்தில் வருத்தப் படாமல் இருக்குமோ?

शास्त्रங்களை सृष्टिக்கச் செய்தே, 'त्रिदण्डधारिणा पूर्वं विष्णुना रक्षिता त्रयी'*[1] என்கிறபடியே वेदरक्षै பண்ணினதுவும்;

(6) ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் கொண்டு वेद-तत्त्वार्थ-प्रकाशनம் பண்ணினதுவும்;

(7) இப்படிப் प्रवृत्तமான शास्त्रத்தில் प्रतिपादितமான[1] धर्मத்தினுடைய सम्यक-स्थापनार्थமாக 'संभवामि युगे युगे'*[2] என்கிறபடியே அவதரித்ததுவும்;

(8) வடிவழகாலும் சீலத்தாலும் वशीकरिக்குமதுவும்;

(9) उपदेश-अनुष्टानங்களாலே धर्म-प्रवर्तनம் பண்ணுமதுவும்;

(10) இப்படி प्रवर्तिப்பிக்கிறவளவில் अनन्त-पाप-सन्ततரான[2](†1) நம்மை शास्त्र-वश्यतै இல்லாத स्थावर-तिर्यक् ஜாதிகளிலும், மநுஷ்யரில் म्लेच्छादि-वर्गத்திலும் பிறப்பியாதே, कालक्रमத்தாலே पुण्यशीलர் குலங்களிலே 'என்னுடை நன்னெஞ்சம்'*[3], 'இழை நல்ல ஆக்கை'*[4] என்னும்படி आत्म-निवेदन-विपाक-अनुगुणமான[3] सात्त्विक-करण-कळेबर-सङ्घातத்தோடே[4] संघटिப்பித்ததுவும்[5];

---

1—சொல்லப்பட்ட. 2—முடிவில்லாத பாபத் தொடரையுடைய. 3—ஆத்மஸமர்ப்பணநிலைக்கு உகந்த. 4—ஸாத்விகமான இந்திரியங்கள், சரீரம் இவற்றின் கூட்டத்தோடு. 5—சேர்ப்பித்ததுவும்.

† 1—अनन्त-पाप-सक्तரான[4].

*1. (?); மூன்று தண்டங்களைத் தரித்துக்கொண்டிருக்கின்ற விஷ்ணுவினால் முன்பு வேதங்கள் காக்கப்பட்டன.

*2. परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥

கீதை(4-8): ஸாதுக்களைக் காக்கவும், தீயவர்களை அழிக்கவும் தர்மத்தை நிலைநிறுத்தவும் அந்த அந்த யுகங்களில் பிறக்கிறேன்.

*3. என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நல்நெஞ்சந்
தன்னை* அகல்விக்கத் தானும் கில்லான் இனி*
பின்னை நெடும்பணைத்தோள் மகிழ் பீடுடை*
முன்னை அமரர் முழுமுதலானே.

திருவாய். (1-7-8) தன்னை அண்டியவர்களிடம் வாத்ஸல்யம் உடையவனாகையால் எம்பெருமான்தானும் என்னை விடான். என் பக்கலுள்ள குணஹாநியாலே என்னை விட நினைக்கிலும். அநாதியான நித்ய ஸூரிகளுடைய ஸ்வரூப-ஸ்திதி-ப்ரவ்ருத்தி களுக்கும் தானே காரணமாயிக்கின்ற ஸர்வேச்வரன் தன்னாலும் (அவனிடம் ஈடுபட்ட) என்னுடைய மனதை இனிமேல் விட முடியாது. ஏனென்றால், நப்பின்னைப் பிராட்டியின் அடிமைபுக்கு அந்த:புரபரிகரமான வஸ்துவாயுள்ளது என் மனது. நப்பின்னைப் பிராட்டியின் நீண்ட மூங்கில் போலுள்ள தோள்களைச் சேர்ந்த மகிழ்ச்சியால் வந்த பெருமையை உடைய அவனால் அந்த மனதை விடமுடியாதல்லவா?

*4. எழுநண்ணி நாமும் நம்வானநாடனோடொன்றினோம்*
பழனநன்னாரைக்குழாங்கள்காள்! பயின்றெனினி?*
இழைநல்ல ஆக்கையும் பையவேபுயக்கற்றது*
தழைநல்ல இன்பந்தலைப்பெய்து எங்கும் தழைக்கவே.

திருவாய். (9-5-10): வயல்களில் ஸஞ்சாரம் செய்யும் அழகிய நாரைக் கூட்டங்களே! (உங்களால் பாதிக்க நினைக்கப்பட்டிருக் கும்) நான் எழுச்சிபெற அவனைக்கிட்டிப் பரமபதத்தை இடமாக உடையவனோடு ஒன்றாகிவிட்டோம். ஆபரணம் போல் அவன் விரும்பும்படியான என் உடம்பும் படிப்படியாகத் தளர்ந்தது இனி நீங்கள் கூட்டம் கூடி என்ன ப்ரயோஜநம்? எல்லாத் தேசமும் துக்கக்கலப்பில்லாத ஸுகத்தை அடைந்து தழைத் திருக்கவேண்டும். (குறிப்பு: நெஞ்சிற் கண்ட நாயகனை நேரில் காண ஆசைப்பட்ட பராங்குச நாயகி, அவனை நினைவிக்கும் பொருள்களால் தான் தளர்ந்தமையை இப்பகுதியில் அருளிச் செய்கிறார். ''தாந்தாம் முடிய நினைப்பார் 'நாடு வாழ்க' என்பாரைப் போலச் சொல்லுகிறாள்'' என்று ஆளவந்தார் நிர்வாஹம். 'நாம் பட்ட பாடு நாடு படாதொழியவேண்டும்' என்று எம்பெருமானார் நிர்வாஹம்.)

(11) चार्वाक-बौद्ध-आर्हत-वैशेषिक-साङ्ख्य-पाशुपतादि-बहुविध-बाह्यकुदृष्टि-मतங்களால் (B-5) கலங்காதபடி பண்ணினதுவும்;

(12) अद्वेष-आभिमुख्यங்களைத் தந்ததுவும்[1];

(13) 'अविश्रान्तमनालम्बं'*1, 'अतस्करकरग्राह्यं'*2, 'तदेभिरलमत्यर्थं'*3, 'महता पुण्यपण्येन'*4, 'आचार्यःप्लाविता तस्य'*5 एवमादिகளான सात्त्विक संभाषणத்தை உண்டாக்கினதுவும்;

(14) 'तत-दृष्टिगोचरास्सर्वे मुच्यन्ते सर्वकिल्बिषैः'*6 என்னும்படியான सदाचार्य-कटाक्षத்திற்கு लक्ष्यமாக்கினதுவும்;

(15) 'பிரமகுருவாகிவந்து'*7 என்னும்படி आचार्य-मूर्तिயான தான் நம்முடைய दोषங்களைக்கண்டு நம்மை उपेक्षियாதே[2], நாம் दुःखसागर-दुरित-परंपरैகளிலே நோவுபடுகிறபடியைக் கண்டு 'कृपया निःस्पृहो वदेत'*8 என்கிற

---

1—பகைமை பாராட்டாமல் அநுகூலனாய் இருக்கச் செய்ததுவும்.
2—(விலக்காமல்) கவனியாமல் இராதே.

*1. अविश्रान्तमनालम्बं अपाथेयमदेशिकम् ।
तमः कान्तारमध्वानं कथमेको गमिष्यसि ।।

பார. (சாந்தி-337-34): இளைப்பாற இடமின்றி, பிடிப்பு ஒன்றுமின்றி, வழியில் பசிக்கு உணவுமின்றி, வழிகாட்டுபவருமின்றி, இருள் சூழ்ந்திருப்பதால் செல்ல முடியாத நரகமார்க்கத்தில் நீ ஒருவனாய் எவ்வாறு செல்லப்போகிறாய் ?

*2. (?): திருடர்களால் அபஹரிக்க முடியாதது.

*3. तदेभिरलमत्यर्थं (दु)दृष्टारम्भोक्तिविस्तरैः ।
अविद्यान्तर्गतैर्यत्नः कर्त्तव्यस्तात! शोभने ।।

வி. பு. (1-19-39): தந்தையே! மீமாம்ஸை முதலிய வித்யாஸ்தானங்களைச் சேராத (ராஜ்யம் முதலிய) ஐஹிக பலங்களைப் பற்றிய

உடிது உபதேசம் போதும். பரம மங்களத்தைக் கொடுக்கும் வேதாந்த வித்யையில் முயற்சி செய்ய வேண்டும். (இரணியனைக் குறித்து ப்ரஹ்லாதன் கூறியது).

*4. महता पुण्य-पण्येन क्रीतेयं कायनौस्त्वया ।
प्राप्तुं दुखोदधेः पारं त्वर यावन्न भिद्यते ॥

வராஹபு: மிகுந்த புண்யமாகிய விலையைக் கொடுத்து வாங்கிய இச்சரீரமாகிய ஓடமானது உடைந்து போவதற்குள் துக்கக் கடலின் அக்கரையை அடைவதற்கு விரைவாயாக.

*5. ஸாத்வதஸம்: ஆசார்யன் அவனை பாபங்களினின்றும் தாண்டுவிக்கிறான்.

*6. ஆசார்ய கடாக்ஷத்திற்கு பாத்ரமாகின்றவர்கள் அனைவரும் அனைத்துப் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள்.

*7. ஏதங்களாயினவெல்லாம் இறங்கலிடுவித்து* என்னுள்ளே
பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகி வந்து* (ரில்*
போதில் கமல வன்னெஞ்சம் புகுந்தும் என் சென்னித்திட
பாதவிலச்சினை வைத்தார் பண்டன்று பட்டிணம் காப்பே.

பெரியாழ்வார் திரு. (5-2-8): பீதாம்பரத்தை அணிந்துள்ள உபகாரகனை ஸர்வேச்வரன் வேத வேதாந்தார்த்தங்களை உபதேசம் செய்யும் ஆசார்யனாய் அவதரித்துக் கிட்டி, என் உள்ளத்தில் நிலை நின்ற (அஜ்ஞாந - ஸம்சய - விபரீதஜ்ஞாநங்களையெல்லாம் விலகச் செய்து, நல்ல தருணத்தில் உறுதியான என் இதயத்தாமரையில் ப்ரவேசித்து, என் தலையாகிய மேட்டு ப்ரதேசத்தில் ஸ்ரீபாதசிந்ஹத்தையும் வைத்தருளினார். இனி பழைய நிலையன்று. (அவன் எழுந்தருளியதைக் கொண்டு அவனது பரிஜநங்கள் எனது உடலை அவனது பட்டணமாகக் கருதிக் காக்கின்றனர். நோய்காள்! நீங்கள் இனித்தங்கினீர்களாகில் உங்களை வேரோடு களைந்தொழித்து விடுவார்கள்.)

*8. संवत्सरं तदर्धं वा मासत्रयमथापि वा ।
परीक्ष्य विविधोपायैः कृपया निस्पृहो वदेत् ॥

சாண். ஸ்ம். (1-116): ஆசார்யன் சிஷ்யனை ஒரு வருடமோ, ஆறு மாதமோ, மூன்று மாதமோ பற்பல வகைகளில் பரீக்ஷை செய்து பார்த்து, தான் ஒரு பலனையும் விரும்பாது கருணையாலேயே உபதேசிக்கவேண்டும்.

படியே அறிவில்லாத நமக்கு அருளி, அர்ஜுநன் விஷயத்தில் सारथियाய் நின்ற தன்னைப் போலே நமக்கும்†1 'நெறியெல்லாம் எடுத்துரைக்க'*1 நினைக்கும்படி பண்ணினதுவும்;

(16) நம்மையும் 'शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्'*2 என்னும்படி பண்ணினதுவும்;

(17) 'ईश्वरोऽहं'*3, 'न नमेयं हि कस्यचित'*4 என்னும் दुर्वासனையை दूरीகரித்து 'तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया'*5 என்கிற उचितोपचारத்திலே†2 ஒருப்படுத்தினதுவும்;

(18) उपदेशकालத்தில் நாம் अनवहितர்1 ஆகாதபடி, हृषीकेशனுன தான் சிக்கென மநஸ்ஸை நிறுத்தி செவி தாழ்ப்பித்ததுவும்;

---

1—கவனமில்லாதவர்.

†1—''நமக்கும்'' என்பது இல்லை[1]. 2—उचितोपायங்களிலே[4].

1. அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய*
நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி*
குறியமாணுருவாகிக் கொடுங்கோளால் நிலம் கொண்ட
கிறியம்மான் கவராத கிளரொளியால் குறைவிலமே.

திருவாய். (4-8-6): ப்ரஜைகளை உபாயத்தை அனுஷ்டிக்கச் செய்து ஸ்வப்ராப்தியைக் (மோக்ஷத்தைக்) கொடுப்பதில் விளம்பம் ஏற்படலாம் என்று எண்ணிய பரமன் அஜ்ஞாத ஸுக்ருதங்களை வியாஜமாகக் கொண்டு வாமனனாய் அவதரித்து சிற்றடியைக் காட்டி பேரடியால் வஞ்சித்து அளந்து அனைவருக்கும் தன்னைக் கொடுத்தது போல, (தத்துவத்தை) அறியவேணுமெனும் ஆசை கூட இல்லாது ஐஹிகவிஷய ப்ரவணர்களான நமக்கு மோக்ஷோபாயங்களான கர்மயோகாதிகளை அர்ஜுனனை வியாஜமாகக் கொண்டு உபதேசித்தருளினான். (இத்தகு பரமகாருணிகனான எம்பெருமான் தன் பிரிவைப் பொறுத எனது ஸௌந்தர்யத்தில் ஆசைவைத்து ஆட்கொண்டு அருளாது இருக்கிறானே என சடகோபநாயகி வருந்துகிறாள்.)

*2. कार्पण्य-दोषोपहत-स्वभावः पृच्छामि त्वां धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां
त्वां प्रपन्नम् ॥

*கீதை (2-7): தர்மம் இது என்று தெரியாது கலங்கிய மனத்தை உடைய நான் சோகம் தவிர்க்கும் உபாயத்தை அறியாமையினால் உம்மைக் கேட்கிறேன். எது நன்மை பயக்கும் என்று நிச்சயிக்கப் பட்டிருக்கிறதோ அதை எனக்கு அருளவேண்டும். நான் உமக்கு சிஷ்யன். உம்மைச் சரணமடைந்த எனக்கு உபதேசிக்க வேண்டும்.*

*3. असौ मया हतः शत्रुः हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी ॥

*கீதை (16-14): அந்தப் பகைவன் என்னால் கொல்லப்பட்டான். மற்ற பகைவர்களையும் கொல்லப்போகிறேன். நான் ஸ்வதந்த்ரன். என் திறமையினாலேயே நான் போகியாக இருக்கிறேன். என் பலத்தாலேயே நானே எல்லாம் பெற்றேன். நானே பல முள்ளவன். ஸுகிப்பவனும நானே. (இவ்வாறு அஸுர ஸ்வபாவமுள்ளவன் எண்ணுகிறான்.)*

4. द्विधा भज्येयमप्येवं न नमेयं तु कस्यचित् ।
एष मे सहजो दोषः स्वभावो दुरतिक्रमः ॥

*ராமா. (6-36-11): இரண்டு துண்டாய் பிளவுபட்டாலும் நான் ஒருவனுக்கும் தலைவணங்கேன். இது எனது பிறவிக் குற்றம். இயற்கையான குணம் திருத்தமுடியாதது. (இது ஹிதத்தை உபதேசித்த மால்யவானுக்கு ராவணன் கூற்று.)*

*5. तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥

*கீதை (4-34): என்னால் உனக்கு உபதேசிக்கப்பட்ட ஆத்ம விஷய மான ஞானத்தை கர்மயோகத்தில் நிற்கும் நீ அவ்வப்போது ஞானிகளின் அடியில் விழுந்து வணங்கி, உன் கூரறிவை மறைத்துக் கொண்டு, கேட்டு, பக்தியுடன் நீண்டகாலம் தொண்டு செய்து, மறுபடி தெளிவாகப் பெற்றுக் கொள். தத்துவத்தை அறிந்தவர்கள் உனக்கு அதை தெளிவாக உபதேசிப்பர்.*

(19) திருமந்த்ரம் முதலான சீரிய†1 शब्दங்களைச் செவிப்படுத்தி, சிந்தாமல் கொள்ளும்படி பண்ணினதுவும்;

(20) இவற்றிலே பொதிந்த **परतत्त्व-परमहित-परम-पुरुषार्थ**ங்களாகிற மஹா**निधि**களைத் திறந்து காட்டினதுவும்;

(21) இப்படி **सानुग्रह**னான **सदाचार्य**னாலே **उपदिष्ट**ங்களான **सदर्थ**ங்களில் "**उपदिष्टेप्यविश्वस्त**" (24*2) என்னும் **अवस्थै** வாராதபடி பண்ணினதுவும்;

(22) **देवता-तीर्थ-तपसां भारतात् यस्य निर्णयः ।**
**न जन्यते नास्तिकता तस्य मीमांसकैरपि***1

என்கிறபடியே ஒருவராலும் **नास्तिक्य**ம் புகுரவிடவொண்ணாதபடி, '**आस्तिको धर्मशीलश्च**'*2 **इत्यादि**களிற் சொன்ன **शिष्य-लक्षण-पूर्ति**யை உண்டாக்கினதுவும்;

(23) 'அன்றுநான் பிறந்திலேன்; பிறந்த பின் மறந்திலேன்'*3, 'இன்றாக நாளையேயாக இனிச்சிறிது நின்றாக, நின்அருள் என்பாலதே'*4 என்கிறபடியே **विवेक-व्यवसाय-विशेष**ங்களைப் பிறப்பித்ததுவும்;

(24) '**पत्युः प्रजानामैश्वर्य**'*5, 'ஊனேறு செல்வத்து'*6

---

† 1—சிறிய[1].

*1. தேவதைகள், புண்யதீர்த்தங்கள், தவம் இவற்றைப் பற்றி ஸ்ரீ மஹாபாரதத்திலிருந்து எவனுக்கு நிச்சயமான ஞானம் உண்டாயிற்றோ அவனுக்கு மீமாம்ஸகர்களாலும் நாஸ்திக்யபுத்தி உண்டாக்கப்படுவதில்லை.

*2. சாஸ்த்ரத்தில் நம்பிக்கையுள்ளவனும் தர்மத்தைக் கடைப்பிடிப்பவனும்,

*3. நின்றது எந்தை ஊரகத்து இருந்தது எந்தை பாடகத்து*
அன்று வெஃகணைக் கிடந்தது என்னிலாத முன்னெலாம்*
அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்*
நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே.

திருச்சந்த. (64): எனக்கு ஸ்வரூபஜ்ஞாநம் இல்லாத முற்காலத்திலெல்லாம் என்னப்பன் நின்றதிருக்கோலம் கொண்டது திருவூரகத்திலாயிற்று; என்னப்பன் வீற்றிருந்த திருக்கோலம் கொண்டது திருப்பாடகத்திலாயிற்று; பள்ளிகொண்டது திருவெஃகாவிலாயிறறு. எம்பெருமானுக்குச் சேஷனென்ற ஸ்வரூபஜ்ஞாநம் பெறுத அந்நாள் வரையில் நான் பிறந்தவனுகக் கருதமாட்டேன்; ஜ்ஞாநம் பெற்றுப் பிறந்தவனுன பின் அதை மறக்கவில்லை. (ஆகையால் இனி என்னப்பன்) நின்றதும், இருந்ததும், கிடந்ததும் எனது நெஞ்சிலேயேயாம்.

*4. இன்றுக நாளையேயாக* இனிச்சிறிதும்
நின்றுக நின்னருள் என்பாலதே*—நன்றுக
நான் உன்னை அன்றி இலேன் கண்டாய்* நாரணனே!
நீயென்னையன்றியிலை.

நான். திருவந். (7): நாராயணனே! இன்றே, நாளையோ, இன்னும் சிறிது காலம் கழித்தோ எப்படியும் உனது கிருபை என்னிடத்தில் பூர்ணமாய் இருக்கும். ஏனெனில், ஆதாரமான உன்னைவிட்டு நான் இருக்கவில்லை; உனக்கு நிரூபகமாக இருக்கிற என்னை விட்டு நீ இருக்கவில்லை. (நாம் இருவரும் ஒருவரைவிட்டு ஒருவரும் இருக்கமுடியாது என்பதை நீ தெரிந்து கொள்.)

*5. पत्युः प्रजानामैश्वर्यं पशूनां वा न कामये ।
अहं कदम्बो भूयासं कुन्दो वा यमुनातटे ॥

பிரமனுடைய அல்லது சிவனுடைய ஐச்வர்யம் வரினும் யான் அதை விரும்பேன். கண்ணபிரானுடைய திருவடிச் சுவடு பட்ட யமுனை நதிக்கரையில் கதம்ப மரமாகவோ, குந்த மரமாகவோ பிறக்க விரும்புவேன்.

*6. ஊனேறு செல்வத்து உடற்பிறவி யான் வேண்டேன்*
ஆனேறேழ்வென்றுன் அடிமைத் திறமல்லால்*
கூனேறு சங்கமிடந்தான்தன் வேங்கடத்து*
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே.

பெருமாள் திரு. (4-1): (நப்பின்னைக்காக) ஏழு எருதுகளை வென்ற கண்ணபிரானின் அடிமை நீங்கலாக, மாம்ஸமயமான

इत्यादिகளிற்படியே **परमपुरुषार्थ**த்திலே **प्रयोजनान्तर-निरपेक्ष**மாக प्रतिष्ठितமான[1] **सङ्ग**த்தை ஜனிப்பித்ததுவும்;

(25) 'துணியேன் இனி நின்னருள் அல்லது எனக்கு'*[1], "நின்னிலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேன்"[2](†[1]), 'உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்'*[3] इत्यादिகளிற்படியே பரமஹிதத்தில் **संशय-विपर्यय-शरण्यान्तर-प्रसङ्ग**மற்ற[2] துணிவை நிலை நிறுத்தினதுவும்;

(26) 'வல்ல பரிசு வருவிப்பரேல்'*[4] என்கிற

---

மேன்மேல் வளரும் சம்பத்தையுடைய உடலில் பிறப்பை நான் விரும்பமாட்டேன். வளைவைப் பெற்று விளங்கும் ஸ்ரீபாஞ்சசன்னியத்தை இடது திருக்கையில் ஏந்தியிருக்கும் அவனுடைய திருவேங்கடமலையிலுள்ள ஸ்வாமி புஷ்கரிணியில் வாழும் நாரையாய்ப் பிறக்க விரும்புகிறேன். (அந்த புஷ்கரிணியே பகவத் ஸம்பந்தத்தை எனக்கு உண்டு பண்ணும்.) திருமலையில் நீரூற்றிலே ஒரு மீனாகவோ, திருவேங்கடநாதன் தாம்பூலம் முதலியன துப்புவதற்கான பொற்கிண்ணத்தை ஏந்திக் கைங்கர்யம் செய்பவனாகவோ, திருமலையில் ஒரு செண்பக மரமாகவோ, கட்டைச் செடியாகவோ, மலைச்சிகரமாகவோ, காட்டாறாகவோ, நடக்கும் வழியாகவோ, வாயிற்படியாகவோ அல்லது ஏதேனுமொரு வஸ்துவாகவோ ஆவதையே தாம் விரும்புவதாக இப்பதிகத்தில் குலசேகராழ்வார் மேலும் அருளிச்செய்கிறார். □

1—நிலையான. 2—சந்தேகம் - கலக்கம் - வேறுபுகல் உண்டு என்ற எண்ணமற்ற.

† 1—'எம்மீசனே' என்று அதிகம்.

*1. அணியார் பொழில் சூழ் அரங்கநகரப்பா !*
துணியேன் இனி நின்னருளல்லது எனக்கு*
மணியே ! மணிமாணிக்கமே ! மதுசூதா !*
பணியாய் எனக்கு உய்யும் வகை பரஞ்சோதீ !

பெரியதிரு. (11-8-8): அழகிய சோலைகளால் சூழப்பட்ட திருவரங்கத்திற்கு நாதனே ! நீலமணி-போல் போக்யனானவனே ! சிறந்த மாணிக்கமான பிராட்டியை உடையவனே ! மது என்னும் அஸுரனை அழித்தவனே ! தத்துவ விவேகம் பெற்ற நான் உனது

கருணையைத் தவிர வேறொன்றை நன்மை அளிப்பதாக நினைக்க மாட்டேன். ப்ரக்ருதி ஸம்பந்தம் அகன்று பரமபதத்தில ப்ரம்மா நந்தத்தை அநுபவிப்பதற்கு வழியை நீயே அருளவேண்டும்.

*2. குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்*
நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன்*
புலன்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன் புனித! *நின்
இலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேன் எம் ஈசனே!

திருச்சந்த. (90): பரிசுத்தமாக்குகிறவனே! எங்கள் நாதனே! சிறந்த குலங்களாயுள்ள நான்கு வர்ணங்களில் ஏதேனுமொரு வர்ணத்திலும் நான பிறக்கவில்லை. அதனால் நன்மை பயக்கும் நானகு வேதங்களையும் நான் ஓதவில்லை. (அத்யயநபலமான அநுஷ்டானம் இன்மையால்) ஐம்புலன்களையும் நான் வெல்ல விலலை. அதனால் சப்தாதி விஷயங்களில் அகப்பட்டிருக்கிறேன். எனவே தேஜோமயமாய் ப்ரகாசிக்கும் உன் திருவடியைத் தவிர வேறொரு உபாயம் உடையவனல்லேன். (கின்றாய்;*

*3. என் நான் செய்கேன்? யாரே களைகண்? என்னை என் செய்
உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்*
கன்னார்மதிள்சூழ்குடந்தைக் கிடந்தாய்! அடியேனருவாணாள்*
சென்னாள் எந்நாள்? அந்நாள் உனதாள் பிடித்தே
செலக்காணே.

திருவாய். (5-8-3): வேலைப்பாடு நிறைந்த மதிள்களால் சூழப் பெற்ற திருக்குடந்தையில் சயனித்திருப்பவனே! (நீ கொடுத்த மதியைக் கொண்டு சேஷவ்ருத்தியே என் ஸ்வரூபத்திற்கு உரியது என்று அறிந்த) அடியேன் செயயக்கூடியது என்ன இருக்கிறது? (உன்னைத்தவிர) ரக்ஷிக்கின்றவர் யார் உளர்? எனவே வேறு உபாயங்களைப் பற்றாமல் பலனில் நோக்குள்ள அடியேனை என்ன செய்யப் போகின்றாய்? எல்லாவற்றையும் அளிக்கும் உன்னைத் தவிர்த்து வேறு வழியால் அபேக்ஷிக்கப்பட வேண்டிய ஒன்றையும் நான் விரும்பவில்லை. அடிமையில் நோக்குடைய என் ஆத்ம வஸ்து உள்ள காலமெல்லாம் உன் திருவடியைப் பிடித்துக் கைங்கர்யம் செய்துகொண்டே செல்லும்படி கடாக்ஷிக்க வேண்டும்.

*4. நல்ல என் தோழி! நாகணைமிசை நம்பரர்*
செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்?*
வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை*
வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே.

நாச்சியார் திரு. (10-10): நல்ல உபதேசம் செய்யவல்ல எனது

படியே अयत्नமாக आचार्यमुखத்தாலேயாதல், 'पारमार्थिक-भगवत्-चरणारविन्द-शरणागतिः यथावस्थिता अविरता अस्तु मे'*[1] என்கிற स्वव्यापारத்தாலேயாதல், वशीकरण - विशेषத்திலே நம்மை उद्युक्तர்[1] ஆக்கினதுவும்;

27. எல்லையாக अपवर्ग-उपायத்திலே[2] पर्यवसिप्पிக்கிற[3] सुकृत-विशेषத்தை விளைத்ததுவும்†[1]—अनुकम्पैயினுடைய अवान्तर-उपकारங்கள்[4].

§5.1 எம்பெருமான் செய்யும் உபகாரங்கள் எண்ணிலடங்காமை

இந்த பூர்வோபகாரங்களை ஸர்வேச்வரன் செய்த காலங்களிலே நாம் அறியமாட்டாமையாலும், प्रति-बुद्धकालத்தில்[5] அவற்றின் अवान्तर-विशेषங்கள் எண்ணி முடியவொண்ணாமையாலும், 'அத்தா நீ செய்தன அடியேன் அறியேன்'*[2] என்று இருக்கப்†[2] प्राप्तம். अज्ञात-सुकृतம் முதலாக கால தத்த்வமுள்ளதனையும் இச்சேதனன் செய்யும் அநுகூல வ்யாபாரங்கள் எல்லாம் "यत

தோழியே! சேஷசயனத்தின் மேல் பள்ளிகொணடிருக்கிற நம் பெருமாள் சிறந்த செல்வம் கொண்டவர்; எல்லோருக்கும் மேலானவர். மிகச் சிறிய மானிடசாதியிற் பிறந்துள்ள நாம் அவரைக் காண என்ன செய்யவல்லோம். (ஒன்றும் செய்ய முடியாது.) ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழவார் தமக்கு விதேயராயிருக்கிற அப்பெருமானை பலனைப் பெறுவிக்கத்தக்கதொரு வகையால் எனது எதிரில் நிற்கவைத்தால அந்த வகையால் காண்போம். (ஆசார்யரைக் கொண்டே விரும்புவதைப் பெற வேண்டும், ஆசார்யருக்குப் பரதந்த்ரமான நம் நிலையை மறந்து நேராகவே பகவானைப் பெற முயல்வது தகாது என்பது இப்பாசுரத்தின் கருத்தாகும்.) □

1—முயற்சியுடையவராக. 2—மோக்ஷோபாயத்திலே. 3—முடிப்பிக்கிற. 4—இடையிலே வரும் உபகாரங்கள். 5—உணர்ந்த போது.

† 1—விளைத்ததும்[1]. 2—இருக்கை[1].

*1. पारमार्थिक भगवच्चरणारविन्दयुगल ऐकान्तिकात्यन्तिक परभक्ति परज्ञान परमभक्तिकृत परिपूर्णानवरत नित्यविशदतम अनन्यप्रयोजन अनवधिकातिशयप्रिय भगवदनुभवजनित अनवधिकातिशय प्रीतिकारित अशेषावस्थोचित अशेषशेषतैकरतिरूप नित्यकैङ्कर्यप्राप्त्यपेक्षया पारमार्थिकी भगवच्चरणारविन्द शरणागतिः यथावस्थिता अविरता अस्तु मे ।

*சரணுகதி கத். (சூர்—2): பரமப்ரயோஜனங்களாயும், பரமபோக்யங்களாயும் தாமரை மலர் போன்று மென்மையும் இனிமையும் அழகும் வாய்ந்தவைகளுமான (எம்பெருமானின்) திருவடிகளிலேயே,—பெருமபயனுயும் எப்பொழுதும் தொடர்கின்றதுமான (பகவானைக்) காண்போம் காண்போம் மேலும் காண்போம் எனும் ஆசையினுல் முயனறு, கண்களாரக் கண்டு, கண்டவனை திரும்பத் திரும்பக் கண்டு தொடர்ந்து அநுபவிக்கும் ஆசையாகிற பரபக்திபரஜ்ஞாநங்களின் தொடர்ச்சியால் ஏற்பட்ட,—நிறைந்தும் முடிவற்றும் நித்யமாயும் மிகத் தெளிவாயும் தானே பயனுயும் எலலையற்ற பெருமையுடன் ப்ரியமாயும் உள்ள பகவதநுபவத்திஞல் விளையும் முடிவற்ற பெருமை மிகும் அன்பினுல் செய்யப் படுவதும் பரமனின பரவ்யூஹாதி நிலைகளிலும், சயனுஸனுதி நிலைகளிலும், ஸ்ருஷ்டி - காப்பு - படைப்புத் தொழில்களிலும் செய்யப்படுவதான அனபுருவாய் அமைந்த முக்தாநுபவமாகிற நித்யகைங்கர்யத்தைப் பெறுவதற்கும் காரணமான பரமஸாத்விகமாயும் ஆனுகூலயஸஙகலபாதி அங்கபஞ்சகவிசிஷ்டமாயும் பல - ஸங்க - கர்த்ருத்வ-த்யாகததோடு கூடியதுமான நாராயணனின் திருவடிகளில் செய்யப்படுகிற ப்ரபத்தியானது—புகலற்ற அகிஞ்சனுன எனக்கு மோக்ஷத்தைப் பெறும்வரை தொடர்நத பகவத் க்ருபையோடு கூடியதாக இருக்கட்டும்.

*2. ஒத்தார் மிக்காரை இலையாயமாமாயா!'
ஒத்தாய் எப்பொருட்கும் உயிராய்*என்னைப் பெற்ற
அத்தாயாய்த் தநதையாய் அறியாதன அறிவித்த*
அத்தா! நீ செய்தன அடியேன் அறியேனே.

திருவாய். (2-3-2): தனக்கு ஸமமானவரும் மேம்பட்டவரும் இல்லாதவனுய் மிகுந்த ஆச்சரியமானவனே! அவதாரம் செய்யும் போது எல்லா வஸ்துக்களுக்கும் ஒத்திருப்பவனே! எனது உயிருக்கு அந்தர்யாமியாகியும், என்னை -ஈன்ற தாயின் அந்தர்யாமியாகியும், தந்தையின் அந்தர்யாமியாகியும், நான் அறியாதவைகளை அறிவிக்கும் ஆசார்யனின் அந்தர்யாமியாகியும் நீ செய்த உபகாரங்களை இத்தனை என்று நான் அறியமாட்டேன்.

किञ्चित् वर्तते लोके'*1, 'நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்'[2], 'என்றால் அடைப்பு நீக்கொண்ணாது இறையவனே! என்றால் செயற்பாலதென்'[3], 'என் நான் செய்கேன்; யாரே களைகண்'(63[3]) इत्यादि களிற்படியே ईश्वर-अधीनங்களாய் अनन्तங்களாய்†1 நடக்கின்றனவாகையாலே, இவற்றுக்கு†1 ईश्वर-बुद्धियாலும் எண்ணில்லையாயிறே இருப்பது.

उपकार सङ्ग्रहे प्रथमोधिकारः ॥

---

॥ द्वितीयोऽधिकारः ॥

## II. ஸாதநாதிகாரம் என்னும் இரண்டாம் அதிகாரம்

### §6: ஸாத்யோபாயத்தைக் கைக்கொள்வித்தல் ஸம்பந்தமான ஐந்து உபகாரங்கள்

(i) இப்படிச் சேதனனை उपाय-विशेष-अनुष्ठानத்திலே ஒருப்படுத்தி, நோயெல்லாம் பெய்ததோர் ஆக்கையைச் சுமந்து கொண்டு இருக்கிற இவனுக்கு,

स्थिते मनसि सुस्वस्थे शरीरे सति यो नरः ।
धातु-साम्ये स्थिते स्मर्ता विश्वरूपं च मामजम् ॥'[4]

इत्यादिகளிற்படியே शारीर-मानस-आगन्तुक-सहजங்களான†2

---

† 1—'अनन्तங்களாய்' 'இவற்றுக்கு' என்பவை இல்லை[3]. 2—'सहजங்களான'[4].

*1. यत् किञ्चिद्वर्तते लोके सर्वं तन्मद्विचेष्टितम् ।
अन्यो ह्यन्यच्चिन्तयति स्वच्छन्दं विदधाम्यहम् ॥

பார. (சாந்தி-359-56): உலகில் நடக்கும் எந்தச் செயலும் என் செயலேயாகும். என்னைத் தவிர மற்றவன் வேறொன்றை நினைக்கிறான்; ஆனால் நான் என் இஷ்டப்படி செய்கிறேன். (பகவத் வசநம்)

*2. நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்*
நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்*
என்றுமொரியல்வினர் என நினைவரியவர்*
என்றுமொரியல்வொடு நின்ற வெந்திடரே.

திருவாய். (1-1-6): நம உடலில் மறைந்து உள்ளிருப்பவன் ஜீவாத்மா. அவன் எண்ணுகின்றபடி இயங்கியும் இயங்காமலும் இருக்கிறது உடல். பரமாத்மா ஜீவர்களுக்கும், உடல்போன்ற ஜடப்பொருளுக்கும உள்ளே மறைந்து நின்று சேதன அசேதனங்களை இயக்குகிருன். பரமனின் ஸங்கல்பப்படியே நாமும், நம் உடலும், மற்ற பொருள்களும் இயங்குகின்றன. 'நான்' என்ருல் நம்மையும், நம் உடலையும் உடலாகக் கொண்ட பகவானைக் குறிக்கும். எனவே நமது ப்ரவ்ருத்தியும் நிவ்ருத்தியும் அவன் ஸங்கல்பத்திற்கு (எண்ணத்திற்கு) அதீனமானவை. அவன் அனைத்தையும் தன் உடலாகக் கொண்டிருப்பதால் ஓரியல்போடு (ஸ்வபாவத்தோடு) இருப்பவன் என நினைத்தற்கு அரியன. எனினும் அவன் லோக விலக்ஷணமான ஒரே இயல்பை உடையவன். எனவே எம்பெருமானே எழுந்து நிற்பவனும், உட்காருபவனும், படுப்பவனும், திரிபவனும், உட்காராதவனும், நிற்காதவனும், படுக்காதவனும் திரியாதவனுமான ப்ரஜையாக ஆகிருன். ப்ரவ்ருத்தியும் நிவ்ருத்தியுமாகிய இந்த எட்டு தொழில்கள் நமக்கு உண்டு. இவை அவன எண்ணத்தின் படியே நடப்பவை. அவனன்றி ஓரணுவும் அசையாதல்லவா? பரமனின் இவ்வியல்பை வேதப் ப்ரமாணம் திடமாக (உறுதியாக) எடுத்துக் கூறும்.

*3. இவையன்றே நல்ல இவையன்றே தீய*
இவையென்றிவை அறிவனேலும்*—இவையெல்லாம்
என்னல் அடைப்பு நீக்கொண்ணாது இறையவனே!*
என்னல் செயற்பாலது என்?

பெரியதிருவந். (3): 'இவ்வாருனவை நல்லவை அல்ல, இவ்வாருனவை தீயவை அல்ல, இவை இந்தத் தன்மைகளை உடையன' என்று நான் அறிந்திருக்கிறேனுகிலும், மனம்-வாக்கு-காயங்களால் செயல்களை ஸ்வீகரிப்பதோ அல்லது விடுவதோ ஸ்வதந்த்ரமாக என்னல் முடிவதன்று. ஸர்வேச்வரனே! என்னல் செய்யக் கூடியது என்ன இருக்கிறது? (ஒன்றுமில்லை).

*4. स्थिते मनसि : . : . .मामजम् ।।
ततस्तं म्रियमाणं तु काष्ठ-पाषाण-सन्निभम् ।
अहं स्मरामि मद्भक्तं नयामि परमां गतिम् ।।

चतुर्विध-व्याधிகளாலும் கலக்கம் வாராதபடி 'अस्तु ते'[‡1] என்னும் अनुग्रह-विशेषத்தாலே धातुसाम्य-शरीरस्वास्थ्यங்களை யும்[1], मनः स्थैर्यத்தையும்[2] பிறப்பிக்குமதுவும்,

(ii) மநஸ்ஸூ एकाग्रமான அளவிலே இவனுக்கு अङ्ग-पञ्चक-संपन्नமான आत्म-रक्षाभर-समर्पणத்தை உண்டாக்கு மதுவும்;

(iii) இதற்கு आकिञ्चन्यादिயான கைம்முதல் இல்லாதாரை आप्रयाण - अनुवर्तनीयமாய்[3] अन्तिम-प्रत्ययान्त மான[4] उपायान्तरத்திலே மூட்டுமதுவும்;

(iv) இதற்குவரும் अन्तरायங்களை[5] விலக்குமதுவும்;

(v) 'ददामि बुद्धियोगं तं येन मां उपयान्ति ते'*[2] என்கிற படியே प्राप्तिக்கு व्यवधानமில்லாத[6] परमभक्ति-दशै†[1] உண்டாக்குமதுவும் — सिद्धोपायभूतனான शरण्यனுடைய स्व-प्रसाद-संपादन-रूपமான[7] साध्योपायोपकारம்.

(§6.1) மோக்ஷோபாயத்தை அநுஷ்டித்தவன் இங்கு இருக்கும் நாள் அநுஸந்திக்க வேண்டியவை

இது पूर्वोपकार-परंपरैயில் प्रतिबुद्धனான[8] முமுக்ஷுவுக்கு प्रथम-अपेक्षणीयம்; இவ்வபேக்ஷை उपाय-प्रार्थनैயாம். இவ்வு பாயத்திற்கு†[2] मुमुक्षुत्वம் अधिकारமாகையாலே, 'पारमार्थिकी' (65·1)என்கிற चूर्णैயில் சொன்ன फलपर्वங்களும்[9], शारीरक-शास्त्रத்தில் उत्तराघ-पूर्वाघ-अश्लेष-विनाशादिகள்[10] முதலாக 'अनावृत्तिः शब्दात्'‡[3] என்கிறது அறுதியாய்ச் சொன்ன अर्थங்களெல்லாம் उपाय-साध्य-फलமாகத்[11](†[3]) தெளிந்தவனுக்கு இப்फलத்தை अपेक्षित्துக்கொண்டு उपाय-अनुष्ठानமாகையாலே இவ்வபேக்ஷை†[4] फलकामना-मात्र-रूपैயாய்க்கொண்டு[12] अधिकार-दशैயிலும், फलप्रार्थना-रूपैயாய்க் கொண்டு उपाय-अनुष्ठान-दशैயிலும், अनुष्ठित-उपाय

---

வராஹபு. (வராஹ சமர சுலோகம்): மனம் நல்ல நிலையில் இருக்க,

சரீரமும் சாஸ்த்ரார்த்தங்களை அறிந்து மோக்ஷத்தை விரும்பு வதற்கு ஏற்றவாறு தளர்ச்சியடையாதிருக்க, சரீரத்தில் தாதுக் களும் ஸமமான நிலையில் இருக்க எந்த மனிதன் உலகத்தைச் சரீரமாகவுடையவனும் கர்மத்தால் வரும் பிறப்பு இல்லாதவனு மான என்னைச் சரணமடைந்து நினைக்கிறானோ, அவன் இறக்கும் போது கட்டையையும் கல்லையும் போல் செயலற்றுக் கிடக் கின்ற என் பக்தனை அவனைப் பற்றி நானும் நித்யாநுபவம் கொடுக்க நினைக்கிறேன். அவன் மோக்ஷத்தை அடையும்படி செய்வேன். □

1—வாத - பித்த - ச்லேஷ்மங்களாகிய தாதுக்களின் சம நிலையையும், உடலின் நோயற்ற நிலையையும், உடல் ஆரோக்யம் இவற்றையும். 2—மனதின் ஒரு நிலைப்பாட்டையும். 3—உடலை விடும் வரை தொடருவதாய். 4—கடைசீ நினைவை முடிவாய்க் கொண்ட. 5—தடைகளை. 6—இடைவெளி இல்லாத. 7—தன் அருளைப் பெறுதலாகிற. 8—உணர்ந்தவனை. 9—பயன்களின் பல பிரிவுகளும். 10—பின் செய்யும் பாவங்கள் ஒட்டாமையும், முன் செய்த பாவங்கள் கழிகையும். 11—உபாயத்தால் பெறும் பயனை. 12—பயனை விரும்புதல் ஒன்றையே.

† 1—परभक्तिवशं[1]. 2—இவ்வுபாயத்வத்திற்கு[1]. 3—उपाय-साध्य-फलமானபடியாலே[1]. 4—இவ்வபேக்ஷா[4].

*1. अस्तु ते । तयैव सर्वं संपत्स्यते ।।

ச. கத். (சூர்-3): உனக்கு அப்படியே (எம்பெருமானின் திருவடி களில் உண்மையான சரணாகதி) உண்டாகட்டும். அந்த சரணா கதியினாலேயே எல்லாம் உண்டாகப் போகிறது. (எம்பெருமா னுக்கு ஸ்ரீரங்கநாச்சியார் அருளியது)

*2. तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ।।

கீதை (10-10): என்னுடனேயே எப்பொழுதும் சேர்ந்திருக்க வேண்டும் என்று விரும்பி என்னை அன்புடன் தியானம் செய் கிறவர்களுக்கு அவர்கள் எவ்வுபாயத்தால் என்னை அடைவரோ அந்த முதிர்ந்த பக்தி யோகத்தை அன்புடன் அளிக்கிறேன்.

*3. अनावृत्तिः शब्दादनावृत्तिः शब्दात् ।

ப்ரஹ்மஸூ. (4-4-21): மோக்ஷத்தை அடைந்தவன் மறுபடி ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருவதில்லை, ஏன? அப்படியே உபநிஷத்துக் கூறுவதால்.

னுக்கு 'समीपं राजसिंहस्य'*[1] इत्यादिகளிற்படியே (B-8) त्वरान्वित-विश्वास-रूपையாய்க்கொண்டு[1] उत्तरकृत्य-दशையிலும் अनुवर्तिக்கக்கடவது[2].

§7. பக்தியையோ ப்ரபத்தியையோ செய்பவனுக்கு இங்கு இருக்கும் நாள் ஸர்வேச்வரன் செய்யும் உபகாரங்கள்

இப்படி நின்றவனுக்கு सर्वेश्वरன் செய்யும் உபகாரங்களாவன:—

(i) उपाय-अधिगम-कालத்திலே[3] प्रारब्ध-कर्म-व्यतिरिक्तங்களான पूर्वकर्मங்களில் उपाय-विपाकादिகளுக்கு अनुगुणமல்லாத ஸுக்ருதங்கள்†[1] இவனுக்கு फलம் கொடுக்கக்கடவனவல்ல†[2] என்று ஸங்கல்பிக்கையும்;

(ii) இப்படியே உத்தரங்களான ஸுக்ருதங்களில் विद्या-अनुपकारங்களையும், प्रामादिक-पापங்களையும்[4] फल-उत्पादकங்கள்[5] அல்லாதபடி பண்ணுகையும்;

(iii) प्रामादिकம் அல்லாதவற்றுக்கு प्रायश्चित्त-शिक्षा-विशेष-उपक्लेशங்களாலே[6] यथा-अधिकारம் परिहारம் பண்ணுமதுவும்;

(iv) स्वतन्त्र-प्रपत्ति-निष्ठனுக்கு अपेक्षा-अनुगुणமாக प्रारब्धத்தையும் அப்போதே निश्शेषமாகவாதல், शरीरान्तरादि-हेतुக்களான अंशங்களையாதல், उत्तर-कृत्यरूप-शास्त्रीय कैङ्कर्य-विशेषத்திற்கு विरोधिகளையாதல் கழித்துக் கொடுக்குமதுவும்;

(v) 'येऽहर्निशं जगद्धातुर्वासुदेवस्य कीर्तनम् ।
कुर्वन्ति तान् नरश्रेष्ठ न कलिर्बाधते नरान् ॥'*[2]
'न कलौ कलिचेष्टोऽसौ मूढेषु च न मुह्यति ।
भगवत्यच्युते नित्यं येन भावः समाहितः ॥'*[3]
'कलौ कृतयुगं तस्य कलिस्तस्य कृते युगे ।
यस्य चेतसि गोविन्दो हृदये यस्य नाच्युतः ॥'*[4]

'கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கு அருள் செய்யும்'*5 इत्यादिகளிற்படியே कैङ्कर्य-परனுக்கு कालदोषादि-भयस्थानங்களால்[7] கலக்கம் வாராதபடி பண்ணுமதுவும்;

1—விரைவுடன் கூடிய நம்பிக்கையாக ஆகி. 2—தொடரக் கடவது. 3—உபாயத்தை அடையும் காலத்தில். 4—கவனக் குறைவால் ஏற்படும் பாபங்களையும். 5—பயனைத் தருபவை. 6—பிராயச்சித்தம், தண்டனை, சிறு துன்பங்கள் மூலம். 7—காலத்தால் வரும் தோஷம் முதலிய பயத்திற்குக் காரணங்களால்.

†1—ஸுக்ருதத்தையும்[1]. 2—கொடுக்கக்கடவனல்ல[1].

*1. समीपं राजसिंहस्य रामस्य विदितात्मनः ।
सङ्कल्पहय-संयुक्तैर्यान्तीमिव मनोरथैः ॥

ராமா. (5-19-7): ராஜச்ரேஷ்டனை இராமபிரானது ஸமீபத்தை இப்போதே மனவுறுதியாகிய குதிரை பூட்டிய தன் மநோரதமாகிய தேரில் ஏறிக்கொண்டு செல்பவள் போலுள்ள பிராட்டியை.

*2. (?): மனிதர்களில் சிறந்தவனே! எவர்கள் இரவும் பகலும் உலகைப் படைத்த எம்பெருமானுடைய திருநாம ஸங்கீர்த்தனம் செய்கிறார்களோ, அம்மனிதர்களை கலியானது பீடிக்கிறதில்லை.

*3. (?): எவனால் மனது அச்யுதனை பகவானிடத்தில் எப்பொழுதும் நன்கு வைக்கப்பட்டிருக்கிறதோ அவன் கலியுகத்திலும் கலியின் சேஷ்டையில் அகப்படுவதில்லை; அறிவிலிகளின் கொள்கைகளில் மயங்குவதில்லை.

*4. வி. தர். (109-57): எவன் மனதில் கோவிந்தனை நினைக்கிறானோ அவனுக்குக் கலியுகமே க்ருதயுகமாக ஆகிறது. எவன் அச்யுதனை நினைக்கவில்லையோ அவனுக்கு க்ருதயுகமும் கலியுகமாக ஆகிறது.

*5. கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கு அருள்செய்யும்*
மலியும் சுடரொளி மூர்த்தி மாயப்பிரான் கண்ணன் தன்னை*
கலிவயல் தென்னன்குருகூர் காரிமாறன் சடகோபன்*
ஒலிபுகழாயிரத்து இப்பத்து உள்ளத்தை மாசறுக்குமே.

திருவாய். (5-2-11): தன்னை ஆச்ரயித்தவர்களுக்கு கலியுகத்தின் கொடுமை சிறிதும் இல்லாதபடி அருள் செய்யுகின்றவனும்,

(vi) உபாயமாகவாதல் फलமாகவாதல் அநுஷ்டிக்கிற கைங்கர்யங்களை இட்டபடை கல்படையாக்கி, 'सङ्कल्पादेव भगवान्'*[1] इत्यादिகளிற்படியே फलमनोरथ-पूर्तिயை உண்டாக்குமதுவும் — இங்கிருந்த நாள் பண்ணும் உபகாரங்கள்.

§8: மோக்ஷோபாயத்தைச் செய்து முடித்தவனுக்கு சரீரம் விடும்போது எம்பெருமான் செய்யும் உபகாரங்கள்

(i) இப்படி இருந்த मुमुक्षुவுக்கு अन्तिम-शरीर-विश्लेष காலத்தில் प्रशस्त-अप्रशस्त-देशकाल-निमित्त-नियमமில்லாதபடி[1] ஸங்கல்பித்ததுவும்;

(ii) 'यं योगिनः प्राणवियोगकाले यत्नेन चित्ते विनिवेशयन्ति'*[2] என்கிறபடியே भक्तियोगनिष्ठனுக்கு स्वयत्न-साध्य-अन्तिम-प्रत्यय-विशेषத்தைத் தலைக்கட்டிக் கொடுக்குமதுவும்;

(iii) निश्शेष-भरन्यासம் பண்ணி चातकवृत्तियானவனுக்கு†[1] अपेक्षा-अनुगुणமாக 'शरीर-पात-समये तु केवलं मदीययैव दयया अतिप्रबुद्धः'*[3] इत्यादिகளிற்படியே தன் कृपामात्रத்தாலே स्व-विषय-अन्तिम-प्रत्ययத்தைப் பிறப்பிக்குமதுவும்;

(iv) 'ततस्तं म्रियमाणं तु काष्ठ-पाषाण-सन्निभम्' (67*[4]) என்னும்படி இவன் கிடக்குமளவிலும், 'अहं स्मरामि मद्भक्तं नयामि परमां गतिं' (67*[4]) என்றும், 'தான் எனக்காய்

---

மிக்க ப்ரகாசமுடைய திவ்யரூபமுடையவனும், ஆச்சர்யமாய் உபகரிக்கின்றவனுமான கண்ணபிரான் விஷயமான திருநகரியில் தோன்றின காரியாரைச் சேர்ந்த மாறவம்சத்தினரான நம்மாழ்வாருடைய புகழ்மிக்க ஆயிரம் பாசுரங்களில் இந்தப் பத்துப் பாசுரங்களும் கற்றோர் மனத்தின் அழுக்கைப் போக்கும். ☐

1—நல்லதும் தீயதுமான தேசம், காலம், நிமித்தம் (சகுனம்) இவற்றைப் பற்றி நியமம் இல்லாதபடி.

1—चातकवृत्तियான स्वतन्त्र - प्रपत्तिनिष्ठனுக்கு[4].

*1. ஸாத்வதஸம். (?): பகவான் தன் ஸங்கல்பத்தாலேயே (ஆச்ரிதனுடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்கிறான்.)

*2. यं योगिनः प्राणवियोगकाले
यत्नेन चित्ते विनिवेशयन्ति ।
स तं पुरस्तात् हरिमीक्षमाणः
प्राणान् जहौ प्राप्त फलो हि भीष्मः ।

பார. (சாந்தி-47-189): யோகிகள் தங்கள் மரணகாலத்தில் எந்தப் பகவானைப் பெருமுயற்சி கொண்டு தங்கள் மனத்தில் இருத்துகின்றார்களோ, அந்தப் பகவானைப் பீஷ்மர் தம் கண்ணெதிரே பார்த்துக் கொண்டே தம் உயிரை விட்டார். அவர் யோகத்தின் பயனை அடைந்தவரல்லரோ?

*3. शरीर-पात-समये तु केवलं मदीययैव दयया अतिप्रबुद्धः, मामेवावलोकयन्, अप्रच्युत-पूर्वसंस्कार-मनोरथः, जीर्णमिव वस्त्रं सुखेन इमां प्रकृतिं स्थूलसूक्ष्मरूपां विसृज्य...नित्यकिङ्करो भविष्यसि ।

ச. கத். (சூர்-21): சரீரம் சரியுங்காலத்தில் நீ முந்தைய பழக்கத்தையோ, தற்காலத்திய முயற்சியையோ எதிர்பார்க்காமல எனக்கு இயற்கையாய் அமைந்த தயையாலேயே முந்தைய நிலைமையிற் போல் பரிபூர்ண ஜ்ஞானமுடையவனாய்த் (தினந்தோறும்) சிந்திக்கப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்துடன் கூடிய என்னையே தெளிவாய் நீ அநுஸந்திக்கொண்டு) காலதாமத்தினாலோ, உடலைவிட்டு ஆவிபிரியும்போது ஏறபடும் வலியினாலோ ''எம்பெருமானே நமக்கு பரமப்ராப்யம்'' என்கிற முன்பிருந்த எண்ணம் மாறாதவனாய் விரைவில் ஸ்ரீவைகுண்டத்தை அடையப் போவதினாலும், அந்தர்யாமியின் திருவருளால் அப்பொழுது ஏற்படும் பகவதநுபவத்தினாலும், தன்னை அழைத்துச் செல்லவந்த விஷ்ணுதூதர்களைப் பார்ப்பதினாலும் ஏற்பட்ட மகிழ்ச்சியினால் புத்தாடையை உடுத்துபவன் கிழிந்த ஆடையைக் களைந்து எறிவது போல், இதுகாறும் ஸ்வஸ்வரூப - பரமாத்மஸ்வரூப - ஞானத்தை மறைத்துவந்த ஸ்துலசரீரத்தை இங்கும், ஸூக்ஷ்ம சரீரத்தைப் பின்பும் விடுத்து,...பரமபதத்தில் பகவத்கைங்கர்யம் பண்ணும் பேறு பெற்றவனாக ஆகப்போகிறாய்,

நினைந்து அருள் செய்யும் அப்பன்'*[1] என்றும் சொல்லுகிறபடியே இவனைக் கடாக்ஷித்தருளி, ஜுகுப்ஸை பண்ணாதே[1] இவன் பக்கல் ப்ரீதி சொன்ன ரதி யுடையனா மதுவும் (C-6);

(v) ஸ்வர்க்க-நரகாதிகளுக்குப்போகும் நாடீ-விசேஷங்களிலே ப்ரவேசிப்பியாதே 'ஒருவன் அடியேனுள்ளான்'[†2] என்னும்படி ஹார்த்தரூபத்தாலே இடம் பார்த்து எடுக்க நினைக்கிற தனக்கும், பரரூபத்தாலே மீளாவடிமைப் பணிகொள்ள †[1] இருக்கிற தனக்கும் செவ்விதான[2] சேமவழிக்கு முகமான ப்ரஹ்மநாடீ-முகத்திலே ப்ரவேசிப்பிக்கு மதுவும்;

(vi) சேற்றிலே விழுந்த சிறு மக்களை பிதா அழுக்குடனே எடுத்துக் கொண்டு கரையேறுமாப் போலே, ஸூக்ஷ்ம-சரீரத்தோடே ஸ்தூல-சரீரத்தில் நின்றும கொண்டு புறப்படுமதுவும் — இவை முமுக்ஷுவுக்கு உத்க்ரமண காலத்தில்[3](†[2]) செய்யும் †[2] உபகாரங்கள்.

उपकारसङ्ग्रहे†[3] द्वितीयोऽधिकारः

---

॥ तृतीयोऽधिकारः ॥

## III. நிர்யாணாதிகாரம் என்னும் மூன்றும் அதிகாரம்

§9. மோக்ஷோபாயத்தைச் செய்து முடித்தவனுக்குச் சரீரத்தினின்று புறப்பட்ட பின் எம்பெருமான் செய்யும் உபகாரங்கள்

§9.1. விரஜாநதிக் கரையை அடையும் வரை செய்யும் உபகாரங்கள்

(i) இப்படி நல்வழி நடத்துகைக்கு ஒருப்பட்ட

---

1—அருவருக்காதே. 2—சிறந்த. 3—உடலை விட்டு உயிர் மேலே புறப்படும் காலத்தில்.

† 1—மீளாவடிமை பண்ணிக் கொள்ள[1]. 2—उत्क्रमण காலாந்தமான; 'செய்யும்' என்பது இல்லை[1]. 3—साधनाधिकारो नाम' என்று அதிகம்.

*1. தாய் நினைந்த கன்றேயொக்க என்னையும்
தன்னையே நினைக்கச் செய்து* தான் எனக்
காய் நினைந்தருள் செய்யும் அப்பனை
அன்று இவ்வையக முண்டுமிழ்ந்திட்ட
வாயனை* மகரக்குழைக்காதனை
மைந்தனை மதிட்கோவலிடைகழி
யாயனை* அமரர்க்கரியேற்றை என்
அன்பனையன்றி ஆதரியேனே.

பெரிய திரு. (7-3-2): தன் தாயாகிய பசுவை நினைக்கும் கன்று போல அடியேனையும் (எம்பெருமானுகிய) தன்னை சிந்திக்கும்படி பண்ணி (அதற்கு மேல்) எனக்கு வேண்டிய நன்மைகளையெல்லாம் தானே சிந்தித்து அருள்செய்யும் உபகாரகனும், முன்பொரு காலத்தில் இவ்வுலகத்தையெல்லாம் விழுங்கி (பின்பு) வெளிப்புறப்படவிட்ட திருப்பவளத்தை உடையவனும், மகரகுண்டலங்களைத் திருச்செவிகளில் அணிந்துள்ளவனும், நித்யயுவாவும், திருமதிள்களையுடைய திருக்கோவலூர் இடைக்கழியில் கோபாலனாய் நிற்பவனும், நித்யஸூரிகளினிடையே சிங்கம் போலவும் காளை போலவும் செருக்குத் தோற்ற இருப்பவனும், என்னிடத்தில் அன்புடையவனுமான திருநறையூர் நம்பியைத் தவிர்த்து (வேறொருவனை) ஆதரிக்கமாட்டேன்.

*2. கண்கள் சிவந்து பெரியவாய் வாயும் சிவந்து கனிந்து* உள்ளே
வெண்பலிலகுசுடர் இலகுவிலகு மகரகுண்டலத்தன்*
கொண்டல் வண்ணன் சுடர்முடியன் நான்குதோளன் குனி
சார்ங்கன்*
ஒண்சங்கதை வாளாழியான் ஒருவன் அடியேனுள்ளானே.

திருவாய். (8-8-1): திருக்கண்கள் சிவந்தும் நன்றாய் மலர்ந்தும், திருப்பவளமும் சிவந்தும் பழம் போல் ரஸம் நிறைந்தும், அதற்குள்ளே வெளுத்த திருமுத்துக்கள் போன்ற பற்களால் விளங்கியும், கன்னங்களில் ப்ரதிபலித்து அசைந்து கொண்டிருக்கும் மகரகுண்டலங்களை உடையவனும், மழைமேகம் போன்ற நிறமுடையவனும், ஒளிவீசும் திருவபிஷேகமுடையவனும், நான்கு தோள்களை உடையவனும், வளைந்த சார்ங்கமென்னும் வில்லை உடையவனும், பிரகாசமுள்ள சங்கம், கதை, கத்தி, திருவாழி என்னும் திவ்யாயுதங்களை உடையவனுமான ஒருவன் அடியேனுடைய மனத்திலிருக்கிறான். (கருத்து: எம்பெருமான் என்னுடன் சேர்ந்து, அச்சேர்க்கை நிலையாய் இருப்பதற்காக தன்னுடைய அளவற்ற அழகைக்காட்டி என்னை வசப்படுத்திக் கொண்டு என் மனதில் எழுந்தருளி இருக்கிறான்.)

தான் — बाल-क्रीडा-विशेषத்தாலே வழி தப்பிப்போன குமாரனை अरण्य - प्रदेशத்தில் நின்றும் மீட்டு आस्थान-विशेषத்தளவும் सुप्रीतனாய்க்கொண்டு †[1] நடத்துகிற सार्वभौमன் தன் सामन्तரானவர்களெல்லாரும்[1] இக்குமாரனை सत्करिக்கும்படி[2] பண்ணுமாப் போலே— தனக்கு अन्तरङ्गர்களான अर्चिरादि-पुरुषர்களையிட்டு, தம் தாம் எல்லைகள்†[2] தோறும் இவனை எதிர்கொண்டு உபசரிக்கும்படி பண்ணுமதுவும்†[3];

(ii) அப்படி 'அமரரோடுயர்வில் சென்று அறுவர் தம் பிறவி அம் சிறையே'*[1] என்கிறபடியே आतिवाहिकரைக் கொண்டு 'சூழ்ந்தகன்று ஆழ்ந்துயர்ந்த முடிவில் பெரும் பாழைக்'*[2] கடத்துமதுவும்;

(iii) விரஜை என்கிற अमृतनदिயைக் கிட்டுவித்து — आकरத்தில் நின்றும்[3] எடுத்த ரத்தினத்தின் அழுக்குக் கழற்றுமாப் போலே—आत्माவை अनुबन्धिத்துக் கொண்டுகிடக்கிற[4] सूक्ष्म-अचित्தைக் கழித்து 'ஒளிக்

---

1—சிற்றரசர்கள். 2—கொண்டாடும்படி. 3—சுரங்கத்திலிருந்து. 4—ஒட்டிக்கொண்டிருக்கும்.

† 1—सम्प्रीतனாய்க் கொண்டு[1]. 2—எல்லை[1]. 3—பண்ணுவிக்குமதுவும்[2].

*1. அமரர்கள் தொழுதெழ அலைகடல் கடைந்தவன் தன்னை*
அமர்பொழில் வளங்குருகூர்ச் சடகோபன் குற்றேவல்கள்*
அமர்சுவையாயிரத்து அவற்றினுள் இவைபத்தும் வல்லார்*
அமரரோடு உயர்வில் சென்று அறுவர்தம் பிறவியஞ்
சிறையே.

திருவாய். (1-3-11): எம்பெருமானுடைய அழகாலே பரவசராய் தேவர்கள் கூத்தாடும்படி அலைகளையுடைய திருப்பாற்கடலைக் கடைந்த அவ்வெம்பெருமானைக் குறித்து அடர்ந்த சோலைகளின் செழுமையையுடைய திருக்குருகூரில் தோன்றிய ஆழ்வாருடைய கைங்கர்யமாகச் சொன்ன ரஸம் நிறைந்த ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே இந்தப் பத்துப் பாட்டுக்களையும்

அநுஸந்திப்பவர்கள் பரமபதத்தை அடைந்து நித்யஸூரிகளுடன் சேர்ந்து தம்முடைய ஸம்ஸாரமாகிய கொடிய சிறையினின்று நீங்கப் பெறுவர்.

12. சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில் பெரும் பாழேயோ!
சூழ்நததனில் பெரிய பரநன்மலர்ச் சோதீயோ!
சூழ்ந்ததனில்பெரிய சுடர்ஞானவின்பமேயோ!
சூழ்ந்ததனில்பெரிய என்னவாவறச் சூழ்ந்தாயே,

திருவாய். (10-10-10): பேராசை பெருநஷ்டம் என்பர். ஆனால் பேராசை ஆழ்வாருக்குப் பெரிய லாபமாயிற்று. எம்பெருமானோடு ஸம்சலேஷிக்கவேணும் (சேர்ந்து அநுபவிக்கவேணும்) என்ற பேரவாவை நிறைவேற்றிக்கொள்ள பிராட்டியின் மீதும எமபெருமான் மீதும் ஆணையிட்டு அழைக்க, அவனும் வர கூடிச் சேர்ந்து மகிழ்கிறார். ஆழ்வாரின் ஆசை எவ்வளவு பெரியது என்பதை பாசுரம் விளக்குகிறது.

மூலப்ரக்ருதியானது மஹத், அஹங்காரம், தன்மாத்ரைகள் பூதங்கள், இநதிரியங்கள் என 23 தத்துவஙகளாகப் பேருருவம் எடுத்து அவற்றுள் எங்கும் குறுக்கிலும் மேல் கீழும் பரந்து வ்யாபிதது, பரமனுக்கு அழிவிலலாத சரீரமாக இருக்கிறது. இதை விட முக்தாதமா பெரியது. இது ப்ரக்ருதி முழுவதையும் சூழ்ந்தும் ப்ரக்ருதியை விட உயர்ந்ததாயும், ஆனந்தரூபமாயும், எஙகும் பரவும் தனமையுடையதுமான தர்மபூதஜ்ஞாநத்தோடு கூடியது. இத்தகு முக்தாத்மாவைக் காட்டிலும பெரியது பரமாதமா. இத்தகு முக்தாந்மாவையும் சரீரமாய்க் கொணடு வ்யாபித்திருப்பவன் பரமாத்மா. இத்தகு முக்தாத்மாவைக் காட்டிலும பெரியது பரமாத்மாவின் ஸங்கல்ப (தர்மபூத) ஜ்ஞாநம். இது ப்ரபாரூபமாய் ஆனந்தமயமாய, விபுவாய் எங்கும் பரவும் தன்மையுடையது. பரமனின் இந்த ஸங்கல்ப ஞானத்தைக் காட்டிலும் மிகப் பெரியது என அவா, ஏனெனில், என் அவா நித்யவிபூதியையும், அதற்கும மேலான உன்னையுமே பெற வேணும எனும் விடாய் ஆகும். இது உன் ஸங்கல்ப ஜ்ஞாநத்தையும் ஆழ்ந்து வ்யாபித்துள்ளது. ஆக பெரிதாகக் கருதப்படும் மூலப்ரக்ருதி, அதிலும தர்மபூதஜஞாநத்தால் பெரிதான முக்தாத்மா, இவற்றைச் சூழந்த பகவத் ஸங்கல்ப ஜ்ஞாநம் ஆகிய மூன்றையும் விடப் பெரிது என் அவா. இந்த அவா அற்றுப் போகும்படி ஸர்வாநதர்யாமியான நீ என்னோடு சூழ்ந்தாய் (ஸம்ச்லேஷித்தாய்). என் மனோரதமும் நிறைவேறிற்று.

கொண்ட சோதி''[1](†[1]) என்னும்படி பண்ணுமதுவும்†[2] இப்பாலுள்ள உபகாரங்கள்.

§9.2. விரஜாநதியைக் கடந்தபின் செய்யும் உபகாரங்கள

(i) அக்கரையில் दिव्यलोक-दिव्यजनपद-दिव्यनगर-दिव्य-विमान - दिव्यास्थान - दिव्यपर्यङ्क - प्राप्तिपर्यन्तமாக पयङ्कविद्यादिகளிலும் (C-7), शाकटायन-जयाख्य-संहितादिகளிலும் (C-8), 'சூழ்விசும்பணிமுகி'லிலும்'[2] சொல்லுகிற (B-9) सत्कार-परंपरैகளை உண்டாக்குமதுவும்;

(ii) 'தன்மை பெறுத்தித் தன் தாளிணைக் கீழ் கொள்ளு'[3]மதுவும்;

(iii) 'இருளகற்றும் எரிகதிரோன் மண்டலத்தூடு ஏற்றிவைத்து ஏணி வாங்கி, அருள் கொடுத்திட்டு அடியவரை ஆட்கொள்ளுமதுவும்'*[4];

---

† 1—ஒளிக் கொண்ட சோதியுமாய்[1]. 2—'விரைஜைக்கு' என்று அதிக பாடம்[2].

*1. களிப்பும் கவர்வும் அற்றுப் பிறப்புப் பிணி மூப்பிறப்பற்று*
ஒளிக்கொண்ட சோதியமாய் உடனகூடுவது
என்றுகொலோ ?*
துளிக்கின்ற வானிந்நிலம் சுடராழிசங்கேந்தி*
அளிக்கின்ற மாயப்பிரான் அடியார்கள் குழாங்களையே.

திருவாய். (2-3-10) : விஷயானுபவங்களில் மகிழ்ச்சியும் அவை கிடைக்காதபோது சிநதையும் போய், இவற்றிற்குக் காரணமான பிறவிகளும் பிறந்தபின் நோயும் கிழத்தனமும் மீண்டும் மரணங்களும்—அற்று, சுத்தஸத்துவத்தாலான காந்தியுள்ள சரீரத்தை உடையவனுமாகி, ப்ரகாசமுடைய திருவாழியையும் திருச்சங்கையும் கைகளில ஏந்தி மழைபொழியும் ஆகாசத்தையும் பூமியையும் காக்கின்ற ஆச்சர்ய சேஷ்டிதனுன எம்பெருமானுடைய அடியார்களான நித்யஸூரிகளின் கூட்டங்களுடன் சேர்ந்து அநுபவிப்பது என்றோ ?

2. சூழ்விசும்பணிமுகில் தூரியம் முழக்கின
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின
ஏழ்பொழிலும் வளமேந்திய என்னப்பன
வாழ்புகழ் நாரணன் தமரைக் கண்டுகந்தே.

திருவாய். (10-9-1): ஆழ்வார் தான் திருநாட்டுக்கு எழுந்தருளும் போது ஸர்வலோகங்களும் தன்னை எப்படி கொண்டாடும் என்பதை தம் ஞானத்ருஷ்டியால் கடாக்ஷித்துப் பேசுகிறார். எனக்கு ஸர்வவிதபந்துவாய், ஆச்ரிதரை வாழ்விக்கும் கல்யாண குணங்களோடு கூடிய நாராயணனுடைய பக்தர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டு மிகவும் ஸந்தோஷித்து ராஜபுத்ரனை நாட்டார் கொண்டாடுவது போல, வானத்திற்கு அணியாக விளங்கும் மேகங்கள் வாத்யங்களை முழக்கினவாம். ஸமுத்ரங்கள் அலைகளாகிற கைகளை உயரத்தூக்கி கூத்தாடினவாம். ஸப்த த்வீபங்களும் உபஹாரங்களாக மங்களவஸ்துக்களை கையில் ஏந்தி நின்று வரவேற்றனவாம்.

3. சன்ம சனமாந்தரம் காத்து அடியார்களைக் கொண்டுபோய்*
தன்மைபெறுத்தித் தன் தாளிணைக்கீழ்க் கொள்ளும் அப்பன்*
தொன்மை பிதற்ற வல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர்*
நன்மை பெறுத்து எம்மை நாளுய்யக்கொள்கின்ற நம்பரே.

திருவாய். (3-7-7): பகவச்சேஷராய் ஒழிவில் காலமெல்லாம் எம்பெருமானுக்கு அடிமை செய்யப் புகுந்த ஆழ்வார் பாகவத சேஷத்வமே உயர்ந்தது என்கிறார். ஏன்? பாகவதர்களை அவர்கள் எடுக்கும் ஒவ்வொரு பிறவியின் போதும் தானும் உலகில் பிறந்து, காப்பாற்றி அர்ச்சிராதி வழியாக ஸ்ரீவைகுண்டம் சேர்ப்பித்து, தன்னைப் போன்று ஸத்யஸங்கல்பத்வ ஸர்வஜ்ஞத்வாதிகளைப் பெறச் செய்து, ஞானவிகாஸத்தைக் கொடுத்து, தன் திருவடிவாரத்தில வைத்து மகிழ்பவன் எம்பெருமான். இத்தகு குணங்களைக் கூறித் துதிப்பவருக்கு ச்ரேயஸ்ஸைக் கொடுத்து உய்யச் செய்பவன் அவன். இதை நம்புங்கள். மம மத்பக்த பக்தேஷு ப்ரீதி: அப்யதிகா பவேத். அடியார் அடியார் அடியார்களிடத்தில் தனக்கு ப்ரீதி அதிகம் என்றான்.

*4. கருளுடைய பொழில் மருதும் கதக்களிறும் பிலம்பனையும் கடியமாவும்*
உருளுடைய சகடரையும் மல்லரையும உடையவிட்டு ஓசை கேட்டான்*
இருளகற்றும் எரிகதிரோன் மண்டலத்தூடு ஏற்றி வைத்து ஏணிவாங்கி*
அருள் கொடுத்திட்டு அடியவரை ஆட்கொள்வானமருமூர் அணியரங்கமே.

(iv) आत्मापहारிகளுக்குள்ளே இருந்து†[1] 'அடியார் குழாங்களை யுடன் கூடுவதென்று கொலோ' (78*[1]) என்று मनोरथித்த இவனை, 'सवयस इव ये नित्य-निर्दोष-गन्धाः'*[1] என்னும்படி நிற்கிற†[2] மேலாத் தேவரானவர்கள்†[3] 'नित्याभिवाञ्छित-परस्पर-नीचभावैः'*[2] என்கிற ந்யாயத்தாலே தங்களுக்கு மேலாக आदरிக்கும்படி பண்ணுமதுவும்;

(v) 'உள்ள உலகளவும் யானும் உளனுவன்†[4]'*[3] என்று भावித்தவனை அனைத்துலகுமுடைய அரவிந்த லோசனைத் தினைத்தனையும் விடாதபடி, आदि உண்டாகிலும் अन्तம் இல்லாத பரிபூர்ணாநுபவத்தைக் கொடுக்குமதுவும்;

---

பெரியாழ்வார்திரு. (4-9-3): கண்ணன அடியார்களிடம் உள்ள பரமக்ருபையினுல் சோலை போன்று இருண்ட நிழல் தரும் இரு மருது மரங்கள் உருவான அஸுரர்களையும், கோபம் கொண்டு எதிர்த்த குவலயாபீடயானையையும், ப்ரலம்பாஸுரனையும், கொடிய குதிரையாம் கேசியையும், உருண்டுவநத சகடாஸுரனையும், மதுரையில் மல்லர்களையும், அடித்து, உடைத்து, பிளந்து அவர்களின் அழுகுரலைக்கேட்டு மகிழ்ந்தவன். இவன பக்தர்களை அர்ச்சிராதி வழியாகிற ஏணியின் மூலம் ஸூரியமண்டலத்தைத் தாண்டுவித்து, விரும்பினுலும் கீழே இறங்காதபடி ஏணியை அப்புறப்படுத்தி, விரஜையைத் தாண்டுவித்து திவ்யசரீரம் - ப்ரஹ்மாலங்காரம் - குணுஷ்டகாவிர்பாவம் செய்வித்து, கைங்கர்யஸாம்ராஜ்யத்தைப் பெறும்படி செய்து ஆட்கொள்வான். இத்தகு பரமன் கோயில் கொண்ட இடம்தான் ஸ்ரீரங்கம். □

† 1—आत्मापहारிகளுக்கு நடுவே இருக்கச் செய்தே[2]. 2—'நிற்கிற' என்பது இல்லை[1]. 3—மேலாத்தேவரான[1]. 4—உளன்[4].

*1. ते साध्याः सन्ति देवा जननि! गुण-वपुर्वेष-वृत्त-स्वरूपै-
र्भोगैर्वा निर्विशेषाः सवयस इव ये नित्य-निर्दोष-गन्धाः।
हे श्रीः! श्रीरङ्गभर्तुस्तव च पद-परीचारवृत्त्यै सदाऽपि
प्रेम-प्रद्राण-भावाविल-हृदय-हठात्कार-कैङ्कर्य-भोगाः ॥

ஸ்ரீ குண. (27): தாயான ஸ்ரீதேவியே! எவர்கள் குணம், வடிவம், கோலம், நடத்தை, ஸ்வருபம, அநுபவம் ஆகியவை களால் வேற்றுமை அற்றவர்களோ, (ஆகையால்) நண்பர் போன்றவர்களோ, எப்பொழுதும் சிறிதும் குற்றமற்றவர்களோ, ஒழிவில் காலமெல்லாம ப்ரீதியினுல உருகிய மநோபாவத்தாலே உந்தப்பட்டுச் செய்யும் கைங்கர்யங்களில் இன்பமுடையவர் களோ, அந்த நித்யஸூரிகள் ரங்கநாதனுக்கும் உனக்கும் திருவடி களில் கைங்கர்ய வ்ருத்திக்காகவே இருக்கின்றனர்.

*2. कैङ्कर्य-नित्यनिरतैः भवदेकभोगैः
नित्यैरनुक्षण-नवीन-रसार्द्रभावैः ।
नित्याभिवाञ्छित-परस्पर-नीचभावैः
मद्दैवतैः परिजनैस्तव सङ्गसीय ॥

ஸ்ரீ வைகுண்ட ஸ்தவம் (77): ஓ பகவானே! தேவரீருக்குத் தொண்டு புரிவதில் எப்போதும் ஈடுபடுகின்றவர்களும், தேவரீரை அநுபவிப்பதிலேயே நோக்குள்ளவர்களும், நித்யஸூரிகளும், ஒவ்வொரு கணமும் அன்பின் பெருக்கால் உள்ளம் உருகுகின்ற வர்களும், எப்பொழுதும் ஒருவருக்கொருவர் அடியார்களாகும் நிலையை விரும்புமவர்களும், எனக்கு தெய்வமாய் உள்ள ஆசார் யர்களுமான தேவரீருடைய பரிஜநங்களுடன் கூடி வாழக் கடவேன்.

*3. உள்ளிலும் உள்ளம் தடிக்கும் வினைப்படலம்
விள்ள, விழித்து உன்னை மெய்யுற்றல்—உள்ள
உலகளவும் யானும் உளனுவனென்கொலோ?
உலகளந்தமூர்த்தி! உரை.

பெரிய திருவந்தாதி (76): திருவடியால் எல்லா உலகத்தையும் அளந்த எம்பெருமானே! உன்னை நினைத்தால் கூட என உள்ளம பூரிக்கின்றது. உன்னை நினைக்க நினைக்க எனது பாபங்கள் விலகும். பாபம் விலக உன் கடாக்ஷம் கிட்டும்; கடாக்ஷத்தால் உன்னை ஸாக்ஷாத்கரிப்பேன். இதனுல் உள்ளம் பூரிக்கப் பூரிக்க என் உட லும், த்ரிவிக்ரமாவதாரத்தில் உன் திருமேனி உலகளவு பரவியது போல், பூரித்துப் பரவும். 'அணுவான ஜீவாத்மா முக்தியில் ஜ்ஞாநவிகாஸத்தினுல் எங்கும் பரவி நிற்கலாம். உடல் பரவுவது எங்ஙனம்? எவ்வாறு கூடும்?' எனில், அதற்கு நீரே விடை கூறும் என்கிறுர் பகவானைப் பார்த்து. விபுவான எம்பெருமான் ஜீவ னுடைய சரீரத்தில் (அந்தர்யாமியாக) இருந்தால் ஜீவனும் பெருக்க வேண்டியது தானே என்று கருத்து.

(vi) இவ்அநுभव-परीवाहமாக अभिमत-अनुरूपங்களான अशेष शेषवृत्ति-विशेषங்களையும்†[1] கொள்ளுமதுவும்;

(vii) இவனுக்கு வந்த अतिशयமும்[1] தன் பேருக நினைத்திருக்கும்படி सर्वशेषियान தனக்கு இவை எல்லா வற்றாலும் வந்த सन्तोष-अतिशयத்தைக் கண்டு, இவன் कृतार्थனும்படி[2] பண்ணுமதுவும்;

(vii) 'கோலத்திருமாமகளோடு உன்னைக் கூடாதே சாலப் பல நாள் அடியேன் இன்னம் தளர்வேனோ'*[1] என்று இருந்த இவனைப் பிணை கொடுக்கிலும்[3] போக வொட்டாதே இந்த निरतिशय-आनन्द-अनुभवपरीवाहம் நித்யமாம்படி நடத்துமதுவும்—

— எல்லா முனிவும் தீர்ந்து, சிறைக்கூடத்தில் நின்றும் புறப்படவிட்ட†[2] ராஜகுமாரனுக்கு†[3] स्थिर மான யௌவராஜ்யம் கொடுக்குமாப் போலே இருக்கிற —प्रधान-उपकारवर्गம்.

§10. பொய்ந்நின்ற என்னும் திருவிருத்த முதற்பாட்டில் கீழ்க்கூறியவற்றை நம்மாழ்வார் காட்டியருளல்

இப்படி நம்முடைய अपेक्षा-निरपेक्षமாகத்[4] தன்னுடைய स्व-बुद्धि-अधीनமான†[4] सहकारि-विशेष-सहित-संबन्ध-गुणविशेषங்களாலே[5](†[5]) முன்பு ஸர்வேச்வரன் பண்ணின உபகார பரம்பரைகளை முன்னிட்டுக் கொண்டு, மேல் देश-काल-परिच्छेदமில்லாத[6] दिव्य-कैंकर्य-पर्यन्तமாக அபேக்ஷிக்கை முமுக்ஷுவுக்கு प्राप्तமாகை யால் அயர்வறும் அமரர்களதிபதியான திருமாலாலே மயர்வற மதிநலம் பெறும்படி அருளப்பட்ட நம்மாழ்வார், தம்முடைய अनुभव-परीवाहங்களான प्रबन्धங்கள் நாலில்†[6] முதல் प्रबन्धமாய் இவர் தம் வ்ருத்தாந் தங்களை முன்னிடுகையாலே 'திருவிருத்தம்' என்று

பேர்பெற்ற **प्रबन्ध**த்தின் முதற்பாட்டால் **पूर्व-उपकार-स्मृति**யை முன்னிட்டுக் கொண்டு **उत्तर-उपकार-अपेक्षै**யிலே **उपक्रमि**க்கிறுர்[7].

**பொய்ந் நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும்**
**அழுக்குடம்பும்**
**இந்நின்ற நீர்மை இனி யாமுருமை உயிரளிப்பான்**
**எந்நின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்! இமையோர்**
**தலைவா!**
**மெய்ந்நின்று கேட்டருளாய்* அடியேன் செய்யும்**
**விண்ணப்பமே.**

§10.1 பாசுரத்தின் பொழிப்புரை

**பொய்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்புமாவது**—ஸம்ஸார மூலமான **भ्रान्ति-ज्ञान**

1—பெருமை(மேன்மை)யும். 2—செய்ய வேண்டியதைச் செய்தவன், விரும்பியதைப் பெற்றவன். 3—ஜாமீன் கொடுத்தாலும். 4—வேண்டுகோள் இல்லாமலே. 5—உதவும் பிற காரணங்களோடு கூடின தொடர்பு, பண்பு இவற்றுலே. 6—இடத்தாலும் காலத்தாலும் அளவில்லாத. 7—தொடங்குகிறுர்.

† 1—**अशेषवृत्तिविशेष**ங்களையும்[1]. 2—புறப்பட்ட[1]. 3—குமாரனுக்கு[4]. 4. **स्वबुद्धि–अधीन**மாக[1]. 5—**सहकारि**......... **गुणविशेष**ங்களிலே[1]. 6—நாலிலும்[1].

*1. ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்திருந்தும்!
சாலப்பலநாள உகந்தோறு உயிர்கள் காப்பானே !*
கோலத்திருமாமகளோடு உன்னைக் கூடாதே!
சாலப்பலநாள் அடியேன் இன்னம் தளர்வேனே?

திருவாய். (6-9-3): அழகிற் சிறந்த பெரிய பிராட்டியாருடன் இவ்வுலகில் (விபவாவதாரத்தில்) பல இடங்களில் நடந்தும், நின்றும், பள்ளிகொண்டும், வீற்றிருந்தும் ஒவ்வொரு யுகத்திலும எல்லா ப்ராணிகளையும் காத்தருள்கின்றவனே ! உங்களுக்கே அடிமையான நான் பிராட்டியோடு கூடிய உன்னை உபாயமாகவும் உபேயமாகவும் கொண்டநுபவிக்காமல் இதற்கு மேலும் தளரக் கடவேனோ?

மும், அதடியாக வந்த प्रतिकूल-अनुष्ठानமும், அதடியாக வந்த रजस्तमः-प्रचुरமான प्राकृतदेहமும். இவை மற்றுமுள்ள ஹேயங்களுக்கெல்லாம் உபலக்ஷணம்[1]. இங்கே अनक्त-समुच्चयமும்[2](†1) கொள்ளவுமாம்[2]. 'பொய் நின்றஞானம்' என்றது नश्वरமாகையாலே[3] பொய் என்னலாம்படி†[2] நிற்கிற अभोग्यமான விஷயத்தில் करणायत्तमாய்ப்பிறக்கிற[4] भोग्यता-बुद्धिயாகவுமாம். अनादि-कालம் परमपुरुषार्थத்தை இழந்து, ஸம்ஸாரத்திலே அகப்பட்டுக் கிடந்த இதில் अनुतापம் தோற்றும்படி. இந்நின்ற நீர்மை—இப்படி நின்ற प्रकारத்தை; இனியாம் உறுமை—सर्वलोक-शरण्यனாய், शरणागत-वत्सलனை உன் திறத்தில் प्रतिबुद्धரான நாங்கள் இதற்குமேல் இப்प्रतिकूल-परंपरैகளை அடையாதபடி; 'யாம்' என்கிற இது 'परित्राणाय साधूनां' (C-9) என்கிற साधु-बहुत्वத்தைக் காட்டுகிறது. 'पशुर्मनुष्यः'*1 इत्यादिகளிற்படி संबन्धिகளையும் கூடக் காட்டுகிறதாகவுமாம். உயிரளிப்பான்—உனக்கு अनन्यार्ह-शेषமாய் வைத்து, असत्कल्पமாய்க் கிடந்த आत्मस्वरूपத்தை 'दासभूतोऽहं' என்கிறபடியை†[3] நித்யமாக அநுபவிக்கப் பண்ணுவான். எந்நின்ற யோனியுமாய் பிறந்தாய்—देव-तिर्यक्-मनुष्य-स्थावरங்கள் என்கிற எல்லாப் प्रकारத்தாலும் प्रमाण-सिद्धங்களாய் நின்ற[5] भूतजातங்கள் நாலிலும் அவற்றோடு सजातीयன் என்னலாம்படி ஸ்ரீஜந்மரஹஸ்யத்திற்படியே(C—9)सत्यமாய் ज्ञान-सङ्कोचादि-दोष-प्रसङ्ग-रहितமுமாய், नित्य-निर्दोष-शुद्ध-सत्वमय-दिव्यमङ्गल-विग्रह-परिणाम-आत्मकமுமாய், स्वेच्छामात्र-हेतुकமாய், कर्म-कृत-काल-नियम-रहितமாய், साधुपरित्राणादिमात्र प्रयोजनமாய், व्यूह-व्यूहान्तर-विभव-विभवान्तररूपமாயுள்ள अवतार-वर्गத்தாலே 'நிலைவரம்பில பல பிறப்பாய் ஒளிவரு முழுநலம்'*2 என்னும்படி பிறந்தாய். இமையோர் தலைவா—संबन्धம்†[4] ஒததிருக்கச் செய்தே, கர்ம வசத்

தாலே†[5] நாங்கள்†[6] இழந்துகிடக்க, நித்யஸூரிகள் **नित्यानुभव**ம் பண்ணும்படி ஸர்வஸமனான ஸர்வஸ்வாமியானவனே! மெய்—இப்படி **रक्षायोग्य**னான என்னுடைய படிகளும், **रक्षणोन्मुख**னான[6] உன்னுடைய படிகளும் **प्रमाण-सिद्ध**ங்களன்றோ? அவற்றில் ஒன்று **अप्रमाण**மாகிலன்றோ உனக்குக் கண்ணழிவு சொல்லலாவது

---

*1—(பிறவற்றுக்கும்) ஸூசகம். 2—சொல்லாததைச் சேர்த்துக் கொள்ளவுமாம். 3—அழியக் கூடியதாகையாலே. 4—இந்திரியங்கள் மூலமாகத் தோன்றுகிற. 5—ப்ரமாணங்களால் அறியப்படுவனவான. 6—காக்கத் தயாராயிருக்கிற.*

† 1—अनुक्त-समुच्चयம்[4]. 2—नश्वरமாக எண்ணலாம்படி[1]. 3—என்கிறபடியே नित्यदास्यத்தை[4]. 4—स्वस्वामिभाव-संबन्धம்[2]. 5—अनादिकर्मवशத்தாலே[2]. 6—நான்[1].

*1. पशुर्मनुष्यः पक्षी वा ये च वैष्णव-संश्रयाः ।
तेनैव ते प्रयास्यन्ति तद्विष्णोः परमं पदम् ॥

*சாண் ஸ்ம். (1-15): மிருகம், மனிதன், பறவை முதலானவர் வைஷ்ணவனை ஆச்ரயித்து அதனாலேயே பரமபதத்தை அடைகிறார்கள்.*

*2. *எளிவரும் இயல்வினன் நிலைவரம்பில பலபிறப்பாய்*
ஒளிவரு முழுநலம் முதலிலகேடில வீடாம்*
தெளிதரு நிலைமையது ஒழிவிலன் முழுவதும் இறையோன்*
அளிவரும் அருளினோடு அகத்தனன் புறத்தனன் அமைந்தே.*

*திருவாய். (1-3-2): (இன்ன வயிற்றில் தான் பிறப்பது என்கிற) வ்யவஸ்தையும், (இந்த வேலைகளைத்தான் செய்வது என்கிற) வ்யவஸ்தையும் இல்லாத (மீன் ஆமை முதலான) பல பிறவிகளை எடுக்கும் ஸௌலப்யத்தை ஸ்வபாவமாக உடையவன் எம்பெருமான். (இப்படிப் பிறக்கும் போது) எப்போதுமிருக்கிறதும் நன்கு பிரகாசிக்கிறதுமான பரிபூர்ணமான ஆநந்தமாகிய குணத்தையும், மோக்ஷமாகிய தன் விஷயமான அனுபவத்தைக் கொடுப்பதாகிய குணத்தையும் சிறிதும் விடாதவனாய் எல்லோரையும் நியமநம் பண்ணுகிறான். எல்லாவற்றையும் அளிக்கும கருணையோடு அடியவர்களுக்கு ஸுலபனாயும், மற்றவர்களுக்கு துர்லபனாயுமிருக்கிறான்.*

என்று தாத்பர்யம். நின்று கேட்டருளாய்—'அவாவறச் சூழ்ந்தாய்' (77[12]) என்னும்படி நான் அவாவற்றுவீடு பெறுமளவும் अन्यपरனாகாதே[1] अभिमुखனாய்க்கொண்டு[2] கேட்டருளாய். மெய் நின்று என்னவுமாம்; அப்போது நீ அவதரித்ததெல்லாம் सप्रयोजनமாம்படி உன் अवतार-विग्रहத்தோடே 'ஒரு நாள் காணவாராய்'*[1] என்று இருக்கிற எனக்கு प्रकाशित्து†[1] நின்று என்கிறது. அங்ஙனன்றிக்கே, 'அடியேனுள்ளான் உடலுள்ளான்'*[2] என்னும்படி என் அழுக்குடம்புக்குள்ளே ஜுகுப்ஸை பண்ணாதே அணியனாய் நின்று[3] என்னவுமாம். கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே—நீ

---

1—வேறொருவரிடத்தில் ஈடுபாடு (ஆஸக்தி) அற்றவனாய் 2—எதிரே நின்று. 3—அருகில் நின்று.

†1—प्रकाशिப்பித்து ¹ ப.

*1. தளர்ந்தும் முறிந்தும் சகடவசுரர் உடல்வேறா*
பிளந்துவீயத் திருக்காலாண்ட பெருமானே !*
கிளர்ந்து பிரமன் சிவனிந்திரன் விண்ணவர் சூழ*
விளங்க ஒருநாள் காணவாராய் விண்மீதே.

திருவாய். (6-9-4): சகடாஸுரனுடைய உடல் கட்டுக் குலைந்து ஒடிந்து இருகூறாகப் பிளந்து அழியும்படி உன் திருவடியைத் தூண்டியவன் நீ. (அண்டியவர்களின் விரோதிகளை மாய்க்கும் திருவடி உன் விரோதியை மாய்த்தது போலும்.) அத்தகு ஸ்வாமியே என் பாபங்களாகிற தடைகளைப் போக்கித் தன் திருமேனியில் ஸகல லோகங்களும் விளங்கும்படி வானத்திலே ஒரு நாள் ஸேவை ஸாதிக்க வேண்டும். ஸ்ரீ கஜேந்திராழ்வானுக்கு வானத்திலே ஸேவை ஸாதித்தது போல. எளியோனாகிய எனக்கு ஸேவை ஸாதிக்க வருவதைப் பார்த்து மகிழ்ந்து ஆச்சர்யப்பட்டுப் பிரமனும், சிவனும், இந்திரனும், மற்றும் பிறதேவர்களும் புடைசூழ்ந்த திருமேனியோடு காட்சி அளிக்க வேண்டும். ராமனைப்போன்று ஆயிரம் வருஷம் பூமியில் ஸேவை ஸாதிக்க வேண்டாம். வானத்திலே ஒருநாள் என் கண்களாரக் கண்டு களிக்கும்படி எழுந்தருளினால் போதும் என வேண்டுகிறார்.

மாயக்கூத்தா! வாமனா! வினையேன் கண்ணா! கண்கைகால்!
தூயசெய்யமலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதா!
சாயல் சாமத்திருமேனி தண்பாசடையா! தாமரைநீள்
வாசத்தடம் போல் வருவானே! ஒருநாள் காணவாராயே.

திருவாய். (8-5-1): ஆச்சர்யமான லீலைகளைச் செய்தவனே! வாமனனாய் அவதாரம் செய்தவனே! பாபியான என்னுடைய கண்ணனே! உனது திருக்கண்கள் கைகள் கால்கள் சுத்தமான சிவந்த தாமரைப் பூக்களாகவும், ஒளிவீசும் உனது திருப்பவளம் அத்தாமரை மொட்டாகவும், காந்தியுள்ள கறுத்த திருமேனி குளிர்ந்த தாமரை இலைகளாகவும் உடைய தாமரைகள் நிறைந்த விசாலமான பரிமளம் வீசும் தடாகம் நடந்து வருகிறதுபோல் வருமவனே! ஒரு நாளாவது நான் பார்க்கும்படி விண்ணிலே வர வேண்டும்.

*2. அடியேனுள்ளான் உடலுள்ளான் அண்டத்தகத்தான்
புறத்துள்ளான்*
படியேயிதுவென்றுரைக்கலாம்படியனல்லன் பரம்பரன்*
கடிசேர் நாற்றத்துள்ளாலை இன்பத்துன்பக்கழிநேர்மை*
ஒடியாவின்பப் பெருமையோன் உணர்விலும்பரொருவனே.

திருவாய். (8-8-2): இங்கு ஆழ்வார் எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களையும் திவ்யாத்மஸ்வரூபத்தையும், தாழ்ந்தவனோடு கலந்து பழகும் ஸௌசீல்யத்தையும் கண்டு வியக்கிறார். எம்பெருமான் கோடிக்கணக்கான அண்டங்களிலும், அண்டங்களிலுள்ள பொருள்களிலும், இவைகட்குப் புறத்தேயுள்ள பொருள்களிலும் அந்தர்யாமியாய் உள்ளவன். 'இதைப் போல இவன்' என்று ஒருவனுக்கு ஸமமானவன் எனச் சொல்லும்படி இராதவன். நின்ஸமன். எல்லாவற்றுக்கும் மேம்பட்டவன். ஸம்ஸாரிகள் தம் உடலாலும் புலன்களாலும் துய்க்கும் நறுமணம், அழகு, இன்னிசை, இன்சுவை, ஸ்பர்சம் காரணமாகப் பெறும் இன்பம் ஆகியவை துன்பம் கலந்தது. இவை அல்பமானதும் நிலையற்றதும் ஆகும். இவ்வாறின்றி எல்லையற்றதும் நிலையானதுமான பேரின்பத்தை உடையவன் எம்பெருமான். தன்னை த்யானிப்பவர்கட்கு அல்பஸுகத்தைக் கழித்து ப்ரஹ்மானந்தத்தை நல்குபவன். நித்யமுக்தர்களைக் காட்டிலும் மேலான ஜ்ஞானத்தை (ஸர்வஜ்ஞத்வத்தை) உடையவன். இத்தகு உயர்வைக் கண்டு தாஸன் ஒதுங்கினாலும் தன் அழகைக் காட்டி வசீகரித்து என்னுள் அந்தர்யாமியாய்ப் புகுந்துள்ளான். இதுமட்டும் அன்றி மிக மட்டமான என் உடலிலும் மறைந்துள்ளான் இங்கு அடியேன் என்றதால் ப்ரத்யக்த்வ, ஜ்ஞாநத்வ, ஆனந்தத்வாதிகளைவிட பரமனின்

மயர்வு அற மதி நலம்அருளுகையாலே **निरुपाधिक-दास्य**த்திலே **नित्य-प्रतिष्ठित - बुद्धि**யான நான் என்னாலே உன்னை இன் கவிபாட†[1] ஒருப்பட்ட **निरपेक्ष - स्वतन्त्र**னை உன்னாலே **प्रेरित**னாய்க் கொண்டு பண்ணுகிற **विज्ञापन-कैंकर्य**ங்களாகிற[1] நாலு ப்ரபந்தங்களையும்[2] திருச்செவி சாற்றி, **श्रुति - विषय**ங்களான[3] இத்தை 'தொண்டர்க்கு அமுது உண்ண'லாம்படி பண்ணி அருளவேண்டும் என்று திருவுள்ளமாம்†[2].

§10: 2 பாசுரத்தில் அநுஸந்திக்க வேண்டிய பொருள்கள்

இப்பாட்டில் **शुद्ध-अशुद्ध-रूप**ங்களான†[3] **अचित्**துக்களுடைய **भेद**மும், **चिदचित् भेद**மும், **बद्ध-मुक्त-नित्य-विभाग**த்தை உடையரான ஜீவர்களுடைய **अन्योन्य-भेद**மும், **जीव-ईश्वर-भेद**மும், **ईश्वर-ऐक्य**மும், **ज्ञान-ज्ञातृ-भेद**மும், **सदसत्-ज्ञान-भेद**மும், **सदसत्-अनुष्ठान-भेद**மும், **सिद्ध-साध्योपाय-भेद**மும், **पर-अवर-पुरुषार्थ-भेद**மும் கிடக்கிறபடி **यथास्थान**ம்[4] **शाब्द**மாகவும் **आर्थ**மாகவும் **अनुसन्धि**ப்பது.

§10: 3 பாசுரத்தில் ஷடர்த்த நிரூபணம்

இங்கு 'இமையோர் தலைவா' என்கிற இதிலே **शेषि**யாய் **प्राप्य**மான **ब्रह्मस्वरूप**மும், 'யாம்' என்கிற இதிலே **शेषभूत**னாய் **प्राप्ता**வான **प्रत्यगात्म-स्वरूप**மும், 'உயிர் அளிப்பான்' என்கிற இதிலே **निरुपाधिक-शेषवृत्ति-विशेष-रूप**மான **फलस्वरूप**மும், 'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும்' என்கிற இடத்திலே **शेषवृत्ति-विरोधि-स्वरूप**மும், 'கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்கிற இதிலே **विरोधि-निवर्तन-व्याज**மாய் **सोपाधिक**மான **शास्त्रीय-शेषवृत्ति-विशेष**மும், 'இமையோர் தலைவா'; 'அடியேன்' என்கிற இதிலே **प्राप्य**மான **ब्रह्मस्वरूप**ம் முதலான **अर्थ - पञ्चक**த்தினுடைய (B—10)

**अनुसन्धान**த்திற்கு†[4] அஞ்சுருவாணியான **संबन्धविशेष**மும் சுருங்க **अनुसन्धेय**ம். ஆகையால் மேல் அருளிச் செய்யுமதெல்லாம் இதின் விஸ்தாரமாகிறது.

§10: 4 பாசுரத்தின் முக்கிய கருத்து

**पुरूषोत्तमविद्ये**யில்(B-11) சொன்ன **सर्वाधिक्य**த்தை உடையனான **श्रियःपति, जगदुपकृतिमर्त्यं,**'*[1] **'जगतां**

---

*சொத்து என்கிற தாஸத்வமே ஜீவனுக்கு ஸ்வரூப நிரூபகதர்மம் எனக்கருதி தனது தாழ்மையை அனுபவிக்கிறார் ஆழ்வார்.* □

*1—விண்ணப்பம் செய்தலாகிற கைங்கர்யங்களாகிற. 2—திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி திருவாய் மொழி ஆகிய நான்கு ப்ரபந்தங்களையும். 3—திருச்செவிசாற்றி யருளிய. 4—அந்தநத இடங்களுக்கு ஏற்ப.*

† 1—என் சொல்லால் 'யான் சொன்ன இன்கவி' என்பித்தவனைக் கவிபாட[2]. 2—திருவுள்ளம்[2]. 3—**शुद्ध-अशुद्ध-स्वरूप**ங்களான[1]. 4—**अनुसन्धान**த்திற்கும்[1].

*1. सकलभुवनसूतिर्मूर्तिरल्पाल्पसूक्ष्मा
विदितसकलवेद्यैर्ज्ञायते यस्य नान्यैः ।
तमजमकृतमीशं शाश्वतं स्वेच्छयैनं
जगदुपकृतिमर्त्यं को विजेतुं समर्थः ॥

*வி. பு. (5-30-81): அறிய வேண்டியவை அனைத்தையும் நன்கு கற்றவர்களால்தான் எம்பெருமானுடைய உலகனைத்தும் தோன்றுவதற்குக் காரணமாயும் மிகமிக நுண்ணியதாயும் இருக்கிற ஸ்வரூபம் அறியத்தக்கதேயொழிய பிறரால் அறிய முடியாதது. பிறப்பின்றி நித்யமாயும், இயற்கையான ஐச்வர்யத்தை உடையவரும், உலகினருக்கு உதவுவதின் பொருட்டு மனிதனாக தன் ஸங்கல்பத்தினாலே அவதரித்தவருமான அத்தகைய அவரை வெல்வதற்கு எவனுக்குத் திறன் உண்டு. (இந்திரன் இந்திராணியிடம் கூறுவதாக பராசரர் சிஷ்யனுக்கு உபதேசித்தது)*

उपकाराय' [1] इत्यादिகளிற் சொன்ன தன்னுடைய **दिव्य-अवतारप्रकार**த்தை '**बहूनि मे व्यतीतानि**' (C-9) என்று தொடங்கி தான் அறிவித்தபடியே அறிந்தார்க்கெல்லாம் **अधिकार-अनुगुण-उपाय-पूर्ति**யைப் பண்ணிக் கொடுத்து, இத் **देह**ம் விட்டால் இனி ஒரு பிறவி வேண்டாதபடி **स्वप्राप्ति**யைக் கொடுக்கும் என்கிற இவ்வுபகாரம் இப்பாட்டுக்கு **प्रधान-तात्पर्य** விஷயமாகிறது.

**अयमप्यपरो महोपकारः कलिदोषाविल-चेतसां नराणाम् ।**
**करुणाजलधिर्यदेव देवः प्रथयामास मया निजोपकारान् ॥**[2]

தான் தனக்குத் தன்னாலே தோன்றி, தன்னோர்
ஒளியணைக்கும்†[1] குணத்தாலும் தன்னைக்கண்டு*
தான் தனக்கென்றறியாத தன் குணத்தைத்
தன் குணத்தால் தானிறையில் தானே கூட்டி*
ஊன் மருத்துப்†[2] புலன் மனம் மான் ஆங்காரங்கள்
ஒரு மூலப்பிரகிருதியன்றி நின்ற*
நான் தனக்குத் நான் தனக்கென்று இசைவு தந்த
நாரணனை நான்மறையால் நான் கண்டேனே. (29)

கழியாத கருவினையில் படிந்த நம்மைக்
காலம் இது என்றொருகால் காவல்செய்து*
பழியாத நல்வினையில் படிந்தார் தாளில்
பணிவித்துப் பாசங்கள் அடைய நீக்கி*
சுழியாத செவ்வழியில் துணைவரோடே
தொலையாத பேரின்பம் தர மேல் ஏற்றி*
அழியாத அருளாழிப் பெருமான் செய்யும்
அந்தமிலா உதவியெல்லாம் அளப்பார் ஆரே. (30)

**इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्र-स्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु उपकारसंग्रहः समाप्तः**

**॥ श्रीमते निगमान्त-महादेशिकाय नमः ॥**

† 1—ஒளியணைக்கும்[5]. 2—மறித்து[5]. 3—'नियमाधिकारः नाम' என்று அதிகம்[1].

*1. जगतामुपकाराय न सा कर्मनिमित्तजा ।
चेष्टा तस्याप्रमेयस्य व्यापिन्यव्याहतात्मिका ॥

வி. பு. (6-7-7): நம்மால் அறிவதற்கு அரியனான அவ்வெம் பெருமானுடைய (லீலாரூபமான) செய்கை வினையின் காரணமாய்த் தோன்றியதன்று; உலகின் நன்மைக்காகவே தோன்றியதாம். மேலும் ப்ருந்தாவனம், கோகுலம், காளீயமடு முதலிய இடங்களில் அச்செய்கை பரவியிருந்தது. ராவணன், சிசுபாலன், பாணன், இந்திரன், ருத்ரன் முதலியோரால் அச்செய்கை தடுக்க முடியாதது.

*2. करुणा-जलधिः—கருணைக் கடலான; एष देवः—இந்த பகவான்; निजोपकारान्—தான் செய்தருளிய உபகார வகைகளை; कलिदोषाविलचेतसां—கலியின் கொடுமையினால் கெடுக்கப்பட்ட மனத்தினை உடைய மனிதர்களுக்காக; मया—என்னைக் கொண்டு; प्रथयामास यत्—வெளியிட்டார் என்பது எதுவோ; अय अपि—இதுவும்; अपरः—மற்றொரு; महोपकारः—பெரிய உபகாரமாகும்.

(29) தான்—ஜீவாத்மாவாகிய தான், தனக்குத் தன்னாலே தோன்றி—தனக்காகத் தானே ('நான' என்று) தோன்றி, தன் ஓர் ஒளி அணைக்கும் குணத்தாலும்—தன்னுடைய ஒரு ப்ரகாசம் போன்ற தர்மபூதஜ்ஞாநத்தாலும், தன்னைக் கண்டு—ஜீவாத்மாவாகிய தன்னை அறிந்து, தான் தனக்கு என்று அறியாத—(அசேதநமாதலால்) தான் என்றும் தனக்கு என்றும் அறிவில்லாத, தன் குணத்தை—தர்மபூத ஜ்ஞாநத்தை, தன் குணத்தால்—தனக்குக் கிடைத்துள்ள தத்துவ ஜ்ஞாநத்தால், தான் இறையில தானே கூட்டி—தானே ஸர்வஸ்வாமியான எம்பெருமான் விஷயத்திலேயே செலுத்தி, ஊன்—மாம்ஸமயமான சரீரம், மருத்து—ப்ராணவாயுக்கள், புலன்—இந்த்ரியங்கள், மனம்—மனது, மான்—மஹான் என்னும் தத்துவம், ஆங்காரங்கள—அஹங்காரமென்னும் தத்துவம், ஒரு மூலப் பிரகிருதி—தனியான மூலப்ரக்ருதி, அன்றி நின்ற—ஆகிய அசேதநங்களைக்காட்டிலும் வேறுபட்டு நிற்கின்ற, நான்—ஜீவாத்மாவாகிய நான், தனக்கு—ஸர்வேசுவரனாகிய தனக்கு (அடியன்), தான் தனக்கு என்று—பகவானாகிய தானே தனக்கு (ஸ்வாமி)

என்று, இசைவு தந்த—(நான்) அங்கீகரிக்கும்படி செய்த நாரணனை—நாராயணனை, நான்மறையால்—நான்கு வேதத்தால், நான் கண்டேன்—(ஒருவாறு) நான் அறிந்தேன்.

(30) கழியாத கரு வினையில்—நீங்காத கர்ப்பவாஸத்தைத் தரும் கர்மங்களில், படிந்த நம்மை—அழுந்திக்கிடக்கின்ற நம்மை, இது காலம் என்று—இதுவே தக்க ஸமயமென்று (நினைத்து), ஒருகால் காவல்செய்து—(நம்முடைய பாக்யம் பக்வமான) ஒரு ஸமயத்தில் ரக்ஷிக்கமுற்பட்டு, பழியாத நல் வினையில்—பழிக்கப்படாத (குற்றமற்ற) நல்ல கார்யமாகிய ப்ரபத்திமார்க்கத்தில், படிந்தார் தாளில் பணிவித்து—ஈடுபட்டுள்ள ஆசார்யர்களின் திருவடிகளில் (நம்மை) வணங்கச் செய்து, பாசங்கள் அடைய நீக்கி—கர்மபாசங்கள் முழுதையும் போக்கி, தொலையாத பேரின்பம் தர—அழிவில்லாத பெரிய மோக்ஷ ஸுகத்தைக் கொடுப்பதற்காக, சுழியாத செவ்வழியில்—திரும்புதல் இல்லாத சிறந்த அர்ச்சிராதி மார்க்கத்தில், துணைவரோடே மேல் ஏற்றி—(ஆதிவாஹிகர்களாகிய) துணைவரோடு ஸ்ரீ வைகுண்டத்திற்கு ஏற்றி, அழியாத அருள் ஆழிப் பெருமான் செய்யும்—அழியாதவனும் கருணைக் கடலுமாகிய எம்பெருமான் (சேதநனுக்குச்) செய்கின்ற, அந்தம் இலா உதவி எல்லாம்—எல்லையில்லாத உபகாரங்களை எல்லாம், அளப்பார் ஆர் ?—அளவிட்டறிபவர் யார் ? (ஒருவருமில்லை யென்றபடி.)

---



श्री:

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# ७. सार संग्रहः

# 7. ஸார ஸங்க்ரஹம்*

[முமுக்ஷுக்கள் அறிய வேண்டியவற்றின் ஸாரார்த்தங்களைச் சுருக்கிக் கூறும் ரஹஸ்யம்]

[விஷயச்சுருக்கம்: கைவிட வேண்டியவற்றின் பிரிவு (அற்ப பலனுக்காக பிற தெய்வங்களைப் பற்றுமவர் பரமைகாந்திகளுக்கு விலக்க உரியராதல்; மற்ற பலனுக்காக எம்பெருமானையே பற்றுமவர் நிலை; லௌகிக ஸுகங்களை விரும்பும் ப்ரபந்நரின் நிலை)—கைக்கொள்ள வேண்டிவற்றின் பிரிவு—சேதநன் நிறைவு பெறும் முறை—மூன்று ப்ரமாணங்கள், மூன்று ரஹஸ்யங்கள், சித்து-அசித்து-ஈசுவரன் என்னும் மூன்று தத்துவங்கள், ப்ரக்ருதியின் குணங்கள், ரக்ஷகனான எம்பெருமானுடைய குணங்கள், எம்பெருமானுக்கும் ஜீவனுக்கும் உள்ள ஸம்பந்தம், விரோதிகளான அம்சங்கள், பக்தி-ப்ரபத்தியாகிய உபாயங்கள், புருஷார்த்தம் என்னும் பத்து பொருள்களைப் பற்றிய விவேகத்தால் வரும் விசேஷ பலன்கள்—விவேகபலனின் சுருக்கு—எப்பொழுதும் அநுஸந்திக்க வேண்டியதின் சுருக்கு—ரஹஸ்யத்ரயாநுஸந்தான பலன்—சாஸ்த்ரப் பொருளின் சுருக்கு-ஆசார்யன்-ஈசுவரன்-சிஷ்யன் இவர்களின் கடமைகள்—எம்பெருமானுக்கே அடியன் என்ற எண்ணத்தின் பலன்—ஜீவனுடைய ஜ்ஞாந சக்திக்கும் ப்ரவ்ருத்திசக்திக்கும் சிறந்த பலன்]

---

*ரஹஸ்யங்களில் 26-வது: அம்ருதாஸ்வாதிநீ ரஹஸ்யங்களில் 7-வது

अस्मद्गुरु-परमगुरून् यतिवर-पूर्णौ सयामुनं रामम् ।
पद्माक्ष-नाथ शठजित् सेनेश-रमा- रमापतीन् वन्दे ॥*[1]

भूत-सरो-वेतालान् कुलशेखर-विष्णुचित्त-भक्तिधनान् ।
भक्ताङ्घ्रिरेणु-शठजित्-कलिरिपु-मुनिवाहनानपि भजामि ॥*[2]

प्राचीसन्ध्या काचिदन्तर्निशायाः
प्रज्ञा दृष्टेरञ्जनश्रीरपूर्वा ।
वक्त्री वेदान् भातु मे वाजिवक्त्रा
वागीशाख्या वासुदेवस्य मूर्तिः ॥*[3] †[1]

§1. விலக்க வேண்டியவற்றின் பிரிவு

'धर्मशास्त्र-रथारूढाः वेदखड्गधरा द्विजाः ।
क्रीडार्थमपि यत् ब्रूयुः स धर्मः परमो मतः ॥*[4]

इत्यादिகளிற்படியே 'சொல்லுமவிடு சுருதியாம்(†[2])'*[5] படி திருந்தின†[3] सदाचार्य उपदेशத்தாலே अज्ञत्व-पाषण्डत्व-आदि-अवस्थै[1] கழிந்து ஸர்வேச்வரனைப் பற்றினாலும், अनादिவாஸனையாலுண்டான क्षुद्र-प्रयोजन-सङ्गத்தாலே[2] 'न चान्य-देवता भक्तिं आपद्यपि समाचरेत'*[6] என்கிற நியமத்

1—அறியாமை, வேதத்தை ஏற்காமை முதலிய நிலை. 2—தாழ்ந்த பயன்களில் விருப்பதாலே.

1—இந்த சுலோகம் இல்லை[4]. 2—சுருதிகளாம்[1]. 3—திருத்தின[1].

1. अस्मद्गुरु-परमगुरून्—நம்முடைய ஆசார்யனையும் பரமகுருக்களையும்; यतिवर - पूर्णौ—ஸ்ரீ பாஷ்யகாரரையும், பெரிய நம்பியையும்; सयामुनं रामं—யாமுநாசார்யருடன் கூடிய மணக்கால் நம்பியையும்; पद्माक्ष—உய்யக் கொண்டார்; नाथ—ஸ்ரீமந் நாதமுனி; शठजित्—நம்மாழ்வார்; सेनेश—விஷ்வக்ஸேநர்; रमा—பெரிய பிராட்டியார்; रमापतीन्——ச்ரிய:பதியான நாராயணன் ஆகிய இவர்களையும்; वन्दे—ஸேவிக்கிறேன்.

[1]2. भूत - सरो - वेतालान्—பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்; कुलशेख—குலசேகராழ்வார்; विष्णुचित्त—பெரியாழ்வார்; भक्तिधनान्—திருமழிசையாழ்வார் भक्तांघ्रिरेणु—தொண்டரடிப்பொடியாழ்வார்; शठजित्—நம்மாழ்வார்; कलिरिपु—திருமங்கையாழ்வார்; मुनिवाहनान् अपि—திருப்பாணாழ்வார் என்ற இவர்களையும்; भजामि—ஸேவிக்கிறேன்.

*3. अन्तर्निशायाः—அஜ்ஞானமென்னும் உள் இரவுக்கு; काचित्—அற்புதமான; प्राची - सन्ध्या—கிழக்கு விடிவுக் காலமாய்; प्रज्ञा - दृष्टेः—ஜ்ஞானக் கண்ணுக்கு; अपूर्व—ஒப்பற்ற; अञ्जन - श्रीः—வஸ்துக்களைக் காட்டும் மையாய்; वेदान्—வேதங்களை; वक्त्री உபதேசிக்கின்றதாய்; वाक् - ईश - आख्य—கல்விக் கடவுள் என்று வழங்குமதாய்; वाजि - वक्त्रा—குதிரை போன்ற முகத்தை உடையதான; वासुदेवस्य—பரவாஸுதேவனுடைய; मूर्तिः—திருமேனி; मे—எனக்கு; भातु—காட்சி தரவேண்டும்.

*4. போதாயனக்ருஹ்ய. (14-17): தர்ம சாஸ்தரமாகிய தேரில் அமர்நது, வேதம் எனனும் கத்தியைக் கையில பிடிதது நிற்கும அந்தணர்கள் விளையாட்டாகவும எதைச் சொன்னாலும அதுவே சிறந்த தர்மமாகக் கருதப்பட்டது.

*5. அல்லி மலர்ப்பாவைக்கனபரடிக்கன்பர்
சொல்லும் அவிடு சுருதியாம்*—நலல
படியாம் மனுநூற்கவர் சரிதை*
செடியார் வினைத்தொகைக்குத் தீ.

ஞானஸாரம் (40): லக்ஷ்மீகாந்தனை எம்பெருமானின் அடியார்களான பாகவதர்கள் சொல்லும் பரிஹாஸ வார்த்தையும் வேதம் போல் கொள்ளத் தக்கதாகும். அவர்களின நடத்தைகள் மனுஸ்ம்ருதியில் கூறியபடி நல்லனவாம். அவர்களின் திருக்கண பார்வை (பாகவத கடாக்ஷம) நமது செறிந்த வினைதிரளை சுட்டெரிக்கும் தீயாம். (அருளாளப் பெருமாள் எம்பெருமானார் அருளியது.)

*6. (?): ஆபத்து வநத காலத்திலும் எம்பெருமானைத் தவிர வேறு தேவர்கள் விஷயத்தில் பக்தியைச் செய்யக்கூடாது.

தைக் கடந்து, "देवान् ऋषीन् पितॄन् भगवदात्मकान् ध्यात्वा"*1 என்கிற अवर्जनीयங்களில்[1] अधिकமான देवतान्तर-भजनத் தாலே सङ्कीर्णன்[2] ஆமாகில் 'மற்றுமோர் தெய்வம் உளது என்றிருப்பாரோடு உற்றிலேன்'*2 என்று இருக்கும் परमैकान्तिகளுக்கு[3] परित्याज्यனும்.

§1.2 மற்ற பலனுக்காக எம்பெருமானையே பற்றுமவர் நிலை

प्रयोजनान्तर-संगம் உண்டானாலும், अम्बरीषादिகளைப் (B-12) போலே 'உன்னலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்' (63*3) என்று देवतान्तरங்களை உபே க்ஷித்து[4], 'चतुर्विधा भजन्ते मां'*3 என்கிறபடியே सर्वेश्व-रனையே பற்றுமாகில் 'उदाराः सर्व एवैते'*4 என்று கொண் டாடலாம் படியாம்.

§1.3 லௌகிக ஸுகங்களை விரும்பும் ப்ரபந்நரின் நிலை

प्रयोजनान्तरங்கள் தம்மில் 'இருள் தரு மாஞாலத் துள் இனிப் பிறவி யான் வேண்டேன்'*5 என்கிற

1—விட முடியாதவைகளில். 2—கலப்படமானவன். 3—எம் பெருமான் ஒருவனையே சாதனமாயும் பயனாயும் கருதியிருப் பவர். 4—விலக்கி.

*1. ஸ்ரீ பாஷ்யகாரர் நித்யம்: (ப்ரதிதினமும் செய்யப்படுகிற தர்ப்பணுதிகளில்) தேவர்களையும், ரிஷிகளையும், பித்ருக்களையும் எம்பெருமானை அந்தர்யாமியாகவுடையராகத் தியானித்துத் தர்ப்பணம் செய்து.

*2. மற்றும் ஓர் தெய்வம் உளதென்று இருப்பாரோடு
உற்றிலேன்* உற்றதும் உன்னடியார்க்கடிமை*
மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்தும்
கற்று நான் கண்ணபுரத்துறையம்மானே !

பெரியதிரு. (8-10-3): திருக்கண்ணபுரத்தில் நித்யவாஸம் செய்யும் எம்பெருமானே ! உன்னைக்காட்டிலும் வேறொரு தெய்வம் ஆச்ரயிக்க உரியதாக உண்டு என்று நினைத்திருப்பவர் களோடு சேரமாட்டேன். உனது திருவஷ்டாக்ஷர மந்திரமானது

அறியவேண்டிய எல்லாப் பொருள்களையும் சொன்னாலும், அத்திருமந்திரததை அப்யஸித்து நான் தெரிந்து கொண்ட பொருள் உன் அடியார்க்கு அடிமை (பாகவத சேஷத்வம்) என்பதேயாகும்).

*.3 चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥

கீதை. (7-16): (i) பரதவம்ச ச்ரேஷ்டனே! அர்ஜுந! ஐச்வர்யத்தையிழந்து அது மறுபடியும் கிடைக்கவேண்டும் என்று வருத்தப்படுகிறவன், (ii) ப்ரக்ருதியுடன் கலவாத தன் ஆத்ம ஸ்வரூபத்தைக் கண்டு அநுபவிக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறவன், (iii) புதிதாய் ஐச்வர்யத்தை வேண்டுகிறவன், (iv) பகவானுடன் கூடவே எப்போதுமிருக்கவேண்டுமென்று விரும்பி அவனையே அடையவேண்டியவனாக எண்ணி அவனிடத்திலேயே பக்தியுள்ளவன்—என்ற நால்வகைப்படும் ஸுக்ருத்துக்கள் என்னை பஜிக்கிறார்கள்.

*4. उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थित स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥

கீதை (7-18): (என்னையே உபாஸிக்கும் ஆர்த்தன், ஜிஜ்ஞாஸு, அர்த்தார்த்தி, ஜ்ஞாநி என்ற) இவர்கள் அனைவருமே "கண்ணன் எதையும் அளிபபவன்" என்னும் புகழை அளிப்பதால் வள்ளல்களாவர். இவர்களுள் ஜ்ஞாநியோவென்றால் எனக்கு அந்தர்யாமியே. இது என் கொள்கை. ஏனெனில அவன் எப்பொழுதும் என்னுடனேயே சேர்ந்திருக்கவேண்டும் என்ற மனத்துடன் உபாயமான என்னையே பரம ப்ராப்யமாகவும் உறுதியாகப் பற்றி உள்ளானே.

*5 அருள் பெறுவார் அடியார்தம் அடியனேற்கு* ஆழியான்
அருள்தருவான அமைகின்றான அது நமது விதிவகையே*
இருள் தருமா ஞாலத்துள் இனிப்பிறவி யான வேண்டேன்*
மருளொழி நீ மடநெஞ்சே! வாட்டாற்றான்டி வணங்கே.

திருவாய். (10-6-1): எம்பெருமானுடைய அருளைப் பூர்ணமாக பெற்றுத் திகழும் பரமைகாந்திகளுக்கு தாஸனான எனக்குப் பூர்ணமான அருளைப் பொழிய திருவாழியை ஏந்திய எம்பெருமான் திருவுள்ளம் கொண்டிருக்கிறான். அதுவும் நான் சொன்னபடியே செய்யத் திருவுள்ளம் கொண்டிருக்கிறான். எனவே அஜ்ஞாநததை

படியே जन्मान्तर-भोग्य-स्वर्गादिகளை उपेक्षித்து, प्रारब्ध-देहத்திற்குள்ளே உண்டாகும போகங்களைப்பற்ற भगवद्धर्मங்களில் प्रवर्तिக்குமவன் परम-फलத்திற்கு[1] विघ्नம் பண்ணிக் கொண்டிலனுகிலும் இங்குற்ற भगवदनुभवरसத்திற்கு विच्छेदம்[2] பண்ணிக் கொண்டானும்.

§2. ஏற்றுக்கொள்ளவும் விலக்கவும் வேண்டியவற்றின் பிரிவு

இக் करणत्रयத்திலும், இவற்ருல்வரும் व्यापारत्रयத்திலும், करणियானா[3] தன் பக்கலிலும் பண்ணவேண்டும் प्रतिपत्ति-विशेषம்[4] மூன்று உண்டு. அவை யாவன—(i) இவற்றினுடைய स्वरूपादिகள் परशेषங்கள் என்றும், (ii) पराधीनங்கள்என்றும், (iii) இவற்ருல்வரும் प्रयोजनங்கள் परार्थங்கள் என்றும். இப்प्रतिपत्तिகளோடேசேர்ந்த प्रवृत्ति-निवृत्तिகளை உடையவனுக்கு पूर्व-उत्तर-मध्यम-अवस्थेகளில்[5] बुद्धि-पूर्वकமாக अकृत्य-करणादिகள் புகுருகைக்கு अवकाशமில்லை. उपाय-विशेषத்தாலே पूर्वाघविनाशமும் उत्तराघ अश्लेषமும்†[1]. यथा-मनोरथம் प्रारब्ध-विशेषமும் கழிய निवृत्त प्रतिबन्धकனுகையாலே[6] स्वतःप्राप्तமான सूरिभोगத்திற்கு भोक्ताவாம். இது त्याज्य-उपादेय-विभागம்.

§3 சேதநன் நிறைவு பெறும் முறை

भरन्यासம் பண்ணின முமுக்ஷுவுக்கு मोक्षार्थமாகக் कर्तव्यशेषம் இல்லாமையாலே குறையில்லை; இவனுக்கு भोगपूर्तिவாராமையாலே குறையுண்டு. भरस्वीकारம் பண்ணின शरण्यனுக்கு ஸர்வகாலத்திலும் भोगसङ्कोचம் இல்லாமையாலே குறையில்லை; இவனுக்கு आश्रित-रक्षणத்தில் தன்மை பெறுத்துமளவும் कृत्य-शेष முண்டாகையாலே குறையுண்டு.

இஜ்ஜீவனுக்கு पूर्वावस्थैயிலே†[2] अज्ञानம் अधिकारமாய், अपवर्ग-विरुद्धம்†[3] उपायமாய், அதற்குத் துணையான

व्यापारங்கள்†[4] वृत्तियாய் प्रकृति-गुण-अनुभवம் भोगமாய்ப் போந்தது. இப்போது सदाचार्य-कटाक्षத்தாலே तत्त्वज्ञानம் अधिकारமாய், संसार-विरुद्धம் உபாயமாய், आज्ञा-अनुज्ञै களால்†[5] உண்டான भगवत्-कैंकर्यம் वृत्तियாய், भगवत्-गुण-अनुभवம் भोगமாய்ப் போருகிறதாகையாலே நமக்கு என்ன குறையுண்டு என்னவுமாம். 'அடைய அருளாய்'*[1] என்னவேண்டும் अवस्थैயாகையாலே குறையுண்டு என்னவுமாம்.

---

மேன்மேலும் வளர்க்கும் இந்தப் பரந்த உலகில் மீண்டும் பிறப்பதை நான் வேண்டேன். ஸாதுவான என் மனமே! நீயும் இந்த ஸம்ஸாரத்தை விட்டு திருவாட்டாற்றில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானுடைய திருவடிகளையே ஸேவித்து அநுபவி.

□

1—உயர்ந்த பயனுக்கு (மோக்ஷத்திற்கு). 2—இடைவெளி (பிரிவு). 3—கரணங்(இந்திரியங்)களை உடைய. 4—குறிப்பிட்ட அறிவு (தீர்மானம்). 5—(ப்ரபத்திக்கு) முன்னும் பின்னும் இடையிலுமுள்ள நிலைகளில். 6—தடை நீங்கியவன் ஆகையாலே.

†1—उत्तराघविश्लेषமும்[1]. 2—सर्वावस्थैயிலும்[4]. 3—अपवर्गத்திற்கு विरुद्धமாய்[4]. 4—ஆகாரங்கள்[4]. 5—அதற்குத் துணையான आज्ञा-अनुज्ञै களால்[4].

*1. படைநின்ற பைந்தாமரையோடு அணி நீலம்
மடை நின்று அலரும் வயலாலி மணாளா!
இடையன்எறிந்த மரமே ஒத்திராமே
அடைய அருளாய் எனக்கு உன்தனருளே.

பெரியதிரு. (11-8-6): உழுபடையாகிய கலப்பையைக்-கொண்டு உழும்போது அதில் அகப்பட்டு அழியாமல் தப்பி ஒதுங்கி நின்ற பசுமையான தாமரைக் கொடிகளும், அழகிய நீலோத்பலக் கொடிகளும் (பின்பு களையாகப் பறித்தெறியப்பட்டு அங்ஙனம் எறியப்பட்ட இடமான) நீர்பாயும் மடையிலே கிடந்து மலரப்பெற்ற வயல்களையுடைய திருவாலி என்னும் திருநகரியில் எழுந்தருளியிருக்கிற மணவாளன் என்னும் திருநாமமுடைய எம்பெருமானே! (ஆடு மாடுகள் எட்டித் தழை மேயலாம் படி)

கீழ் उक्तமான இரண்டு आकारங்களாலுமிறே முக்தனுமளவும் இவனுககுப் प्रीति-विषादங்கள்[1] நடக்கிறது. ஆகையாலே शरण्यனுடைய कर्तव्य-शेषத்தில் குறை தீரும்போது, शरणागतனுடைய भोगத்தில் குறையும் தீருகையாலே, இப்படிக் குறையொன்றும் இல்லாத கோவிந்த'னாலே अनादियான குறை தீர்ந்தவனுக்கு மேல் अनन्तமான நிறைவேயாயிருக்கும். இது पूर्णत्व-प्रकारம்.

### §4 பதது வித விவேகமும் அவற்றால் நடுவே வரும் விசேஷ பலன்களும்

### §4.1 பத்துவித விவேகம்

सत्त्व-उन्मेष-हेतुவான[2] सर्वेश्वरனுடைய कटाक्षविशेषத்தாலே उपशान्त-कल्मषனாய்[3] இருப்பானொரு अधिकारिக்கு (i) प्रमाणत्रय-विवेकத்திற்கும்[4], (ii) प्रमाणसारமான रहस्यत्रय-विवेकத்திற்கும், (iii) இவற்றில் தோற்றின पर-अवर-तत्त्व-विवेकத்திற்கும, (iv) இத்தத்த்வங்களில் प्रकृतिगुण-विवेकத்திற்கும், (v) आत्मगुण-विवेकத்திற்கும், (vi) शरण्य-गुण - विवेकத்திற்கும், (vii) शरण्य-संबन्ध-विवेकத்திற்கும், (viii) विरोधि-विवेकத்திற்கும், (ix) उपाय-विवेकத்திற்கும், (x) पुरुषार्थ - विवेकத்திற்கும் தனித்தனியாயுண்டான अवान्तर-फलविशेषம்[5] சொல்லுகிறோம்.

### §4.2.1 மூன்று ப்ரமாணங்களைப் பற்றிய தெளிவால் வரும் பலன்

(1) இதில் முற்பட 'प्रत्यक्षं अनुमानं च'*[1] इत्यादिகளிற் சொன்ன प्रमाण-त्रय-विवेकத்திற்குப் फलம் — सात्त्विक-संभाषणादिகள் அடியாக முன்புள்ள सामान्य-ज्ञानத்தையும் அபஹரிககும்†[1] बाह्य-कुदृष्टिகளுடன்[6] சேராதே, उपायान्तरத்திலும் அதன் कर्तव्यशेषத்திலும் प्रयोजनान्तरத்

திலும் துவக்கற்ற †[2] अधिकार-उपाय-फल-पूर्तियுண்டாம் படி[7] ज्ञानामृत-वर्षियान सदाचार्यன் பக்கலில் चातक-वृत्ति யாகை.

§4.2.2 ஆசார்யனது உபதேசத்தால் மூன்று ரஹஸ்யங்களைப் பற்றி வரும் தெளிவுக்குப் பலன்

(ii) அவனடியாக உண்டான रहस्य-त्रय-विवेकத் திற்குப் फलம்—அணுவாய் अस्वतन्त्रமான स्व-स्वरूपம்

---

இடையன் (கத்தியால் கிளைகளை) வெட்டிச் சாய்க்கப்பெற்ற மரம் போல ஒரு புறம் உலராதபடி, நான் உன்னை அடைந்து முற்றிலும் அநுபவிக்கும்படி எளியவனுன அடியேனுக்கு உனது க்ருபையைச் செய்தருளவேண்டும். (குறிப்பு:—ஆடு மாடுகள் எட்டித் தழை மேயலாம்படி இடையர்கள் மரங்களின் கிளைகளை வாளால் வெட்டுவர்; கிளை முழுவதும் துண்டித்து விழாமல் முறிந்து தொங்கும்படியே வெட்டுவர். மரம் ஒரு சார் பசுமையாய் ஒரு சார் உலர்ந்தும் கிடக்கும். அதுபோல நான் ஜ்ஞாநலாபத் தாலுண்டான மகிழ்ச்சியைப் பெற்றதனேடு, வீடுபேறு கிடைக்கப் பெருமையால் உண்டான வாட்டத்தையும் அடைந்திராதபடி அருள் செய்யவேண்டும் என்கிருர் ஆழ்வார்.) □

1—துக்கமும். 2—ஸத்துவகுணத்தின் எழுச்சிக்கு (ப்ரகாசத் திற்கு) காரணமான. 3—தோஷங்கள் நீங்கினவனுய். 4—ப்ரத் யக்ஷம், அநுமானம், சப்தம் என்கிற மூன்று ப்ரமாணங்களைப் பற்றிய பகுத்தறிவிற்கும். 5–இடையிலே வரும் பயன்கள். 6—பாஹ்யர் = வேதத்தை ஒப்புக்கொள்ளாதவர்; குத்ருஷ்டிகள் = வேதத்தை ஒப்புக்கொண்டும் அதற்கு தவருன பொருள் கூறுபவர். 7—ஒன்றைச் செய்வதற்கு வேண்டிய தகுதி, வழி, அதனுல் வரும் பயன் இவை நிறைவு அடையும்படி.

†1—பரிஹரிக்கும்[1]. 2—துவக்கற்று[4].

*1. प्रत्यक्षं च अनुमानं च शास्त्रञ्च विविधाऽऽगमम् ।
त्रयं सुविदितं कार्यं धर्मशुद्धिमभीप्सता ॥

மநு. (12-105): ப்ரத்யக்ஷத்தையும், அநுமானத்தையும், தர்மத்திற்கு ஸாதனமான ஆகமத்தை (சாஸ்த்ரத்தை)யும் அதன் மூலமான ஸ்ம்ருத்யாதிகளையும் தர்மஸூக்ஷ்மத்தை அறிய விரும்புமவன் நன்கு அறியவேண்டும்.

विभुவாய், स्वतन्त्रமான परस्वरूपத்திற்கு शेषமாய், अल्पज्ञ ஞய், अल्प-शक्तिயான தன்னுடைய उपायस्वीकारம் सर्वज्ञ ஞய் सर्वशक्तियான शरण्यனுடைய भरस्वीकारத்திற்கு शेषமாய், இவையடியாக कृत-कृत्यனை தனக்கு இங்கும் அங்கும் पराधीन-कर्तृत्व-भोक्तृत्वங்களால் வரும் कैंकर्य-ப்ரீதி स्वाधीन-कर्तृत्व-भोक्तृत्वங்களையுடையவனை स्वतन्त्र-स्वामिயினுடைய प्रीतिக்கு शेषமாய் நிற்கும் நிலை அறிகை.

§4.2.3 மூன்று ரஹஸ்யங்களால் சித்து அசித்து ஈசுவரன் இவர்களைப் பற்றி வரும் தெளிவுக்குப் பலன்

(iii) இவற்றில் தோற்றின तत्त्व-त्रय-विवेकத்திற்குப் फलம்—स्व-शरीरத்தில் स्वात्म-बुद्धि கழிந்து, स्वात्माவில் परमात्म-शरीरत्व-बुद्धिயுடையவனகை.

§4.2.4 ப்ரக்ருதியின் குணங்களைப் பற்றிய தெளிவின் பலன்

(iv) प्रकृति-गुण-विवेकத்திற்கு फलம்—बन्धकமான मिश्र-सत्त्वத்தையும் அதன் फलங்களான क्षुद्र-सुखங்களையும் பற்றுதே, मोक्षहेतुவான प्रकृष्ट-सत्त्वத்தையும்[1] அதன் फलங்களான भगवदनुभवादिகளையும் பற்றுகை.

§4.2.5 ஆத்மாவின் குணங்களைப் பற்றிய தெளிவின் பலன்

(v) आत्म-गुण-विवेकத்திற்குப் फलம்—भगवत्-कैङ्कर्यத்தை अनादरिக்கும் पूर्वदशैயைக் கழித்து, कैङ्कर्यार्थமாகப் प्रवृत्तिக்கும் उत्तरदशैயை उपादानம் பண்ணுகை[2].

§4.2.6 ரக்ஷகனை எம்பெருமானுடைய குணங்களைப் பற்றிய தெளிவினுல் வரும் பலன்

(vi) शरण्य-गुण-विवेकத்திற்குப் फलம்—अशरण्य-शरण्यனவனுடைய कृपा-विशेषமடியாக வந்த आत्म-आत्मीय-

**समर्पण** †[1] - **पूर्वक-भरन्यास**த்தாலே **कृतकृत्य**னைவனுக்குத் தானும் தன்னுடைய **आत्म-आत्मीय-समर्पण-पूर्वक-कैंकर्य-प्रदान**த்தினாலே **कृतकृत्य**னாய், **कैंकर्य-लाभ**த்தாலே **कृतार्थ**னை இவனுடைய **लाभ**த்தைக் கண்டு, தானும் **कृतार्थ**னைக் கடவனை **श्रियः पति**யினுடைய **परिमित**மான **छन्दानुवर्तन**த் தாலே[3] **अपरिमित**மான **छन्दानुवर्तन**ம் பெறலாம் என்று அறிகை.

§4.2.7 எம்பெருமானுக்கும் சேதநனுக்கும் உள்ள ஸம்பந்தத்தைப் பற்றிய தெளிவுக்குப் பலன்

(vii) **शरण्य-संबन्ध-विवेक**த்திற்குப் †[2] **फल**ம் — **दासभूत**னைகையாலே ஸ்வாமிக்கு **अनभिमत**த்தில் **प्रवृत्ति**யாதே†[3], **औपाधिक**மாய்[4] நிலையில்லாத **अल्प-संबन्ध**முடையவர்களை விட்டு, **स्वाभाविक**மாய் நிலை நின்ற **सर्व-विध-संबन्ध**முடையவனைப் பற்றுகை.

§4.2.8. விரோதிகளான அம்சங்களைத் தெளிகைக்குப் பலன்

(viii) **विरोधि-विवेक**த்திற்குப் **फल**ம் — **दासभूत**னைகையாலே ஸ்வாமிக்கு **अनभिमत**த்தில் **प्रवृत्ति**க்கைக்கு **प्राप्त**னன்றிக்கே, **परतन्त्र**னைகையாலே **स्वामि**யுடைய **अभिमत**த்திலும் **परनिरपेक्ष-प्रवृत्ति-शक्त**னுமன்றிக்கே[5] இருக்கிற இவன் அநுகூலங்களாய்த் தோற்றின ப்ரதிகூலங்களை விடுமளவில், விடுகைதன்னிலும் **निरपेक्ष-कर्तृत्व - बुद्धि**யை விடுகை.

---

1—உயர்ந்த ஸத்துவத்தையும். 2—ஏற்றுக் கொள்ளுதல். 3—விருப்பப்படி நடத்தல். 4—இயற்கையாயின்றி ஏதோ ஒரு காரணத்தினால் ஏற்பட்ட. 5—பிறரை எதிர்பாராமல் செயல்பட முடியாது.

†1 —आत्म-आत्मीय भरसमर्पण[1]. 2 — संबन्ध-विवेक த்திற்குப்[1]. 3—प्रवर्तियாதே प्रवर्तिக்கைக்கு[1]; प्रवृत्तियாதே[5].

§ 4: 2: 9: பக்தி-ப்ரபத்திகளாகிய உபாயங்களில் ஏற்பட்ட தெளிவுக்குப் பலன்

(ix) **उपाय-विवेक**த்திற்கு **फलம்** — **आवृत्ति**யில்லாத[1] **पुरुषार्थ**த்திற்கு **अधिकार-अनुगुण**மாக **आवृत्ति**யில்லாத[2] **उपाय**த்தைப் பற்றுகை.

§4: 10 புருஷார்த்தத்தைப் பற்றிய தெளிவுக்குப் பலன்

(x) **पुरुषार्थ-विवेक**த்திற்கு **फल**ம் — **अल्प**விஷயமான **राग**த்தை விட்டு, **अनन्त** விஷயமான **राग**த்தை உடையவனுகை.

§4: 3 விவேக பலனின் சுருக்கு

இவ் **विवेक-फल**ம் உடையவனுக்கு மேல்வரும் **फल**மும் **अनन्त**மாய், இங்கிருந்த நாள் **स्वभाव-अर्थ-शास्त्र-प्राप्त**மாய்க்கொண்டு[3] **करण-त्रय**த்தாலும் வரும் **व्यापार**மெல்லாம் **यथार्ह**ம் (i) **सर्वेश्वर**னுடைய **अप्रीति**வாராமைக்கும், (ii) வந்த **अप्रीति**யை **शमि**ப்பிக்கைக்கும்[4], (iii) **केवल-प्रीति**யை உண்டாக்குகைக்கும் உறுப்பாய்க்கொண்டு— இப் **प्रकार**ங்களாலே மூன்றுவகையாயிருக்கும். இது **विवेक-फल**ம்.

§5: எப்பொழுதும் அநுஸந்திக்க வேண்டியதின் சுருக்கு

"ஸ்ரீமானை நாராயணன் தன்னையே பற்றினார் தன்னைப் பெறுகைக்குத் தானே உபாயம்" என்று எல்லா வாக்யரத்னங்களும் கோப்புண்ட[5] ஏகவாக்யத்திலே **सिद्ध-साध्य-उपाय**ங்களும்[6], **सिद्धि-साध्य-प्राप्य**ங்களும்[7] ஒன்றை ஒன்று விடாதே ஒன்றே **प्रधान**மாய் நிற்கும் நிலை ஓர் **अधिकारि**க்கு **नित्यानुसन्धेय**ம். இது **सर्वसङ्ग्रह**ம்[8].

§6: ரஹஸ்யத்ரயாநுஸந்தான பலன்

"இன்றென்னைப் பொருளாக்கி" (49*[2]) என்கிறபடியே "நடுவே வந்து உய்யக் கொள்கிறன்

நாதன்''(51*¹) ''பிரமகுருவாகிவந்து''(57*⁷) अनादि जन्मपरंपरैक्कு முடிவான श्रेष्ठ-जन्मத்தில் பிதாவாய் நின்று, 'அறியாதன அறிவிக்க'(65*²) ரூபமும் நாமமும் वृत्तமும் भोगமும் स्थितियும் गतियும் வேறுபடும்படி அன்று பிறக்கும் अधिकारि மூன்றெழுத்தாய் ஒன்றின ''மூலமாகிய ஒற்றை எழுத்திலே''*¹ தனக்குப் प्रामाणिकமாக अनन्यार्ह-शेषत्व-संबन्धத்தை இசைந்து, 'न मम' என்கிற மூன்று எழுத்தின் பொருளைக் காட்டுகிற இரண்டு எழுத்திலே अप्रामाणिकமான शेषित्व-संबन्धத்தை⁹

---

1—திரும்புதல்இல்லாத. 2—மறுமுறை செய்ய வேண்டியிராத. 3—இயல்பிலோ, ஏதோ ஒரு பயனுக்காகவோ சாஸ்திரங்கள் சொன்னதற்காகவோ செய்யும். 4—போக்குகைக்கும், 5—ஒன்றுசேர்ந்த. 6—ஸித்தோபாயம் எம்பெருமான்; ஸாத்யோபாயம் பக்தி-ப்ரபத்திகள். 7—ஸித்திப்ராப்யம் எம்பெருமான். ஸாத்யப்ராப்யம் ஸ்ரீவைகுண்டத்தில் செய்யும்பகவத்கைங்கர்யம். 8—எல்லாவற்றின் சுருக்கம். 9—தான் சேஷி என்ற எண்ணத்தை.

*1. மேலெழுந்தோர் வாயுக்கிளர்ந்து
மேல்மிடற்றினை உள்ளெழ வாங்கி*
காலுங்கையும் விதிர்விதிர்த்தேறிக்
கண்ணுறக்கமதாவதன் முன்னம்*
மூலமாகிய ஒற்றையெழுத்தை
மூன்று மாத்திரை உள்ளெழ வாங்கி*
வேலை வண்ணனை மேவுதிராகில்
விண்ணகத்தினில் மேவலுமாமே.

பெரியாழ். திரு. (4-5-4): மேல் மூச்செறிந்து, தொண்டை அடைபட்டு, கால் கைகள் நடுக்கமுற்று தீர்க்க நித்திரை நேர்வதற்கு (இறப்பதற்கு) முன் ஸகல வேதங்களுக்கும் மூலமான ப்ரணவம் என்ற ஓர் எழுத்தை மூன்று மாத்திரையளவு நீட்டி உச்சரித்து கடல் நிறத்தனை எம்பெருமானைப் பற்றினால் முடிவில் அவனையே பரமபதத்தில் ஸேவித்து மகிழமுடியும்,

இகழ்ந்து[1](†[1]), **व्युत्पत्ति-विशेष**ங்களாலே[2] அஞ்சுபடியாக[3] **विशेष-प्रतिपत्ति**யை உண்டாக்குகிற அஞ்செழுத்திலே[4] **अपरिच्छिन्न**மான[5] **परम-पुरुषार्थ-संबन्ध**த்தை உகந்து, ஐயஞ்சு தத்த்வங்களிற்காட்டில் அதிகமான தத்த்வத்தை†[2](B-13) **उपाय-उपेय**மாகக் காட்டுகிற ஐயஞ்செழுத்திலே[6] தன் **अधिकार-अनुरूप**மான **वशीकरण - संबन्ध**த்தைப் பார்த்து, இத்தாலே மூவெட்டில் நின்றும்[7] முக்தனும் படியைத் தெளிவிக்கிற நாலெட்டெழுத்திலே[8] **साध्योपायान्तर-संबन्ध**மும் **विरोधि-संबन्ध**மும் கழியும் படியைக் கண்டு, **शोक-संबन्ध**ம் தீர்ந்து, மேல்தனக்கு **शेषवृत्ति-पर**னான†[3] **सर्वशेषि**யைப்பற்ற தானும் **शेषवृत्ति-पर**னும்[9].

§7: சாஸ்த்ரப் பொருளின் சுருக்கு

இவன் "இன்னமுதெனத் தோன்றித்"*[1] தன்னை இல்லை என்னப்†[4] பண்ணும் விஷயங்களையும் "அந்தமில் பேரின்பத்தின்"*[2] அணுவுக்குப் பற்றாத **आत्मानुभवरस**த்தையும் **अनादरि**த்து—**अपरिमित**மான **अमृत-सागर**த்தை அல்லித்தண்டாலே **परिमित**மாக அநுபவிக்குமாப் போலே — **उपायस्वीकार - दशै**யில் உபஜீவித்த நாராயண-ரஸாயனத்தாலே[10](†[5]) **जरा-मरणादि-व्याधि**கள்†[6] தீர்ந்து, **अनन्त**மான ஆராவமுதக் கடலிலே **अनुभवि**

---

1—விலக்கி. 2—சொற்களைப் பகுத்துப் பொருள் சொல்லும் முறையாலே. 3—ஐந்து விதங்களாக 4—'நாராயணாய' என்ற சொல்லில். 5—அளவற்ற. 6—இருபத்தைந்து எழுத்துக்களாலான த்வயமந்த்ரத்தில். 7—இருபத்து நான்காவது தத்துவமான ப்ரக்ருதியிலிருந்து. 8—முப்பத்திரண்டு எழுத்துக்களாலான சரமச்லோகத்தில். 9—அடிமை செய்வதில் ஈடுபாடுடையவனும். 10—நாராயணனாகிய உயர்ந்த மருந்தாலே.

†1-இழந்து[1]; கழித்து[2]. 2-ஐயையஞ்செழுத்திலே[2]. 3—பரமான[1]. 4—என்று[1]. 5—நாராயணரஸத்தாலே[4]. 6—जरामरणादि கழிந்து[1].

*1. இன்னமுதெனத்தோன்றி ஓரைவர் யாவரையும் மயக்க* நீ வைத்த
முன்னமாயமெல்லாம் முழுவேரரிந்து* என்னை உன்
சின்னமும் திருமூர்த்தியும் சிந்தித்தேத்திக் கைதொழவே அருளெனக்கு*
என்னம்மா ! என் கண்ணே ! இமையோர்தம்குலமுதலே !

திருவாய். (7-1-8): என் தாயே ! என்னிடம் வாத்ஸல்யம் உடையவனே ! நித்யஸூரிகளுக்குத் தலைவனே ! அநுபவிக்கும் போது இனிய அமுதம் போன்று தோற்றி ப்ரஹ்மாதிகளையும் மயக்கும்படியாக உன்னால் படைக்கப்பட்ட மிகவும் பலம் பொருந்திய சப்தாதி விஷயங்கள் ஐந்துடன் சேர்ந்த அநாதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தை ஒன்று விடாமல் வாஸனையுடன் போக்கி, உன் சங்கசக்ராதி சின்னங்களையும் பிராட்டியுடன் சேர்ந்த திருமேனியையும் மனதினால் சிந்தித்து வாக்கால் துதித்து கைகளால் தொழும்படி எனக்கு அருள் செய்.

*2. வந்து அவர் எதிர்கொள்ள மாமணி மண்டபத்து*
அந்தமில் பேரின்பத்து அடியரோடு இருந்தமை*
கொந்தலர் பொழில் குருகூர்ச் சடகோபன்* சொல்
சந்தங்களாயிரத்து இவைவல்லார் முனிவரே.

திருவாய். (10-9-11): (ப்ரபந்நர்கள் இங்கு ஸ்தூல சரீரத்தை விட்டு ஸூக்ஷ்ம சரீரத்தோடு அக்னி முதலிய - தேவர்களால் உபசரித்து அழைத்துச் செல்லப்பட்டு, வருண-இந்திர - ப்ரஜாபதி களால் வரவேற்கப்பட்டு, விரஜையில் மூழ்கி, ஸூக்ஷ்ம சரீரத்தை யும் கழித்து, ஸ்ரீவைகுண்டலோகம் சென்று, சுத்தஸத்துவமய மான திருமேனியைப் பெற்று, ப்ரஹ்மாலங்காரம் செய்விக்கப் பட்டு, நித்யஸூரிகள் புடைசூழ திருமாமணிமண்டபம் அருகில்) பிராட்டிமார்களோடு கூடிய பரவாஸுதேவனால் வரவேற்கப் பட்டு பரமனின் திருவோலக்கத்தில் அளவும் முடிவுமில்லாத ப்ரஹ்மானந்தத்தைத் துய்க்கும் நித்யஸூரிகளோடும் பரமனோடும் சேர்ந்து பேரின்ப வாழ்வைப் பெறுவர் என்பதை பூங்கொத்துக்கள் மலருகின்ற தோட்டங்கள் நிறைந்த குருகூரில் அவதரித்த நம்மாழ்வார் அருளிச் செய்த ஆயிரம் பாட்டுக்களில் இந்தப் பத்துப் பாட்டுக்களையும் அநுஸந்திக்க வல்லவர் எம்பெருமானுடைய குணங்களையும் எப்பொழுதும் அநுபவித்துக் கொண்டே இருப்பர்.

யாத **अंश**ம் இல்லாதபடி **अगस्त्यवत्**†[1] **अनुभवि**த்து (B-14), **अन्योन्य**ம் **भोक्तव्य**ரான இருவரும் நிற்கிற நிலையைக் கண்டு, **सूरि**களோடு ஒக்க **कैंकैंक**ரதியாம். இது **प्रमाण-प्रमेय-संग्रह**ம்[1].

§8: ஆசார்யன்-ஈச்வரன்-சிஷ்யன் இவர்களின் கடமைகள்

**सच्छिष्य**னுக்கு **मोक्ष-उपयुक्त**ங்களானவைகளை[2] **सम्यक्**காக[3] விவரிக்கை **सदाचार्य-कृत्य**ம். இச் **शिष्य**னை அடி தப்பாமல் நடத்தி மோக்ஷம் கொடுக்கை **ईश्वर-कृत्य**ம். **आचार्य**ன் அறிவித்தபடியே அறிந்து, **ईश्वर**ன் நடத்தின படியே நல்வழி நடக்கை **शिष्य-कृत्य**ம். இது **आचार्यादि-कृत्य**ம்.

§9: எம்பெருமானுக்கே அடியன் என்ற எண்ணத்தின் பலன்

**परमैकान्ति**யான **परम-भागवत**னுடைய†[2] **भगवत्-अनन्यार्ह शेषत्व-अध्यवसाय-फल**ம்—**भागवत**ரல்லாத **मातापितृ-प्रभृति**களை விட்டு, தனக்குக் கண்ணும் காலும் உண்டாய் நல்வழி நடக்க ருசியுண்டானல், **ज्ञान**வானான†[4]–**देशिक**ன் வழிகாட்ட, **ज्ञानशक्तिमा**னான **देशिक**ன்†[5] வழி நடத்த நடக்குமவன் வழியல்லா வழியில் போகாதே, வழி பறிப்பார்†[6] கையில் அகப்படாதே **सुगति**யாகை[4](†[7]).

§10: ஜீவனுடைய ஜ்ஞாநசக்திக்கும் ப்ரவ்ருத்தி சக்திக்கும் சிறந்த பலன்

இவனுடைய **ज्ञान - शक्ति**க்கும் **प्रवृत्ति - शक्ति**க்கும் **परमप्रयोजन**ம் **संकोच**மில்லாத **ज्ञान**த்தாலே **सर्वेश्वर**னை அனுபவித்து, **इच्छा-विघात**மில்லாத[5] **कैंकर्य**ம் பெறுகை.

இப்படி **ज्ञान-अज्ञान-विवेक**ம் பண்ணி, **ज्ञान-अज्ञान** கார்யங்களையும் அறிந்து **तत्त्व-ज्ञान-पूर्वक**மான **ज्ञान-विशेष**த்தாலே **ज्ञान-संकोच**ம் தீர்ந்து, **अनादि**யாக **ज्ञान-संकोच**

மில்லாத அயர்வரும் அமரர்களுடைய **आनन्दसागर**த்திலே அழுந்துகை **आत्मा**வுக்கு **स्वतः प्राप्त**ம். இது **ज्ञानादि-निष्कर्ष**ம்⁶.

நின்னருளாம் கதியன்றி மற்றொன்றில்லேன்
நெடுங்காலம் பிழைசெய்த நிலைகழிந்தேன்*
உன்னருளுக்கினிதான நிலை உகந்தேன்
உன் சரணே சரண் என்னும் துணிவு பூண்டேன்*
மன்னிருளாய் நின்ற நிலை எனக்குத் தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சி தரவரித்தேன் உன்னை*
இன்னருளால் இனி எனக்கோர் பரமேற்றாமல்
என் திருமால் அடைக்கலம்கொள் என்னை நீயே. (31)

---

1—ப்ரமாணங்கள், இவற்றால் அறியப்படுபவை இவற்றின் சுருக்கம். 2—மோக்ஷத்திற்கு வேண்டியவைகளை. 3—நன்றாக. 4—நல்வழியுடையவனாகை. 5—விருப்பத்திற்கு இடையூறு இல்லாத. 6—ஞானம் சக்தி இவற்றிற்கு ஏற்பட்ட முடிவு.

†1—अगस्त्य भाषयாலே அங்யோங்யம்[1]; अविभागेन[4]. 2—भागवतனுடைய[4]. 3—தான் கண்ணும் காலுமுடையனாய்[1]. 4—அவ்வழியில் ज्ञानவானை[4]. 5—ज्ञानவானை देशिकன் வழிகாட்ட, ज्ञानशक्तिமானை देशिकன்' என்பதற்கு பதில் 'ज्ञाताவான देशिकன்'[1]. 6—வழி அடிப்பார்[1]. 7—सुगतिயாம்[1].

31. **என் திருமால்!** —எனக்கு நாதனான எம்பெருமானே!; **நின் அருளாம் கதி அன்றி**—உன்னுடைய க்ருபையாகிய கதியைத் தவிர; **மற்று ஒன்று இல்லேன்**—வேறு ஒரு கதியும் இல்லாதவனாயிருக்கிறேன். **நெடுங்காலம் பிழை செய்த நிலை கழிந்தேன்**—அநாதி காலமாக அபராதம் செய்து வந்த நிலைமை (இப்பொழுது) கழியப் பெற்றேன். **உன் அருளுக்கு இனிதான நிலை உகந்தேன்**—உன் க்ருபையை பெறுவதற்கு(த் தக்க) நல்ல ப்ரபத்தி மார்க்கத்தை விரும்பினேன். **உன் சரணே சரண் என்னும் துணிவு பூண்டேன்**—உன் திருவடியே உபாயம் என்னும் உறுதியைப் பெற்றேன். **மன் இருளாய் நின்ற நிலை**—திடமான அஜ்ஞானமயமாய் இருந்த நிலைமையை; **எனக்குத் தீர்த்து**—எனக்குப் போக்கிவைத்து; **வானவர்தம் வாழ்ச்சிதர**—நித்ய ஸூரிகளின் வாழ்வை

(எனக்கு)த் தரும்படி; உன்னை வரித்தேன்—உன்னை ப்ரார்த்தித்துக் கொண்டேன். இன் அருளால்—(உன்) இனிய க்ருபையால்; இனி எனக்கு ஓர் பரம் ஏற்றுமல்—இனிமேல் எனக்கு ஒரு பொறுப்பும் வைக்காமல்; நீ என்னை அடைக்கலம் கொள்—நீ என்னைக் காக்க வேண்டிய வஸ்துவாக ஏற்றுக் கொள்ளவேண்டும்.

இப்பாசுரத்தில் முதல் வரியால் கார்ப்பண்யமும், 2-வது வரியால் ப்ராதிகூல்ய வர்ஜநமும், 3-வது வரியால் ஆநுகூல்ய ஸங்கல்பமும், 4-வது வரியால் மஹாவிசுவாஸமும், 5, 6-வது வரிகளால் கோப்த்ருத்வவரணமும், 7,8-வது வரிகளால் ஆத்ம ஸமர்ப்பணமும் கூறப்பட்டன என்றும், ஆக ஐந்து அங்கங்களுடன் கூடிய ப்ரபத்தியை இப்பாசுரம் விளக்குகின்றதென்றும் பெரியோர் பணிப்பர்.

**कवितार्किककेसरिणा वेङ्कटनाथेन विरचितः कविना ।**
**सहृदय हृदयग्राह्यः सरसोऽयं सारसङ्ग्रहो जयति ॥***[1]

*1. कवि - तार्किक - केसरिणा—கவிதார்க்கிக ஸிம்ஹம் என்கிற விருதைப் பெற்றவரான; कविना वेङ्कटनाथेन—கவியாகிய வேங்கடநாதன் என்னும் திருநாமம் உடையவரால்; विरचितः—செய்யப்பட்டதும்; सहृदय – நன்னெஞ்சம் படைத்தவர்களால்; हृदय - ग्राह्यः—மனதில் கொள்ளத்தக்கதுமான; सरसः—சுவை மிக்கதான; अयं—இந்த; **सार - संग्रहः**—ஸாரஸங்க்ரஹம் என்னும் க்ரந்தம்; जयति—மிகச் சிறந்ததாய் விளங்குகின்றது. (C—10)

**ஸ்ரீ ஸார ஸங்க்ரஹம் முற்றிற்று.**

**इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्र-स्वतन्त्रस्य**
**श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु**

## सारसङ्ग्रहः संपूर्णः

**॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥**



श्री:

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# २७. विरोध-परिहारः

# 27. விரோத பரிஹாரம்*

[மோக்ஷத்தை விரும்புகிறவன் மூன்று ரஹஸ்யங்களைக் கொண்டு அவசியம் அறியவேண்டிய விஷயங்களில் தோன்றும் முரண்பாடுகளை எடுத்துக் கூறி, அவற்றை ப்ரமாண வாக்யங்களுக்குத் துணைபுரியும் யுக்திகளைக் கொண்டு பரிஹரிக்கும் ரஹஸ்யம்]

[விஷயச் சுருக்கம்: இந்நூலில 108 சந்தேஹங்களுக்கு விடை அளிக்கப்படுகிறது.

1. மூலமந்த்ராதிகாரம்: தத்துவ - ஹித-புருஷார்த்தங்கள் பற்றி எழும் சங்கைகளைப் போக்கிக்கொள்ள வேண்டியதின் அவசியம்.

‡1—ஜீவர்களில் துன்பங்களைப் பார்த்திருக்கும் எம்பெருமான் ஸர்வரக்ஷகனாதல் எப்படி? 2—பிறவற்றாலும பெருமை பெறும் எம்பெருமானை இயற்கைப் பெருமையோன் என்பது எப்படி ? 3—எம்பெருமான் ஸர்வசேஷீ என்பதும், திவ்ய தம்பதிகள் சேஷீ என்பது முரண்படாதா ? 4—ஸர்வசேஷியான எம்பெருமான் அடியார்க்குச் சேஷனாயிருக்கிறான் என்பது பொருந்துமா ? 5—நித்ய சேஷனான முக்தனுக்கு எம்பெருமானோடு பரமஸாம்யம் கூறுவது எப்படி ? 6—நித்ய சேஷனான முக்தனை ஸ்வதந்த்ரன் என்பது பொருந்துமா ? 7—தாவரம் மிருகம் முதலியவற்றையும் எம்பெருமானுக்கு தாஸர்கள் என்பது எப்படி ? 8—பத்தர் - முக்தர்-நித்யருக்குச் சேஷமாய்க் காணப்படும் சேதநாசேதநங்களை மற்றவர்க்கன்றி எம்பெருமானுக்கே சேஷம் என்பது எப்படி ? 9—சேதநா

---

*ரஹஸ்யங்களில் 27-வது; அம்ருதாஸ்வாதிநீ ரஹஸ்யங்களில் 8-வது.

‡இங்கு எழுப்பப்படும் 108 சந்தேஹங்கள் மட்டும் விஷயச் சுருக்கத்தில் எடுத்துக் கூறப்படுகின்றன. இவற்றின் விடைகளை மூலக்ரந்தத்தில் காண்க.

சேதநங்கள் சேஷம் என்பதிலிருந்து சரீராத்மபாவம் கிடைப்பது எப்படி? 10—சாஸ்த்ரம் ஸ்வரூபத்தை அணு எனறது ஏன்? 11-14—சேதநன அணு என்பது பற்றி எழும் சங்கைகள. 15-16—எம்பெருமான அவதாரங்கள் பற்றி எழும் சஙகைகள். 17—ஸம்ஸாரிகளுக்கு ஞானம் ஆநந்தம அமலத்துவம் முதலியன என்றும் இருப்பன என்பது கூடுமோ? 18—ஜீவர்களுக்கு துக்கம் அஞ்ஞானம முதலியவை ஏற்படுவது அந்தக்கரணததிலா, ஸ்வரூபததிலா? 19—ஸம்ஸாரி ஜீவனின ஆத்மஸ்வரூபம் ஸ்வயம் ப்ரகாசம் என்பது கூடுமோ? 20—ஆத்மா ஜ்ஞாநஸவரூபனும் ஸ்வயம் ப்ரகாசனுமாகில் உறங்கும்போது அது தோனறுதது ஏன்? 21—ஜ்ஞாநஸ்வரூபனை சேதநனை ஜ்ஞாநத்திறகு இருப்பிடம் எனறும் கூறுவது பொருந்துமா? 22—தன் ஸவரூபததில் வர்ணாச்ரமாதி தர்மங்கள் இலலை என்று அறிந்தவனுக்குச செய்ய வேணடியது வேறு உண்டோ? 23—ஆதமாநுபவததில திருப்தி உடையவனுக்குச் செய்யவேண்டியது வேறு உண்டோ? 24—பகவானுக்கே சேஷன என்றறிந்தவனுக்கு பிற தெய்வங்களின் பெயரைக் கூறும் கர்மங்களைச் செய்யத்தகுமோ? 25—ஜீவனுடைய தர்மபூதஜ்ஞாநம் ஜீவர்களுக்கு மறைந்து கிடக்கிறது என்பது எப்படி? 27-28. ஆத்மாவின் ஆநந்தஸ்வரூபம் பற்றி எழும சங்கைகள்.

29—31 கைவல்யம் பற்றி எழும் சங்கைகள். 32—பகவானுக்கேதாஸனை ஜீவன் மற்றவருக்கு தாஸனதல் பொருந்துமா? 33—பாகவதரையன்றி மற்றவருக்கு அடிமை செய்பவன் நிலை பற்றிய சர்ச்சை. 34—திவயதம்பதிகளின் ஏகசேஷித்வம் பறறிய சர்ச்சை. 35—பகவத்பாகவத கைங்கர்யபரருக்கு வர்ணாச்ரம தர்மங்கள் தேவையா? 36—பரமைகாந்தி தர்மம் கலியுகத்துக்குப் பொருந்துமா? 37—பகவத் கைங்கர்யத்திற்குக் கால நியமம் உண்டா, அல்லது இஷ்டப்பட்ட போது செய்யலாமா? 38—ஆசார்யன் தவறு செய்தால் சிஷ்யன் செய்ய வேண்டியது என்ன? 39—சிறிதும் சுதந்திரமற்ற ஜீவனுக்கு அநிஷ்டங்கள் போக வேண்டும் என்று ''நம'' என்பதால ப்ரார்த்திப்பதும் பொருந்துமா? 40—எம்பெருமானைக் குறித்து ஜீவனுக்கு உள்ள ஆதேயத்வம், விதேயத்வம், தாஸத்வம் இவற்றில் மிக முக்கியமாய் அநுஸந்திக்க உரியது எது? 41—சேஷத்வத்தை முதலிலும் பாரதந்த்ர்யத்தைப் பின்பும் திருமந்திரம் கூறும் பொழுது சரணாகதி கத்யத்தில் இவற்றை மாற்றிக் கூறியது ஏன்? 42—சரீரம் ஞானம் இவற்றில் மமகாரத்தை விட்டால் மனத் தடுமாற்றம் ஏற்படாதா? 43—ஸ்வதந்த்ரனை ஈச்வரன் அடியார்களுக்கு வசப்படுதல் பொருந்துமா? 44—பாகவதர்

களுக்குள் ஒருவருக்கொருவர் சேஷ-சேஷி-பாவம் இருப்பது பொருந்துமா ? 45—ஆசார்யனுக்குச் சிஷ்யன் சேஷியாவது எப்படி ? 46—ஒன்றும் ஒட்டாது என்று சொல்லப்படும் ஆத்மா வில் அஞ்ஞானம், ஸம்ஸார பநதம் முதலியவை ஏற்படுவது எப்படி? 47—ஸுகதுக்கஙகளை அநுபவிப்பது ஆத்மாவா அல்லது சரீரமா ? 48—நித்யமெனறு சொலலப்பட்ட அசித்தை அநித்ய மென்றும் ஜீவேசவரர்களை நித்யமெனறும பிரித்தது பொருநதுமா? 49—சேதநாசேதநங்களுக்கு இருபபிடமான எம்பெருமானுக்கு அவை இருப்பிடம் என்பது பொருந்துமா ? 50—வஸ்துக்களில உள்ளும் புறமும் ஈசுவரன வியாபித்து நிற்றல் பற்றிய சங்கை. 51—இழிவானவற்றுடன கலநது நிற்கும் எம்பெருமானுக்கு அவற்றிற்கு எதிர்த்தட்டாயிருததல எனபது பொருந்துமா ? 52—எம்பொருமானின அவாப்தத ஸமஸ்த்தகாமத்வம் பற்றிய சங்கை. 53-54—தன் லீலா ரஸத்துக்காக ஜகத ஸ்ருஷ்ட்யாதி களைச் செய்கிறுன் எம்பெருமான என்றுல் (i) அவன மோக்ஷத தைத் தருபவனுகவும் இருப்பது எப்படி ? (ii) அவனுக்குக் கருணை உண்டென்பது பொருத்துமா? 55 — எம்பெருமானுடைய விபூதியை லீலா விபூதி-நிதய விபூதி எனறு பிரித்துக் கூறுவது ஏன் ? 56—லீலா விபூதியும் முக்தனுக்கு அநுகூலமாவது எபபடி ?

நாராயண சப்தத்தின் பொருள பற்றி எழும் சங்கைகள்: 57—"நான உன்னையனறி இலேன......" என்னும் திருமழிசை ஆழ்வார் பாசுரத்தின் பொருளபற்றிய சர்சசை. 58—ஆளுகைக்கு உட்பட்ட வஸ்துக்களைக் கொணடு எம்பெருமானைக் காட்டுதல் ஏன்? 59—எலலாச் செயல்களுக்கும் எம்பெருமானே காரணம் என்பது எப்படி ? 60—எம்பெருமானது கருணை, முயற்சி இவற்றுல் விளையும் பலன்கள் பற்றி எழும் சங்கை. 61—எல்லா வற்றையும் அறியும் எம்பெருமான அடியார்கள் குற்றததைக் காணுன் என்பது எப்படிப் பொருந்தும் ? 62—எம்பெருமான் ஒருவனே உபாயமாயும் பலனுயும் நிற்கிறுன என்பது பொருந் துமா ? 63—ப்ரபன்னனுக்கு எம்பெருமான் தனிப்பட்ட வகை யில் உபாயம் என்பது ஏன ? 64—உபாயமாகிய பக்தி-ப்ரபத்தி களுள் ப்ரபத்தியை மட்டும் உபாயமன்று என்றதன கருத்து என்ன ? 65—பிறருக்குத் தொண்டுசெய்வது ஈனத்தொழிலான படியால் பகவத் கைங்கர்யம் புருஷார்த்தமாகும் எப்படி? 66—யோகக்ஷேமத்திற்காக ப்ரபந்நன் அரசனை அணுகுவது முறையா ? 67—முக்தனுக்குப் பரமபுருஷார்ததம- பகவதநுபவமா, பகவத் கைங்கர்யமா? 68—பரமபதப்ராப்தி யும் விஷ்ணுலோக ப்ராப்த்தியும் ஒன்றா ? 69—முக்தன் லீலா

விபூதியில் ஸஞ்சரிக்கலாம் என்றது பொருந்துமா? 70—எம்பெருமானுக்குக் கட்டுப்பட்டுள்ள முக்தன் பரமபதத்தில் தன் இஷ்டப்படி ஸஞ்சரிக்கிருன் என்றது பொருநதுமா ? 71-72—ஸாயுஜ்யம் பற்றி எழும் சங்கைகள். 73-74—எம்பெருமானுக்கும் முக்தனுக்கும் உளள அநுபவம் பற்றி எழும் சங்கைகள். 75—மோக்ஷத்தில் அநிஷ்ட நிவ்ருத்தி - இஷ்டப்ராப்தி எனறு இரண்டு உண்டா ? 76—மோக்ஷத்தை அநிஷ்ட நிவருத்தி என்றும் இஷ்டப்ராப்தி என்றும் இரண்டு விதமாகக் கூறுவது ஏன்? 77—மோக்ஷத்தில் ஏற்படும் ஞானமலர்ச்சியை நித்யம் என்றது ஏன் ? 78—முக்தன் சரீரத்துடனும் அது இல்லாமலும் இருக்கலாம் என்றது பொருந்துமா? 79-80—முக்தன் செய்யும் கைங்கர்யம் பற்றிய சங்கைகள்.

II. த்வயாதிகாரம்: 81—பிராட்டியின் புருஷகாரம் அவசியமா ? 82—புருஷன் செய்யும் தொழிலைக் குறிக்கும் "புருஷகாரம்'' எனனும் சொலலால் பிராட்டியைக் கூறலாமா ? 83—ஸ்ரீமத் சப்தத்திற்கு ஏற்ற பொருள் பற்றிய சங்கை. 84—திவ்யதம்பதிகள் உபாயம் என்ருல் 'இருவர் உபாயம்' என்று ஆகாதா ? 85—எம்பெருமானை விட்டு அவன் திருவடிகளை உபாயம் என்று கூறுவது தகுமா ? 86—சரண சப்தத்திற்கு உபாயம் என்ற பொருளைக் கொள்வது ஏன் ? 87—"ப்ரபத்யே", என்பதில் "பத்'' என்னும் வினைப்பகுதியின் பொருள் பற்றி எழும் சங்கை. 88—"ப்ரபத்யே'' என்பதிலுள்ள நிகழ்காலத்தின் பொருள் யாது ? 89—பிற்பகுதியிலுள்ள ஸ்ரீமத் சப்தத்தின் பொருள் பற்றிய சங்கை. 90—"நம:'' சப்தத்திற்கு பல-தசையில அஹங்கார-மமகாராதிகளைக் களைதலும் தாத்பர்யமாகுமா?

III. சரம சுலோகாதிகாரம்: 91—சரம சுலோகத்திலுள்ள "விடுதல்'' எனபதன விளக்கம். 92—உபாயம் எது—ப்ரபத்தியா, எம்பெருமாஞ ? 93-94—மோக்ஷத்திற்கு ப்ரபத்தி நேர்க்காரணமாதல பற்றிய சங்கைகள். 95-100—எல்லாப் பாபங்களிலிருநதும விடுவிக்கிறேன் என்பதன் பொருள் பற்றிய எழும் சஙகைகள்.

நிகமநாதிகாரம்: 101—கூட்டத்தில் வெளிப்படையாகச் சொலலத் தக்க ஸ்ரீ மஹாபாரதத்தில் உள்ள சரம சுலோகம் ரஹஸ்யமாவது எப்படி ? 102-104—திருமந்திரம், த்வயம், சரம சுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களின் அவசியம் பற்றி எழும் ஸங்கைகள. 105—'ஜிதந்தே', "வராஹ - சரம - சுலோகம்'' முதலியவற்றை ரஹஸ்யங்களில் சேர்க்காதது ஏன் ? 106—ரஹஸ்யங்களில் சிக்ஷை பெருத இடைச்சிகள் மோக்ஷம் பெற்றது எப்படி ? 107—எம்பெருமானுக்கு விரோதிகளான சிசுபாலாதி

श्रीमन्नारायणः†[1] स्वामी शरण्यः सर्वदेहिनाम् ।
भूयान्निजपदप्राप्ति-विरोधि-विनिवारकः ॥*[1]
उदितं भवतः पायात् औषधाद्रि-समीपतः ।
औषधं चेतसा-सेव्यं-अपुनस्तन्यपायिनाम् ॥*[2]
प्रपदनमये विद्याभेदे प्रतिष्ठित-चेतसः,
प्रतिपदमिह प्रज्ञादायं दिशन्तु दयाधनाः ।
शठरिपु-शुक-व्यास-प्राचेतसादि-निबन्धन-
श्रमपरिणत-श्रद्धा-शुद्धाशया मम देशिकाः ॥*[3]

---

கள் மோக்ஷம் பெற்றது எப்படி? 108. ரஹஸ்யத்ரயங்களைப் பற்றி மேலும் எழும் சங்கைகளைப் போக்கிக் கொள்வது எப்படி?]

† 1—श्रीमान्नारायणः.

*1. सर्व-देहिनां — எல்லா ப்ராணிகளுக்கும்; शरण्यः—ரக்ஷகனுயும்; स्वामी—ஸ்வாமியாயும் உள்ள; श्रीमन्नारायण.-ஸ்ரீமந்நாராயணன்; निजपद-प्राप्ति—தன்னுடைய ஸ்தாநமான ஸ்ரீவைகுண்டத்தை அடைவதற்கு; विरोधि-विनिवारकः—விரோதிகளைப் போக்கடிப்பவனாக; भूयात्—இருக்கவேண்டும் (ஆகட்டும்).

*2. औषधाद्रि समीपतः—ஒளஷதபர்வதத்தின் அருகில்; उदितं—தோன்றியதும்; अपुनःस्तन्यपायिनां—மீண்டும் தாய்ப் பாலைக் குடியாதவர்களாய் இருக்கவேண்டும் என்கிற ஆசை உடையவர்களுக்கு; चेतसा—மனத்தினால்; सेव्य—(உபயோகிக்கத் தக்கதுமான) நினைக்கத் தக்கதுமான; औषधं—மருந்தாகிய பகவான்; भवतः—ஸம்ஸாரத்திலிருந்து; पायात्—(உங்களை) காப்பாற்றட்டும்.

*3. प्रपदनमये—(மோக்ஷம் அடைவதற்கு உபாயமாகக் கூறப்பட்ட) ப்ரபத்தி என்னும்; विद्याभेदे—வித்யைகளின் பிரிவில்; प्रतिष्ठित-चेतसः—நன்கு ஊன்றிய மனத்தை உடையவர்களும்; शठरिपु - शुक - व्यास-प्राचेतसादि-निबन्धन—நம்மாழ்வார், சுகர், வ்யாஸர், வால்மீகி முதலியவர்களால் இயற்றப்பட்ட நூல்களில்; श्रमपरिणत-श्रद्धा—ஏற்பட்ட பரிச்ரமத்தின் விளைவான ச்ரத்தையினால்;

பரவும் மறைகளெல்லாம் பதம்
சேர்ந்தொன்ற நின்றபிரான்*
இரவன்றிரவியின் காலத்(து)
அழைத்த எழில் படையோன்*
அரவும் கருடனும் அன்புடன்
ஏந்தும் அடியிரண்டும்
தர எந்தமக்கு அருளால் தளரா
மனம் தந்தனனே. (32)

---

शुद्ध आशया—பரிசுத்தமான மனதை உடையவர்களும்; दयाधना:—கருணையையே தனமாக உடையவர்களுமான; मम—என்னுடைய; देशिका:—ஆசார்யர்கள்; इह—இந்த நூலில்; प्रतिपदं—ஒவ்வொரு சொல்லிலும்; प्रज्ञादायं—நல்ல ஜ்ஞாநமாகிற சம்பத்தை; दिशन्तु—கொடுத்தருளட்டும். □

(32) பரவும் மறைகள் எல்லாம்—ஸ்தோத்ரம் செய்யும் தன்மையுள்ள வேதங்கள் முழுவதும்; பதம் சேர்ந்து ஒன்ற—தன் திருவடிகளில் ஈடுபட்டுப் பேசி நிற்க; நின்ற பிரான்—(அதனால்) உயர்ந்து நிற்கும் ஸ்வாமியும்; அன்று—அந்நாள் (பாரதப் போரில்); இரவியின் காலத்து—ஸூர்யன் ப்ரகாசிக்கும் பகற்பொழுதிலே; இரவு அழைத்த—ராத்ரியை வருவித்த; எழில் படையோன்—ப்ரகாசமான சக்ராயுதத்தை உடையவனுமான எம்பெருமான்; அரவும் கருடனும்—ஆதிசேஷனும் பெரியதிருவடியும்; அன்புடன் ஏந்தும்—பக்தியுடன் ஏந்திக் கைங்கர்யம் செய்கின்ற; அடி இரண்டும்—திருவடிகள் இரண்டையும்; எம் தமக்குத் தர—(நாமும் கைங்கர்யம் செய்யும்படி) எமக்குக் கொடுக்க (நினைத்து); அருளால்—க்ருபையால்; தளராமனம்—சோர்வடையாத மனத்தை; தந்தனன்—கொடுத்தருளினான்.

[சேஷனும் கருடனும் இயற்கைப் பகையின்றிக் கலந்து கைங்கர்யம் செய்ததும், பகலும் இரவும் கலந்து நின்றதும், ப்ரகாசமான படையால் இரவை அழைத்ததுமாகிய சேராச் சேர்த்தியை இப்பாசுரத்தில் ரஸிக்க. இந்த ரஹஸ்யம் விரோத பரிஹாரமன்றோ.]

श्रीः

श्रीमते लक्ष्मीहयवदन परब्रह्मणे नमः ।

श्रीमते रामानुजाय नमः ।

श्रीमते निगमान्त महादेशिकाय नमः ।

श्रीमते वरदार्य महादेशिकाय नमः ।।

# विरोधपरिहारः

## (कुमार-वरदार्येण अनुगृहीतम्)

श्रीमल्लक्ष्मण-योगीन्द्र-सिद्धान्त-विजयध्वजम् ।
विश्वामित्र-कुलोद्भूतं वरदार्यमहं भजे ।।

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किक-केसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ।।

श्रीमद्-वेङ्कटनाथार्य-नन्दनान् प्रणमाम्यहम् ।
शेषशायि-पदाम्भोज-शेषत्व-ज्ञान-निर्मलान् ।।

आविष्कृतः श्रुतिगणैः अविरोध-वृत्त्या
काले कदापि रचयन् रजनीं दिवापि ।
भुक्तं भुजङ्गम-विहङ्गम-भूपतिभ्यां
पादाम्बुजं दिशतु पाण्डव-सारथिर्मे ।।

ऊरीकृत्य तु लक्ष्मणार्य-पृतना-सन्तान-दन्तावलान्
पृथ्वी-निर्झर-तल्लजान् उपनिषत्सिद्धान्त-बद्धाशयान् ।
अन्यानप्यरविन्द-लोचन-दया-विन्यास-धन्या वयं
तूलायापि तृणाय वा न च तुषच्छेदाय मन्यामहे ।।

§தத்துவ-ஹித-புருஷார்த்தங்கள் பற்றி எழும் சங்கைகளைப் போக்கிக் கொள்ள வேண்டியதின் அவசியம்

முமுக்ஷுவுக்கு **अवश्यम् - ज्ञातव्य**ங்களான **प्रमेय**ங்களில்[1] தோன்றிய **विरोध**ங்களை[2] **शमि**ப்பியாதொழியில்[3] "**ज्ञानेन हीनः पशुभिः समानः**"*1 என்கிற **दशै**யாம். **विरुद्ध**ங்கள் போல் தோன்றின†[1] **अर्थ**ங்களை **दुर्निरूप**ங்கள்[4] என்று விடுதல், ஒன்றை இட்டு†[2] ஒன்றை **बाधि**ப்புதல் செய்யில்[5] **मायावादि**கள்[6] படியாம் (B-7). **विरुद्ध**மாய்த் தோற்றின கட்டளையிலே இசைந்தால் **भेदाभेदवादि**கள் படியாம். ஆனபின்பு **रहस्यत्रय**த்தில் **अवश्य - वेद्य**ங்களான **प्रमेय**ங்களில் தோன்றின **विरोध**ங்களை **वाक्यानुग्राहक-न्याय**ங்களாலே[7] **शमि**ப்பித்து, **सारतम**ங்களான **तत्त्व-हित-पुरुषार्थ**ங்களைத்†[3] தெளிந்து, வல்லதொரு **मोक्षोपाय**த்தை **अवलम्बि**த்து, **स्वनिष्ठानुरूप**†[4]-**निरपाय**‡ **वृत्ति**யோடே[8] நடப்பார்கள் **सात्त्विक**ர்கள்.

---

குறிப்பு: ‡—இக்குறி குமார நயினாராசார்யர் அருளிய வடமொழி நூலைக் காட்டும். இது ஸ்வாமி தேசிகன் அருளிய மூலக்ரந்தத்தின் கீழ்க்குறிப்புக்குப் பிறகு தரப்பட்டுள்ளது:

*1—ப்ரமாணத்தைக் கொண்டு அறியவேண்டுபவை. 2—முரண்பாடுகளை. 3—போக்காவிடில். 4—நிரூபிக்க முடியாதவை. 5—நிராகரித்தல். 6—அத்வைதிகள். 7—வாக்யத்தின் பொருளைத் தெரிவிக்கும் ந்யாயத்தாலே. 8—தன் நிஷ்டைக்கு ஏற்ப தீமை பயக்காத நடத்தையோடே.*

† 1—தோற்றிய, தோற்றின[1]. 2—விட்டு[1]. 3 —तत्त्व-हित-पुरुषार्थविशेषங்களை[1]. 4—स्वनिष्ठारूप[1].

*1. आहार-निद्रा-भय-मैथुनानि सामान्यमेतत् पशभिर्नराणाम् ।
ज्ञानं हि तेषामधिको विशेषो ज्ञानेन हीनः पशभिः समानः ॥

*நரசிம்ஹபு. (16-13): உண்பது, உறங்குவது, அஞ்சுவது, புணர்வது ஆகிய இவை மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் பொதுவானவை. மனிதர்களுக்கோ பகுத்து உணர்வது (பகுத்தறிவு) மிகுதியான சிறப்பாகும். அறிவில்லாதவன் (திருமந்திரத்தின் கருத்துக்களை அறியாதவன்) மிருகங்களைப் போன்றவனாவான்.*

श्रीः

# विरोधपरिहारः

‡ अहं खलु लक्ष्मणार्य-राद्धान्त-निष्णात-विष्णुभक्तजन-नासीरवीरः शुनासीर-पुरोहित-सदृशमपि परपक्ष-वादिनं अन्यथयन् अनन्यथासिद्ध-गुरुभक्ति-प्रवाहपरिणत-परभक्त्युपलभ्यमान-सभ्यानुविधेय-वचनः वरदार्यनामा पङ्कजनाभ-पादारविन्द-मकरन्द-मधुकरायमाण-मानसैः धर्म-संप्रदाय-वर्तनी व्यवस्थापनसन्तोषित-सर्वाचार्यैः श्रीमद्वेदान्ताचार्यैः अस्मत्तातपादैः अगस्त्य-भाषया प्रणीतं अध्यात्मविद्भिः अवधार्यं रहस्यत्रयसारार्थ-विरोध-परिहारं अशेष-देश-वासिनामपि पर-शेषत्व-ज्ञान-रसिकानां सुग्रहण-सिद्धये, सोपबृंहण-निपुण-निरूपित-निगमसंप्रदाय-संस्कृतया संस्कृत-भाषया सम्यक् अनुकथयामि । तथा हि ।

मुमुक्षूणां अवश्य-ज्ञातव्येषु अर्थेषु प्रतीयमानानां विरोधानां अप्रशमने 'ज्ञानेन हीनः पशुभिस्समानः'*1 इत्यवस्था भवेत् । विरुद्धत्वेन प्रतिभासमानानां दुर्निरूपत्ववचने मिथो-बाधेन वा मृषावादि-मतावतारः प्रसज्येत । विरुद्धाकारेणैव स्वीकारे क्षपणक-यादव-भास्कर-सिद्धान्त-शैली अनुविदध्यात् । अतो रहस्यत्रयार्थेषु अवश्य-वेद्य-प्रमेयविषय-विरोधान् वाक्यानुग्राहक-न्यायैः उपशमय्य, सारतम-तत्त्व-हित-पुरुषार्थ-विशेषान् विशेषतः ज्ञात्वा स्वाधिकारानुरूप-मोक्षोपायावलम्बनेन स्वनिष्ठानुरूप-निरपराधया वृत्या वर्तन्ते सत्वशालिनः इति तत्वविद्भिः अभिधीयते ।

அவ்விடத்திலே முற்பட **"सर्वमष्टाक्षरान्तस्थं"***[1] என்னும்படி **सर्वार्थ-संग्रह**மான†[1] **मूलमन्त्र**த்தில் **अर्थानु-संधानपर**ருக்கு தண்ணீர்த் துரும்பு போல வரும் **शङ्क**களைப் பரிஹரிக்கிறோம்.

§17 ஜீவர்களின் துன்பங்களைப் பார்த்திருக்கும் எம்பெருமான் ஸர்வரக்ஷகனாதல் எப்படி ?

1. **अनादि**காலம் **क्षेत्रज्ञ**ர்கள் **क्लेश**ப்படப் பார்த்திருக்கிற **सर्वज्ञ**னை **ईश्वर**ன் **सर्वरक्षक**ன் என்கிற இவ் **अर्थ**ம் கூடுமோ ? என்னில்——**ईश्वर**னுடைய **रक्षकत्व**ம் இரண்டு படியாயிருக்கும். எங்ஙனே என்னில் ஸர்வருக்கும் **सत्तादि**கள் குலையாதபடி பண்ணுகிற **रक्षकत्व**ம் **निरपेक्ष**ம்[1]. ஸம்ஸாரிகள் திறத்தில் **अनिष्ट-निवारणादिरूप**மான **रक्षकत्व**ம் இவர்கள் பக்கலிலே **शास्त्रोक्त**மாய் இருப்பது ஏதேனுமொரு **व्याज**த்தை **अपेक्षि**த்து இருக்குமாகையாலே. **सर्व-क्षेत्रज्ञ**ர் விஷயத்திலும் **अनिष्ट - निवारणादिरूप**மான[2] **रक्षण**த்திற்கு **योग्य**னாகையாலும், மேல்[2] பெறப்புகுகிற†[3] **परमपुरुषार्थ**த்திற்கு உறுப்பான[3] **सत्तादि**கள்[4] குலையாதே நித்யமாக ரக்ஷிக்கையாலும் ஸர்வரக்ஷகன் என்கிறது.

---

1—வேறொன்றை எதிர்பாராதது. 2—அநிஷ்டத்தைப் போக்குதல் முதலான. 3—காரணமான. 4—(ஆத்மாவின்) இருப்பு முதலியவை.

† 1—**सर्वसारभूतसंग्रह**மான[1]. 2—மேன்மேலும்[1]. 3—'பெறப் புகுகிற' என்பது இல்லை[1].

*1. त्रयो वेदाः षडङ्गानि छन्दांसि विविधाः स्वराः ।
सर्वमष्टाक्षरान्तस्थं यच्चान्यादपि वाङ्मयम् ।। (i)
ऋचो यजूंषि सामानि तथैवाथर्वणानि च ।
सर्वमष्टाक्षरान्तस्थं यच्चान्यादपि वाङ्मयम् ।। (ii)

(i) நாரதீய கல்பம் (1-9); (ii) ஹாரீதஸ்ம்ருதி (3-65);
(i) மூன்று வேதங்களும், ஆறு அங்கங்களும், சந்தஸ்ஸுக்களும், பல்வகை ஸ்வரங்களும், இவற்றைக் காட்டிலும் வேறான சப்தராசிகளும் திருமந்த்ரத்தில் உள்ளன. (ii) ருக்வேதமும், யஜுர் வேதமும், ஸாம வேதமும், அதர்வண வேதமும் அவற்றைக் காட்டிலும் வேறான சப்தராசிகளும் திருமந்த்ரத்தில் உள்ளன.

---

‡ तत्र तावत् 'सर्वं अष्टाक्षरान्तस्थं'*[1] इति सारतम-संग्राहक-मूलमन्त्रार्थानुसन्धानतत्पराणां अध्यात्मविदां सतृण-पान-पानीय-न्यायेन; जायमानाः शङ्करादि-मतसैद्धान्तिकैः समुत्थापिताः शङ्काकलङ्काः परिह्रियन्ते ।

१. अत्र कश्चिदाह— अनादिकालानुवृत्तसंसार-दुःखसहितान् क्षेत्रज्ञान् सर्वज्ञत्वादि-गुण-सम्भवेपि अनुद्धरन् ईश्वरः सर्व-रक्षकः इति व्यवहारः कथं घटते ?——अत्रोत्तरं;

**स्वरूपस्य स्वभावस्य नियमेनैव रक्षणात् ।**
**अनिष्ट-वारणादेश्च योग्यत्वात् नित्यरक्षकः ॥**

द्विविधं खलु भगवतो रक्षकत्वं—(i) सर्वविषय-सत्तादि-रक्षणरूपं एकं नित्यरक्षकत्वं; (ii) संसारि-विषयेऽपि अनिष्ट-निवारणादिरूपं अपरं तु रक्षकत्वं कादाचित्कम्, यत्किञ्चिद्व्याज-सापेक्षम् । अतः सर्वक्षेत्रज्ञविषय-अनिष्ट-निवारणादिरूप रक्षण-योग्यत्वस्य अनादि-सिद्धत्वात्, काले तद्रक्षणात्, रक्षणस्य कादाचित्कत्वेपि रक्षण-योग्य-रक्षक-शब्दस्य मुख्यवृत्तत्वात्, आगामि-पुरुषार्थ-प्राप्त्यनुरूप स्वरूप-रक्षण-सातत्यात् च भगवतः सर्वदा सर्वरक्षकत्वं उपपन्नं इति ॥

§ 2. பிறவற்றாலும் பெருமை பெறும் எம்பெருமானை இயற்கைப் பெருமையோன் என்பது எப்படி ?

2. இப்படி ஸர்வரக்ஷகனான **ईश्वरन्** **सर्वशेषि**யாம் போது தன்னை ஒழிந்த **नित्य-अनित्य-सर्वपदार्थ**ங்களாலும் தனக்கு உபகாரம் உண்டாகவேண்டும். இப்படியானால் **स्वतस्सिद्धातिशय**ன்[1] என்கை கூடுமோ ? என்னில் ——இது கூடும். **अभिरूप**ன்[2] **आभरण**ம் பூண்டாற்போலே **स्वतः सिद्ध**மான **ज्ञानत्व-आनन्दत्व-अमलत्वादि**களை உடையவன் தன் **गुण-विभूति**களாலும் **अलङ्कृत**னாய் **अतिशय**வானாகை **विरुद्ध**மன்றிறே. "**त्वया दीप्त्या रत्नं भवदपि महार्घं न विगुणं न कुण्ठस्वातन्त्र्यं भवति च न चान्याहितगुणं**"*[1] என்கிற ந்யாயமும் இங்கே கண்டுகொள்வது.

---

1—இயல்பாகவே மேன்மையுடையவன். 2—அழகானவன்.

*1. त्वत श्रीस्त्वं विष्णोः स्वमसि तत एवैष भगवान्
त्वदायत्तर्द्धित्वेऽप्यभवदपराधीनविभवः ।
त्वया दीप्त्या रत्नं भवदपि महार्घं न विगुणं
न कुण्ठस्वातन्त्र्यं भवति च न चान्याहितगुणम् ॥

ஸ்ரீ குண. (31) ஒரு ரத்நமானது தன்னுடைய காந்தியாலே உயர்ந்த விலையுள்ளதாக ஆகிறது. ஆனாலும் அது குணமில்லாததாக ஆகிறதில்லை. அதற்கு இயற்கையாலேற்பட்ட பெருமையும் குறைகிறதில்லை. அதற்குப் பெருமை வேறொன்றால் உண்டு பண்ணப் பட்டதுமன்று. அதுபோல ஏ லக்ஷ்மியே ! நீ உன் இச்சையாலேயே எம்பெருமானுக்குச் சேஷபூதையாக ஆகின்றாய், அவனுடைய ஏற்றம் உன் அதீநமாயிருந்த போதிலும், அவன் பெருமை பிறருக்கு அதீநமாக இருக்கவில்லை.

---

‡ २. एवं सर्वरक्षकस्य सर्वेश्वरस्य सर्वशेषिणः स्वव्यतिरिक्त-नित्यानित्य-सर्वपदार्थ-जन्य-उपकाराश्रयत्वं वक्तव्यं; अन्यथा, शेषत्व-लक्षणायोगात् । 'शेषः परार्थत्वात्' इति हि जैमिनिः । 'परगतातिशयाधानेच्छया उपादेयत्वमेव यस्य

स्वरूपं स शेषः परः शेषी' इति श्रीभाष्यकाराः निरणैषुः। तथा च सति भगवतः स्वतस्सिद्धातिशयत्वं कथं उपपद्यते?

अत्रापि वदामः।

**स्वतोऽतिशयितस्यापि ज्ञानाद्यैः निखिलैः गुणैः।**
**युक्तं गुणविभूत्यादेः अपि सर्वातिशायिता ॥**

युज्यते हि अभिरूपाभरण-धारण-न्यायेन स्वतः सिद्धज्ञानत्व-आनन्दत्व-आदि स्वरूप-निरूपक-धर्म-परिकर्मितस्यापि भगवतः स्वाधीन-सत्ता-स्थिति-प्रवृत्तिभिः निरूपित-स्वरूप-विशेषक-गुण-विग्रह-विभूत्यादिभिरपि सर्वातिशायित्वं, इदमेव हि तस्य स्वतः-सिद्धातिशयत्वं, यदुत स्वाधीन-नित्य-शेष-चेतनाचेतन-शेषित्वं अन्यथा हि तादृग्विधातिशयाभावेन सर्वेश्वरत्वमेव हि भज्येत। यदि हि शेषिभूतं अन्याधीनं आगन्तुकं वा भवेत्, तदा हि भगवतः आधेयत्वातिशयत्वं प्रसज्येत। नित्यैश्वर्य-विशिष्टस्य भगवतः तदेव दोषायेति वदन्तः भवन्तः स्वदोषमेवाविष्कुर्वन्ति। येऽपि च अनित्याः चेतनाचेतन-गुणाः तेषामपि भगवदायत्त-सत्ताकत्वात् तदायत्त-अतिशययोगो गुणायैव भगवतो भवति। निर्गुण-वादस्तु भाष्यकारादिभिः तत्र तत्र निराकृतः; स्वयं च निर्गुण एवेति तदवलम्बनात् नात्रावकाशः। तदेतत् सर्वं अभिप्रेत्य प्राञ्चोऽपि आहुः 'स्वया दीप्त्या रत्नं भवदपि महार्घं न विगुणं न कुण्ठस्वातन्त्र्यं भवति च न चान्याहित-गुणम्'*[1] इति। अतः स्वतः सिद्ध-सर्वैश्वर्य-विशष्टत्वमेव ईश्वरस्य सर्वोत्कर्ष-निदानमिति प्रमाण-तर्काभ्यां प्रति-

§ 3: எம்பெருமான் ஸர்வசேஷீ என்பதும், திவ்யதம்பதிகள் சேஷீ என்பதும் முரண்படாதா ?

3. ஏகன் स्वव्यतिरिक्त-समस्तशेषी[1] என்று शास्त्रம் சொல்லா நிற்க, "उभयाधिष्ठानं चैकं शेषित्वं"*1 என்று சொல்லுகிற अर्थம் கூடுமோ ? என்னில்——லோகத்தில் பதிக்கும் பத்னிக்கும் गृहक्षेत्रादिகளெல்லாம் शेषமாயிருக்குமாப்போலே இங்கும் இருவரையும் ஒழிந்தவை எல்லாம் "अस्या मम च शेषं हि विभूतिरुभयात्मिका"(9*1) என்கிறபடியே இருவருக்கும் பொதுவான शेषமாயிருக்க पतित्व-पत्नीत्व-व्यवस्थैயாலே ஒருவன் सर्वशेषिயாக நிற்கை विरुद्धமன்று.

§ 4: ஸர்வசேஷியான எம்பெருமான் அடியார்க்குச் சேஷனுயிருக்கிறுன் என்பது பொருந்துமா ?

4. இப்படி सर्वेश्वरன் सर्वशेषिயாய் நிற்க "परिजन-परिबर्ही-भूषणान्यायुधानि"*2 इत्यादिகளில் தானும் आश्रितருக்கு शेषமாய் நிற்கிறுன்†1 என்கை घटिக்குமோ[2] ? என்னில்——आकारभेदத்தாலே[3] இரண்டும் घटिக்கும்.

---

1—தன்னைத் தவிர்த்த மற்றெல்லாவற்றிற்கும் சேஷீ (உடையவன்). 2—பொருந்துமோ. 3—நிலைகளில் வேறுபாட்டால்

† 1—'परिजन......आश्रितருக்கு' என்பதற்குப் பதில் "अहमाप्योऽहं तपस्विनां என்கிறபடியே आश्रितருக்குத் தான் शेषமாய் இருக்கிறுன்"[2].

*1. ஷடர்த்த ஸங்க்ஷேபம்: சேஷியாயிருப்பது ஒன்று. அது பிராட்டி எம்பெருமான் இருவரிடத்திலும் இருக்கிறது.

*2. परिजन-परिबर्हा-भूषणान्यायुधानि
प्रवर-गुणगणाश्च ज्ञान-शक्त्यादयस्ते ।
परमपदम् अथाण्डान्यात्मदेहस्तथाऽऽत्मा
वरद ! सकलमेतत् संश्रितार्थं चकर्थ ।।

अनुसन्धिக்கத் தட்டென்? என்னில் —— विस्तरापेक्षैயுள்ள போது அவையும் उपजीव्यங்களாகிலும், அவற்றிலுள்ளவையெல்லாம் இவற்றில் உண்டாகையாலும் प्रतिपत्ति-सौकर्यातिशयத்தாலும்[1]. இவை மூன்றையும் प्रधानங்களாக பூர்வர்கள் अनुसन्धिத்தார்கள். ஆகையால் இவை மூன்றும் अध्यात्म-विषय-शब्द-राशियில்[2] सारतमம்†[1] என்னும் अर्थத்தை ரஹஸ்யத்ரயஸாரத்தில் सारनिष्कर्षाधिकारத்திலே समर्थித்தோம்.

106. ஒரு முமுக்ஷுவுக்கு இப்படி ரஹஸ்யத்ரய शिक्षै[3] வேண்டுமாகில்

''चिन्तयन्ती जगत्सूतिं परब्रह्मस्वरूपिणम् ।
निरुच्छ्वासतया मुक्तिं गताऽन्या गोपकन्यका ॥''*[1]

इत्यादिகளிற் சொல்லுகிறபடியே எட்டும் இரண்டும் அறியாத இடைச்சிகள் மோக்ஷம் பெற்றபடி எங்ஙனே? என்னில் —— அவர்களும் பூர்வஜன்மங்களிலே அபேக்ஷித சிக்ஷை பண்ணி ஒரு उपाय-विशेषத்திலே துவக்குண்டு, प्रारब्ध-कर्म-विशेषங்களாலே சில

1—அறிதற்கு மிக எளிதாயிருத்தலாலும். 2—ஆத்மாவைப் பற்றிக் கூறும் சாஸ்த்ரங்களில். 3—மூன்று ரஹஸ்யங்களைக் கற்பித்தல்.

†1—ஸாரதமங்களாக ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸாரத்திலே[1].

*1. வி.பு. (5-13-22): மற்றொருகோபகன்னியும், பிராணனை உள்ளடக்கி, உலகிற்குக் காரணமும் பரப்ரஹ்ம ஸ்வரூபியுமான கிருஷ்ணனை தியானித்துக் கொண்டே மோக்ஷத்தை அடைந்தாள்.

---

प्रारब्ध-नाश-निर्भरत्वादि-अनुसन्धान-सिद्धये शोक-निवृत्ति-रूप अर्थविशेष-विशद-अनुसन्धानाच्च समर्पणानुष्ठानात् पूर्वमेव समर्पण-विधायक-चरमश्लोकानुसन्धानं अवश्यमेव कर्तव्यमिति।

१०५. एवं तर्हि श्लोकद्वयादीनामपि रहस्यत्वेन उपादानं युज्यते इति चेत्, युज्यते एव ।

**श्लोक-द्वयादि-सद्भावेपि अशेषार्थ-प्रकाशनात् ।**
**सौकर्यात् अनुभावाच्च त्रयमेतत् विशिष्यते ।।**

विस्तारापेक्षायां श्लोक-द्वयादिकमपि रहस्यतया उपजीव्यमेव, तथापि तेषु तेषु अध्यात्म-प्रबन्धेषु सतामेव अर्थानां अत्रैव विशदं अनुसन्धानात् प्रतिपत्ति-सौकर्यात् प्रभाव-अतिशयाच्च इदमेव रहस्यत्रयं प्राञ्चोऽपि आचार्याः प्रधानतया अनुसन्दधिरे । अतः इदमेव रहस्य-त्रयं अध्यात्म-विषय-सारभूतमिति श्रीमद्रहस्यत्रयसारे सारनिष्कर्षाधिकारे स्वयमेव आचार्याः सम्यक् उपपादयाञ्चक्रुः ।

१०६. एवं तर्हि मुमुक्षूणां रहस्यत्रयशिक्षायाः अभावे

'चिन्तयन्ती जगत्सूतिं परब्रह्म-स्वरूपिणं ।
निरुच्छ्वासतया मुक्तिं गतान्या गोपकन्यका ।।'

इत्युक्त-प्रकारेण 'अष्टौ द्वौ च कति' इति एतदपि अजानतीनां चिन्तयन्त्यादीनां अपवर्ग-प्राप्तिः कथमिव अभूत्? —इति चेत्, तदपि अभिधीयते ।

**क्वचित् जन्मान्तरे सद्यः कृत्वैवात्मनि शिक्षणं ।**
**चिन्तयन्त्यादयो मुक्ताः प्रापुः सद्यः परं पदं ।।**

ஜன்மங்களுண்டாய், अन्तिम-शरीरத்தில் ஒரு शिक्षै இல்லை யேயாகிலும், பூர்வ வாஸனைதிகள் उपकरिத்து भगवत्-प्रावण्यமுண்டாய் परमपुरुषार्थம் பெறுகிருர்களாகையாலே ஏதேனுமொரு ஜன்மத்திலே अपेक्षित-रहस्य-ज्ञानத்தாலே எல்லாரும் ஈடேறுவார்கள் என்னுமிடம் सिद्धம்.

107. இப்படி சில जन्मान्तर संस्कारादिகள் உபகரிக்க அநுகூல ஸ்வபாவராய்ப் பிறந்து முக்தராகப்†[1] प्राप्त ராளுலும் जन्मान्तरங்களிலும் प्रतिकूलனுய் अन्तिम-जन्मத்திலும் தான் படுமளவும்[1] எதிரம்பு கோத்து நின்ற शिशुपालனுக்கு "प्रतिभवमपराद्धुः मुग्ध सायुज्यदोऽभूः''*[1] என்கிறபடியே மோக்ஷம் கொடுத்தபடி என்? என்னில் —— அடியிலே ஸ்ரீ விஷ்ணுலோகத்திலே द्वारपालपदம் பெற்ருர் இரண்டு क्षेत्रज्ञர் भागवतापचार-विशेषத்தாலே மூன்று ஜன்மம் ப்ரதிகூலராய்ப் பிறந்து, அவ்வபசார फलावसानத்திலே பழைய पदம் பெற்று क्रमेण முக்தராய் நின்ருர்கள் என்று पुराणसिद्धமாகையாலே இப்படிப் பட்ட விஷயங்களிலும் முன்புற்றை[2] अध्यात्म-शिक्षैயடியாக மோக்ஷம் என்னுமிடம் सिद्धம்.

---

1—இறக்கும் வரையில். 2—முன்பே பெற்றிருந்த.

†1—முக்தராக ப்ராப்தமாளுல்[1]; முக்தராக ப்ராப்தம். ஜந்மாந்தரங்களில்[2].

*1. रघुवर! यदभूस्त्वं तादृशो वायसस्य
प्रणत इति दयालुः यश्च चैद्यस्य कृष्ण: ।
प्रतिभवमपराद्धुः मुग्ध! सायुज्यदोऽभूः
वद किं अपदं आगः तस्य तेऽस्ति क्षमायाः ।।

ஆள. ஸ்தோ. (63): சரணுகதரக்ஷணம் பண்ணும் ரகு குலத்தில் மேலானவனை ராமனுய் அவதரித்தவனே! அப்படிப்பட்ட பெரும் பாவம் செய்த காகாஸுரன் விஷயத்தில் சரணுகதன் என

நினைத்து நீ அருளினாய். குற்றத்தை அறியாதவன் போல் இருப்பவனே! கிருஷ்ணா! ஒவ்வொரு பிறவியிலும் அபராதம் செய்த சிசுபாலனுக்கு பரமஸாம்யரூபமான மோக்ஷத்தை அருளினாய். அப்படிப்பட்ட உன்னுடைய பொறுமைக்கு இலக்காகாத பாபமானது என்ன இருக்கிறது? (நீயே) சொல்வாயாக.

---

यद्यपि चिन्तयन्त्यादीनां एतस्मिन् जन्मनि शिक्षा-विशेषो नोपपद्यते, तथापि पूर्वेषु जन्मसु शिक्षा-विशेषेण उपायविशेषनिष्ठतां प्राप्य प्रारब्धकर्मविशेषेण कानिचित् जन्मानि अनुभूय अन्तिम-जन्मविशेषे पूर्ववासनावशादेव भगवत्-प्रावण्यं उपलभ्य परम-पुरुषार्थरूपं वैकुण्ठवासिभिः सह भगवत्-कैङ्कर्यं प्रापुः इति। रहस्य-त्रय-परिज्ञानवन्तः सर्वेऽपि सर्वपाप-मोक्षणं प्राप्स्यन्ति इति उचितं एतत्।

१०७. अस्तु जन्मान्तर-शिक्षितानां चिन्तयन्त्यादीनां अपवर्गः। बहुषु जन्मसु भगवद्-विरोधं आचरतः तस्मिन्नपि जन्मनि परश्शतं अपकारिणः शिशुपालस्य 'प्रतिभवं अपराद्धुः मुग्ध सायुज्यदोऽभूः' इति मोक्षप्रदानं कथं उच्यते ?

तत्रापि वदामः।

शिशुपालादयोऽप्येवं पूर्वशिक्षा-विशेषतः।
शापावसाने संप्राप्ताः शाश्वतं परमं पदं॥

शिशुपालादयः खलु पूर्वमेव श्रीविष्णुलोके द्वारपाल-अधिकारं प्राप्ताः कर्मवश्या एव कतिचन क्षेत्रज्ञाः भागवतापचारविशेषेण जन्मत्रयं प्रतिकूल-वृत्तयो भूत्वा पुनस्तु अपचार-फलावसाने स्वपदं प्राप्य क्रमेण सर्वपाप-विमोक्षण-पूर्वकं भगवत्-प्राप्तिरूप-परमपुरुषार्थं प्रापुः इति पौराणिकी

108. இப்படி रहस्यत्रय-विषयமாக†[1] வரும் சங்கைகளுக்கு பரிஹாரங்கள் உதாஹரித்தாலும், मायावादादि-सिद्धान्तங்களாலே மயங்கின मनुष्यादिகளுடைய मति-मान्द्यத்தாலே[1] வரும் சங்கைகளுக்கு எல்லையுண்டோ ? அவை எல்லாம் பரிஹரித்து ஒருவனுக்கு विशद-ज्ञानம் தேடக்கடைப்படுமோ? என்னில் —— उक्त-प्रकारத்தாலே प्रधानांशம் தெளிந்தால் இத் दिक्காலே மற்றுமுள்ள சங்கைகளுக்கெல்லாம் பரிஹாரங்கள் பல शास्त्रங்களிலும் श्री भाष्यादिகளிலும் व्याप्तராய்†[2], ''திருந்தக் கண்டு எனக்கொன்று உரையாய்''*[1] என்னும்படி நிற்கிற தெளிவுடைய द्विजवरரோடே[2] சீலித்துத்[3] தெளியக்†[3] கண்டுகொள்ளலாம்.

प्रधानமல்லாத அம்சத்தில் தெளிவில்லாத போதும் प्रधानांशம் தெளிகையாலே फलसिद्धिஉண்டாம்.

---

1—புத்திக்குறைவாலே. 2—ப்ராஹ்மண ச்ரேஷ்டர்களோடு. 3—பழகி.

†1—ரஹஸ்ய விஷயமாக[1]. 2—ப்ராப்த ஜ்ஞாநராய்[4]. 3—தெரிய[1].

*1. திருந்தக்கண்டு எனக்கொன்றுரையாய் ஒண்சிறு பூவாய்!*
செருந்தி ஞாழல் மகிழ் புன்னைசூழ் தண்திருவண்வண்டூர்*
பெருந்தண் தாமரைக்கண் பெருநீள்முடி நால்தடந்தோள்*
கருத்திண் மாமுகில் போல் திருமேனியடிகளையே.

திருவாய். (6-1-8): அழகிய சிறிய வடிவுடைய சாரிகைப் பறவையே! செருந்திமரம், ஞாழல்கொடி, மகிழமரம், புன்னை மரம் ஆகியவைகளால் சூழப்பட்ட குளிர்ந்த திருவண்வண்டூரில் எழுந்தருளியிருப்பவனும், அருளொழுகும் தாமரைக் கண்கள், நீண்ட திருமுடி, அகன்ற நான்கு தோள்கள், நீருண்ட மேகம் போல் கருத்த திருமேனி இவற்றை உடையவனுமான என் ஸ்வாமியை (எம்பெருமானை) நன்ருகப் பார்த்து வந்து அவன் திருமேனி அழகையும் அவன் சொல்லும் ஒரு வார்த்தையையும் உன் வரவை எதிர் பார்த்திருக்கும் எனக்குச் சொல்வாயாக.

प्रक्रिया । अतः तेषामपि पूर्वतन-अध्यात्म-शिक्षैव क्रमात् मोक्षाय अभवत् इति सिद्धं एतत् ।

१०८. इत्थं केषांचित् शङ्काविशेषाणां परिहारेऽपि शङ्करादि-सिद्धान्त-प्रवण-अभिहित-शङ्कासहस्र-उद्धारः सहसैव कर्तुं न शक्यते । तथा च सर्व-शङ्का (शङ्कु)-उद्धारः कथमिव जाघटी ?—इति

सर्वं अपि संघटते ।

**अनयैव दिशा सर्व-शङ्का-शंकु-निरासतः ।**
**निरङ्कुश-धियः तत्वं पश्यन्तु हरिकिङ्कराः ॥**

एवं उक्त-प्रकारेण अवश्य-वेदितव्येषु अर्थेषु केषांचित् शङ्काशङ्कूनां निरासे शिष्टानामपि निश्शेष-निरासार्थं आचार्य-ग्रन्थेषु यथावत् अर्थ-अनुसन्धानपरैः नारायण-परायणैः द्विजवरैः सह परिशील्य सम्यक्-ज्ञानवद्भिः भवितव्यं इति सर्वं अवदातं ।

**इत्थं हैतुक-संप्रदाय-पदवी-निष्णात-विद्वत्-भटी-**
**ग्रीवा-भङ्गं अवातनोत् हि वरदाचार्यो विपश्चित् स्वयम् ।**
**शङ्कातङ्क-विधूननं शतमिदं शान्ताशय-प्रीतये**
**श्रीमल्लक्ष्मण-योगिराज-पदवी-प्रस्थान-जैत्रध्वजः ॥**

அலர்ந்தவம்புயத்திருந்து தேனருந்தி இன்னகல்
அல்குலாரசைந்தடைந்த நடைகொளாததனமென்னோ
நலம் தவிர்ந்ததால் அதென்கொல் நாவின் வீறிழந்ததால்
நாவணங்குநாதர் தந்த நாவின் வீறிழந்ததென்†1
சலந் தவிர்ந்து வாது செய்து சாடிமூண்ட மிண்டரைச்
சருவிலா ரெனக்கனைத் துரைத்த வேதிராசர்தம்†2
வலந்தரும் கைநாயனார் வளைக்கிசைந்த கீர்த்தியால்
வாரிபாலதாமதென்று†3 மாசில் வாழிவாழியே. (33)

श्रीमद्वेङ्कटनायकेन वहता शेषामिवाज्ञां सतां
शेषाशीविषदन्त पंक्तिसुषमा सच्छायतर्कश्रिया ।
अध्यारोपित तत्तदुक्तिकलहैः अध्यात्मलब्धात्मनां
शङ्कानां परिहार पद्धतिरियं दिङ्मात्रतो दर्शिता ।।*1

---

†1—வீறழிந்ததென்[4]. 2—எதிராசர்தம்[4]. 3—வாரி பாலதாமதெனறு[1].

(33) ஒரு பொய்கைக் கரையில் இருவர் ஸம்பாஷிக்கின்றனர்:-

ஒருவர்: அலர்ந்த அம்புயத்து இருந்து தேன் அருந்தி இன் அகல் அல்குலார் அசைந்து அடைந்த நடை அனம் கொளாதது என்?——மலர்ந்த தாமரைப்பூவில் உட்கார்ந்து அதில் உள்ள தேனைப் பருகி, அழகிய அகன்றஅல்குலை உடைய ஸ்த்ரீகளின் அசைந்து நடக்கும் நடையை அன்னப் பறவை (பழகிக்) கொள்ளாமல் (வருந்தி வாடிக்) கிடப்பதன் காரணம் என்ன ?

மற்றவர்: நலம் தவிர்ந்ததால்— —தன் பெருமையை அது இழந்து விட்டதால் வருந்திக் (கிடக்கிறது).

ஒருவர்: அது என்கொல் ?——அது என்ன? விளக்கம் கூறுங்கள்.

மற்றவர் : நாவின் வீறு இழந்ததால்—(தன்) நாவிற்குள்ள (பாலையும் நீரையும் பிரிக்கும்) சக்தியை இழந்து விட்டதால் (வருந்துகிறது).

**ஒருவர்:** நா அணங்கு நாதர் தந்த நாவின் வீறு இழந்தது என்.
— —வாக்கு தேவதையாகிய ஸரஸ்வதியின் கணவனுன ப்ரஹ்மாவால் கொடுக்கப்பட்ட நாவின் அந்தச் சக்தியை ஏன் (இது) இழக்கவேண்டும் ?

**மற்றவர்:** மூண்ட மிண்டரை சலம் தவிர்ந்து வாது செய்து சாடி, சரிவு இலேன் எனக் கனைத்து உரைத்த வலம் தரும் கை நாயனுர் வளைக்கு இசைந்த கீர்த்தியால் வாரி பாலது ஆம் என்றும் மாசில் அது வாழி வாழி——அடிக்கடி வாதத்திற்கு வந்த முரடர்களான வாதிகளை குற்றமில்லாது வாதம் செய்து ஜயித்து (இன்னும் யார் வாதம்புரிய வந்தாலும்) தளர மாட்டேன் என்று கர்ஜித்துக் கூறிய ஸ்ரீ பாஷ்யகாரருடைய புகழ் வளர்ந்து ஆச்ரிதர்களுக்கு வேண்டியதைத்தரும் கையையுடைய எம்பெருமானது சங்கம் போன்று வெண்மையான அப்புகழ் உலகெங்கும் பரவியதால் ஜலம் முழுதும் (வெண்மையான) பாலாகிவிட்டது. (எனவே அன்னத்தினிடம் உள்ள பாலையும் நீரையும் பிரிக்கும் சக்தி பயன்பட இடமில்லாது போயிற்று) அந்தச் சக்தியால் தானே அன்னத்திற்கு பெருமை. அதை எண்ணித் தன் பெருமை போனதற்கு இவ்வன்னம் வருந்திக் கிடக்கிறது.) எக்காலத்திலும் குறைவு படாத அந்தப் புகழ் வாழக்கடவது. (புகழை வெண்ணிறமாகக் கூறுவது கவிமரபு)

*1 अध्यारोपित—(உண்மையில் இல்லாது ஏற்றி உரைக்கப்பட்ட; तत्तदुक्ति-कलहैः—அவரவர்களின் கூற்றுகளினுல் வரும் சச்சரவுகளால்; अध्यात्म—வேதாந்த விஷயத்தில்; लब्धात्मनां—உருவம் பெற்றவையான; शङ्कानां—ஸந்தேஹங்களுக்கு; सतां आज्ञां—பெரியோர்களின் கட்டளையை; शेषामिव—பரியட்டத்தைப் போல; वहता—(தலை மேல்) கொள்ளுமவரான; श्रीमद्वेङ्कटनायकेन—ஸ்ரீமத் வேங்கடநாதனுல்; शेष अशीविष—ஆதிசேஷனின் கொடிய நஞ்சை உடையவைகளான; दन्त-पङ्क्ति—सुषमा-सच्छाय—பற்களின் வரிசையின் அழகை ஒத்த तर्कश्रिया—யுக்திகளின் பெருமையைக்கொண்டு; इयं परिहार-पद्धतिः—இந்த பரிஹாரம் செய்யும் வழி; दिङ्मात्रतः—திசையைக்காட்டும் அளவில் (ஓரளவுக்கு) மட்டும்; दर्शिता—காட்டப்பட்டது.

स्तोतुं निंदितुं अस्मदुक्तिमथवा सोढुं समूढं जगत्
किं नच्छिन्नमनन्तचिन्तनरसे सुस्थे सुखं तस्थुषाम् ।
शिष्याशिशक्षित-बुद्धयः श्रुतिपथे येषां वयं ये च नः
तत्सन्तोष समर्पणक्षममिदं साडंबरैः किं परैः ॥

சடையன் திறலவர்கள் பெருஞானக் கடலதனை
இடையமிழாது கடக்கினும் ஈதளவென்றறியார்
விடையுடனேழன்றடர்த்தவன் மெய்யருள் பெற்ற
நல்லோர்
அடைய அறிந்துரைக்க அடியோமுமறிந்தனமே. (34)

॥ इति निगमनाधिकारः चतुर्थः ॥

इति कवितार्किक सिंहस्य सर्वतन्त्र स्वतन्त्रस्य
श्रीमद्वेंकटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
विरोध परिहारः संपूर्णः ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

---

समूढं जगत्—அறிவிலிகள் நிறைந்த உலகம்; अस्मत्—उक्ति—நம்முடைய சொல்லை; स्तोतुं—புகழ்வதற்கோ; अथवा—அல்லது; निन्दितुं—இகழ்வதற்கோ; सोढुं—பொறுத்துக் கொள்வதற்கோ; (முன் வரட்டும்). सुस्थे—நிலையான; अनन्त-चिन्तन-रसे—எம்பெருமானைச் சிந்திக்கும் சுவையில்; सुखं—இன்பத்தை; तस्थुषां—பெற்றவர்களான; नः-நமக்கு; किं छिन्नं—என்ன நஷ்டம் வரும்? येषां—எவர்களுக்கு; वयं—நாம் ஆசார்யரோ; ये च—எவர்கள்; नः—நம்மைச் சேர்ந்தவர்களோ; शिष्याः—(அத்தகைய) நம் சிஷ்யர்கள்; श्रुतिपथे—வேதாந்த மார்க்கத்தில்; शिक्षित-बुद्धयः—படித்துத் தேறிய ஜ்ஞா

நத்தை உடையவர்களாயுள்ளனர். इद—இந்த நூல்; तत् सन्तोष - समर्पणक्षमं—அவர்களுக்கு மகிழ்ச்சி அளிப்பதில் ஸாமர்த்தியமுடையது. साडम्बरैः—ஆடம்பரம் செய்கிற; परैः—பிறர்களால்; किं—(நமக்கு ஆகவேண்டியது) என்ன ?

34. சடையன் திறலவர்கள்—சடையைத் தரிக்கும் சிவனுடைய பலத் (தால் ஜ்ஞாநத்)தைப் பெற்றவர்கள்; பெருஞானக் கடலதனை—பெரிய ஜ்ஞாநமாகிய ஸமுத்ரத்தை; இடை அமிழாது கடக்கினும்—நடுவில் அமிழ்ந்து போகாது தாண்டினாலும் (எவ்வளவு ஜ்ஞாநம் பெற்றாலும்); ஈது அளவு என்று அறியார்—இதுதான் (அந்த ஜ்ஞாநஸமுத்ரத்தின்) அளவு என்று அறியமாட்டார்கள். அடியோமும்—பாகவதர்களான நாமோவெனில்; அன்று ஏழு விடை உடன் அடர்த்தவன்—முன் ஒரு நாள் ஏழு காளைகளையும் ஒரே ஸமயத்தில் ஒரு சேர அடக்கிய கண்ணனுடைய; மெய் அருள் பெற்ற நல்லோர்—நிலையான க்ருபையைப் பெற்ற சிறந்த ஆசார்யர்கள்; அடைய அறிந்து உரைக்க—முழுதும் (ஸாரார்த்தங்களைத் தாங்கள்) அறிந்து (நமக்கு) உபதேசிக்க; அறிந்தனம—ஜ்ஞாநத்தைப் பெற்றோம்.

விரோத பரிஹாரம் முற்றும்

---

मुक्तिं शिष्य-करस्थयामि मुरभिद्-भक्तिं व्यवस्थापये
तद्-भक्तेषु च कारयामि नियतं भक्तं समस्तं जनम् ।
राजन्यानपि रञ्जयामि समये रामानुजार्योक्तिभिः
सर्वारीनपि साहसेन विजयी (चो) भोक्रमिरीमि क्षितौ ।।

इति निखिल - तार्किक - चूडामणिना सर्वतन्त्र - स्वतन्त्रेण
उभयवेदान्ताचार्येण श्रीमत्-वरदनाथार्येण संस्कृते कृते
विरोध-परिहारे निगमनाधिकारः चतुर्थः ।

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ।

# ॥ ९. मुनिवाहन-भोगः ॥

# 9. முநிவாஹந போகம்**

[முனிவாஹநர் பெரிய பெருமாளை அநுபவித்த முறையை அவர் பிரபந்தத்திற்கு உரையின் வாயிலாக [1]வெளியிடும் க்ரந்தம்]

व्यचिरचदसति भक्त्या विरक्त-
तोषाय वेङ्कटेशकविः ।
मुदित-मुकुन्द-विलोकन-
मुनिवाहन-सुकवि-सूक्तिमिमाम्†1 ॥†2

பாவளரும் தமிழ் மறையின் பயனே கொண்ட
பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தில்*
காவலனும் கணவனுமாய்க் கலந்து நின்ற
காரணனைக் கருத்துற நாம்†3 கண்டபின்பு*
கோவலனும் கோமானும் ஆனவந்நாள்
குரவை புணர் கோவியர் தம் குறிப்பே கொண்டு*
சேவலுடன் பிரியாத பெடைபோல் சேர்ந்து
தீவினையோர் தனிமையெல்லாம் தீர்ந்தோம் நாமே (35)

---

** ரஹஸ்யங்களில் 28வது; அம்ருதாஸ்வாதிநீ ரஹஸ்யங்களில் 9வது. முநிவாஹநர் = லோக ஸாரங்க முனிவரின் தோளில் அமர்ந்து அவரை வாஹநமாகக் கொண்ட திருப்பாணாழ்வார்.

†1. मुकुन्द विलोकन मुनिवाहन सूक्तिपङ्क्तिमिमाम् ।

†2. प्रणतिं वेंकटेशस्य पदयोर्विदधीमहि ।
यदुक्तयो यतीन्द्रोक्तिरहस्यानां रसायनम् ।।

என்று அதிகமாக ஒரு சுலோகம்[4]. 3—நான்[1].

मुदित-मुकुन्द-विलोकन—பக்தனைக்காண மகிழ்ந்த உள்ளத்தனை முகுந்தனை(திருவரங்கனை)க் கண்டு களிக்க விரும்புகின்றவரும்; मुनिवाहन—(ஒரு காலத்தில்) லோகஸாரங்கமாமுனிவரை வாஹனமாகக் கொண்டவரும்; सुकवि-सूक्ति इमां—நற்கவிஞருமான திருப்பாணாழ்வாரின் (அமலனாதி பிரான் என்னும்) இந்த ஸ்ரீ ஸூக்தியை; वेङ्कटेशकविः—வேங்கடநாதன் என்னும் கவிஞர்; भक्त्या—பக்தியுடன்; विरक्त-तोषाय—ஐம்புலன்களை அடக்கி எம்பெருமானைக் காணவிழையும் பாகவதோத்தமர்கள் மகிழ்வதின் பொருட்டு; व्याचिख्यासति—வியாக்யானம் செய்ய விரும்புகிறார்.

35. பா வளரும் தமிழ் மறையின்—பாசுரங்கள் நிறைந்துள்ள தமிழ் வேதமாகிய திவ்யப்ரபந்தத்தின்; பயனே கொண்ட—ஸாரார்த்தங்களே அடங்கப் பெற்றவையும்; பாண்பெருமாள் பாடியது—திருப்பாணாழ்வாரால் பாடப் பெற்றவையுமான; ஓர் பாடல் பத்தில்—(அமலனாதி பிரான் என்னும்) நிகரற்ற பத்து பாசுரங்களால்; காவலனும் கணவனுமாய் கலந்து நின்ற காரணனை—(அனைத்தையும்) காப்பவனும், நாயகனுமாய் (எல்லா வஸ்துக்களிலும் அந்தர்யாமியுமாய்)க் கலந்து நிற்கின்ற ஸர்வ காரணனை எம்பெருமானை; நாம் கருத்து உற கண்ட பின்பு—நாம் மனத்தில் பதியுமாறு அறிந்த பின்பு; கோவலனும் கோமானுமான அந்நாள்—கோபாலனும் (யது வம்சத்து) அரசனுமாய் அவதரித்திருந்த அக்காலத்தில்; குரவை பிணை—(அவனுடன்) ராஸக்ரீடை புரிந்தவர்களான; கோவியர் தம் குறிப்பே கொண்டு—இடைப் பெண்களின் உள்ளக் கருத்தையே (நாமும்) கொண்டு; சேவலுடன் பிரியாத—ஆண் பறவையை விட்டு நீங்காத; பெடை போல சேர்ந்து—பெண் (அன்றில்) பக்ஷி போல் (நாமும் எம்பெருமானைச்) சேர்ந்து; தீ வினையோர் தனிமை எலாம்—பாபிகளுக்குள்ள உதவியற்ற நிலையெல்லாம்; நாம் தீர்ந்தோம்—நாம் நீங்கப் பெற்றோம். (குறிப்பு: — திருக்கோட்டியூர் ஸ்வாமி தாளபத்ர கோசத்தில் பாசுரங்கள் 35-ம் 37-ம் ஒன்றுக்கொன்று இடம் மாறியுள்ளன).

காரணவிசேஷம் இன்னது என்று அறுதியிட அரிதாயிருப்பதொரு भगवत्-कटाक्षத்தாலே अयत्न-लब्ध மான परतत्त्व-परमहित-परमपुरुषार्थ விவேகத்தையுடையராய், अनादिकाल-प्रवृत्तங்களான[1] क्षुद्र-पुरुषार्थ-रागादिகளையும் क्षुद्र-पुरुष-स्तोत्रादिகளையும்[2] क्षुद्र-पुरुषार्थ-प्रवृत्तिகளையும்[3] தப்பின தம்முடைய करणत्रयமும் இப்போது प्राप्तமான एकविषयத்திலே अनन्यप्रयोजन-अनुकूलवृत्तिயை உடைத்தான படியைக் கண்டு सन्तोषयुक्तரான திருப்பாணாழ்வார் பின்பு परमपदத்திலே பெறும் பேற்றை இங்கே பெரிய பெருமாள் திருவடிகளிலே†[1] பெற்று, இப்பேற்றை அடி தொடங்கி, "அமலன் ஆதி பிரான்" முதலான பத்துப் பாட்டாலே अनुभव-परीवाहமாக[4] அருளிச் செய்கிருர்.

இப் प्रबन्धம் अतिविस्तरம், अतिसङ्कोचம், अधिकृत-अधिकारत्वம்[5](†[2]), दुर्ग्रहत्वம், दुरवबोधार्थत्वம்[6], संशयादि-जनकत्वம், †[3]विरहक्लेशம், दूतप्रेषणம்[7] परोपदेशம் परमत-निरसनம் என்ருற் போலே மற்றுள்ள अध्यात्म-प्रबन्धங்களில் உள்ளவை யொன்றுமின்றிக்கே †[4]अनुभव-घनरसமாயிருக்கிறது[8] முதற்பாட்டான 'அமலனுதிபிரான்' தொடங்கி, கொண்டல்வண்ணனை' என்கிற தலைக்கட்டும்†[5] பாட்டளவும்.

**1.** இதில் முதற்பட்ட மூன்று பாட்டுக்கு முதலான அக்ஷரங்கள்†[6] மூலமாகிய ஒற்றை எழுத்தின் முதல் நடுவிறுதியானவை. இதில் முதற்பாட்டு திருமந்திரத்திலும் த்வயத்திலும் முமுக்ஷுவுக்கு अवश्य-अनुसन्धेयங்களான अर्थங்களை सूचिப்பிக்கிறது†[7].

அமலனாதி பிரான்
அடியார்க்கு என்னையாட்படுத்த
விமலன்*விண்ணவர்கோன்
விரையார் பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன்
நீள் மதிளரங்கத்தம்மான்*திருக்
கமலபாதம் வந்து என்கண்ணின்
உள்ளன வொக்கின்றதே. (1)

அமலன் —— என்றது मल-प्रतिभटன்[9] என்றபடி; இத்தால் मोक्षप्रदत्वம் சொல்லிற்றாயிற்று. இது प्रधान-மான रक्षकत्वமாகையாலே பிரியப் பேசப்படுகிறது. ஆதி —— 'एषकर्ता न[†8] क्रियते'[*1] इत्यादिகளிற்படியே सर्वजगत्-एककारणभूतன். இத்தால் 'காரணமே शरण्यம்[†9]' என்கிற படியே முமுக்ஷுவுக்கு சரணமாகப் பற்றப்படுமவன்

1—அநாதிகாலமாகத் தொடர்ந்து வரும். 2—தாழ்ந்தவர்களைத் துதித்தலையும். 3—தாழ்ந்த புருஷார்த்தங்களுக்காக முயற்சித்தலையும். 4—அநுபவம் உள்ளடங்காமல் பெருகுவதால். 5—இன்னார் மட்டும் பயிலலாம் என்ற வரையறை. 6—எளிதில் புரியாத அர்த்தத்தை உடைமை. 7—தூது விடுதல். 8—அநுபவத்தின் திரண்ட ரஸமாயிருக்கிறது. 9—தோஷங்களுக்கு எதிர்தட்டானவன்

†1—திருவருளாலே[1]. 2—अनधिकृताधिकारत्वம்[1]. 3—"विरहक्लेशம்போலே" என்பதற்கு பதில் "विरह-क्लेशबहुलत्वம், दूतप्रेषण-भाषणान्वितत्वம், परोपदेशरूपत्वம், परमतनिरासान्वितत्वம் என்றாற்போலே"[4]. 4—भगवदनुभव[4]. 5—தலைக்கட்டு. 6—அக்ஷரம். 7—"இந்த ரஹஸ்யத்திற்கு மூல ப்ரபந்தம்" என்று அதிகம்[1]. 8—"न" என்பது இல்லை[4]. 9—शरणம்[1].

*1. (?) : இவனே எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிப்பவன். இவன் ஒருவராலும் ஸ்ருஷ்டிக்கப்படுவதில்லை.

என்று **फलितम्**[1]. இக் **कारणत्व**மும் **मोक्षप्रदत्व**மும் **छत्र-चामर**ங்கள் போலே **सर्व-लोक-शरण्य**னுக்கு **विशेष-चिह्न**ங்கள். பிரான் —— "**करुणा क्वापि**[†1] **पुरुषे**"[*1] **इत्यादि**களிற்படியே **सर्वोपकारक**ன்[†2]. இங்கு **आत्मा**க்களுடைய **सत्ता-स्थापन**ம்[†3] முதலாக, **परिपूर्ण-कैंकर्य-प्रदान-पर्यन्त**மாக **प्रत्युपकारादि-निरपेक्ष**னானவனுடைய[†4] **अनुकंपा-कृत्य**ங்களெல்லாம்[2] **सामान्येन** சொல்லப்படுகிறது. இதெல்லாம் **प्रथमाक्षर-अर्थ**மான **रक्षण-भेद**ம். இவைதம்மளவில் பர்யவஸித்த படியிலே[3] இம்மூன்று **पद**த்திற்கும் தாத்பர்யம். இது மேல் பாசுரங்களிலும் காணலாம்.

**அடியார்க்கு என்னை ஆட்படுத்த** —— என்கிற இடத்தில் "அடியார்" என்கிற இத்தாலே **तृतीयाक्षर**த்திலே சொன்ன **जीववर्ग**மும், ஜீவர்களுக்கு ஈச்வரனைக் காட்டில் வேறுபாடும், அந்யோந்யம் பிரிவும் காட்டப்படுகிறது. 'அடியார்' என்ருல் **सर्व-साधारण**மாக **चतुर्थि**யில் சொன்ன **तादर्थ्य**வான்களையெல்லாம்[4] காட்டிற்றே யாகிலும், இங்கு 'அடியார்' என்கிறது "**यो ह्येनं पुरुषं वेद देवा अपि न तं विदुः**"[*2] என்னும்படி **अपरिच्छेद्य-माहात्म्य**ரான[5] **शेषत्वज्ञान**ரஸிகரை. இப்படி "அடியார்க்கு" என்று **विशेषोपादान**ம்[6] பண்ணுகையாலே[6] **मध्यमाक्षर**த்தின்படியே **निरुपाधिक-शेषि**கள்[7] வேறு இல்லாதபடியும் **कर्मोपाधिक-शेषि**களோடு[8] தமக்குத் துவக்கற்றபடியும் சொல்லிற்ருயிற்று. **सर्वशेषि**யாகையாலே **सर्व**த்தையும் **यथेष्ट**மாக **विनियोगि**க்கப் **प्राप्त**னாய், **निरङ्कुश-स्वतन्त्र**னாகையாலே ஸர்வத்தையும் **यथेष्ट**மாக விநியோகிக்க **शक्त**னுமான **सर्वेश्वर**ன் **अनन्य-प्रयोजन**ரான **आश्रित**ர்க்கு **सर्व**மும் **शेष**மாகக் கடவது என்கிற **विनियोग-विशेष**த்தாலே **सर्व**ருக்கும் **भागवत-शेषत्व**ம் **नित्य-सिद्ध**மானல், **अनन्य-प्रयोजन**ரான **आश्रित**ர்க்கு **भागवत-शेषत्व**ம் **ईश्वर**ன் தன்னையும்

भागवतரையும்†[5] ஒழிந்த अन्यரைப்பற்ற शेषत्वமில்லாத படி†[6] வருகிறதாய்†[6], இதின் फलமான கைங்கர்யமும் இப்படி வருகிறதாகையாலே "என்னை அடியார்க்கே ஆட்படுத்தினான்" என்கிற†[7] अवधारणமும்[9] இங்கே विवक्षितம். "மற்றுமோர் தெய்வம் உளதென்றிருப்பரோடு உற்றிலேன்" (96*[2]) என்றிறே இவர்

---

1—முடிவான பொருள். 2—தயையால் செய்யப்படும் காரியங்கள் எல்லாம். 3—முடிவாகத் தீர்ந்தபடியாலே. 4—அவனு (எம்பெருமானு)க்காகவே உள்ளவர்களையெல்லாம். 5—அளவிட முடியாத பெருமையுள்ள. 6—தனித்துக் கூறுவதாலே. 7—வேறொரு காரணமின்றி இயற்கையாகவே சேஷிகள். 8—கர்மாவின் காரணமாக சேஷிகளோடு. 9—(தேற்றம்) வலியுறுத்திச் சொல்லுதல்.

†1—करुणां च क्वापि[4]. 2—ஸர்வோபகரணம்[1]. 3—सत्तादि-स्थापनம்[1] 4—प्रत्युपकारादि-निरपेक्षனவனுடைய[5]. 5—भागवतரை[1]. 6—शेषत्वप्रसङ्गமில்லாதபடி வருகிறதாயிற்று[4]. 7—என்ற[1].

*1. (?): எத்தனையேனும் தாழ்ந்த புருஷனிடமும் எம்பெருமானின் கருணை வெள்ளமிடுகிறது.

*2. यो ह्येनं पुरुषं वेद देवा अपि न तं विदुः ।
सर्वमाश्चर्यमेतस्मिन् निवृत्तं राजसत्तम ॥

பார. (வந-160-21): எவன் இந்த க்ருஷ்ணனை உள்ளபடி அறிகிறானோ அவனுடைய பெருமையை நித்யஸூரிகளும இவ்வளவு என்று அறியார்கள். இவன் ஆதியும் முடிவும் இல்லாதவனாயும், வ்யக்தமாயும, அவ்யக்தமாயும், ஸூக்ஷ்மமாயும், ப்ருஹத்தாயும், காரணமாயும், கார்யமாயும், அறியப்படுபவனாயும், அறியப்படாதவனாயும் இருக்கிறான். எனவே இவனிடத்தில் வியப்பிற்குரியவைகளும், மேன் மேலும் அறியத்தூண்டுபவைகளுமான தன்மைகள் சூழ்ந்திருக்கின்றன. (மார்கண்டேயர் தர்மபுத்ரனுக்கு உபதேசித்தது)

களுடைய பாசுரம். என்னை ஆட்படுத்த——"यूयं इन्द्रिय-किङ्कराः"*[1] என்னும்படி इन्द्रिय-किङ्करனாய் வைத்து அதற்கு மேலே 'ईश्वरोऽहं'(59*[3]) என்று இருக்கக் கடவ என்னை "अतोऽहमपि ते दासः"*[2] என்னப் பண்ணின உபகாரத்திற் காட்டிலும் "உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" (96*[2]) என்னப் பண்ணி இதற்கு மேலொரு உபகாரமுண்டோ என்று இப் பரமோபகாரத்தையும் பிரியப் பேசுகிறார். இது நமஸ்ஸின் तात्पर्यार्थம்.

கீழ்ச் சொன்ன कर्तृत्वादिகளிலே†[1] எருத்துக் கொடியுடையான் முதலான आत्मान्तरங்களுக்குப் போலே अज्ञानादि-दोषங்கள் இவனுக்கு உண்டாகில், இவன் முன்பு சொன்ன साक्षात्-मोक्षप्रदानம் பண்ண வல்லனோ என்ன, விமலன்——नित्य-निर्दोषன். இத்தால் बद्ध-मुक्त-विलक्षणன் என்றதாயிற்று. 'இவ்வளவு ஸூரிகளுக்கும் இல்லையோ ?' என்ன, விண்ணவர் கோன்——पराधीन-शुद्धि-योगத்தையுடையரான[1] ஸூரிகளைக்காட்டில் வேறுபட்டவன்; இத்தாலே ஸூரிஸேவ்யமான पररूपமும் தோன்றுகிறது. 'இப்படி எட்டா நிலத்திலே இருக்குமிருப்பு இங்குள்ளார்க்கு நிலமன்றே' என்ன[2], விரையார் பொழில் வேங்கடவன்——பரிமளம் வடிவு கொண்டாற் போலே இருக்கிற திருச்சோலைகளையுடைய திருமலையிலே "கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு"*[3] என்கிறபடியே எல்லார்க்கும் आश्रयிக்கவும் अनुभविக்கவுமாம்படி இருள் தருமா ஞாலத்துள் குன்றத்திட்ட விளக்காய் நிற்கிறவன்†[2]. அந்தமில் பேரின்பத்துள்ளாருடைய आमोदத்தைக்[2] காட்டில்[3] "எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனுமாவேனே"*[4] என்னும்படி பிறந்த

1—பிறரால் (எம்பெருமானுல்) சுத்தியைப் பெறுபவர். 2—கிடைக்கக் கூடியதல்ல எனில். 3—ஆநந்தத்தைவிட.

1—कतृत्वादिகளாலே[2]. 2—நிற்கிறவவன்[1].

*1. अद्यप्रभृति हे लेका यूयं यूयं वयं वयम् ।
अर्थकामपरा यूयं नारायणपरा वयम् ॥
नास्ति सङ्गतिरस्माकं युष्माकं च परस्परम् ।
वयं तु किङ्करा विष्णोः यूयमिन्द्रियकिङ्कराः ॥

திருவயிந்திரபுரத்தில் வில்லிபுத்தூர்ப் பகவர் வார்த்தை (?) : உலகினரே ! இன்று முதல் நீங்கள் வேறு; நாங்கள் வேறு. நீங்கள் செல்வத்திலும் இன்பத்திலும் ஈடுபட்டவர்கள்; நாங்கள் நாராயணனிடம் ஈடுபாடுடையர். உங்களுக்கும் எங்களுக்கும் ஒருவருக்கொருவர் ஸம்பந்தமில்லை. நாங்கள் எம்பெருமானுக்கு அடிமைகள்; நீங்கள் இந்த்ரியங்களுக்கு அடிமைகள்.

*2. दासभूताः स्वतस्सर्वे ह्यात्मानः परमात्मनः ।
अतोऽहमपि ते दास इति मत्वा नमाम्यहम् ॥

மந்த்ர ஸ்தோ. (12) : எல்லா ஆத்மாக்களும் பரமாத்மாவுக்கு இயற்கையிலே தாஸர்கள். ஆதலின் அவர்களுள் ஒருவனை நானும் உனக்கு தாஸன் என்ற கருத்துடன் உன்னை வணங்குகின்றேன். (சிவன் கூறுவது)

*3. கண்ணாவான் என்றும்* மண்ணோர் விண்ணோர்க்கு*
தண்ணார் வேங்கட* விண்ணோர் வெற்பனே.

திருவாய். (1-8-3) : இந்த உலகிலுள்ள ஸம்ஸாரிகளுக்கும் பரமபதத்திலிருக்கும் நித்யஸூரிகளுக்கும் எப்பொழுதும் நிர்வாஹகனுயிருக்கும் எம்பெருமான் நித்யஸூரிகளும் வந்து ஸேவிக்கும்படி குளிர்ந்த திருவேங்கடம் என்னும் திருமலையிலே எழுந்தளியிருக்கிறுன்.

*4. உம்பருலகாண்டு ஒருகுடைக்கீழ்* உருப்பசிதன்
அம்பொற்கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்*
செம்பவளவாயான் திருவேங்கடமென்னும்*
எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனுமாவேனே,

**स्थावर**ங்களுடைய **आमोद**ம் **अतिशयित**மாயிருக்கும். இப்படி **सर्व-सुलभ**னுைலும், "அவ்வண்ணத்தவர் நிலைமை கண்டும் தோழீ ! அவரை நாம் தேவரென்று அஞ்சினோமே"*1 என்னும்படி நிற்குமோவென்ன, நிமலன்——**ब्रह्म-रुद्रादि**களும்†[1] அஞ்சி அருளப்பாடு[1] முன்னுக[2] அணுக வேண்டும்படியான **ऐश्वर्य**த்திலே குறும்பறுத்த†[2] நம்பிக்குக் கூசாதே **निरन्तर-संश्लेष** பண்ணலாம்படி[2] தன் **ईश्वरत्व**ச்சுவையாகிற[4](†[3]) **आश्रयण-विरोधि-दोष**த்தை மறைத்து, "**अर्चक-पराधीन-अखिला-त्मस्थितिः**"*2 என்கிறபடியே **आश्रित-पारतन्त्र्य**த்தை வெளியிட்டு நிற்குமவன்†[4]. இப்படி **सौलभ्य-सौशील्य**ங்கள் உண்டானாலும், **आश्रित - दोष**த்தைக் காணுமாகில் அணுகக் கூசார்களோ என்னில், நின்மலன்— "**अविज्ञाता**"*3 என்றும், "என்னடியார் அது

---

பெருமாள் திரு. (4-10) : ஒப்பற்ற தன்னுடைய வெண் கொற்றக் குடையின் நிழலிலே விண்ணுலகங்களையெல்லாம் அரசு புரிந்து, ஊர்வசியினுடைய அழகிய பொன்னுடை அணிந்த அல்குலை அடையப்பெறினும் அதை விரும்பமாட்டேன். சிவந்த பவழம் போன்ற வாயையுடையவனை என் ஸ்வாமியுடைய திருவேங்கடம் என்னும் பெயரையுடைய அழகிய மலை மேலே ஏதேனும் ஒரு பொருளாக ஆகக்கடவேன். □

1—(க்ருபையோடு) அழைப்பதற்கு முன்பாக. 2—நெருங்கிய (இடைவெளியின்றி) சேர்ந்து இருக்கும்படி. 3—அணுக அஞ்சும்படி ஈச்வரனுயிருக்கும் மேன்மையாகிற.

1—ब्रह्म-रुद्रादिகள்[1]. 2—குறும்பற்ற[1]. 3—ईश्वरச்சுவையாகிற[5]. 4—வெளியிடாநிற்குமவன்[4].

*1. மைவண்ண நறுங்குஞ்சிக் குழல் பின் தாழ
மகரம்சேர் குழை இருபாடு இலங்கியாட*
எய்வண்ண வெஞ்சிலையே துணையா இங்கே
இருவராய் வந்தார் என் முன்னே நின்றார்*

கைவண்ணம் தாமரை வாய் கமலம் போலும்
கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே*
அவ்வண்ணத்தவர் நிலைமை கண்டும் தோழீ !
அவரை நாம் தேவரென்று அஞ்சினோமே.

திருநெடு. (12) : (பரகாலநாயகி தான் பரமனை அநுபவித்த படியை தோழியிடம் கூறுவது): தோழியே! மை போன்று கரிய தாகவும் மணம் நிறைந்ததாகவும் அலகலகான தலைமயிர்க் கற்றை பின்னே தொங்கியிலங்க, மீன் போன்ற குண்டலங்கள் இரு பக்கங்களிலும் ஒளிவீசி அசைய, அம்பை எரியும் நிலையிலுள்ள சிறந்த வில்லைத் தனக்குத் துணையாகக் கொண்டு, தன்னுடன் வேறொருவரையும் கூட்டிக் கொண்டு (நாம் பேசும்) இவ்விடத் தில் (ஒரு நாள் என் நாயகன் என் முன்னே) வந்தார். அவரது திருக்கைகளும், திருப்பவளவாயும், திருக்கண்களும், திருவடி களும் செந்தாமரை மலர்களையே ஒத்திருந்தன. அவ்வாறு போக்யமாய்த் திகழ்ந்த நாயகனுடைய இருப்பைக் கண்டும் நாம் அவரைத் தெய்வமாக நினைத்து கணவன் என்று கொள்ள அச்சமுற்றோம்.

*2. आस्तां ते गुणराशिवत् गुणपरिवाहात्मनां जन्मनां
संख्या भौमनिकेतनेष्वपि कुटीकुञ्जेषु रङ्गेश्वर! ।
अर्च्यस्सर्वसहिष्णुः अर्चक-पराधीनाखिलात्मस्थितिः
प्रीणीषे हृदयालुभिस्तव ततश्शीलाज्जडीभूयते ॥

ஸ்ரீரங்கராஜ ஸ்தவம் (2-74) : ஸ்ரீரங்கநாதரே ! தேவரீ ருடைய குணஸமூஹங்களுக்குப் போல அக்குணங்களுக்குப் போக்குவீடான அவதாரங்களுக்கும் எண்ணிக்கை ஒருபுறம் இருக்கட்டும். இப்பூமண்டலத்திலுள்ள ஆலயங்களிலும் க்ருஹங் களிலும் ஆச்ரமங்களிலும் ஆராதிக்கத் தக்கவராயும், எதையும் ஸஹிப்பவராயும், அர்ச்சகர்களுக்கு அடங்கியிருக்கும் எல்லா நிலைமைகளை உடையவராயும் உகந்தருளாநின்றீர். அப்படிப் பட்ட தேவரீருடைய சீல குணத்தினால் (ஆழ்வார்கள் போன்ற) ஸஹ்ருதயர்கள் மோகிக்கிறார்கள். (கருத்து : அர்ச்சாவதாரத் தின் சிறப்பை நினைத்தால் திருக்குணங்கள் போல் எல்லையற்ற விபவாவதாரங்களும் தமக்கு ஒரு பொருளாகத் தோற்றவில்லை என்கிறார்.)

3. ஸஹஸ்ரநாமம் (483) : அடியார்களின் குற்றங்களை பொருட்படுத்தாதவன்,

செய்யார்''*[1] என்றும் சொல்லுகிறபடியே आश्रितர் களுடைய दोषदर्शनமாகிற शरण्यदोषமில்லாதவன். सर्वज्ञ யிருக்கச் செய்தே आश्रितदोषத்தைக் காணான் என்றது, காணுமதுவும்†[1] இவர்களுடைய दोषத்தைக் கழிக்கைக் குறுப்பாம் என்றபடி.

'விமலன்' என்று தொடங்கி, இவ்வஞ்சு पदங் களாலே नारायण-शब्दத்தில் उपायत्व-प्राप्यत्वங்களுக்கு उपयुक्तமான[1] उभय-लिंगत्वமும்[2] उभय-विभूति-निर्वाहकत्वமும் சொல்லிற்றாயிற்று. மேல் இவன் स्वरूपप्राप्त-कैंकर्यरूप மான நிதியிலே†[2] நிரதரான[3] நித்யஸூரிகளுக்கு ஸேவ்யனுமாப் போலே நமக்கும் ஸேவ்யனும் என்று चतुर्थिயில் கருத்தாலே†[3] कैंकर्य - प्रतिसंबन्धित्वத்தை[4] अनुसन्धिக்கிறார். நீதிவானவன்—இங்கு 'வான்' என்கிற शब्दம் ஸூரிஸஹிதமான பரமபதத்தைச் சொல்லு கிறது. 'நீதியை நடத்துவிக்கும் வானிலே வர்த்திக்குமவன்' என்னவுமாம். "तेन वञ्चयते लोकान् मायायोगेन केशवः" (148*[2]) என்கிறபடியே கலக்குவாரும், "अवजानन्ति मां मूढाः"*[1] என்கிறபடியே கலங்கு வாருமில்லாத தேசமாகையாலே "दास्यमैश्वर्य-योगेन ज्ञातीनां च करोम्यहं" (126*[2]) என்றும், "परमेश्वर-संज्ञोऽज्ञ किमन्यो मय्यवस्थिते"*[2] என்றும் இங்கு பிறக்கும் ईश-ईशितव्यத்தின் மாறாட்டம் இல்லாத பரமபதத்திலே नित्यवासம் பண்ணுகிறவன்†[4] என்றதாயிற்று.

---

1—பயன்படும். 2—எல்லா கல்யாண குணங்களும் நிரம்பி இருத்தலும் இழிகுணங்கள் சிறிதும் இல்லாதிருத்தலும். 3—ஈடு பட்டிருக்கும். 4—கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்ளுதலே.

†1—காணுமென்றதுவும்[1]. 2—நீதியிலே[1]. 3—கருத்தான[4]. 5—பண்ணுகிற விமலன்[4].

*1. தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும்
சிதகுரைக்குமேல்*
என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று
செய்தாரென்பர் போலும்*
மன்னுடைய விபீடணற்கா மதிளிலங்கைத் திசை நோக்கி
மலர்க்கண் வைத்த*
என்னுடைய திருவரங்கற்கன்றியும் மற்றொருவர்க்கு
ஆளாவரே ?

பெரியாழ். திரு. (4-9-2) : எம்பெருமானுடைய அடியார் விஷயத்தில் பெரிய பிராட்டியே ஏதாவது குற்றம் சொன்னாலும், 'என் அடியார் அக்குற்றத்தை செய்யமாட்டார்கள். ஒருக்கால் செய்தாரானால் நல்லதையே செய்தார்கள்' என்று அருள்பவர் போன்று தோற்றமளிப்பவரும், பெருமை படைத்த விபீஷணனுக்கு அநுகூலராய் மதிள்சூழ்ந்த இலங்கை இருக்கும் தென் திக்கைத் தாமரை போன்ற தன் திருக்கண்களால் நோக்குபவருமான திருவரங்கனுக்கு அல்லாமல் மற்றொருவருக்கு (விவேகிகள்) அடிமையாக ஆவரோ ?

*2. अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥

கீதை (9-11) : அறிவில்லாதவர்கள் பிராணிகளுக்கு ஈசுவரனாயிருக்கும் என் மேலான தன்மையை அறியாமல் மனித உடலை அடைந்திருக்கும் என்னை அவமதிக்கிறார்கள்.

*3. परमेश्वरसंज्ञोऽज्ञ किमन्यो मय्यवस्थिते ।
तथाऽद्य मर्तुकामस्त्वं प्रब्रवीषि पुनः पुनः ॥

வி.பு. (1-17-23) : மூடனே ! நானிருக்கையில், பரமேச்வரன் என்னும் பெயருள்ள வேறொருவன் இருக்கிறானா ? அவ்வாறு இருந்தாலும் நீ இப்பொழுது சாக விரும்புகின்றவனாய் மீண்டும் மீண்டும் அவனையே கூறுகின்றாய். (ப்ரஹ்லாதனிடம் ஹிரண்யகசிபு கூறுவது)

இப்படி ஸர்வ सेव्यனை सर्वशेषि†1 "விபீடணற்கு வேறாக நல்லான்"*1 என்கிறபடியே தமக்கு இப்போது விசேஷித்து அநுபவிக்கலானபடியைப் பேசுகிறார். **நீள் மதிளரங்கத்தம்மான்**—"अयोध्यै"*2 என்றும், "अपराजितै"*2 என்றும் சொல்லுகிற கலங்காப் பெரு நகரத்தின் படியை கொடியணி நெடுமதில்களாலே सुरक्षितமான स्थलविशेषத்திலே காட்டி, அயர்வறுமமரர்களுக்கும் அதிபதியான தன்படியை†2 செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரான आकार - विशेषத்தாலே அறிவித்துக் கொண்டு, शेषित्वத்தின் எல்லையிலேதான் நின்றாற்போலே शेषत्वத்தின் எல்லையிலே என்னை நிறுத்தின†3 स्वतन्त्र-स्वामि. **அரங்கத்து அம்மான்**—நீர்மைக்கும் மேன்மைக்கும் எல்லையானவன்.

இவனுடைய उपायत्व-प्राप्यत्वங்களில் உறப்புண்டான[1] திருவடிகளை அநுபவிக்கிறார்; **திருக்கமல பாதம்**—पावनत्व - भोग्यत्वங்களாலே शुभाश्रयங்களான திருவடிகள்; திருவுக்கு லீலா கமலம் போலே இருக்கிற பாதம் என்னவுமாம். **வந்து**—'வந்து' என்கிறத்தாலே ஓடின தம்மைத்†4 தொடர்ந்த படியும் अयत्न-लब्धங்களானபடியும் தோன்றுகிறது. இத்திருவடிகளில் வைத்த கண் வாங்கவொண்ணாதபடியான भोग्यतातिशयத்தை ஒரு उत्प्रेक्षैயாலே (B—28) அருளிச்செய்கிறார். **என் கண்ணினுள்ளன ஒக்கின்றவே**

---

1—உறுதியையுடைய.

†1—ஸர்வசேஷித்வேந செல்வ[4]. (விபீடணற்கு நல்லான்' என்று பிரபந்த பாடம்). 2—"ஸ்தல விசேஷத்திலே...........தன் படியை" என்பதற்கு பதில் "ஸ்தல விசேஷத்தாலே அயர்வறுமமரர்களுக்கு அதிபதியான படியை"[1]. 3—"சேஷத்வத்

தின்......நிறுத்தின'' என்பதற்கு பதில் ''சேஷத்வ நிலையிலே நிறுத்தின''[1]. 4—''இத்தாலே......... தம்மைத்'' என்பதற்கு பதில் ''இடத்திலே ஓடி வந்தெம்மைத்''[1].

*1. கல்லார்மதிள் சூழ் கடியிலங்கைக் காரரக்கன்*
வல்லாகம் கீள வரிவெஞ்சரம் துரந்த
வில்லானை* செல்வ விபீடணற்கு வேறாக*
நல்லானை நாடி நறையூரில் கண்டேனே.

பெரிய திரு. (6-8-5) : கற்களாலான மதிட்சுவராலும் மற்ற அரணாலும் சூழப்பட்ட இலங்கையில், கருத்த நிறத்தனான ராக்ஷஸ (ராவண)னின் வலிமை மிக்க மார்பகத்தைப் பிளப்பதற்காக அழகிய வெம்மையான அம்பை எய்த வில்லை உடையவனும், கைங்கர்யச் செல்வத்தையும் இலங்கை அரசையும் பெற விபீஷணனுக்கு, ஸுக்ரீவாதிகளால் எதிர்ப்பு நேர்ந்த போதும், அபயம் அளித்தவனுமான ஸ்ரீ ராமனை எங்கும் தேடி, நறையூரில் கண்டேன்.

*2. आज्ञानुग्रह-भीम-कोमल-पुरीपाला फलं भेजुषां
याऽयोध्येत्यपराजितेति विदिता नाकं परेण स्थिता ।
भावैरद्भुत-भोगभूम-गहनैः सान्द्रासुधा-स्यन्दिभिः
श्रीरङ्गेश्वर-गेहलक्ष्मि ! युवयोस्तां राजधानीं विदुः ॥

ஸ்ரீகுண. (23) : ஸ்ரீரங்கநாதன் கோவிலை அழகு படுத்துபவளே! உத்திரவு இடுவதில் பயத்தை விளைவிப்பவர்களாயும் கருணை புரிவதில் மேன்மையானவர்களுமான நகரக்காவலர்களை உடையதும், பக்தர்களுக்கும் ப்ரபன்னர்களுக்கும் உத்தம புருஷார்த்தமாகவும், பிறரால் போரிடமுடியாதது (=அயோத்யா) எனவும், பிறரால் வெல்ல முடியாதது (=அபராஜிதா) எனவும் புகழப்பட்டதும், பரமாகாசத்தில் இருப்பதும், அம்ருதத்தைப் பெருக்குகின்றவைகளும், ஆச்சர்யமான ஸுகாநுபவங்கள் நிறைந்தவைகளுமான பொருட்களால் நிறைந்ததுமான நகரை உங்கள் இருவருடைய ராஜதானி (தலைநகர்) என வேதங்கள் கூறுகின்றன.

— —தேவாதிகளில் தலைவரான ब्रह्मादिகளுடையவும், सनकादिகளான योगिகளுடையவும் दिव्य-चक्षुस्ஸுக்களுக்குங்கூட தூரமாயிருக்கக் கடவவை मनुष्य-मात्रஞன என்னுடைய मांस-चक्षुस्ஸுக்களுக்கும் अत्यासन्नமாய்[1] இராநின்றன என்று आश्चर्यப்படுகிறார். 'நீள்மதிளரங்கத்தம்மான் திருக்கமலபாதம்' என்று द्वयத்தில் पूर्वोत्तर-नारायण - शब्दार्थத்தையும் चरण - शब्दार्थத்தையும் अनुसन्धिத்தபடி.

இப்பாட்டால் मोक्षप्रदत्वமும், जगत्कारणत्वமும்†[1] शरण्यत्वமும், மற்றும் सर्व-प्रकार-उपकारकत्वமும், कृपा-विशेषवत्वமும், स्वातन्त्र्यமும், அவற்றில் सारतमமான उपकार-विशेषமும், नित्य-निर्दोषत्वமும், नित्यसूरि-निर्वाहकत्वமும், नित्य-विग्रहवत्वமும், सर्वसुलभत्वமும், सौशील्यமும், वात्सल्यமும், कैङ्कर्य-उद्देश्यत्वமும்[2] कैङ्कर्य-स्थानविशेषवत्त्वமும்†[2], सर्वस्वामित्वமும், திருவடிகளினுடைய पावनत्वமும், भोग्यत्वமும், அவற்றைத் தான் अनायासமாக अनन्य-दृष्टिகளாகக்†[3]கொண்டு[3] அநுபவிக்கப் பெற்றபடியையும் முன்னிட்டுக்கொண்டு†[4] श्रियःपतियினுடைய परकाष्ठा प्राप्तங்களான[4] गुणप्रकर्षங்களை[5](†[5]) अनुसन्धिத்தார்.

அவற்றில் संसार-निवर्तकत्व-काष्ठैயாவது[6]—களையற்ற கைங்கர்யத்தைக் கொடுக்கை. कारणत्व-काष्ठैயாவது†[6]—कारणान्तरங்களெல்லாம் தான் இட்டவழக்காய், தனக்காதல், தன்னுடைய ज्ञान-शक्त्यादिகளுக்காதல், ஒரு कारण-संभावனையன்றிக்கே[7] இருக்கை. शरण्यत्व-काष्ठैயாவது—தன்னை ரக்ஷகனாகப் பற்றினார்க்குத் தன்னை ஒழிய மற்றொருவரை ரக்ஷகராகப் பற்ற வேண்டாதபடி இருக்கை. उपकारकत्व - काष्ठैயாவது†[7]—ஒரு क्षुद्रव्याजத்தை அவலம்பித்து, उभयविभूति-विशिष्टனை தன்னை अनुभाव्यனாகக் கொடுத்தும், அதற்கு மேல்

கொடுக்கலாவது இல்லாமையாலே नित्य-ऋणியாயிருக்கை[8]. कृपाकाष्ठैயாவது—शत्रுவினுடைய संबन्धिகளும் கூட त्याज्यம்(ர்) என்ற பரிவர்[9](†[8]) முன்னே 'शत्रु தானும் இசையில் स्वीकரிப்பேன்' என்று எதிர் பேசும்படியான இரக்கத்தையுடையனாய், அவர்கள்†[9] தாங்களும் இவனைக் கைக்கொள்ளும்படி பண்ணுகை. स्वातन्त्र्य-काष्ठैயாவது—தன்னையும் பிறரையும் தான் நினைத்த நிலைகளிலே நிறுத்தும் போது விலக்க வல்லாரின்றிக்கே இருக்கை. निर्दोषत्व-काष्ठैயாவது—दोषयुक्तங்களான पदार्थங்களோடு உண்டான ஸம்ஸர்க்கத்தாலும், பிறர்க்கு अज्ञान-दुःखहेतुக்களானவற்றைத் தான் அநுஷ்டித்தாலும் தனக்கு अज्ञान-दुःखங்கள் வாராதிருக்கை. स्वामित्व-काष्ठैயாவது—विभूतिமான்களையெல்லாம் தனக்கு विभूतिயாக உடையனாயிருக்கை. सौलभ्य-काष्ठैயாவது--அகல நினைப்பார்க்கும் அகலவொண்ணாதபடி அணுக நிற்கை. सौशील्य-काष्ठैயாவது—தன்பக்கல்

1—மிக அருகிலிருப்பனவாய். 2—கைங்கர்யத்துக்கு லக்ஷ்யமாயிருத்தல். 3—வேறொன்றில் பார்வையைச் செலுத்தாமல். 4—உயர்வற உயர்ந்த. 5—குணங்களின் மேன்மைகளை. 6—ஸம்ஸாரத்தைப் போக்குவதில் முடிவாயிருப்பதாவது (காஷ்டை = எல்லை, முடிவு). 7—வேறொரு காரணம் உண்டென்று எண்ணாமல். 8—எப்போதும் கடன் பட்டவனாயிருக்கை. 9—பரிவு உடையவர்கள் (ஸுஹ்ருத்துக்கள்).

†1—"மற்றும் ஸர்வப்ரகாரோபகாரகத்வமும், அவற்றின் ஸாரதமமான உபகார விசேஷத்தையும்"[1] என்று அதிகம். 2—கைங்கர்யஸ்தான விசேஷமும்[2]; விசேஷத்வமும்[1]. 3—अनन्यदृष्टिயாக. 4—முன்னிட்டு[1]. 5—पराकाष्ठाप्राप्त - गुणप्रकर्षங்களை[1]. 6—कारणकाष्ठैயாவது[1]. 7—उपकारत्वकाष्ठैயாவது[1]. 8—என்றும் பரிவார்[1]. 9—அவர்[1].

ईश्वरत्वத்தை ஶங்கிப்பார்க்கும் வெளியிடுவார்க்கும் தானே மறுமாற்றம்[1] சொல்லி, மேலும் தன்னைத் தாழவிட்டுப் பரிமாறுகை. वात्सल्य-काष्ठैயாவது--अन्तरङ्गராயிருப்பாரும் आश्रितविषयத்தில் ஆயிரம்கோடி குற்றம் காட்டிலும்†[1] अनादरம் பிறக்கவொண்ணுதிருக்கை. प्राप्यत्व-काष्ठैயாவது[2]—தன் விசேஷணமாகவல்லது மற்றொரு प्राप्यம் இல்லாதிருக்கை. आश्रित-पक्षपातित्व-काष्ठैயாவது—ஸர்வஸமஞனா†[2] தான் आश्रित-संकल्पத்தோடே विरोधित्த தன் ஸாமான்ய ஸங்கல்பத்தை असत्कल्पமாக்கி[3] अनितर-सुलभமான[4] आभिमुख्यத்தைப் பண்ணுகை[5]. भोग्यत्व-काष्ठै யாவது—தன் स्वरूपத்தை அநுபவித்தால் தன் விசேஷணமாக ஸர்வத்தையும் அநுபவிக்குமது அதின் திவலையோடு ஒத்திருக்கை. अयत्न-भोग्यत्व-काष्ठैயாவது—भोगार्थமான†[3] करण-प्रेरणமும்[6] வேண்டாதபடி தென்றலும் பரிமளமும் வந்தாற் போலே வந்து விலக்க வொண்ணுதபடி अनुभाव्यனுயிருக்கை. இவையெல்லாம் இப்பதங்களில் அடைவே ஆழ்வார் அநுபவித்த படியை அநுஸந்திப்பது.

2. இவன் திருவடிகளில் சிவப்புக்கு நிகரான திருப்பீதாம்பரம் தன் சிந்தைக்கு விஷயமாகின்ற தென்கிறார்.

உவந்த உள்ளத்தனாய்
உலகமளந்து அண்டமுற*
நிவந்த†[4] நீண்முடியன்
அன்று நேர்ந்த நிசாசரரை*
கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்
கடியார் பொழில் அரங்கத்தம்மான்* அரைச்
சிவந்த ஆடையின் மேல்
சென்றதாம் என் சிந்தனையே. (2)

உவந்த உள்ளத்தனாய்— —மஹாபலியாலே अपहृत மான ராஜ்யத்தை மீட்டுத் தரவேண்டுமென்று इन्द्रादि கள் இரக்க, "उदाराः सर्व एवैते" (220[1]) என்கிறபடி இவர்கள் பக்கலிலே प्रीतமான திருவுள்ளத்தையுடையவனாய், அஸுரனேயாகிலும் प्रह्लादனோடு†[5] உண்டான குடல் துவக்குப் भावित्து[7](†[6]), आनुकूल्य-मिश्रனை மஹாபலியை அழியச்செய்ய நினையாதே, அவனுடைய औदार्यத்திற்கு अनुगुणமாகத் தான் இரப்பாளனாய்ச் சென்று, அவன் கொடுக்க வாங்குகையாலே அவனளவிலும் अनुग्रहयुक्तனாய், अपेक्षा-निरपेक्षமாக[3] எல்லார் தலையிலும் தன்†[7] திருவடிகளை வைக்க, விலக்காதவளவாலும் ஸர்வ விஷயத்திலும் உவ(க)ந்த உள்ளத்தனாய். உலகமளந்து— —'அளவுபடக்†[8] கொடுத்தோம்[1] என்றிருக்கிற அஸுரன் முன்னே எல்லா லோகங்களையும் தன் திருவடிகளாலே அளவுபடுத்தி. அண்டம் உற நிமிர்ந்த நீள் முடியன்— —மேலே கவிற்ற कनक-छत्रம்[9] போலே இருக்கிற ब्रह्माण्ड-भित्तिயிலே[10](†[9]) கிட்டும்படி

1—பதில். 2—முடிவாக அடையப்படுவதன் தன்மையாவது. 3—இல்லாதது போல் செய்து. 4—மற்றவர்க்குக் கிடைக்க முடியாத (பிறர்க்கரிதான). 5—நோக்குகை. 6—இந்த்ரியங்களின் தூண்டுதலும். 7—சரீர ஸம்பந்தத்தை எண்ணி. 8—கேட்காமலேயே (வேண்டாமலேயே). 9—பொற்குடை. 10—ப்ரஹ்மாண்டத்தின் சுவற்றில்.

†1—"अन्तरङ्ग......காட்டிலும்" என்பதற்கு பதில் "அந்தரங்கராயிருப்பாற்கு आश्रय. विषयத்தில் ஆயிரம் கோடி குற்றம் காணிலும்"[1]. 2—ஸர்வ வர்ண ஸமனை[1]. 3—भोग्यार्थமாக[1]. 4—நிவிர்ந்த; நிமிர்ந்த 5—ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானோடு[4]. 6—குடல் துவக்குப். பாலித்து; குடல் துவக்கால்[2]. 7—"தன்" என்பது இல்லை[1]. 8—அளவுபட்டுக்[1]. 9—ப்ரஹ்மாண்டத்தில்[1].

**विजृंभित्த**[1] பெரிய திருவபிஷேகத்தை[2] உடையவன். அவன் தன்னைப் போலே திருவபிஷேகத்திற்கும் அவனுடொக்க வளருகைக்கீடான **महिमा** உண்டு. **कर्मवश्य**தை தோற்றும்படி பிறவி தொடக்கமாகச் சடையும் குண்டிகையும்[3] சுமந்து திரிகிற **परिच्छिन्न-ईश्वर**ர்[4](†[1]) பார்த்து நிற்க இப்படி முடிசூடி நிற்கையாலே **उभय-विभूति-निर्वाहकत्व**மும் **अभिव्यक्त**மாகிறது[5]. இத் **त्रिविक्रमापदान**ம்[6] சொன்ன இத்தாலே **ईश्वरत्व-शङ्का-विषय**ரான†[2] **इन्द्रादि**கள் இரப்பாளரானபடியும், "குறை கொண்டு நான்முகன்"*[1] **इत्यादि**களிற்படியே **ब्रह्मा** திருவடி விளக்கி **आराधक**னானபடியும், **रुद्र**ன் **तीर्थप्रसाद**ம் பெற்று **पूत**னானபடியும்[7] சொல்லித்தாயிற்று. இத்தால் முன் பாட்டில்†[3] சொன்ன **इष्टप्रापकत्व**த்தையும் **उदाहरि**த்ததாய் இனி†[4] **अनिष्टनिवर्तकत्व**த்தையும் **उदाहरि**க்கிறார் **அன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்**— தேவர்களும் ரிஷிகளும் கூடக் குடியிருக்க†[5] வொண்ணாதபடி **त्रैलोक्य-क्षोभ**ம்[8] பிறந்து தேவர்கள் **शरणागत**ராகச்†[6] சக்ரவர்த்தித் திருமகனாய் அவதரித்து, **ताटका-ताटकेय-विराध-कबन्ध-खर-दूषणादि**களை நிராகரித்து, லங்கைக்கு **परिघै**யான[9] லவணார்ணவத்தை[10] பர்வதங்களாலே பண்பு செய்து, கொம்பிலே தத்தித் திரியும் குரங்குப் படையைக் கொண்டு லங்கையை அடைமதிள்படுத்தினவன்றும்[11], பெருமாளுடைய **प्रभाव**ம் அறியாதே **விளக்கு விட்டில்**†[7] **போலே வந்து** எதிர்த்த பகல்போர்†[8] அறியாத **कूटयोधि**களையெல்லாம்[12] 'எனக்கு எனக்கு' என்று இரையாகக் கைக்கொண்ட **दीप्त-पावक-संकाश**ங்களான[13] திருச்சரங்களையுடையனாய், வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய் நின்றவன். **காகுத்தன்**—மாயாவிகளான ராக்ஷஸரும் கூட மோஹிக்கும்

படி **मनुष्यभाव**த்தை முன்னிட்டு நின்றவன்†[9]. கடியார் பொழில் அரங்கத்து அம்மான்—ஸூரிகள் முதலாக **स्थावररूप**ங்களைக் கொண்டு[14] **नित्यामोद**ராய்[15] நிற்கிற **आराम**ங்களாலே[16] சூழப்பட்ட கோயிலாழ்வாருக்குள்ளே **ब्रह्मादि**கள் ஆராதிக்க, **सर्वस्वामित्व**ம் தோற்றக் கண் வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளுடைய. **அரைச் சிவந்த ஆடையின் மேல்**—"படிச்சோதியாடையொடும்

---

*1—வளர்ந்த. 2—கிரீடத்தை. 3—கமண்டலம். 4—அளவிற் குட்பட்ட இறைவர் (சிவனும், பிரமனும்). 5—விளங்குகிறது. 6—மூன்றடியால் (உலகினரை)த் தூய்மையாக்கிய செயல். 7—பரிசுத்தனை படியும். 8—மூவுலகங்களிலும் கலக்கம். 9—அகழியான. 10—உப்புக் கடலே. 11—முற்றுகையிட்ட போதும் 12—கூடயோதி = வஞ்சகமாகப்போர் புரிபவர். 13—எரி கின்ற நெருப்பைப் போன்ற. 14—(மரம், மதிள் முதலிய) அசையாப் பொருள்களின் உருவம் கொண்டு. 15—எப்பொழுதும் மகிழ்ச்சியுள்ளவராய். 16—தோட்டங்களாலே.*

†*1—परिच्छिन्न ईश्वरன்.[1] 2—ईश्वरत्व-शङ्काविषयமான[1]. 3—பாட்டினில்[1]. 4—'இனி' என்பது இல்லை[1]. 5—தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் கூடியிருக்க[1]. 6—शरणागतரானவன்று[5]. 7—வீட்டில்[1]. 8—பகல் போது[4]. 9—நின்றவன் 10—காகுத்தன்[1].*

*1. குறைகொண்டு நான்முகன குண்டிகை நீர் பெய்து*
*மறைகொண்டு மந்திரத்தால் வாழ்த்தி*—கறைகொண்ட*
*கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினன்**
*அண்டத்தான் சேவடியையாங்கு.*

*நான். திருவந். (9) : எம்பெருமான் உலகளந்த அக்காலத்தில் ப்ரஹ்மா தன் தாழ்மையை முன்னிட்டுக் கொண்டு கமண்டலு தீர்த்தத்தை வார்த்து, வேதத்திலுள்ள புருஷஸூக்தம் முதலிய மந்திரங்களால் துதித்து, அண்டத்தை வியாபித்த திருவிக்ரமனின் திருவடிகளை, விஷத்தை உண்டதால் நீல நிறம் பெற்ற கழுத்தை யுடைய பரமசிவனின் தலைமீது (ஸ்ரீபாத தீர்த்தம்) விழும்படி யாகக் கழுவினன்.*

பல்கலனாய் நின் பைம்பொற்கடிச் சோதி கலந்ததுவோ''*[1] என்னும்படி திகழாநின்ற திருவரையிலே मधुकैटभ-रुधिर-पटलத்தாலே[1] போல मरतक-गिरि-मेखलैயிலே[2] बालातपம்[3] பரந்தாற்போலே பாடலமாய் இருக்கிற திருப்பீதாம்பர விஷயமாக†[1]. சென்றதாம் என் சிந்தனையே— अनादिकालம் अनुचित விஷயங்களிலே ஓடி, அவர்கள் ஆடையிலே†[2] கட்டுண்ட என்சிந்தை இவன் திருவடிகளைப் பற்றி†[3] என்றாலும் மீட்கவொண்ணாதபடி திருப்பீதாம்பரத்திலே சென்று துவக்குண்டது. 'என் சிந்தனை சென்றதாம்' என்கையாலே ஆச்சர்யம் தோற்றுகிறது. 'சென்றது'—நான்†[4] प्रेरिக்கப் போந்ததன்று[4]; विषयवैलक्षण्यத்தாலே आकृष्टமாயிற்று.

3. இப்படி இரண்டு பாட்டாலே भगवच्छेषत्व-पर्यवसानத்தையும்[5] अन्यशेषत्व-निवृत्तिயையும்[6] अनुसन्धिத்து-अनन्तरம் शेषभूतமான चेतनाचेतनवर्ग-प्रतिपादकமான[7] तृतीय-अक्षरம் முதலான तृतीय-गाथैயாலே[8] शेषत्व-ज्ञानहीनராயும், विच्छेदமில்லாத शेषत्व-ज्ञानமுடையராயும், कादाचित्क-शेषत्व-ज्ञानवान்களாயுமுள்ள[9] ஜீவர்களெல்லாம் தந்தாமுடைய ज्ञानानुरूपமாக प्रतिकूल-अनुकूल-उपयविध-प्रवृत्तिகளிலே நிற்கிற நிலையை உதாஹரித்துக் கொண்டு भगवदनुभवத்தில் தமக்கிடையிலே பெற்றதொரு प्रावण्यத்தை[10] अनुसन्धिத்துப் प्रीतராகிறார்.

மந்திபாய் வடவேங்கட மாமலை *வானவர்கள்
சந்திசெய்ய நின்றான் அரங்கத்தரவினணையான்*
அந்திபோல் நிறத்தாடையும் அதன் மேல் அயனைப்
படைத்ததோர் எழில்*
உந்தி மேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே. (3)

மந்திபாய் வடவேங்கட மாமலை — चपलரான ஸம்ஸாரிகளுக்கு निदर्शनமான[11] वानरवर्गம் नाना-शाखेயிலுள்ள†[5] क्षुद्रफलங்களைப் புஜிப்பதாக "गतागतं कामकामा लभन्ते"*[2] என்கிறபடியே ஒன்றை விட்டு ஒன்றிலே

1—மதுகைடபர்களின் இரத்தப் பெருக்காலே. 2—மரகத மலையாகிற ஒட்டியாணத்திலே. 3—இளம் வெயில். 4—தூண்டியதன்று. 5—பகவத் சேஷத்வத்தில் முடிகையையும். 6—பிறருக்கு சேஷமாயிருப்பதைக் கழிப்பது. 7—ப்ரதிபாதகமான-சொல்லும். 8—மூன்றும் பாட்டாலே. 9—(தான்) சேஷன் என்பதை எப்பொழுதாவது உணரும். 10—ஈடு பாட்டை 11—உதாஹரணமான.

†1—பீதாம்பர விஷயமாக[1]. 2—அவர்களாளுடையில்[1]; அவர்கள் இடையிலே[4]. 3—பற்றின[4]. 4—நாம்[1]. 5—नानाशाखियிலுள்ள[1].

*1. முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ*
அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ ?*
படிச்சோதியாடையொடும் பல்கலனாய்* நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ ? திருமாலே ! கட்டுரையே.

திருவாய். (3-1-1) : லக்ஷ்மீபதியே! (உன்னுடைய திருவாபரணங்களுக்கும், திருமேனி அவயவங்களுக்கும் இருக்கும் சேர்த்தியால் உண்டான அழகைப் பார்க்கும் போது) உன் திருமுகத்தின் காந்தி மேலே பரவி கிரீடமாக ஆயிற்றோ என்றும், உன் திருவடிகளின் காந்தி கீழே பரவி நீ நிற்கின்ற பீடமான தாமரையாக ஆயிற்றோ என்றும், உன் இடுப்பின் காந்தியானது பீதாம்பரமாகவும் பலவிதத் திருவாபரணங்களாகவும் ஆகி உன் திருமேனியில் சேர்ந்திருக்கின்றனவோ என்றும் தோன்றுகிறது. இதன் உண்மையை ஸர்வஜ்ஞனான நீர் விசாரித்து சொல்லக் கூடுமானால் சொல்லும்.

*2. ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं
क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना
गतागतं कामकामा लभन्ते ॥

கீதை (9-21) : அவர்கள் அந்த விஸ்தாரமான ஸ்வர்க்க லோகத்தில் கிட்டும் போகங்களை அநுபவித்து, அந்தப் புண்ணியம் அழிந்த

பாய்ந்து திரிகைக்கு நிலமாய், கலியுகத்தில் भागवत-संभावனையுடைத்தாக पुराणसिद्धமாகையாலே ஆழ்வார்கள் அவதரிக்கப் பெற்ற अगस्त्य-भाषादेशத்திற்கு उत्तरावधिயாயிருந்து[1] पुराण-प्रसिद्धமாய்†[1], ईश्वरன் தன்னைப் போலே स्वरूप-गुण-विभूति-प्रभावங்களால் உண்டான महत्त्वத்தையுடைத்தான திருமலையிலே. வானவர்கள் சந்தி செய்ய நின்றான்—பரமபதத்திலே கைங்கர்ய ஸாம்ராஜ்யத்திற்கு अधिकृतரான[2] முக்தரும் நித்யரும் देशोचितமான देहங்களைக் கொண்டு उचितமான கைங்கர்யத்தைப் பண்ணி, இவர்கள் आश्रयிக்கைக்கு उद्देश्यனாய்நின்றான்.

அரங்கத்தரவினணையான் — ஏற்றமுள்ளவளவும் ஏறவேண்டும் படியான திருமலையாழ்வாரும் परमपद-स्थानीयம் என்னும்படி எளிதாகக் கிட்டலாம் படியான கோயிலாழ்வாருக்குள்ளே, 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யும்'†[1] வானவர்களுக்கு படிமாவாய்[3], निश्शेष-जगत्-आधारगुरुவான தன்னை தரிக்கைக்கீடான ज्ञान-बल-प्रकर्षத்தையுடையனாய்[4], सुरभि-सुकुमार-शीतळமுமான†[2] திருவரவணையிலே கண் வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளுடைய. அந்தி போல் நிறத்தாடையும் —— आश्रितருடைய अज्ञानान्धकारத்தைக் கழிக்கவல்ல सम्यक्-ज्ञान-सूर्योदयத்திற்கு पूर्व-सन्ध्यै போலவும், அவர்களுடைய तापत्रयங்களைக் கழிக்கைக்கு पश्चिम-सन्ध्यै போலவும், புகர்ந்த†[3] நிறத்தையுடைத்தான செவ்வரத்தவுடையாடையும்†[4]. இது மேலில் अनुभाव्यத்தை अवलम्बिக்கைக்கு[5] अनुभूतांशத்தை[6] अनुवदिத்தபடி[6](†[5]). மேல் अनुभाव्यம் ஏதென்ன, அதன் மேல் அயனைப் படைத்ததோர் எழில் உந்தி—अनुभूतமான திருப்பீதாம்பரத்திற்கு மேலாய், இதன் நிறத்திற்கு நிகரான சிவந்த தாமரைப் பூவையுடைத்தாய், அதின்

மேலே व्यष्टि-सृष्टि-समयத்திலே (B—29) முற்பட अयोनिजனு[7] ब्रह्माவை सृष्टिத்த अद्वितीयமான அழகையுடைத்தான திருவுந்தி. ब्रह्माவினுடைய सृज्यत्वம்[8] சொல்ல, கைமுதிக ந்யாயத்தாலே (B—30) रुद्रेन्द्रादिகளுடைய सृज्यत्वம்†[6] சொல்லிற்றும். இத்தாலே प्रतिबुद्धர்க்கு[9] श्रियःपतिயை ஒழிய शरण्यान्तरமும் प्राप्यान्तरமும் இல்லையென்றதாயிற்று இங்கு ब्रह्माவைச் சொன்னது முமுக்ஷுக்களை ஸ்ருஷ்டித்த உபகாரத்திற்கு உதாஹரணமுமா

---

வுடன் மனிதருலகை அடைகின்றனர். இவ்வாறு வேதாந்த ஜ்ஞாநமின்றி வேத தர்மங்களை அநுஷ்டிக்கும் பலனை விரும்பும் அதிகாரிகள் சென்று-திரும்பும்-உலகங்களை அடைகிறார்கள். □

1—வட எல்லையாய். 2—உரிமையுள்ள. 3—படிமா=ஒப்பு, த்ருஷ்டாந்தம். 4—ஞானம், பலம் இவற்றில் மேம்பட்டவனாய். 5—கைக் கொள்ளுகைக்கு. 6—அநுபவித்த அம்சத்தை திரும்பக் கூறுகிறபடி. 7—தாயின் வயிற்றில் பிறவாத. 8—படைப்புக்கு உரியனாக்குதலை. 9—நல்ல அறிவையுடையவர்கள் (முமுக்ஷுக்கள்).

†1—उत्तरावधिயாயிருந்துள்ள पुराणसिद्धமாய்[1]. 2—सुर-भीसुकुमारशीतलமான[1]. 3—புகர்த்த[1]. 4—சிவந்த நிறத்தையுடைய ஆடையும்[4]. 5—அநுபவித்தபடி[1]. 6—सृज्यत्वம்[1].

*1. ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி*
வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்*
தெழிகுரலருவித் திருவேங்கடத்து*
எழில்கொள் சோதி எந்தை தநதை தந்தைக்கே.

திருவாய். (3-3-1): முழங்கும் ஓசையையுடைய அருவிகள் நிறைந்த திருவேங்கட மலையில், மிக அழகிய திருமேனியையுடைய ஸர்வலோக பிதாவான என் ஸ்வாமிக்கு எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும், எல்ல நிலைகளிலும் அவனுடன் கூடியிருந்து குற்றமற்ற (குறைவற்ற) எல்லாக் கைங்கர்யங்களையும் நாம் செய்ய வேண்டும். (இங்கு குற்றமாவது 'நான் செய்கிறேன்; எனக்காகச் செய்கிறேன்' என்று எண்ணுதல்.)

கிறது. மேலதன்றே—என்றது இத்திருவுந்தியையே अनुभाव्यமாகக் கொண்டன்றோ இருக்கிறது என்னவுமாம். இதனுடைய அநுபவம் இது இட்ட வழக்காயிருக்கிறது†[1] என்னவுமாம். அடியேன் உள்ளத்தின்னுயிரே—"आत्म-दास्यं हरेः स्वाम्यं स्वभावं†[2] च सदा स्मर"*[1] என்கிறபடியே परम-कारुणिक-कटाक्षத்தாலே स्वभाव-दास्य-प्रतिबोधமுடையேனை[1] என்னுடைய सत्त्वोत्तरமான[2] மநஸ்ஸிலே ப்ரகாசிக்கிற स्वादुतमமான[3] என் आत्मस्वरूपம். 'உள்ளம்' என்று हृदय-प्रदेशத்தைச் சொல்லவுமாம். 'இன்னுயிர்' என்று भगवत्-अनुभवத்திற்கு अनुरूपமாகையாலே[4] இனிதான प्राणादिகளைச் சொல்லவுமாம்†[3]. "ज्ञानी तु परमैकान्ती परायत्तात्मजीवनः"*[2], "मच्चित्ता मद्गत-प्राणाः"*[3] इत्यादिகளை இங்கே अनुसन्धिப்பது.

இரண்டாம் பாட்டாலும்†[4] மூன்றாம் பாட்டாலும்†[4] ब्रह्म-रुद्रादिகளுடைய कर्माधिकारित्वமும்[5](†[5]) कर्ममूल-जन्मादिகளும் சொல்லித்தாயிற்று. நாலாம் பாட்டாலே ब्रह्म-रुद्रादिகள் வரம் கொடுத்து வாழ்வித்த இராவணனை நிராகரித்த वृत्तान्तத்தாலும், देवतान्तरங்களுடைய क्षुद्रत्वத்தையும், "ब्रह्मा स्वयंभूश्चतुराननो वा रुद्रस्त्रिनेत्रः"*[4] इत्यादिகளிற்

---

1—இயல்பான அடிமைத்தனத்தை உணர்ந்த. 2—ஸத்துவ குணம் மேலிட்ட. 3—மிகவும் இனிமையுள்ள. 4—ஏற்றதாகையாலே. 5—வினைப்பயனாய் பதவி பெற்றமையும்.

†1—இவனுடைய அநுபவிமிட்ட வழக்காயிருக்கிறது. 2—स्वाभाव्यं[1]. 3—இனித் தான் ப்ரமாணாதிகளை[1]. 4—பாட்டிலும்[4]. 5—कर्माधिकारत्वமும்[1].

*1. स्वोज्जीवनेच्छा यदि ते स्वसत्तायां स्पृहा यदि ।
आत्मदास्यं हरेः स्वाम्यं स्वभावं च सदा स्मर ॥

வி. தத். : உன்னுடைய உஜ்ஜீவனத்தில் உனக்கு விருப்பமிருக்குமாகில், உன் இருப்பில் ஆசையிருக்குமாகில், ஆத்மாவினுடைய தாஸனாயிருக்கும் தன்மையையும், ஹரியினுடைய ஸ்வாமியாயிருக்கும் தன்மையையும், (இவைகளின்) ஸ்வபாவத்தையும் எப்போதும் நினைப்பாயாக. (உஜ்ஜீவனமாவது மிக உயர்ந்த புருஷார்த்தமாகிய பகவத் கைங்கர்யத்தைச் செய்து கொண்டிருத்தல்; இருப்பாவது அதற்கு உறுப்பான ஜ்ஞாநத்துடன் இருப்பது.)

*2. ज्ञानी तु परमैकान्ती तदायत्तात्मजीवनः ।
तत्संश्लेष-वियोगैक-सुखदुःखस्तदेकधीः ॥

கீதா. ஸங். (29) : பரமைகாந்தியான ஜ்ஞாநியோவெனில், எம்பெருமானையே பற்றி நிற்கும் வாழ்வையுடையவனாய், அவனோடு கூடுவதையே இன்பமாகவும் அவனுடைய பிரிவையே துன்பமகாவும் கொண்டவனாய், அந்தப் பகவானிடத்தில் நிலை நின்ற புத்தியை உடையவனுமாயுள்ளவன். (பரமைகாந்தி= ஸ்ரீமந் நாராயணனே பரதத்துவம், பரமபலம் என்று உறுதியான எண்ணமுடையவன்.)

*3. मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् ।
कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥

கீதை (10-9) : என்னிடமே மனதைச் செலுத்தியவர்களாயும், என்னால் உயிர்தரிப்பவர்களாயும், தாம் தாம் அநுபவித்த எனது திவ்ய சரித்திரங்களை பரஸ்பரம் சொல்லுகின்றவர்களாயும் இருப்பார்கள் பக்தர்கள். சொல்பவர்கள் சொல்வதே பலன் என்றும், கேட்பவர்கள் கேட்பதே பலன் என்றும் கருதி மகிழ்கிறார்கள்.

*4. ब्रह्मा स्वयंभूश्चतुराननो वा रुद्रस्त्रिनेत्रस्त्रिपुरान्तको वा ।
इन्द्रो महेन्द्रः सुरनायको वा त्रातुं न शक्ता युधि रामवध्यम् ॥

ராமா. (5-51-45) : யுத்தத்தில் ராமனால் கொல்ல உத்தேசிக்கப் பட்டவனை, தானே உண்டான நான்முகனான ப்ரஹ்மாவாலும், மூன்று பட்டணங்களை அழித்த முக்கண்ணனான ருத்ரனாலும், பெருஞ்செல்வமுடையவனும் தேவர்களின் தலைவனுமான இந்திரனாலும் காப்பாற்ற முடியாது.

படியே அவர்களுடைய अल्पशक्तित्वத்தையும் अनुसन्धित्துக்கொண்டு ब्रह्मादिகளையெல்லாம் அகம்படியிலே[1] வைத்து உய்யக் கொண்ட†[1] ஸ்ரீமத்தையை[2] உடைத்தான திருவயிற்றினுடைய சிறுமை பெருமைகளால் உண்டான अघटित-घटनाशक्तिக்கு அடையவளந்தான்[3] போலே இருக்கிற उदरबन्धம்[4](†[3]) தம்முடைய சிறிய திருவுள்ளத்திற்குள்ளே வெளியிற்போலே†[4] இடம் கொண்டு உலாவா நின்றது. இது ஒரு आश्चर्यம் என்கிறார்.

4. கீழ் மூன்று பாட்டாலும் प्रथम-पदार्थ प्रतिष्ठितமாய், நாலாம் பாட்டாலே "न नमेयं तु कस्यचित्" (59*[4]) என்ற வணங்கலிலரக்கனைத் தலை சாய்த்து[5], "दशेन्द्रि-याननं घोरं"[11] என்கிறபடி முமுக்ஷுக்களுடைய மநஸ்ஸு अहंकार-ममकार-दूषितமாகாதபடி பண்ணிக் கொடுக்கிற சக்ரவர்த்தித் திருமகனுடைய சரித்திரத்தை முன்னிட்டு, 'நானும் என்னுடையதன்று; மற்றும் என்னுடையதாவன ஒன்றுமில்லை' என்கிற நமஸ்ஸில் அர்த்தத்தை மறை பொருளாக अनुसन्धिக்கிறாராகவுமாம்.

சதிர மாமதிள் சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்து
உதிர வோட்டி *ஓர் வெங்கணை உய்த்தவன்
ஓதவண்ணன்*
மதுரமா வண்டு பாட மாமயில் ஆட அரங்கத்
தம்மான் *திருவயிற்று
உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே. (4)

சதிர மாமதில் சூழ் இலங்கைக் கிறைவன் தலை பத்து உதிர—कुलपर्वतங்களைச் சேர்த்து இசைத்தாற்போலே†[5] செறிவும்[6] திண்மையும்[7] உயர்த்தியும்

உடைத்தாய், எட்டுத் திக்குகளிலுள்ள दिक्पालர் களுக்கும் எட்டிப் பார்க்கவொண்ணுதிருக்கிற மதிள் களாலே இத்தவிடம்[8] முறிந்தவிடம்[9] இல்லாதபடி†[6] எங்குமொக்க சூழப்பட்டு जलदुर्ग - गिरिदुर्ग - वनदुर्गங் களாலே[10] दुर्गங்களுக்கெல்லாம் உபமானமாம்படி†[7] ப்ரஸித்தமான லங்கைக்கு ईश्वरனுய், दुर्बल-वरबल-भुजबल-सैन्यबलங்களாலே செருக்கனுய், மால்யவான் அகம்பனன் மாரீசன் முதலான ராக்ஷஸரோடு ஹநுமான் விபீஷணன் முதலான सत्त्व-प्रकृतिகளோடு வாசியற अविगीतமாகப்[11] பேசப்பட்ட பெருமாள் பெருமையை அறிந்து வைத்தும் கண்டு மதி

---

1—வயிற்றிலே; உள்ளே. 2—பெருமையை. 3—முழுவதும் சூழ்ந்த மதிள். 4—ஒட்டியாணம்(வயிற்றில் அணியும் ஆபரணம்). 5—வீழ்த்தி. 6—அடர்த்தியும். 7—நெருக்கமும். 8—இத்த (இற்ற) விடம்=பழுதடைந்த இடம். 9—முறிந்தவிடம்= உடைந்த பகுதி. 10—துர்கம்=அரண். 11—முரண்பாடு இன்றி (ஒருமித்து).

†1—அகம்படியிலே ஏகதேசத்திலே வைத்துக் கொண்ட[1]. 2—சிறுமை பெருமைகளுண்டான[1]; சீர்மை[4]. 3—திருவுதரபந்தம்[4]. 4—கண்டு வேயிற் போலே[1]. 5—சேர்த்திச் சேர்ந்தாப் போலே[1]; சேர்ந்தாற் போலே[4]. 6—இத்திட முறிந்திடமில்லாத படி[1]. 7—மூப்பாம்படி[2].

*1. दशेन्द्रियाननं घोरं यो मनोरजनीचरम् ।
विवेकशरजालेन शमं नयति योगिनाम् ॥

ஸாத். ஸம். (12-51): பத்து இந்திரியங்களாகிற பத்து முகங்களை உடையதும் பயங்கரமானதுமான மனமாகிற அரக்கனை விவேகமாகிற அம்புக் கற்றைகளால் எவன் அடக்கு கிறுனோ அவனே யோகிகளுள் சிறந்தவன்.

கெட்டான்படியே†[1] 'तेन मैत्री भवतु ते यदि जीवितुमिच्छसि'*[1] என்ற தாய் வாய்ச்சொல்லும் கோளாதே,

**अराक्षसमिमं लोकं कर्ताऽस्मि निशितैः शरैः ।**
**न चेत् शरणं अभ्येषि मामुपादाय मैथिलीम् ॥***[2]

என்று பெருமாள் அருளிச் செய்து விட்ட **परमहित**மான பாசுரத்தையும் அநாதரித்து, அடைகோட்டைப்பட்ட வளவிலும்[2](†[2]) பூசலுக்குப் புறப்படவிட்ட **महाबल**ரான படைமுதலிகள் எல்லாரையும் படக்கொடுத்து[3](†[3]), தான் ஏறிப்†[4] பொருதவன்று[4] **रिपूणामपि वत्सल**ரான பெருமாள் சரச் செருக்கு[5](†[5]) வாட்டி[5] 'நம்முடனே பொருதும்படி இளைப்பாறி நாளை வா' என்றுவிட, நாணுதே போய், மண்டோதரி முதலான பெண்கள் முகத்திலே விழித்து†[6], தன்னிற் பெரிய தம்பியையும் மகனையும் படக்கொடுத்து, தான் சாவேறுக[5] வந்து **प्रति-हत-सर्वास्त्र**னை†[7] பின்பும் சினம் தீராதே சேவகப்பிச்சு[6] ஏறி நின்ற ராவணனை, 'இனி தலையறுக்குமதொழிய†[8] வேறொரு பரிஹாரமில்லை' என்று திருவுள்ளம் பற்றி, ஒரு தலைவிழ வேறொரு தலை கிளைக்க முன்பு பண்ணின **चित्रवध-प्रकार**மன்றிக்கே ஒருக்காலே பத்துத் தலையும் உதிரும் படியாக†[9]. **ஓட்டி ஓர் வெங்கணை உய்த்தவன்**— 'தானே போய் ராவணன் தலை பத்தும் கைக்கொள்ள வேணும்' என்று சினம் உடைத்தாய் **अद्वितीय**மாய்[7] இருப்பதொரு திருச்சரத்தை தகையாதே ஓடவிட்டு இரைபோர்ந்த இலக்குப் பெறுகையாலே†[10] அத்திருச் சரத்தை உய்யப் பண்ணினவன். சரத்தினுடைய **आशुकारित्व**த்தாலும் ராவணனுடைய **धैर्य**த்தாலும் தலை பத்து உதிர்ந்த பின்னும், அவன் உடல் கட்டைப் பனை போலே சிறிது போது இருந்து நிற்கும்படியா யிருந்தது. 'தலை பத்து உதிரவோட்டி' என்றது

முன்னில் பூசலிலே ராவணனைத் தலைசாய்த்து ''गच्छ अनुजानामि''*3 என்று துரத்திவிட்டபடியாய், 'ஓர்

---

1—முற்றுகையிடப்பட்டபோதும். 2—இறக்கும்படி செய்தும். 3—யுத்தம் செய்த போது. 4—அஸ்த்ரங்களைப் பெற்றிருந்தமை யால் ஏற்பட்ட கர்வத்தைப்போக்கி. 5—சாவேறு=பகையரசனைச் சூழ்ந்து காக்கும் படைமீது ஒரு முகமாய்ப் பாய்ந்து ஊடறுத்துச் செல்ல முயன்று, அந்நிலையில் உயிர் துறத்தலையே விரதமாகக் கொண்ட வீரர் தொகுதி. 6—வீரன் என்னும் இறுமாப்பு. 7—ஒப்பற்றதாய்.

†1—அறிந்து வைத்துக் கண்டுமதி கேட்டான் படியே[1]. 2—அடை கோட்டடைப்பட்டவளவிலும்[1]. 3—படைக்கொடுத்து[1]. 4—நேரில்[4]. 5—சௌர்யச் செருக்கு[2]. 6—பெண்டுகள் முகத்திலே விழுத்தி[1]. 7—प्रतिहत-सर्वास्त्रனுமான[1]. 8—இனித்தான் இவனையழிக் குமதொழிய[2]. 9—தீரும்படியாக[1]. 10—இரைபொங்த விளக்கு பெருகையாலே[1]; வில்லுக்கு[4].

*1. विदितः स हि धर्मज्ञः शरणागतवत्सलः ।
तेन मैत्री भवतु ते यदि जीवितुमिच्छसि ॥

ராமா. (5-21-20): தர்மமறிந்த அந்த ராமன் சரணாகதர் களிடம் மிக்க அன்புள்ளவன் என்று எல்லோராலும் அறியப் பட்டவன். நீ உயிர்வாழ விரும்பினுயாகில் அவருடன் உனக்கு நட்பு உண்டாகட்டும். (ராவணனுக்கு பிராட்டியின் உபதேசம்)

*2. ராமா. (6-41-66): சீதையைத் திருப்பிக் கொண்டு வந்து நீ என்னைச் சரணமடையவில்லையாகில், கூர்மையான அம்புகளாலே இவ்வுலகை ராக்ஷஸப்பூண்டற்றதாகச் செய்வேன்.

*3. गच्छानुजानामि रणार्दितस्त्वं प्रविश्य रात्रिंचरराज लङ्काम् ।
आश्वास्य निर्याहि रथी च धन्वी तदा बलं द्रक्ष्यसि मे रथस्थः ॥

ராமா. (6-59-143): (ராக்ஷஸ ராஜனே!) யுத்தத்தில் களைப்படைந்து நீ திரும்பிப் போ; நானே அனுமதிக்கிறேன். லங்கையில் நுழைந்து, களைப்பாற்றிக் கொண்டு, ரதத்தையும் வில்லையும் கொண்டு திரும்பி வா. ரதத்திலிருந்து கொண்டு அப்போது என் பலத்தைப் பார்ப்பாய்.

வெங்கணை உய்த்தவன்' என்றது பின்பு அவனுடைய யதார்த்மாக அத்விதீயமான அஸ்த்ரத்தை விட்டவன் என்னவுமாம்.

ஓதவண்ணன்—கண்டவர்களுடைய பாபத்தையும் தாபத்தையும் கழிக்கவற்றும்†[1] ஸமுத்ரம் போலே ஶ்யாமளமான திருமேனியை உடையவன். மதுரமா வண்டு பாட மாமயிலாட அரங்கத்தம்மான்—ராவண வதம் பண்ணின வீரலக்ஷ்மியுடனே நின்ற அழகைக் கண்டு ப்ரஹ்மாதிகள் ஸ்தோத்ரம் பண்ண, அப்ஸரஸ்ஸுகள் மங்கலந்ருத்தம் பண்ணிறுற்போலே "आत्मानं मानुषं मन्ये" (240[3]) என்கிற பெருமாளுடைய பூமிகைக்கு[1](†[2]) அநுரூபமாக முக்தரும் நித்யரும் ரூபாந்தரம்கொண்டு வந்தார்கள்†[3] என்னலாம்படி அதிமதுரங்களாய் ஜ்ஞானாதி-குணமஹத்தையுமுடையவையான†[4] வண்டுகள் காலப் பண்கள்†[5] பாட, பாட்டுக்கு அநுரூபமாக குணாதிகங்களான நீலகண்டங்கள்[2] ந்ருத்தம் பண்ண, இக்கீத ந்ருத்தங்களாலே மங்களோத்தரமான†[6] கோயிலாழ்வாருக்குள்ளே ஸர்வாதிபதியானபடி தோற்றக் கண்வளர்ந்தருளுகிற†[7] பெரியபெருமாளுடைய, திருவயிற்று உதரபந்தம் என் உள்ளத்துள் நின்று உலாகின்றதே—"दामोदरं बन्धगतं"*[1] என்கிறபடியே பந்தகதர்க்கு மோக்ஷ ஹேதுவான தாமோதரத்வத்தை வெளியிடாநின்ற திரு. வயிற்றில் 'திருவுதரபந்தம்' என்று திருநாமத்தை உடைத்தான திருவாபரணம் அதிக்ஷுத்ரனை என்னுடைய அதிராக-தூஷிதமான ஹ்ருதயத்தினுள்ளே அதுவே நிவாஸபூமி என்னும்படி நின்று அளவற்ற போக்யதா-ப்ரகாஶன-வ்யாபாரங்களைப்†[8] பண்ணாநின்றது. இது திருமந்திரத்திலும்†[9] திருமேனியிலும் மத்யத்திலே வரும் அநுபவம்

5. மேலிரண்டு பாட்டால்†[10] नारायण-शब्दार्थமுள்ளீடாக பெரிய பிராட்டியாருடைய நிவாஸத்தால் நிகரில்லாத திருமார்பையும் திருக் கழுத்தையும் அநுபவிக்கிறார்†[11].

**பாரமாய பழவினை பற்றறுத்து* என்னைத் தன்**
**வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி என்னுள்**
**புகுந்தான்***
**கோர மாதவம் செய்தவன் கொல் அறியேன்**
**அரங்கத்தம்மான் *திரு**
**வார மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே.(5)**

**பாரமாய பழவினை பற்றறுத்து**—காலதத்வமுள்ளதனையும்†[12] ப்ராயச்சித்தம் பண்ணினாலும் கழிக்க வொண்ணாதபடி उपचितமாய்க்கொண்டு[3], அநாதி காலம் நடக்கிற सांसारिक-कर्म-कलापத்தை[4] सवासनமாக என்னுடன் துவக்கறுத்து; **என்னைத் தன் வாரமாக்கி வைத்தான்**—இப்படி कर्मपरवशனாய், इन्द्रिय-किङ्करனாய், तादृशரான इन्द्रादिகளை எடுத்துச் சுமந்து தனிசு[5] தீராதே பொலிசை இறுத்துத[6] திரிகிற என்னை अपहत-पाप्मा

1—மாறுவேஷத்திற்கு. 2—மயில்கள். 3—சேர்க்கப்பட்டதாய்க் கொண்டு. 4—கலாபம் = கூட்டம், தொகுதி. 5—தனிசு = கடன். 6—பொலிசை இறுத்தல் = வட்டி செலுத்துதல்.

†1—கழிக்கவைற்றும்[1]. 2—ரூபத்தை ரமிக்கைக்கு[4]. 3—கூடிவந்தார்கள். 4—ஜ்ஞாநாதி குணவத்தையையுடைய[4] 5—காலமணங்கள்[1]. 6—லோகோத்தரமான[4]. 7—கண்வளருகிற[1]. 8—भोग्यता - प्रकाश - व्यापारங்களை[1]. 9—'திருமந்திரத்திலும்' என்பது இல்லை[1]. 10—பாட்டில்[1]. 11—நிவாஸத்தாலும் நிகரில்லாத திருமார்வையும் அநுபவிக்கிறார்[1]. 12—கால முள்ளந்தனையும்[1].

*1. (?) : கட்டுண்ட தாமோதரனை.

வாய், स्वामिभावத்திற்கு†[1] எல்லை நிலமாய், सूरिभोग्यனை†[2] தன்னுடைய अन्तःपुर-स्त्रीகளைப் போலே अन्यர்க்கு கூறு இல்லாதபடி பண்ணி, असाधारण-कैंकर्य-रसத்தைத் தந்து மேல் ஒருக் காலத்திலும் மாறுதபடிவைத்தான்.

**வைத்த தன்றி என்னுள் புகுந்தான்**—அநந்யனுக்கி வைத்தவளவன்றிக்கே, முன்பு प्रयोजनान्तर-प्रवणனை என்னுடைய हृदयத்திலே अनन्यप्रयोजन-अनुभव-विषयமாய்க் கொண்டு, दस्यु-परिगृहीतமான[1] தன் படைவீட்டிலே[2] दस्युக்களை ஓட்டிப் புகுருமாப் போலே புகுந்தான். **கோர மா தவம் செய்தனன் கொல் அறியேன்**—अनादि-कालம் இழந்த வஸ்துவைப் பெறுகைக்கு अकर्मवश्यனை ईश्वरன் தானே अवतार-क्षेत्रமான திருவயோத்யையையும் விட்டு, आश्रितன் இருப்பிடமான லங்கையிலும் போகாதே, கங்கையில் புனிதமாய காவிரி நடுவு பாட்டிலே अतिघोरமாய் अतिमहத்தாய இருப்பதொரு தபஸ்ஸைப் பண்ணினனோ அறிகிலேன். இது अतिवाद-गर्भமாக[3] उत्प्रेक्षिத்தபடி. सर्व-संसार-निवर्तकமாய் अमोघமாயிருப்பதொரு†[3] "मोक्षयिष्यामि"*[1] என்கிற ஸங்கல்ப ரூபமான தபஸ்ஸைப் பண்ணினன்†[4] என்று தாத்பர்யம். அங்ஙனன்றிக்கே இப்பெரிய பேறு பெறுகைக்கு अयोग्यனை நான் இதற்கு अनुरूपமாய் अमोघமாய்[4] இருப்பதொரு மஹாதபஸ்ஸைப் பண்ணிப் பெற்றேன் அல்லேன். இதற்கு 'त्वयि निहित भरोऽस्मि सोऽहं यतः'*[2] என்றும் "तव भरोऽहमकारिषि धार्मिकैः"*[3] என்றும் சொல்லுகிற விதொழிய†[5] இப்போது நானும் பிறரும் அறியலாவது எனக்கு ஒரு தபஸ்ஸு காண்கிறிலேன்

1—திருடர்கள் கையகப்படுத்திக் கொண்ட. 2—தலைநகரில். 3—மிகைப்படக் கூறுதலை உள்ளடக்கி. 4—பழுது படாத, வீண்போகாத.

†1—ஸ்வாமி கார்யத்திற்கு[4]. 2—ஸுந்தர போக்ய ஞை[4]. 3—ஆமோக்ஷமாயிருப்பது[3]. 4—பண்ணிஞே[4]. 5—சொல்லுகிறபடியே[1]; என்னுமிதொழிய.

*1. सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ।।

கீதை (18-66) : (சரம சுலோகம்) எல்லா தர்மங்களையும் முற்றிலும் விட்டு, என்னை ஒருவனையே உபாயமாக அடை. நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன். வருந்தாதே.

*2. प्रियमितरदथापि वा यद् यथा
वितरसि वरद ! प्रभो ! त्वं हि मे ।
तदनुभवनमेव युक्तं तु मे
त्वयि निहितभरोऽस्मि सोऽहं यतः ।।

வரத. ஸ்த. (91) : வரதராஜனே ! ஸ்வதந்த்ரனை தேவரீர் எனக்குப் பிரியமானதோ, அப்ரியமானதோ ஆகிய எதை எப்படி எனக்குக் கொடுத்தாலும் அப்படியே அதை அநுபவிப்பதன்ரோ பரதந்த்ரனை எனக்குத் தகும். ஏனெனில் சேஷத்வ ஜ்ஞானம் பெற்ற அடியேன் தேவரீரிடம் ஆத்மரக்ஷாபரத்தை ஸமர்ப்பித்திருக்கிறேனன்ரோ.

*3. तव भरोऽहमकारिषि धार्मिकैः
शरणमित्यपि वाचमुदैरिरम् ।
इति ससाक्षिकयन्निदमद्य
मां कुरु भरं तव रङ्गधुरन्धर ।।

ஸ்ரீரங்கராஜஸ்த. (2-102) : ரங்கநாதனே ! தார்மிகர்களான ஆசார்யர்களால் நான் உனக்குப் பரமாக (பொறுப்பாக)ச் செய்யப்பட்டேன்; சரணம் என்னும் சொல்லையும் வாய்விட்டுச் சொன்னேன்—என்கிற இதனை ப்ரமாணமாகக் கொண்டு இன்று அடியேனை தேவரீருடைய பொறுப்பாக செய்து கொள்ள வேண்டும்.

என்று ईश्वरனுடைய இரக்கத்தின் प्राधान्यத்திலே தாத்பர்யமாகவுமாம்.

இப்படி क्षुद्रனை என் திறத்தில் இரங்கினவன் தான் தேறவொண்ணாத[1] திருவில்லாத் தேவரில் ஒருவனல்லன்; "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பன்"*[1] என்னுமிடத்தையும், शेषभूतனை தமக்கு ஸ்ரீமானே कैङ्कर्य-प्रतिसंबन्धि என்னுமிடத்தையும் திறம்பாத[2] சிந்தைக்குச் சிக்கெனக் காட்டிக் கொடுக்கிறார். அரங்கத் தம்மான் திருவார மார்பதன்றே அடியேனை ஆட்கொண்டதே—ஸர்வருக்கும் அநுபவிக்கலாம்படி सर्व-सहिष्णुவாய்க் கொண்டு[3] கோயிலாழ்வாருக்குள்ளே கண்வளர்ந்தருளுகிற†[1] सौलभ्य-काष्ठैயோடு विरोधियாத स्वामित्व-काष्ठैயையுடையரான பெரிய பெருமாளுடைய शेषित्व-पूर्तिக்கு लक्षणமான திருவையும், அழகு வெள்ளத்திற்கு அணைகோலினாற்போலே இருக்கிற ஹாரத்தையும் உடைத்தான திருமார்வன்றோ स्वाभाविक-शेषत्व-अनुभव-रसिकனாய்†[2], அதற்கு மேலே गुणैर्दास्यमुपागतனுமான என்னை स्वरूप-अनुरूपமான स्तोत्रादि-शेषवृत्तियிலே மூட்டி அதற்கு இலக்காய் நின்றது.

இப்பாட்டில் பதங்களில் அடைவே नारायण-शब्दத்தில் विवक्षितமான अनिष्ट-निवर्तकत्वமும், इष्टप्रापकत्वமும், உள்ளும் புறம்பும் வ்யாபித்து நிற்கும் படியும், नित्यकृपैயும், உபாயத்வத்திற்கு†[3] प्रधानமான सौलभ्यமும், प्राप्यतैக்குப் प्रधानமான स्वामित्वமும், सर्वानुगुणமான श्रियः पतित्वமும், भूषणास्त्ररूपங்களாக भुवनங்களைத்தரிக்கிற भोग्यतमமான विग्रहयोगமும், नार-शब्दार्थமான†[4] दासभूतன் स्वरूपமும், दास्यफलமாகப் प्रार्थिक்கப்படும் कैंकर्यமும் अनुसन्धेयம்.

6. "துண்ட வெண் பிறையன்" इत्यादि கீழ்ப் பாட்டில் कैङ्कर्यार्थियான தம்முடைய கைங்கர்ய விரோதிகளான निरुपाधिक-स्वामित्व-अभिमान-मूलங்களையெல்லாம்[4]

1—(தெய்வமென்று) நம்பமுடியாத. 2—தவறாத. 3—எல்லாவற்றையும் பொறுப்பவனாய். 4—ஒரேகாரணமின்றியே (தானே) ஸ்வாமி என்ற கர்வத்திற்குக் காரணங்கள் எல்லாம்.

†1—"கண்வளர்ந்தருளுகிற" என்பது இல்லை[1]. 2—...शेषित्व......னாய்[1]. 3—உபாயத்திற்கு[5]. 4—नर-शब्दार्थமான[1].

*1. அகிலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா !*
நிகரில் புகழாய் ! உலகம் மூன்றுடையாய் ! என்னையாள்வானே !*
நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே !*
புகலொன்றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.

திருவாய். (6-10-10) : ஒரு க்ஷணமும் உன்னைவிட்டுப் பிரியச் சக்தியில்லையென்று தாமரையிலிருக்கும்-பெரியபிராட்டி வஸிக்கும் திருமார்பையுடையவனே ! அளவற்ற கருணையாகிய குணத்தையுடையவனே ! மூன்று விதமான சேதநாசேதநங்களுக்கும் ஸ்வாமியாய் அவைகளைக் காக்கவேண்டிய பொறுப்பு உள்ளவனே ! தாழ்ந்தவனான என்னையும் உனக்கு அந்தரங்க கைங்கர்யங்களைச் செய்யும்படி செய்து உன்னுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தைக் காட்டியவனே ! உன் கைங்கர்யத்தில் நிஷ்டையுடையவர்களும் உன் கல்யாண குணங்களை அநுபவிப்பவர்களுமான நித்யஸூரிகளும் ஆசைப்பட்டு வந்து ஸேவிக்கும் திருமலையில் எல்லாருக்கும் ஸுலபனாய் எழுந்தருளியிருக்கிறவனே ! எனக்கு உன்னைத் தவிர வேறு உபாயமில்லை. ஆகையால் பெரியபிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு என்னைக் காக்கவேண்டிய சுமையை வேறு பயனை நாடாமல் உன் திருவடிகளில் சரணடைந்து ஸமர்ப்பித்துவிட்டேன். இப்பொழுதே என்னுடைய எல்லா ப்ரதிபந்தங்களும் போய், உனக்கு எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் எல்லாவிதமான கைங்கர்யங்களையும் அடியேன் பண்ணப் பெறவேண்டும்.

நிராகரித்தபடியை[1] அருளிச் செய்தார். இப்பாட்டில் ऐश्वर्यार्थिகளானவருடைய ऐश्वर्य-विरोधियான भिक्षु-दशैயைக் கழிக்கும் படியை உதாஹரிக்கிறார்.

**துண்ட வெண்பிறையன் துயர் தீர்த்தவன்* அஞ்சிறைய**
**வண்டு வாழ் பொழில் சூழ் அரங்க நகர் மேயவப்பன்***
**அண்டரண்ட பகிரண்டத்தொரு மாநிலம் எழுமால்**
**வரை* முற்றும்**
**உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக்**
**கொண்டதே. (6)**

**துண்டவெண்பிறையன் துயர் தீர்த்தவன்**— 'ஈச்வரன்' என்னும்†[1] பேரைச் சுமந்த தனக்கு **पूर्णत्वம்** இல்லை என்கைக்கு **ज्ञापकம்**[2] போலே **शकल-मात्रமாய்க்** கொண்டு[3] ப்ரகாசிக்கிற **चन्द्रकलै**யைத் தரிக்கிற **रुद्रन்** **ब्रह्मा**வினுடைய புத்ரனாய் வைத்து, பிதாவின் திறத்திலே அபராதம் பண்ணி, அத்தாலே **महापातक-आक्रान्त**னாய்[4](†[2]) 'இப்பாதகத்தைத் தீர்க்கவல்லாரார்' என்று **कर-कलित-कपाल**னாய்க்கொண்டு[5] திரிந்து ஓரளவிலே†[3] **கெடுமரக்கலம் கரை சேர்ந்தாற் போலே** காருணிகனான ஸர்வேச்வரனை வந்து கிட்டி "**என் எந்தாய் சாபம் தீர்**"*[1](†[4]) என்ன, இவனுடைய சாபத்தைத் தீர்க்க வல்லவன். இத்தால் **ईश्वरन்** என்ற பேருடைய **रुद्रன்** **कर्म-वश्यன்** என்னுமிடமும், தன்னைத் தான் ரக்ஷித்துக் கொள்ளமாட்டாத இவன் வேறொருத்தருக்கு **निरपेक्ष-रक्षक**னாக மாட்டான் என்னுமிடமும், 'ஸர்வேச்வரனே ஸர்வ அநிஷ்டநிவர்த்தகன்' என்னுமிடமும் சொல்லிற்றாயிற்று.

**அஞ்சிறைய வண்டுவாழ் பொழில் சூழ் அரங்க நகர் மேய அப்பன்**—**आर्ति**யுடையார்[6] அபேக்ஷித்தால்

அவர்களுக்கு दूतकृत्यम் பண்ணுகைக்கும், மாசின் மலரடிக்கீழ் அவர்களைச் சேர்க்கைக்கும் ஹேதுவான गतिक्கு साधनங்களாய், अधिरूपங்களான[7] சிறகுகளை உடைத்தான வண்டுகள் अभिमत-भोगத் தோடே வாழ் கிற दिव्योद्यानங்களாலே சூழப்பட்ட ஸ்ரீரங்க நகரத்திலே நித்ய வாஸம் பண்ணுகிற ஸர்வலோக பிதாவானவன்.

---

1—விலக்கினபடியை. 2—நினைப்பூட்டுவது. 3—சிறு துண்டாய். 4—பெரும் பாவத்தால் சூழப்பட்டவனாய். 5—கையில் ஒட்டிய மண்டையோட்டை உடையவனாய். 6—(ஆர்தி= பீடை) துன்புறுவோர். 7—அழகான.

1—என்று[1]. 2—மஹாபாதகனாய்[4]. 3—திரிந் தோரளவிலே;[1] திரிந்ததோரளவிலே[4]. 4—ஸர்வேச் வரனைக் கண்டு என்னெந்தாயென் சாபம் தீர்[1].

*1. வெந்தாரென்பும் சுடுநீறும் மெய்யில் பூசி, கையகத்து* ஓர்
சந்தார்தலைகொண்டு உலகேழும் திரியும் பெரியோன்தான் சென்று*
என் எந்தாய்! சாபந்தீரென்ன இலங்கு அமுதுநீர் திருமார்பில்
தந்தான்* சந்தார் பொழில் சூழ்ந்த சாளக்கிராமம் அடை நெஞ்சே!

பெரிய திரு. (1-5-8): செத்து வெந்து போன ப்ரேதங்களின் எலும்புகளை மாலையாகத் தொடுத்து அணிந்து கொண்டும், சுட்ட சாம்பலை உடம்பிலே பூசிக்கொண்டும், (தன் தந்தையாகிய பிரமனின் தலையைக் கிள்ளியதால் கையில் ஒட்டிக் கொண்ட) சந்துகள் நிறைந்த மண்டை யோட்டுடன் உலகெங்கும் திரிந்து பிச்சையெடுத்தவனுமான பரமசிவன் கடைசியாக எம்பெருமானிடம் வந்து "என்னுடைய ஸ்வாமியே! எனக்கு நேர்ந்திருக்கிற ப்ரஹ்மஹத்யா சாபத்தைத் தீர்த்தருள வேண்டும்" என்று பிரார்த்திக்க, தனது திருமார்பிலிருந்து அம்ருதஜலத்தை (வேர்வை நீரை) எடுத்து கபாலத்திலிட்டு நிறைத்துச் சாபம் தீர்த்தவனை எம்பெருமான் நித்யவாஸம் செய்யுமிடமான சந்தனமரங்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த ஸாளக்ராமத்தை, நெஞ்சே! அடைவாயாக,

இத்தால் **कारण-भूत**னாய் **करण-कलेबर**ங்களைக்[1] கொடுத்து உபகரித்தவன் கண்ணுக் கிலக்காய் வந்து கண் வளர்ந்து கரணங்கள் பட்டி புகுராதபடி[2] காக்கிற **उपकार-अतिशय**த்தை உதாஹரித்ததாகிறது†[1]. "**नरात् जातानि तत्त्वानि**"*[1] **इत्यादि**களின் **अर्थ**மும் இங்கே **अनुसन्धेय**ம்.

**कारणावस्थै**யில் எல்லாக் கார்யங்களையும் தன் பக்கலிலே **उपसंहरि**த்து[3], பின்பு **सृष्टि**க்கும்படிக்கு உதாஹரணமாக†[2] "வெற்றிப் போர்க் கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக் கொண்ட"*[2] உபகாரத்தைக் காட்டி, "நெற்றி மேல் கண்ணனும்†[3] நான் முகனும்"*[2] முதலாக "எம்பெருமான் உண்டு உமிழ்ந்த எச்சில் தேவரல்லாதார் தாம் உளரே"*[2] என்னும் அர்த்தத்தைப் பேசிக் கொண்டு, தம்மை இப்போதும் **संसार-अर्णव**ம் விழுங்காதபடி உய்யக் கொண்டபடியை உபலாளிக்கிறார்[4]. அண்டரண்டபகிரண்டத்து ஒரு மாநிலம் எழு மால் வரை முற்றும் உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டதே—

---

1—இந்திரியங்களையும் உடலையும். 2—அப்ராப்த விஷயங்களில் செல்லாதபடி. 3—சுருக்கி, ஒடுக்கி. 4—கொண்டாடுகிறார்.

†1—உதாஹரிக்கிறதாகிறது[1]. 2—ஸ்ருஷ்டிக்கும்படி உதாஹரண[1]. 3—நெற்றி மேல் கண்ணனவன் முதலாக நான்முகனும்[1].

*1. नराज्जातानि तत्त्वानि नाराणीति ततो विदुः ।
तान्येव चायनं तस्य तेन नारायणः स्मृतः ॥

மநு. (1-10-33); ஸ்ரீமதஷ்டாக்ஷரம் (1); பார. (ஆநு-186-7); எல்லா தத்துவங்களும் நரனாகிய பகவானிடமிருந்து உண்டானவை. ஆகையால் அவற்றை நாரங்கள் என்று அறிகின்றனர். அவையே அவனுக்கு இருப்பிடமாயின. ஆகையால் அவன் நாராயணன் என்று எண்ணப்படுகிறான். (நரன்=நாசமற்றவன்=எம்பெருமான்).

*2. நெற்றிமேல் கண்ணானும் நிறைமொழிவாய்
நான்முகனும் நீண்ட நால்வாய்*
ஒற்றைக்கை வெண்பகட்டின்ஒருவனையும்
உள்ளிட்ட அமரரோடும்*
வெற்றிப் போர்க்கடலரையன் விழுங்காமல்
தான்விழுங்கி உய்யக்கொண்ட*
கொற்றப் போராழியான் குணம் பரவாச்
சிறுதொண்டர் கொடியவாறே!

பெரிய திரு. (11-6-3): நெற்றிக் கண்ணனான சிவன், பொருள் செறிந்த வேதங்களை வாயால் ஓதும் பிரமன், நீண்டு தொங்குகின்ற ஒற்றைத் துதிக்கையையுடைய ஐராவதத்தை வாஹனமாக உடைய இந்திரன் இவர்களோடு மற்றுமுள்ள தேவர்களையும் அவாந்தர ப்ரளயத்தின் போது உலகம் முழுதும் பரவுகின்ற பெருங்கடல் விழுங்கி அழிக்காதவாறு, தானே விழுங்கித் தன் திருவயிற்றில் வைத்து காப்பாற்றிய சக்ரதாரியான எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களைப் புகழாத அற்பர்களான தேவதாந்தர பக்தர்களின் போக்கு கொடியதன்றோ. என்னே ஆச்சர்யம்!

*3. நில்லாத பெருவெள்ளம் நெடுவிசும்பின் மீதோடி நிமிர்ந்த காலம்*
மல்லாண்ட தடக்கையால் பகிரண்டமகப்படுத்த காலத்து* அன்று
எல்லாரும் அறியாரோ? எம்பெருமானுண்டுமிழ்ந்த எச்சில் தேவர்*
அல்லாதார் தாமுளரே? அவனருளே உலகாவது அறியீர்களே?

பெரிய திரு. (11-6-2): ஓரிடத்தில் நிலைத்து நில்லாத பெருவெள்ளமானது (ப்ரளய காலத்தில்) அளவில்லாமல் பரந்திருக்கும் ஆகாசத்திற்கு மேலே வழிந்தோடிய போது, மிடுக்குடைய தன் பெரிய திருக்கையால் அண்டத்திற்கு வெளியிலுள்ள ஸமஷ்டியையும் கபளமாக்கித் தன் திருவயிற்றில் கொண்டு, பின்பு மீண்டும் ஸ்ருஷ்டிக்கும் போது துப்பியதால் எம்பெருமானது எச்சில் படாத தேவர்கள் உளரோ? உலகம் முழுதும் தனது இருப்பைப் பெறுவது அவ்வெம்பெருமானுடைய திருவருளாலேயே. இதை அறியமாட்டீர்களோ?

अण्डान्तर्वर्तिகளான[1] देवादि-वर्गங்களையும், அண்டங்கள் தன்னையும், அண்ட ஆவரணங்களையும்[2] அண்டங்களுக்குள்ளே पञ्चाशत्-कोटि-विस्तीर्णமான[3] महापृथिवियாலும் कुलपर्वतங்களாலும் उपलक्षितங்களான[4] ஸர்வ கார்யங்களையும் எல்லாம் திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்கைக்காக விழுங்கின திருக்கழுத்துக் கண்டீர் ஸ்வருபத்தை உணர்ந்த என்னை स्वानुभवத்தாலே உஜ்ஜீவிப்பித்தது. அண்டாதிகளைப் பற்றச் சிறியவான†[1] कुलपर्वतादिகளைப் பிரியப் பேசுகையாலே, அவ்வளவு விழுங்குகையும் आश्चर्यம் அன்று†[2] என்று தோன்றுகிறது.

7. மேல் நாலுபாட்டாலே†[3] चतुर्थियில் प्रार्थनीयமான[4] கைங்கர்யத்திற்குப் प्रस्तावकமான[5](†[4]) அநுபவம் தம்மை இப்போது பரவசமாக்கின(†[5]) படியைப்[6] பேசுகிறார். அதில் 'கையினார்' என்கிற பாட்டில் ஆழ்வார்களோடு பொருந்தின†[6] திருக்கையை अवलम्बनமாகக் கொண்டு திருமுடியளவும்†[7] சென்று மீண்டசிந்தையை தூமுறு வல் தொண்டைவாய்ப் பிரானுடைய "கோலந்திரள் பவளக்கொழுந்துண்டம் கொல்"*1 என்னும்படியான திருப்பவளத்தில் அழகு தன்வசமாக்கிற்று என்கிறார்†[8].

கையினார் சுரிசங்கனலாழியர்* நீள்வரைபோல்
மெய்யனார் துளபவிரையார் கமழ் நீள்முடிஎம்
ஐயனார்* அணியரங்கனார் அரவினணைமிசைமேய
மாயனார்*
செய்யவாய் ஐயோ என்னைச்சிந்தை கவர்ந்ததுவே.
(7)

கையின் ஆர் சுரி சங்கு அனல் ஆழியர்—திருக்கைக்கு ஆயுதமாகைக்கும் ஆபரணமாகைக்கும் போரும் என்னும்படி ஆர்ந்த[7] ஸந்நிவேசத்தை யுடைத்

1—அண்டத்திற்குள் இருப்பவர்களான. 2—அண்டத்தை மூடியிருப்பவை. 3—ஐம்பது கோடி யோஜனை பரந்த (1 யோஜனை= 7 மைல்). 4—குறிக்கப்பட்ட. 5—கைங்கர்யத்தை உணர்த்துவதான. 6—தன்னிலைமையை மறக்கச் செய்ததை. 7—பொருந்திய.

†1—"உணர்ந்த என்னை......சிறியவான" என்பதற்கு பதில் "உணர்த்த என்னை ஸ்வாநுபவத்தாலே உஜ்ஜீவிப்பித்து, அண்டாதிகளைப் பற்றி சிறியவான"[1]. 2—"அன்று" என்பது இல்லை[1]. 3—'प्रार्थनीयமான' என்று அதிகம்[1]. 4—प्रसाधकமான[1]. 5—ப்ரதாநமான அநுபவம் தம்மைப் பரவசமாக்கின[4]. 6—பொருந்தும்[1]. 7—திருமுடியளவு[1]. 8—"அதில் கையினர்......என்கிறார்"—இது பாசுரத்திற்குப் பிறகு அச்சிடப்பட்டிருக்கிறது.

*1. வாலியதோர் கனிகொல்? வினையாட்டியேன் வல்வினைகொல்?*
கோலந்திரள் பவளக் கொழுந்துண்டங்கொலோ? அறியேன்*
நீலநெடு முகில் போல் திருமேனியம்மான் தொண்டைவாய்*
ஏலும்திசையுளெல்லாம் வந்து தோன்றும் என்னின்னுயிர்க்கே.

திருவாய். (7-7-3): (எம்பெருமானுடைய அவயவங்களின் அழகாலே துன்பப்படுத்தப்பட்டவராய், தன் இருப்பைப் பராங்குச நாயகி கூறுவது.) இஃதென்ன என முன்னாலே தோன்றுகிறதே! இது நன்றாய்ப் பழுத்த அளவில்லாமல் இனியதான பழமோ? (அல்ல; பழம் என்னை வருத்துமோ?) பாபம் செய்த என்னுடைய பாபமோ? (அதுவுமல்ல). அழகெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து வந்தது போலிருக்கிற பவளத்தின் நன்றாய் வளர்ந்த துண்டமோ? (அதுவுமன்று) பெரிய நீலமேகம் போன்ற திருமேனியுடைய என் ஸ்வாமியினுடைய கோவைப் பழம் போன்ற திருப்பவளம் (தன் அழகைக் காட்டி) என் இனிய ஆத்மாவைக் கொல்லுவதற்காக வந்திருக்கிறது. எங்கேயாவது ஓடிப்போய் இதில் அகப்படாமல் தப்பிப் போகலாமோ? என்றால், எங்கே போனாலும் இது வந்து தோன்றுகிறதே!

தாய்[1] வலம்புரியான†[1] வடிவாலே प्रणव-सन्निवेशமாய், शब्दब्रह्मமயமாய், निरतिशय-आनन्द-हेतुவான ஸ்ரீ पाञ्चजन्यத்தையும், दानववन-दवाग्निயாய்[2], मनस्तत्त्व-अभिमानिயான†[2] திருவாழியாழ்வானையும்†[3] உடையவராய்[3]; இத்தால் மந்த்ரத்தையும் மநஸ்ஸையும் அநுகூலசிந்தைக்கு அநுகுணமாக்கவல்ல உபகரணங்களை உடையவர்†[4] என்றதாயிற்று. திவ்யாயுத ஆழ்வார்கள் பெரிய பெருமாளுடைய[4] திருக்கை ரேகைகளில் ஒதுங்கிக் கிடந்து, பெருமாள் திருமேனியிலே தோன்றி நிற்பார் கள். நீள் வரை போல் மெய்யனார்—ஸ்வரூபம் போலே सूक्ष्म-दृष्टिகள் காணுமளவன்றிக்கே, மாம்ஸ चक्षुஸ்ஸுக்களும் காணலாம்படி மலை 'இலக்கான†[5] திருமேனியை உடையவர். துளப விரையார் கமழ் நீள் முடி எம் ஐயனார்—सर्वाधिकत्व-सूचकமான திருத்துழாயின் பரிமளத்தைப் பரிபூர்ணமாக்கும்படி கமழ்ந்து, विभूति-द्वय-साम्राज्य-व्यञ्जकமான[5] दिव्य-किरीटத்தையுடைய सर्वलोक-पिताவானவர். அணி அரங்கனார்——परम-व्योम-क्षीरार्णवादिகளைக் காட்டில்[6] गुणातिशयத்தாலே आश्रितர்க்கு हृद्यतमமான படியாலே[7](†[6]) விபூதி இரண்டுக்கும் ஏகாபரணம் என்னலாய், सौलभ्यातिशयம் உண்டாம்படியான ஸ்ரீரங்க விமானத்தை शयनस्थानமாக உடையவர். அணிமையாலே†[7] 'அணியரங்கனார்' என்கிறதாகவுமாம். அரவினணைமிசை மேய மாயனார்—தம்முடைய ज्ञान-बलங்கள் வடிவு கொண்டாற்போலே இருக்கிற திருவநந்தாழ்வானாகிற अनुकूल-दिव्यपर्यङ्कத்தின் மேலே அளவறத் தேங்கின†[8] अमृततटाकம் போலே आश्रितர்க்கு அநுபவிக்கலாம் "चिन्तामणिमिवोद्वान्तं उत्सङ्गे अनन्तभोगिनः"*[1] என்னும்படி अत्याश्चर्यभूतரானவருடைய, செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே—'வாலியதோர்

கனிகொல்''(377[1]) என்னலாம்படியான वर्ण-माधुर्यादि களை உடைத்தாய் 'வையமேழும் உள்ளே காணலாம் படியான செய்யவாய் என் சிந்தையைப் பறித்துக் கொண்டது. ''ஐயோ'' என்றது आश्चर्यத்தை யாதல், अनुभविத்து ஆற்ற†[9] அரிதானபடியையாதல், அநுப்வ ரஸத்தையாதல் காட்டுகிறது.

---

*1—அமைப்பை உடைத்தாய். 2—அசுரர்களாகிற காட்டுக்குக் காட்டுத்தீயைப் போன்றதாய். 3—சப்தப்ரஹ்மமயமான பாஞ்ச ஜன்யம் மந்திரத்தையும், மனஸ்தத்வாபிமானியான சக்ரம் மனஸ்ஸையும் அநுகூலமாக்கும் என்று கருத்து. 4—'பெரியபெரு மாள்' என்று பள்ளி கொண்டிருக்கும் மூலவருக்கும், 'பெருமாள்' அல்லது 'நம் பெருமாள்' என்று உத்ஸவருக்கும் திருநாமங்களாக வழங்கி வருகின்றன. 5—நித்யவிபூதி லீலாவிபூதி என்ற இரு விபூதியாகிற ஸாம்ராஜ்யத்தைக் குறிக்கும். 6—பரமபதம், திருப்பாற்கடல் முதலியவற்றைக் காட்டிலும். 7—மனத்துக்கு மிகவும் இனிய.*

†1—அவ் வலம்புரியான[1]. 2—मनस्सत्वाभिमानियான[1] 3—திருவாழியாழ்வானை[1]. 4—உடையார்[1]. 5 – மலையிற் காண[4]. 6 —हृदयङ्गमமானபடியாலே[4]. 7—அணுமை[1] (=ஸமீபம்). 8—அளவறங்தேங்கின[1]; அளவாகத் தேங்கின[4]. 9—'ஆற்ற' என்பது இல்லை[1].

*1. श्रीस्तनाभरणं तेजः श्रीरङ्गेशयमाश्रये ।
चिन्तामणिमिवोद्वान्तमुत्सङ्गेऽनन्तभोगिनः ॥

*ஸ்ரீரங்கராஜஸ்தவம் (1-8) : பிராட்டியின் திருமுலைத்தடத் திற்கு அலங்காரமானதும், ஆதிசேஷனுடைய மடியிலே கக்கப் பட்ட சிந்தாமணி போன்றதும், திருவரங்கத்தில் பள்ளிகொண்டி ருப்பதுமான தேஜஸ்ஸை அடைகிறேன்.*

8. தம்மை "जितं ते पुण्डरीकाक्ष"*[1] इत्यादिகளிற்படியே†[1] தோற்பித்துத் திருவடிகளிலே விழப்பண்ணி, மேலே மேலே†[2] அநுபவத்தை உண்டாக்கின தாமரைக் கண்களுக்குத் தாம் அற்றுத்தீர்ந்தபடியை[1] आश्रित-विरोधि-निराकरण-वृत्तान्त-पूर्वकமாக அநுபவிக்கிறார்.

பரியனாகி வந்த அவுணனுடல் கீண்ட* அமரர்க்கு
அரிய ஆதிப்பிரான் அரங்கத்தமலன் முகத்து*
கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி*
நீண்ட அப்
பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை
செய்தனவே. (8)

பரியனாகி வந்த அவுணன் உடல் கீண்ட—ஸர்வ லோகத்திலுமுள்ள தமஸ்ஸெல்லாம் திரண்டு ஒரு வடிவு கொண்டாற்போலே अतिस्थूलனாய்[2] மஹாமேரு நடந்தாற்போலே எதிர்த்து வந்த திரண்டதோள் இரணியன் சினம் கொள் ஆகம் ஒன்றையும் ஒரு வாழை மடலைக் கிழிக்குமாப் போலே இரண்டு கூறு செய்தவனாய், அமரர்க்கு அரிய ஆதிப்பிரான்—தன்னாலே सृष्टருமாய் उपकृतருமான தேவர்கள் தான்†[3] कारणभूतனாய் உபகாரகனாய் நிற்கிற நிலையறிய மாட்டாமையாலே, அவர்களுக்கு ப்ரஹ்லாதன் அணுகி†[4] அநுபவித்தாற் போலே அணுகவும் அநுபவிக்கவும் அரியனாய் இருக்கிற, அரங்கத்து அமலன் முகத்து—हेय-आकरமான†[5] ஸம்ஸாரத்திற்குள்ளே கோயிலாழ்வாருடனே எழுந்தருளிவந்து "அணியார் பொழில் சூழ் அரங்க நகர்†[6] அப்பா! துணியேன் இனி நின்னருள் அல்லது எனக்கு"*[2] என்று இருப்பார், தம்முடைய திருவடிகளையடைந்து அருள்†[7] சூடி உய்யும்படி அவர்களுடைய ஐயப்பாடு முதலான ஹேயங்களை

அறுத்துத் தோன்றும் அழகையுடையரான பெரிய பெருமாளுடைய "கோளிழைத் தாமரை"*³ इत्यादि

---

1—அத்தன்மையதாய் (அடிமையாய்) ஆனபடியை. 2—மிகவும் பருமனாய்.

†1—जितं ते, பரியனுகி इत्यादिகளிற்படியை[1]. 2—"மேலே" என்பது இல்லை 3—தங்களுக்கு[4]. 4—அநுதினம்[1]. 5—ஹேயகரமான[1]; ஹேயாகாரமான[4] 6—நகர்மேய[1]. 7—அடி[1].

*1. जितं ते पुण्डरीकाक्ष नमस्ते विश्वभावन ।
नमस्तेऽस्तु हृषीकेश महापुरुष पूर्वज ॥

ஜிதந்தே. (1-1) : செந்தாமரைக்கண்ணா ! உன்னால் (இவ்வாத்ம வஸ்து) ஜெயிக்கப்பட்டது; (இது) என்னுடையதல்லவே; உன்னுடையதாயிற்றே. உலகையெல்லாம் உண்டாக்கினவனே ! இந்திரியங்களை நியமிப்பவனே ! கொடுப்பதில் சிறந்தவனே ! (இவ்வாத்ம வஸ்து) எனக்காகை தவிர்ந்து உனக்கேயாகவேணும்.

*2. அணியார் பொழில் சூழ் அரங்க நகரப்பா*
துணியேன் இனி நின்னருளல்லது எனக்கு*
மணியே ! மணிமாணிக்கமே ! மதுசூதா !*
பணியாய் எனக்கு உய்யும் வகை பரஞ்சோதீ !

பெரிய திரு. (11-8-8) : அழகு நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட திருவரங்கத்துக்கு நிர்வாஹகனானவனே ! இனிமேல் உன்னுடைய க்ருபை யொழிய மற்றொன்றை எனக்கு தாரகமாக நினைக்க மாட்டேன். நீலமணி போன்றவனே ! ரத்நம் போல் இயல்பான மேன்மையுடையவனே ! மது என்றும் அஸுரனை அழித்தவனே! பரஞ்சோதி! அடியேனுக்கு உஜ்ஜீவநோபாயத்தை அருளிச் செய்யவேண்டும்.

*3. கோளிழைத் தாமரையும் கொடியும் பவளமும் வில்லும்*
கோளிழைத் தண்முத்தமும் தளிரும் குளிர்வான் பிறையும்*
கோளிழையாவுடைய கொழுஞ்சோதி வட்டங்கொல் ?*
கண்ணன்
கோளிழைவாண் முகமாய் கொடியேனுயிர் கொள்கின்றதே.

திருவாய். (7-7-8) : (எம்பெருமானுடைய திருமுகத்தில்

களாலே பேசப்பட்ட பேரழகையுடைத்தாய், சந்திர னும் தாமரையும் ஒன்றினுற் போலே இருக்கிற திரு முகத்தில், கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரி யோடி நீண்ட அப்பெரியவாய கண்கள்—நிகரில்லாத நீலரத்னம் போலே இருக்கிற तारकैयின்[1] நிறத்தாலே நீலோத்பல - வர்ணங்களாய், आश्रित-दर्शन-प्रीतियாலே[2] அன்று அலர்ந்த தாமரைப் பூப்போலே अतिविकसितங் களாய் ஆஸந்நராஞரெல்லார்[3](†[1]) பக்கலிலும் ஆதரம்[4] தோன்றும்படியான உல்லாஸத்தையுடையவையாய்[5] அநந்யர் பக்கல் अनुरागத்திற்குக் கீற்றெடுக்கலாம் படியான[6](†[2]) சிவந்த வரிகளாலே வ்யாப்தங்களாய், स्वभावसिद्धங்களான ஆயாம விஸ்தாரங்களை[7] உடை யவையான†[3] திருக்கண்கள். ‘அப்பெரிய’ என்ற தற்கு இப்போது காண்கிறவளவன்றிக்கே, शास्त्रवेद्य மாய் अनवच्छिन्नமான भोग्यता-प्रकर्षத்தையும் माहात्म्यத் தையுமுடைய என்று தாத்பர்யமாகவுமாம். என்னைப் பேதைமை செய்தனவே—இவ்வநுபவரஸத்திலே அமிழ்ந்த†[4] என்னை அல்லாததொரு ज्ञानानुष्ठानங்களுக்கு अनर्हனும்படி பண்ணிற்றன.

9. अवयव-शोभैகளிலே ஆழங்காற்பட்ட தம்முடைய நெஞ்சு வருந்தி, எங்கும் வ்யாபித்து सर्वावयव-शोभै களோடும் கூடின समुदाय-शोभैயாலே पूर्णமாய் नित्य-अनुभव-श्रद्धैயாலே முன் பெற்றதாய் நினைத்திருந்த पूर्तिயை இழந்தது என்கிருர்.

ஆலமா மரத்தினிலைமேல் ஒரு பாலகனாய்*
ஞால மேழு முண்டான் அரங்கத்தரவினணையான்*
கோல மா மணியாரமும் முத்துத்தாமமும்
முடிவில்லாதோர் எழில்*
நீல மேனி ஐயோ ! நிறைகொண்டது
என்நெஞ்சினையே. (9)

ஆலமாமரத்தின் இலை மேலொரு பாலகனாய்—ஓர் அவாந்தரப் ப்ரளயத்திலே "ஆலன்று வேலை நீர் உள்ளதோ விண்ணதோ மண்ணதோ"*[1] என்று அறிய

---

அவயவங்களின் சேர்க்கையின் அழகை அநுபவித்து பராங்குச நாயகி பேசுவது.) தங்களின் அழகையே ஆபரணமாகவுடைய இரண்டு தாமரைப் பூக்கள், ஒரு கற்பகக் கொடி, ஒரு பவளத் துண்டம், இரண்டு விற்கள், குளிர்ந்த முத்துக்களின் வரிசைகள், இரண்டு தளிர்கள், பெரிய அஷ்டமீ சந்திரன் ஆகிய இவைகள் எல்லாம் சேர்ந்திருக்கின்ற ஒரு ஜ்யோதிர் மண்டலமோ இது! கண்ணனுடைய அழகிய முகம் என்று பெயர் வைத்துக் கொண்டு கொடுமையான பாபம் செய்த என்னுடைய ப்ராணனை அபஹரித்துக் கொண்டிருக்கிறதே அது. தாமரைப் பூக்கள்—திருக்கண்கள்; கொடி—திருமூக்கு; பவளத்துண்டம்—திருப் பவளம்; விற்கள்—புருவங்கள், முத்துகளின் வரிசை—திருப்பற்கள்; தளிர்கள்—திருக்காதுகள்; அஷ்டமீ சந்திரன்—திருநெற்றி; ஜ்யோதிர் மண்டலம்—திருமுகம்.) ⊏

1—கருவிழியின். 2—ஆச்ரிதர்களைக் கண்ட ப்ரீதியாலே. 3—அருகில் உள்ளவர்கள். 4—அன்பு. 5—மலர்ச்சியுடையவையாய். 6—கோடிட்டுக் காட்டும் படியான. 7—நீட்சியும் பரப்புமுடைய.

†1—ஆஸந்நரெல்லார்[1]. 2—अनुरागத்துக்கீற்றெடுக்கலாம்படியான[1]. 3—स्वभावसिद्धங்களாய் நவாயாம விஸ்தாரங்களையுடையவான[1]. 4—இழிந்த[4].

*1. பாலன்தனதுருவாய் ஏழுலகுண்டு* ஆலிலையின்
மேலன்று நீ வளர்ந்தமெய்யென்பர்*—ஆலன்று
வேலை நீருள்ளதோ? விண்ணதோ? மண்ணதோ?*
சோலை சூழ்குன்றெடுத்தாய்! சொல்லு.

முதல் திருவந். (69): சிறு குழந்தையின் உருவத்தை உடையவனாய் ஏழு உலகங்களையும் அமுது செய்து ஓர் ஆல் இலையின மேல் ப்ரளய காலத்தில் நீ கண்வளர்ந்தருளினதை உண்மை என்று (வைதிகர்கள்) சொல்லுவார்கள். அப்போது அந்த ஆலந்தளிர் நீ கண்வளர்ந்த ஸமுத்ரஜலத்திலிருந்ததோ? ஆதாரமற்றதான ஆகாசத்திலிருந்ததோ? கரைந்து போன பூமியிலிருந்ததோ? சோலைகளால் சூழப்பட்ட கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தவனே! நீதான் சொல்லவேண்டும்.

வரிதாய் अनन्त-शाखமாய்[1] இருப்பதொரு वट-वृक्षத்தில்[2] ஓரிலையிலே†[1] தாயும் தந்தையுமில்லாததொரு தனிக் குழவியாய், ஞாலம் ஏழும் உண்டான்—அடுக்குக் குலையாமல் மார்க்கண்டேயன் காணும்படி ஸர்வ லோகங்களையும் திருவயிற்றிலே வைத்தவன். அரங்கத்து அரவினணையான்——प्रलय-कालத்திலே बालனாய்க் கொண்டு ஆலிலைமேலே கண் வளர்ந்தருளுகிற போதோடு, ஸர்வ காலத்திலும் கோயிலாழ்வாருக்குள்ளே ஸூரிகளுக்கெல்லாம் தலைவரான திருவநந்தாழ்வான் மேலே "உலகுக்கோர் தனியப்பன்"*[1] என்னும்படி தன் ப்ரஜைகளான ब्रह्मादिகள் आराधिக்கக்†[2] கண்வளர்ந்தருளுகிற போதோடு வாசியற कारणत्व-रक्षकत्वादिகள் காணலாம் படியாயிருக்கிற பெரிய பெருமாளுடைய, கோல மா மணியாரமும்—நாச்சியாருக்குக கோயில்-கட்டணமாயிருக்கிற[3] திருமார்வுக்கு ஒரு रत्न-प्राकारம்†[3] போலே अभिरूपமாய் अतिमहत्தாய் महार्घ-रत्नமான[4] திருவாரமும்; முத்துத்தாமமும்—சன்ன வீரமாயும்[5] एकवल्लिயாயும்[6](†[4]) त्रिसरமாயும்[7] पञ्चसरமாயுமுள்ள திருமுத்துவடங்களும்†[5]; முடிவில்லதோர் எழில் நீலமேனி——இவைதனக்கும் अतिशयकरமாய்[8] अनन्तமாய் अद्वितीयமான आभिरूप्यத்தை உடைத்தாய் कालमेघம் போலே श्रमहरமான திருமேனியும்; ஆபரணங்களுக்கு முடிவில்லதோர் எழிலை உண்டாக்கும்படியான நீலமேனி என்னவுமாம். ஐயோ நிறை கொண்டது என் நெஞ்சினையே—தனித்தனியே†[6] दिव्य-अवयवங்களை அநுபவித்த என் நெஞ்சை समुदाय-अनुभवத்தாலே முன்புற்ற पूर्णत्वाभिमान-गर्भமான गांभीर्यத்தைக் கழித்து, இப் पूर्ण-अनुभवத்திற்கு विच्छेदம்[9] வரில் செய்வதென்

என்கிற अतिशङ्कையாலே "பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு"*[2] என்று नित्य-सापेक्षமாம்படி பண்ணிற்று.

---

1—எண்ணற்ற கிளைகள் உள்ளதாய். 2—ஆலமரத்தில். 3—வாஸஸ்தாநமாயிருக்கிற. 4—அதிக விலையுள்ள ரத்நமான. 5—வீரத்தின் அடையாளமாய். 6—ஒற்றை வடமாயும். 7—மூன்று சரங்களுள்ளதாயும். 8—பெருமை தருவதாய். 9—இடைவெளி.

†1—ஒருயிலையிலே[1]. 2—ப்ரஹ்மாதிகளாயிருக்க[1]. 3—ரத்நப்ரகரம்.[1] 4—ஏகாவலியாயும்[4]. 5—வல்ல திரு முத்து வடங்களும்[1]. 6—தனியே[1].

*1. பெரியவப்பனைப் பிரமனப்பனை
உருத்திரனப்பனை* முனிவர்க்கு
உரியவப்பனை அமரரப்பனை
உலகுக்கோர் தனியப்பன் தன்னை*
பெரியவண்குருகூர் வண்சடகோபன்
பேணின ஆயிரத்துள்ளும்*
உரியசொல்மாலை இவையும் பத்து இவற்றால்
உய்யலாம் தொண்டீர் ! நங்கட்கே.

திருவாய். (8-1-11) : நித்யஸூரிகள், பிரமன், ருத்ரன், ஸநகர் முதலிய யோகிகள், தேவர்கள், உலகத்தோர் ஆகிய அனைவருக்கும் மேற்பட்ட ஸ்வாமியாய், தனக்கு ஒருவன் ஸ்வாமி என்பதில்லாதவனாய் இருக்கிற எம்பெருமானைக் காணவேண்டும் என்று ஆசைப்பட்டு எல்லாவளமும் நிரம்பிய குருகூரில் எழுந்தருளியிருந்த ஆழ்வார் அருளிச் செய்த ஆயிரம் பாட்டுக்களுக்குள் இந்தப் பத்துப் பாட்டுக்களும் எம்பெருமானுடைய குணங்களை நன்றாக பிரகாசிப்பிக்கின்றன. பக்தர்களே ! இந்தப் பாசுரங்களால் நமக்கு உஜ்ஜீவனமுண்டு.

*2. அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு*
வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு*
வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு*
படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே.

திருப்பல்லாண்டு (2) : தாஸர்களான எங்களோடும் ஸ்வாமி

இவ்வாழ்வார் 'அடியேன்' என்னுமதொழிய இப்ப்ரபந்தம் தலைக்கட்டுகிறவளவிலும் தம்முடைய பேரும் ஊரும் பேச மறக்கும்படி தாம் பெற்ற அநுபவத்திற்குப் பெரிய பெருமாள் இனி ஒரு விச்சேதம் வாராதபடி பண்ணினபடியைக் கண்டு, தம்முடைய ஆத்மாவதியான அனந்யாநுபவ ரஸத்தை முக்தனுடைய ஸாமகானத்தின் படியிலே பாடி அநாதிகாலம் பாஹ்யானுபவம் பண்ணின க்லேசம் தீர்ந்து க்ருதார்த்தராகிறார்.

**கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்**
**உண்ட வாயன்* என்னுள்ளம் கவர்ந்தானை***
**அண்டர் கோன் அணியரங்கன் என் அமுதினைக்†[1]**
**கண்ட கண்கள்* மற்றொன்றினைக் காணாவே. (10)**

கொண்டல் வண்ணனை—கடலிலுள்ள நீரெல்லாம் வாங்கி, காவேரீ மத்யத்திலே பணி(டி)ந்ததொரு காளமேகம் போலே கண்டார்க்கு ச்ரமஹரமான திருமேனியையுடையவனை; அங்ஙன் அன்றிக்கே ஜங்கம-ஸ்தாவரங்களெல்லாம்[1] உஜ்ஜீவிக்கும்படி ஜல-ஸ்தல-விபாகமற காருண்ய ரஸத்தை வர்ஷிப்பதொரு காளமேகத்தின் ஸ்வபாவத்தை உடையவனை என்னவுமாம். கோவலனாய வெண்ணெய் உண்டவாயன்—எட்டும் இரண்டும் அறியாத இடையரையும் இடைச்சிகளையும் ரக்ஷிக்கையாலே தன்னுடைய ஸர்வலோக-ரக்ஷகத்வம் வெளிப்படும்படி இடையரில் ஒரு ரூபத்தைக் கொண்டு ஆச்ரிதர் உகந்த த்ரவ்யமெல்லாம் தனக்கு உகப்பு என்னும்படி தோற்ற, அவர்கள் 'ஈட்டிய வெண்ணெய்', 'சூட்டு நன்மாலையிற்'படியே[1] அப்ராக்ருத-போகம் போலே அநுபவித்து, அத்தாலே இப்போதும் குணுங்கு[2](†[2]) நாறும் படியான திருமுகத்தை உடையவன். என்

உள்ளம் கவர்ந்தானை—இடைச்சிகள் வைத்த வெண்ணெய் போலே இவருடைய திருவுள்ளம் பெரிய பெருமாளுக்கு 'நவநீதம்'[3] ஆயிற்று. ஞானம் பிறந்த

---

யான உன்னோடும் பிரிவில்லாமல் இருக்கும் ஸம்பந்தம் எந்நாளும் நித்யமாய் இருக்கவேண்டும். அழகே உருவெடுத்தவளும் ஸர்வாபரண பூஷிதையுமான (தேவரீர்) வலத்திருமார்பில் நித்ய வாஸம் பண்ணுகிற நித்ய யௌவனத்தையுடைய பெரிய பிராட்டி நித்யமாகக் கூடியிருக்க வேண்டும். உன்னுடைய திவ்ய திருமேனியைச் சூழும் ஒளியையுடைய உன் வலது திருக்கையில் நித்யவாஸம் பண்ணுகிற ஜ்வாலாமாலியுமான சக்கரத்தாழ்வானும் சாசுவதமாய்ச் சேர்ந்திருக்க வேண்டும். ஆயுதமாகப் போரிலே புகுந்து (படை நடுங்க) சப்திக்கும் அந்தப் பாஞ்சசன்னியம் என்று பெயர் பெற்ற சங்கமும் நித்யமாய் இருக்க வேண்டும். □

1—அசையாப் பொருள்களும் அசையும் பொருள்களும். 2—(வெண்ணெயின்) முடை (பிசுக்கு) மணம். 3—புதிதாகக் கடைந்தெடுத்த வெண்ணெய்.

†1—அமுதனை[1]. 2—முனுங்கு[1].

*1. சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி* விண்ணோர்கள் நன்னீர்
ஆட்டி அந்தூபம் தராநிற்கவே அங்கு* ஓர் மாயையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப்
போந்து இமிலேற்று வன்கூன்
கோட்டிடையாடினை கூத்து* அடலாயர்தம் கொம்பினுக்கே.

திருவிரு. (21) : எம்பெருமானே! பரமபதத்திலிருப்பவர்கள், அங்கு பரிசுத்தங்களானதும் அணிவதற்கு மிக ஏற்றதுமான மாலைகளை எடுத்து வந்து, திவ்ய தீர்த்தத்தினால் நீராட்டம் செய்வித்து, அழகிய தூபத்தை (புகை மிகவும் பரவும்படி) ஸமர்ப்பிக்கிற போதே (அப்புகை நிற்பதற்குள்ளாகவே), உன் ஒப்பற்ற ஸங்கல்ப சக்தியாலே, கோகுலத்தில் சேர்த்து வைத்த வெண்ணெயைக் களவினால் உண்பதற்கு இங்கே தோன்றி, பராக்ரமம் மிக்க இடையர்களின்வஞ்சிக் கொம்பு போன்ற நப்பின்னையைப் பெறுவதற்காக, முசுப்பையுடைய ஏழு எருதுகளின் பலிஷ்டமானதும் வக்ரமானதுமான கொம்புகளின் நடுவிலே நீ நர்த்தனம் செய்தருளினாயே.

பின்பும்†[1] 'என்னது' என்னும்படி अहंकार-ममकारங்கள் வடும்பிடுகிற[1] என்னுடைய மநஸ்ஸை வடிவழகாலும் सौलभ्य-सौशील्य-वात्सल्यादि களாலும் वशीकरित्து இனி 'என்னது' என்ன வொண்ணாதபடி கைக்கொண்டவனை. அண்டர் கோன் – இடையர்க்கு†[2] நியாம்யனாய் நின்ற எளிமை गुणமாம்படி अण्डाधिपतियான ब्रह्मा முதலாக மற்றும் अण्डान्तर्वर्त्तिகளான தேவாதிகளை எல்லாம் स्वाधीनராக்கி வைத்திருக்கிற स्वामित्व-स्वातन्त्र्यादिகளை உடையவன். "கண்ணிக் குறுங் கயிற்றால் கட்டுண்டான் ஆகிலும் எண்ணற்கு அரியன் இமையோர்க்கும்"*[1] என்கிறாராகவுமாம். அணி அரங்கன் — ஸூரிகளும் स्वदेशத்தை விட்டு இங்கு வந்து ஸேவிக்கும்படி आकर्षकமான அழகையுடைத்தான स्थान-विशेषத்திலே அடியேனை अनुभव-परवशமாக்கினவனை. என்னமுதினை—परमपद த்திலும் क्षीरार्णवத்திலும் आदित्य-मण्डलादिகளிலும் அவ்வோ நிலங்களுக்கு நிலவரானார் அநுபவிக்கும் படியான अमृतமாய் நின்றாற் போலன்றிக்கே "நீசனேன் நிறைவொன்று மிலேன்"*[2] என்கிற நானும்†[3] அநுபவிக்கும்படி எனக்கு असाधारण மாய் जरा-मरणादि-प्रवाहத்தை निश्शेषமாகக்†[4] கழிக்கவல்ல निरतिशय-भोग्यமானவனை; प्राकृत-भोग-प्रवणரான தேவர்கள் अनेक-प्रयासத்தோடே பெற்று அநுபவிக்கும் அம்ருதம் போலன்றிக்கே, अनन्य-प्रयोजनனான நான் अयत्नமாகப் பெற்று அநுபவிக்கும்படியான அம்ருதமானவனை என்னவுமாம்.

'கண்ட கண்கள்' என்கிற இதிலே 'என் கண்கள்'†[5] என்னாமையாலே निर्ममत्वம் தோற்றுகிறது; இப்படி बाधित-अनुवृत्ति இல்லாத படியான (C—34) तत्त्वज्ञानம் பிறந்து ஸர்வத்திலும் निर्ममராயிருக்கிற†[6]

இவர் முன்பு 'என் கண்' என்றும், 'என் சிந்தை' என்றும்†[7], 'அடியேன் உள்ளம்' என்றும், 'என் உள்ளம்' என்றும் **ममकार**ம் பின் தொடர்ந்து தோன்றப் பேசு

---

1—தழும்பேறிய.

†1—பின்பு[1]. 2—இடையற்கும்[1]. 3—நான்[1]. 4—"निश्शेषமாக" என்பது இல்லை[1]. 5—கண்கள்[1]. 6—நிர்மத்ஸரராயிருக்கிற[1]. 7—எனக்கென்றும் என்சிந்தை யென்னும்படி என்னுள்ளமென்றும்[1].

•1. வண்ணக் கருங்குழல் ஆய்ச்சியால் மொத்துண்டு
கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான் காணேடீ !
கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும்
எண்ணற்கரியன் இமையோர்க்கும் சாழலே !

பெரிய திரு. (11-5-5) : (இரண்டு பிராட்டிமார்கள் பேசுவது, ஒருத்தி எம்பெருமானது ஸௌலப்யத்தையும், ஒருத்தி அவனது மேன்மையையும் சொல்லுகிறார்.) "ஏடீ ! அழகிய கரிய கூந்தலையுடைய யசோதைப் பிராட்டி கையாலே அடியுண்டு, முடிச்சுகளையுடைய சிறு கயிறொன்றால் கட்டுண்டு கிடந்தான் காண்" என்று ஒருத்தி கூற; மற்றொருத்தி "சாழலே ! நீ சொல்லுகிறபடி கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டவனேயானாலும், தேவர்களுக்கு 'இவன் இப்படிப்பட்டவன்' என்று நினைக்கவுங்கூட முடியாதவன்" என்கிறாள்.

*2. ஈசன்வானவர்க்கென்பன்என்றால்* அது
தேசமோ திருவேங்கடத்தானுக்கு*
நீசனேன் நிறைவொன்றுமிலேன்* என்கண்
பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே.

திருவாய். (3-3-4) : அளவற்ற காந்தியுள்ள திருமேனியையுடைய திருவேங்கடநாதன், ஆத்மாவுக்குத் தகாத குணங்களுள்ளவனாய், அதற்குத் தகுந்த குணங்களில்லாதவனாயிருக்கிற என்னோடு ஸங்கத்தைப் பண்ணித் தன்னை எனக்கு போக்யமாக்கிக் கொண்டிருக்க, நித்யஸூரிகளுக்குத் தன்னைக் கொடுத்துக் கொண்டிருக்கிறான் என்பது அவனுக்கு ஓர் ஏற்றமோ (பெருமையோ ?)

வானென்னில், स्वतन्त्र-स्वामियான ईश्वरன் स्वशेषभूतமான चेतन अचेतनங்களிலே†[1] स्वार्थமாக ஒன்றை ஒன்றுக்கு शेषமாக அடைத்துவைத்தால்[1] அவனடைத்தபடி அறிந்து பேசுவார்க்கு निर्ममत्वத்தோடே சேர்ந்த இம்மமகாரம்†[2] अभिज्ञர்[2] ममकரம் போலே दोषமாகாது. மற்றொன்றினைக் காணுவே—இதற்கு முன்பெல்லாம் बाह्यविषयங்களிலே प्रवणங்களாய்[3], அவற்றைக்கண்டபோது प्रीतिயும் காணுத போது विषादமுமாய்ச்[4] சென்று. இப்போது नित्य-दरिद्रனவன் निधिயைக் கண்டாற்போலே अनन्त-गुण-विभूति-विशिष्टமாக இம் महानिधियை அநுபவிக்கப் பெற்ற கண்கள் மற்றொன்றினைக் காணுவே †[3]प्राप्त-विषयத்திலே प्रतिष्ठितமான[5] सङ्गத்தையுடைத்தானபடியாலே परिचर्यार्थமாக வந்து पार्श्ववर्तिகளாய் நிற்கும் पद्मयोनि முதலானரையும் பாராது†[4].

पुरुषाणां सहस्रेषु तेषु†[5] वै शुद्धयोनिषु ।
अस्मान्न कश्चिन्मनसा चक्षुषा वाऽप्यपूजयत् ॥*[1]

என்கிறபடியே ब्रह्म-पुत्रர்களாய் "यूयं जिज्ञासवो भक्ताः"*[2] என்னுமளவரான एकतர், द्वितர். त्रितர் திறத்தில் ज्ञानिகளான श्वेतद्वीप-वासिகளுடைய अनादरத்தை இங்கே अनुसन्धिப்பது.

प्राप्य श्वेतं महाद्वीपं नारदो भगवान् ऋषिः ।
ददर्श तानेव नरान् श्वेतान् चन्द्रप्रभान् नरान् ॥
पूजयामास शिरसा मनसा तैस्सुपूजित ।"*[3]

என்று नारद-भगवान् அளவிலும் அவர்கள்†[6] பரிமாற்றம்[6] சொல்லப்பட்டது.

उवाच मधुरं भूयो गच्छ नारद मा चिरम् ।
इमे ह्यनिद्राहाराश्च†[7] मद्भक्ताश्चन्द्रवर्चसः
एकाग्राश्चिन्तयेयुर्मां नैषां विघ्नो भवेदिति ।''*[4]

---

1—ஏற்படுத்தி வைத்தால். 2—அறிவாளி. 3—ஈடுபட்டவையாய். 4—துக்கம். 5—நிலை நின்ற. 6—ஒருவர்க்கொருவர் பழகும்நிலை. 7—ப்ரகாரம்=விட்டுப் பிரிக்க முடியாத விசேஷணம்

†1—சேதநங்களிலே[1]. 2—இம்மமகாரமே[1]. 3—"தன்னையும் மற்றொருவரையும், மற்றொன்றையும் अविभागेन दृष्टत्वात् என்கிறபடியே याथात्म्येन காண்கையாலே ஸ்வதந்த்ரமாகவும் ஸ்வபோக்யமாகவும் ஒன்றையும் பார்க்க உபகரணமாகப் பெறுது என்கிறுர். இவ்வளவுன்றிக்கே (ப்ராப்த விஷயத்திலே)'' என்று அதிகம்[4]. 4—பார்த்து[1]. 5—येषु[1]. 6—அவர்[1]. 7—ह्यनिन्द्रियाहारा[5].

*1. பார. (சாந்தி-344-54): சுத்தயோனிகளான அந்தப் பல்லாயிரக் கணக்கான ச்வேதத்வீபவாஸிகளில் ஒருவரும் எங்களை நெஞ்சாலும் கண்ணாலும் கணிசிக்கவில்லை.

*2. सुतप्तं वस्तपो विप्राः प्रसन्नेनान्तरात्मना ।
यूयं जिज्ञासवो भक्ताः कथं द्रक्ष्यत तं विभुम् ॥

பார. (சாந்தி-344-31): ஓ அந்தணர்களே! தெளிந்த மனத்தோடு, உங்களால் நன்ருகத் தவம் செய்யப்பட்டது. நீங்கள் பகவானைக் காண விரும்பும் தசையிலிருக்கும் பக்தர்கள்; (ஆயினும்) அப்பரமனை நீங்கள் எப்படி (இதற்குள்) காணமுடியும்? (ப்ரஹ்மாவின் புத்திரர்களான ஏகதர், த்விதர், த்ரிதர் இவர்களைக் குறித்து அசரீரி வாக்கு கூறியது).

*3. பார. (சாந்தி-346-1): மஹர்ஷியான நாரதபகவான் சிறந்ததான ச்வேதத்வீபத்தை அடைந்து வெள்ளை நிறத்தவரும், சந்திரன் போன்று ஒளியுள்ளவருமான அந்தப் புருஷர்களையே கண்டார். மனத்தாலே அவர்களால் நன்கு பூஜிக்கப்பட்டவராய், அவர்களைத் தலையாலே வணங்கினுர்.

*4. பார. (சாந்தி-347-18,19): (பரமபதத் திருமேனியி

என்று भगवान् அருளிச் செய்த வார்த்தையையும் இங்கே अनुसन्धिப்பது. "கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலும் ஐங்கருவி கண்டவின்பம்"*1 என்கிற ऐश्वर्य-अनुभवத்திலும், 'தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்'*1 என்கிற आत्ममात्र-अनुभवरसத்திலும்†1 தமக்கு निःस्पृहतै பிறந்த படியிலே இங்கு தாத்பர்யம். அங்ஙனன்றிக்கே प्रधानமான अनुभवத்திலே இழிந்தபடியினாலே श्रियःपतिக்கு प्रकारமாக வல்லது மற்றொன்றையும் தாம் அநுபவியாத படியிலே தாத்பர்யமாகவுமாம் பெரியபெருமாள் திருமேனியிலே திருமலை முதலாகக் கோயில் கொண்ட अर्चावतारங்களிலும், राम-कृष्ण-वामन-वटपत्रशयनादिகளிலுமுள்ள भोग्यतै எல்லாம் சேர அநுபவித்து, இவ் आभिरूप्यத்திலே ஈடுபட்ட என் கண்கள் மற்றும் पर-व्यूह-विभवादिகளான திருமேனிகளையெல்லாம் சேரக் காட்டினாலும், स्तनन्धयத்திற்கு भोग्यान्तरங்கள் रुचियாதாற்போலே "भावो नान्यत्र गच्छति"*2 என்கிறபடியே, அவையொன்றும் ருசியாது என்கிறாராகவுமாம். இது இவருடைய अनन्य-प्रयोजनत्व-काष्ठै1(†2) இருக்கும்படி.

---

லிருந்து தோன்றிய உருவை இம்மாதிரியாகக் காட்டிவிட்டு) பகவான் நாரதரைக் குறித்து மறுபடி பின்வருமாறு வார்த்தை அருளினான்— 'நாரதனே ! விரைவில் இங்கிருந்து செல்வாயாக; இவர்கள் இந்திரியமும் ஆகாரமுமற்றவர்கள்; எனனடியார்கள்; சந்திரன் போல் ஒளியுள்ளவர்கள், ஒரே நினைவுடன் என்னை தியானம் செய்வார்கள்; இவாகளுடைய தியானத்திற்கு இடையூறு நேரலாகாது'' என்று. □

1—வேறொரு பயனைக் கருதாமைக்கு எல்லை.

†1—ஆத்மமாத்ராநுபவத்திலும்[4]. 2—அநந்ய-ப்ரயோஜநகாஷ்டை[1].

*1. கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலும் ஐங்கருவி
கண்ட இன்பம்* தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்*
ஒண்தொடியாள் திருமகளும் நீயுமேநிலா நிற்ப*
கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேன் உன்
திருவடியே.

திருவாய். (4-9-10) : கண்ணாலே ரூபத்தைப் பார்த்து, காதாலே சப்தத்தைக் கேட்டு, த்வகிந்திரியத்தால் சூடு-குளிர்ச்சி முதலான ஸ்பரிசத்தை அறிந்து, மூக்காலே வாஸனையை முகர்ந்து, நாவினால் ரஸத்தைச் சுவைத்து இப்படி உழன்று கொண்டிருக்கிற ஐந்து இந்திரியங்களால் அநுபவிக்கப்படும் ஸுகத்தையும், இந்திரியங்களால் அறியமுடியாததும் அவைகளால் உண்டாகும் ஸுகம் போல் அளவுள்ளதாய் இல்லாத ஆத்மாநுபவத்தால் உண்டாகும் சிறிய ஸுகத்தையும் (=கைவல்ய ஸுகத்தையும்) விட்டு விட்டேன். இஃது எதனால் எனில், ஒளிபொருந்திய கைவளைகளையுடைய பிராட்டியும் நீயும் வைகுண்டத்தில் நித்ய சேஷியாய் இருக்கும் கோலத்தை உன் திருவருளால் பார்த்து விட்டதால், உன் திருவடிகளையே அடைய வேண்டியவைகளாய் நிச்சயித்து நான் பிடித்துக் கொண்டேன். (உழலுதல்=மிகுந்த துன்பத்தை அநுபவிக்கும் போதும் விஷயங்களை விடாமல் அவைகளிலேயே சுற்றிக் கொண்டிருத்தல். பகவதநுபவ ஸுகத்தோடு ஒப்பிடுகையில் கைவல்ய ஸுகம் மிக அற்பமானதால் சிற்றின்பம் எனப்பட்டது.)

*2. स्नेहो मे परमो राजन् त्वयि नित्यं प्रतिष्ठितः ।
भक्तिश्च नियता वीर भावो नान्यत्र गच्छति ।।

ராமா. (7-40-15) : ஸ்வாமியே! தேவரீரிடத்தில் எனக்கு மேலான அன்பானது எப்போதும் நிலைநிற்கிறது. வீரரே! உம்மிடத்தில் பக்தியும் நித்யமாயிராநின்றது. என் நினைவு வேறு ஒருவரிடத்தில் (ஸ்ரீ வைகுண்ட நாதனிடத்திலும்) செல்லுகிறதில்லை. (சக்ரவர்த்தித் திருமகனிடத்தில் சிறிய திருவடி கூறியது.)

ஆதிமறையென வோங்கும் அரங்கத்துள்ளே
அருளாரும் கடலைக்கண்டவன் என் பாணன்
ஓதியதோர் இரு நான்கும் இரண்டுமான
ஒரு பத்தும் பற்றுக உணர்ந்துரைத்தோம்
நீதியறியாத†[1] நிலை யறிவார்க் கெல்லாம்
நிலையிதுவே என்று நிலை நாடிநின்றோம்
வேதியர் தாம் விரித்துரைக்கும் விளைவுக்கெல்லாம்
விதையாகும் இதுவென்று
விளம்பினோமே. (36)

---

†1—நீதிவழுவாத[4].

36. மறை ஆதி என ஓங்கும்—(உருவத்தில்) வேதத்தின் முதல் அக்ஷரமாகிய ப்ரணவம் என்னும்படி உயர்ந்து நிற்கின்ற; அரங்கத்துள்ளே — ஸ்ரீரங்கவிமாநத்திற்குள் (ப்ரகாசிக்கின்ற); அருள் ஆரும் கடல்—க்ருபை(யாகிய நீர்) நிறைந்த அரங்கனாகிய கடலை, கண்டவன் நம் பாணன்—கண்டு அநுபவித்தவராகிய நம் திருப்பாணாழ்வாரால்; ஓதியது ஓர் இரு நான்கும் இரண்டுமான ஒரு பத்தும்—அருளிச் செய்யப்பட்டனவாய், (நித்யம்) அநுஸந்திக்கத் தக்கனவாய், எட்டும் இரண்டுமான நிகரற்ற அமலனாதிபிரான் பத்துப் பாசுரங்களையும்; பற்றுக உணர்ந்து உரைத்தோம்—கதியாக அறிந்து அநுஸந்தித்தோம். நீதி அறியாத—(பிற மதங்களை கண்டிப்பதற்கு வேண்டிய) யுக்திகளை அறியாதவர்களாய்; நிலை அறிவார்க்கெல்லாம்—தத்துவங்களின் ஸ்வரூபத்தை (மாத்திரம்) அறிந்தவர்களுக்கெல்லாம்; இதுவே நிலை என்று—இந்த ப்ரபந்தமே உறுதிதரவல்லது என்று (நினைத்து); நிலை நாடி நின்றோம்:—(இதில் கூறப்பட்ட) நிலைமையை (அநுபவத்தை) அடைய விரும்பி நின்றோம். வேதியர் தாம் விரித்து உரைக்கும்—வேதாந்திகள் தாங்கள் விரிவாக வெளியிடுகின்ற; விளைவுக்கெல்லாம்—பலன்களுக்கெல்லாம்; இது விதை ஆகும் என்று—இந்த ப்ரபந்தம் (காரணமான) விதை போன்றதாகும் என்று; விளம்பினோம்—இந்த (ரஹஸ்யத்தில்) கூறினோம்.

காண்பனவும் உரைப்பனவும் மற்றொன்றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடிய காதல்
பாண்பெருமாள் அருள் செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று பரவுகின்றோம்
வீண் பெரிய விரிதிரைநீர் வையத்துள்ளே
வேதாந்த வாரியனென்றியம்ப நின்றோம்
நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும்†1
நமக்குரைப்பார் உளரென்று
நாடுவோமே. (37)

---

†1—நான் பெரியோமல்லோம் நன்றும்தீதும்[1].

37. காண்பனவும் உரைப்பனவும் மற்று ஒன்று இன்றி—(தம்) கண்ணால் காணப்படுவதும் பேசப்படுவதும் வேறு ஒரு வஸ்துவாக இல்லாமல்; கண்ணனையே கண்டு உரைத்த—எம்பெருமானையே கண்டு (அவனைப் பற்றியே) பேசியவரும்; கடிய காதல் பாண்பெருமாள்—(எம்பெருமானிடம்) அதிகமான பக்தியையுடைய திருப்பாணாழ்வார்; அருள் செய்த பாடல் பத்தும்—அருளிச் செய்த (அமலனாதி பிரான்) என்னும் பத்துப் பாசுரங்களையும்; பழ மறையின் பொருள் என்று பரவுகின்றோம்—அநாதியான வேதத்தின் ஸாரம் என்று (நினைத்துக்) கொண்டாடுகின்றோம். வேண் பெரிய—விருப்பத்தால் பெரியதும் (எல்லோராலும் மிக விரும்பப்படுகின்றதும்); விரி திரை நீர்—அகன்ற அலை நிறைந்த (கடல்) நீரால் சூழப்பட்டதுமான; வையத்துள்ளே—இவ்வுலகத்தில்; வேதாந்த ஆரியன் என்று—வேதாந்தாசார்யன் என்று; இயம்ப நின்றோம்—(ஸ்ரீ ரங்கநாதன் தானே) புகழும்படி நிலை பெற்றோம்; (அதனால்), நாம் நாண்பெரியோம் அல்லோம்—நாம் அஹங்காரம் நிறைந்தவர்களாக ஆகமாட்டோம். நன்றும் தீதும்—இவை நல்லவை இவை தீயவை என; நமக்கு உரைப்பார்—நமக்கு உபதேசிக்கும் ஆசார்யர்கள்; உளர் என்றும் நாடுவோம்—இருந்தே தீர்வார்களென்று (துணிந்து அவர்களைத்) தேடியே நிற்போம்.

इति कवितार्किकसिंहः सम्यग्व्याचष्ट सात्त्विक-प्रीत्यै ।
मुनिमहित सुकवि-गाथा-दशकमिदं देशिकोपज्ञम् ॥[1]

मुनिवाहन-भोगोऽयं मुक्तैश्वर्य-रसोपमः ।
कृपया रङ्गनाथस्य कृतार्थयतु नः सदा ॥[2]

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्र स्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

## मुनिवाहन भोगः संपूर्णः

॥ श्रीमते निगमान्त-महादेशिकाय नमः ॥

---

1. इति—இவ்வாறாக (கீழே கூறியபடி); देशिकोपज्ञम्—வேதாந்த தேசிகரால் அறியப்பட்டவையான; इदं—இந்த; मुनिमहित—லோகசாரங்க முனிவரால் கொண்டாடப் பட்டவரும்; सुकवि—சிறந்த கவிஞருமான திருப்பாணாழ்வாரால் அருளிச் செய்யப்பட்ட; गाथा-दशकं—பத்துப் பாசுரங்களையும்; सात्त्विक-प्रीत्यै—ஸாத்விகர்களின் உகப்பின் பொருட்டு; कवितार्किकसिंहः—கவிதார்க்கிக சிங்கமாம் வேங்கடநாதன்; सम्यक्—நன்றாக; व्याचष्ट—விரித்துக்கூறினார்.

2. मुक्तैश्वर्य-रसोपमः — ஸ்ரீவைகுண்டத்தில் முக்தர்களால் அநுபவிக்கப்படுகின்ற ப்ரஹ்மானந்த ரஸத்தை ஒத்த; अयं—இந்த; मुनिवाहनभोगः—முனிவாஹனபோகம் என்கிற ரஹஸ்யமானது; रङ्गनाथस्य कृपया—ஸ்ரீரங்கநாதன் திருவருளால்; नः—நம்மை; सदा—எப்பொழுதும்; कृतार्थयतु—க்ருதார்த்தராக (பெற வேண்டிய பயனைப் பெற்றவராக) ஆக்கட்டும்.

முனிவாஹன போகம் முற்றும்.

श्री:

श्रीमते निगमान्त महादेशिकाय नमः ।

# श्री हस्तिगिरि - माहात्म्यम्

# ஸ்ரீ ஹஸ்திகரி மாஹாத்மியம்

[மெய் விரதம்† என்னும் திவ்ய தேசத்தில் பேரருளாளன் திருவவதாரம் செய்த வரலாற்றைக்* கூறும் நூல்]

[விஷயச் சுருக்கம்: வாழ்த்துக் கவி—இந்நூலைக் கேட்குமாறு அறிஞரை வேண்டல்—நூற் பயன்—உலகைப் படைப்பதற்காக எம்பெருமான் தன் திருநாபிக்கமலத்தில் பிரமனைப் படைத்தல் — தன் ஸாமர்த்யத்தால் செய்யக் கூடிய யோகத்தைக் கொண்டு எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்க பிரமன் விழைதல்—கர்மத்தால் தன் முயற்சி தடைப்பட்டதால் பிரமன் வருந்துதல் — பிரமன் தன்னை வெறுத்துக் கொள்ளல்—பிரமன் தவம்புரிய பாரதநாட்டை அடைதல்—ஸ்ரீ ஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி அச்வமேத யாகம் செய்யுமாறு பிரமனுக்கு அசரீரிவாக்கு கூறுதல்—வேதியையும், யாகத்திற்கு வருவோர் வஸிக்க ஏற்ற ராஜதானியையும் படைக்க விசுவகர்மனுக்குப் பிரமன் கட்டளையிடுதல் — காஞ்சியின் பெருமை—காஞ்சியைக் கண்டு பிரமன் மகிழ்தல்—யாகம் செய்வதற்காக ஸரஸ்வதியை அழைத்துவர வசிட்டனைப் பிரமன்

---

†இந்த க்ஷேத்ரம் ஸத்யவ்ரதம், (=மெய்விரதம்) காஞ்சீபுரம், ஹஸ்திகிரி, பெருமாள் கோயில் எனவும் வழங்கப்படும். இந்த க்ஷேத்ரத்தில் அநுஷ்டிக்கப்படும் வ்ரதங்கள் முதலிய புண்ணிய கருமங்களுக்கு உடனே பலன் கிடைப்பது நிச்சயமாதலின் ''ஸத்யவ்ரதம்'' எனப் பெயர் வந்தது. இது 32வது ரஹஸ்யம்.

*இவ்வரலாறு ப்ரஹ்மாண்ட புராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

அனுப்புதல்—கோபம் கொண்ட ஸரஸ்வதீ தேவி நதி வடிவங் கொண்டு யாகத்தை அழிக்கவரும் மிடுக்கு—எம்பெருமான் நதி நடுவே அணையாய்க் கிடத்தல்—மூவுலகினரும் அவ்வணையைக் கண்டு மகிழ்ந்து பேசுதல்—உத்தரவேதியில் புண்யகோடி விமானத்துடன் பேரருளாளன் ஆவிர்பவித்தல்—நித்யஸூரிகள் திருச்சின்னம் ஒலித்தல்—அனைவரும் பேரருளாளன் வடிவழகை வருணித்தல்—ப்ரஹ்மஸூத்ரங்கள் பேசும் குணங்களைக் கொண்டு பேரருளாளனைத் துதித்தல் — பேரருளாளன் திருமேனியை அநுபவித்துப் பிரமன் பேசுதல் –பேரருளாளனை உவமானங் களுடன் பிரமன் அநுபவித்தல்—பேரருளாளன் பிரமனுக்கு அருள்புரிதல்—மஹர்ஷிகளுக்குப் பிரமனது உபதேசம் (பஞ்ச கால ப்ரக்ரியை)—பிரமன் தன்னுலகம் சென்று யோகத்தி லிருத்தல்—பேரருளாளன் நான்கு யுகங்களிலும் வரமளித்தல்—பேரருளாளனால் இப்பிரபந்தம் பாடினமையும் அதனால்தான் வீறுபெற்றமையும்—முடிவுரை.]

रामानुजदयापात्रं ज्ञानवैराग्य - भूषणम् ।
श्रीमद्वेङ्कटनाथार्यं वन्दे वेदान्तदेशिकम् ॥

§ 1: வாழ்த்துக்கவி

मानार्हं महतां महानट-जटा-पर्यन्त-निर्यन्त्रण-
क्रीडा-बन्धुर-सिन्धुराज-महिषी-जन्मास्पदं तत्पदम् ।
मातङ्गाचल-मौलिमण्डन-मणेर्वन्दारु-वृन्दारक-
श्रेणी-शेखर-पारिजात-कलिका-चूडालमीडामहे ॥

வாழி அருளாளர் வாழி அணி அத்திகிரி*
வாழி எதிராசன் வாசகத்தோர்* வாழி
சரணாகதியென்னும் சார்வுடன் மற்றொன்றை*
அரணாகக் கொள்ளார்தாரன்பு. (1)

§ 2: இந்நூலைக் கடைகுயாறு அறிஞரை வேண்டல்

सकललोक - हिततमविषय-विविधवेदान्त-उपबृंहणங்களான[1] புராணங்களில் முக்யதமமாகையாலே முற்பட எண்ணப்

பட்ட ब्रह्माण्ड-पुराणத்தில் सत्यव्रतक्षेत्र-माहात्म्य-मुखयத்தாலே सन्दर्शितமான[2] பேரருளாளன் பெருமையை भावुकரான[3] भगवन्निष्ठருடைய[4] हृदय-रञ्जनार्थமாக[5] மநஸ்ஸிலே भावமும், வாக்கிலே रागமும், करத்திலே தாளமுமாக भाव-राग-

---

1—எல்லோருக்கும் மிகச் சிறந்த நன்மையைக் கூறும் வேதாந்தங்களை விளக்கும். 2—நன்கு காட்டப்பட்ட. 3—உள்ளத்திலே பாவம் நிறைந்த. 4—எம்பெருமானிடத்தில் ஈடுபாடுடைய. 5—மனதை மகிழ்விப்பதற்காக.

*1. महतां—பெரியவர்களான ப்ரும்மாதிகளுக்கும்; मानार्हं—பூஜிக்கத் தக்கதான; महानट—நர்த்தனம் செய்பவர்களுள் சிறந்த ருத்திரனுடைய; जटा—ஜடையின்; पर्यन्त—நான்கு பக்கங்களிலும்; निर्यन्त्रण—தடையற்றிருக்கிற; क्रीडा விளையாட்டினுல்; बन्धुर—அழகிய; सिन्धुराज-महिषी—ஸமுத்திரராஜனுக்குப் பத்நியாகிய கங்கைக்கு; जन्मास्पदं—உற்பத்தி ஸ்தானமாயும்; वन्दारु—வணங்குகிற; वृन्दारक—தேவதைகளினுடைய; श्रेणी—வரிசைகளின்; शेखर—சிரஸ்ஸுக்கு; पारिजात-कलिका—(அலங்காரமாயிருக்கிற) பாரிஜாத மொக்குகளினுல்; चूडालं—சிரோபூஷணத்தை உடையதுமான; मातङ्गाचल—ஸ்ரீ ஹஸ்திகிரியின்; मौलि-मण्डन—சிகரத்திற்கு அலங்காரமாயிருக்கிற; मणेः—ரத்நமாகிய பேரருளாளனுடைய; तत्—அப்படிப்பட்ட; पदं—திருவடியை; ईडामहे—ஸ்தோத்திரம் பண்ணக் கடவோம்.

1. அருளாளர்—பேரருளாளர்; வாழி—வாழ்க. அணி அத்திகிரி—(பூமிக்கு) அலங்காரமான ஹஸ்திகிரி; வாழி—வாழ்க. எதிராசன் வாசகத்தோர்—ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸ்ரீ ஸூக்திகளில் ஈடுபட்டவர்; வாழி—வாழ்க. சரணாகதி என்னும் சார்வுடன்—ப்ரபத்தி என்னும் உபாயத்துடன்; மற்று ஒன்றை—வேறு ஒன்றை; அரணாக—உபாயமாக; கொள்ளாதார் அன்பு—கொள்ளாதவர்களுடைய அன்பும்; வாழி—வாழ்க.

तालங்களை வகுத்த भरतशास्त्रத்தின்படியே[1] பண்ணு மிசையில் திகழப்பார்க்கின்றோம்†[1]. இத்தைக் குறிக் கொண்டு கேட்டருள்மின்†[2].

எண்டிசையும் கடலேழும் மலைகள் ஏழும்
ஈரேழு வையகமும் படைத்திலங்கும்*
புண்டரீகத்தயன் புணர்த்த பெரிய வேள்விப்
புனித நறும் போக்கியத்தை உகந்து வந்து*
தொண்டையெனும் மண்டலத்தில் நடுவில் பாரில்
தூநில மெய்விரதத்தில் தோன்றி நின்ற*
கொண்டல் அருள்குணமே நாம் கூறுகின்றோம்
கூர்மதியீர் ! குறிப்பாகக்
கொள்மின் நீரே. (2)

வம்மின் புலவீர் அருளாளப் பெருமாள் என்றும்
அருளாழி அம்மான் என்றும்*
திருமாமகளைப் பெற்றும் என் நெஞ்சம் கோயில்
கொண்ட பேரருளாளர் என்றும்*
வியப்பா விருதூதும்படி கரைபுரண்ட கருணைக்
கடலை†[3]
எவ்வண்ணம் பேசுவீர் ஈதென்ன பாங்கே. (3)

---

1—பரத முனிவர் இயற்றிய நாட்டிய சாஸ்த்ரத்தில் சொல்லியபடி.

†1—பண்ணும் இசையும் திகழப் பாடுகின்றோம்[5]. 2—கேட்டருள்வீர்மின்[1]. 3—கருணைப் பெருங்கடலை[1].

2. கூர்மதியீர்!—கூர்மையான அறிவு பெற்றவர்களே! எண் திசையும்—எட்டுத் திசைகளையும்; கடல் ஏழும்—ஏழு ஸமுத்ரங் களையும்; மலைகள் ஏழும்—ஏழு குல பர்வதங்களையும்; ஈர் ஏழு வையகமும்—பதினான்கு லோகங்களையும்; படைத்து—ஸ்ருஷ்டித்து; இலங்கும்—ப்ரகாசிப்பவனும், புண்டரீகத்து அயன்—(எம்பெருமா

னுடைய நாபிக்) கமலத்து உதித்தவனுமான ப்ரஹ்மாவால்; புணர்த்த—நடத்தப்பட்ட; பெரிய வேள்வி—பெரிய (அசுவமேத) யாகத்தின்; புனித நறும் போக்கியத்தை—பரிசுத்தமான வாசனை யுள்ள ஹவிஸ்ஸை (ப் பெறுவதற்கு); உவந்து வந்து—மகிழ்ந்து வந்து; தொண்டை யெனும மண்டலத்தின் நடுவில்—தொண்டை மண்டலம் என்னும் தேசத்தின் நடுவில்; பாரில் தூ நிலம்—பூமியிலேயே மிகப் பரிசுத்தமான ஸ்தலமாகிய; மெய் விரதத்து—ஸத்யவ்ரதம் என்னும் க்ஷேத்ரத்தில்; தோன்றி நின்ற—அவதரித்து நிலைபெற்ற; கொண்டல்—(பேரருளாளன் எனும்) மேகத்தின்; அருள் குணமே—கருணையென்னும் குணத்தையே; நாம் கூறுகின்றோம்—நாம் (இப்பிரபந்தத்தில்) பேசுகின்றோம். நீர்—நீங்கள்; குறியாகக் கொண்மின்—(இதனைக்) கவனத் துடன் அறிந்து கொள்க.

(எட்டுத்திசைகள்—கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, தென் கிழக்கு; தென்மேற்கு; வடமேற்கு, வடகிழக்கு என்பன.

ஏழு கடல்கள்—உப்பு, பால், தேன், நெய், கருப்பஞ்சாறு, தயிர், சுத்த ஜலம் இவற்றால் ஆகியவை.

ஏழு மலைகள்—மஹேந்த்ரம், மலயம், ஸஹ்யம், சுக்திமான், ருக்ஷம், விந்த்யம், பாரியாத்ரம் என்பன.)

பதினான்கு உலகங்கள்—அதல, விதல, ஸுதல, தராதல, மஹாதல, ரஸாதல, பாதாளங்கள் என்பன ஏழும் கீழுலகங்கள். பூ:, புவ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப:, ஸத்யம் என்பன ஏழும் மேலுலகங்கள்.)

3. புலவீர்—புலவர்களே! வம்மின்—வாருங்கள். அருளாளப் பெருமாள் என்றும்—அருளாளப் பெருமாள் என்றும்; அருளாழி யம்மான் என்றும்—அருளாழியம்மான் என்றும்; திருமகளைப் பெற்றும்—பிராட்டியைத் தேவியாகக் கொண்டது மன்றி; என் நெஞ்சம்—என் மனத்தை, கோயில் கொண்ட—வாஸஸ்தலமாகக் கொண்ட; பேரருளாளர் என்றும்—பேரருளாளர் என்றும்; வியப்பா—ஆச்சர்யமாய், விருது ஊதும்படி—விருதுகளைக் கூறி முழங்குபடி நின்ற, கரை புரண்ட கருணைக் கடலை—கரை புரண்டு பெருகும் கருணைக் கடலான எம்பெருமானை; எவ்வண்ணம்—எவ்வாறு; பேசுவீர்—(நீங்கள்) பேசவல்லீர்? ஈது—இவ்வாறு; செய்வது, என்ன பாங்கு—என்ன நேர்மை?

§ 3: பரதந்த்ரனுக்குப் பொறுப்பு நீங்கியமை

ஒன்றே புகலென்று உணர்ந்தவர்
　　காட்டத் திருவருளால்*
அன்றே அடைக்கலம் கொண்டநம்
　　அத்திகிரித் திருமால்*
இன்றே இசையில் இணையடி
　　சேர்ப்பர் இனிப்பிறவோம்*
நன்றே வருவதெல்லாம்
　　நமக்குப் பரம் ஒன்றிலதே†. (4)

§ 4: எம்பெருமான் தன் திருநாபிக்கமலத்தில் பிரமனைப் படைத்தல்

**अखिल - जगदेक - शेषि**யாய், **अखिल-जगदन्तर्यामि**யாய், **अखिल-जगदाधार**னாய், **अखिल-जगदेक-कारणभूत**னாய் **अखिल-हेय-प्रत्यनीक-कल्याणैकतान**னாய்[1], **अपार-कारुण्य-सौशील्य-वात्सल्य-औदार्य-ऐश्वर्य-महोदधि**யான **श्रियःपति** புருஷோத்தமன் "ஒன்றும தேவும் உலகும உயிரும மற்றும் யாதும் இல்லாவன்று"[1] **महदहंकारादि-क्रम**த்தாலே **ब्रह्माण्ड-पर्यन्त**மாக[2] ஸ்ருஷ்டித்து (B-31); "தேவும் எப்பொருளும் படைக்கப் பூவில் நான்முகனைப் படைத்து"*[2], "திசை

---

1—விலக்கத்தக்கவைக்கெல்லாம் எதிர்த்தட்டாய், நற்குணங்களுக்கு ஒரே இருப்பிடமான. 2—ப்ரம்மாண்டம் வரையிலாக. ப்ரம்மாண்டம் = நான்முகன படைத்த பதினான்கு உலகங்களைக்கொண்ட தொகுதி.

† 1—"इति प्रबन्धावतार:" என்று அதிகம்[1].

4. உணர்ந்தவர்—(அர்த்த பஞ்சகத்தையும் சரீராத்ம பாவம் முதலிய ஸம்பந்தத்தையும்) அறிந்த ஆசார்யர்கள்; ஒன்றே புகலென்று—ஸ்ரீமந்நாராயணன ஒருவனே உபாயம் என்று; காட்ட—உபதேசிக்க, (அல்லது, ஒன்றே புகல் என்று உணர்ந்தவர்—எம்பெருமானே உபாயம் என்று அறிந்த ஆசார்யர்கள்; காட்ட—அவன் திருவடிகளில் நம்மை ஸமர்ப்பிக்க); திரு

**அருளால்**—ப்ரத்யுபகாரத்தை எதிர்பாராத) சிறந்த அவனுடைய க்ருபையினால் (அல்லது, பிராட்டியின் க்ருபையாலே); **அன்றே**—அப்பொழுதே; **அடைக்கலம் கொண்ட**—ரக்ஷிக்கப்படவேண்டிய வஸ்துவாக ஏற்றுக் கொண்ட, **நம் அத்திகிரித் திருமால்**—நம்முடைய ஹஸ்திகிரிநாதரான பேரருளாளர்; **இன்றே**—இப்பொழுதே, **இசையில்**—(முக்தியைப் பெற நாம்) ஸம்மதித்தால்; **இணை அடி சேர்ப்பர்**—(தம்முடைய) இரண்டு திருவடிகளில் சேர்த்துக் கொள்வர். **இனிப் பிறவோம்**—இனி மறுபடியும் (இக்கர்ம பூமியில்) பிறக்கமாட்டோம். **வருவது எல்லாம்**—இனி (இச்சரீரம் அழியுமளவும்) வரும் இன்பங்களும் துன்பங்களும் ஆகிய எல்லாம்; **நன்றே**—நமக்கு அநுகூலங்களே. **நமக்கு பரம் ஒன்று இலது**—இனி நாம் உஜ்ஜீவிப்பதற்காகச் செய்யவேண்டிய பொறுப்பு ஒன்றும் நமக்கு இல்லை.

*1. ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா
அன்று* நான்முகன் தன்னொடு தேவருலகோடு
உயிர்படைத்தான்*
குன்றம் போல் மணிமாடநீடு திருக்குருகூரதனுள்*
நின்ற ஆதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரே.

திருவாய். (4-10-1): தேவர்களும், உலகங்களும், பிராணிகளும், மற்றெல்லா வஸ்துக்களும் ஒன்றுமில்லாத ஸ்ருஷ்டிக்கு முந்தின காலத்தில் பிரம்மாவோடு தேவர்களையும், உலகங்களோடு பிராணிகளையும் உண்டு பண்ணின ஆதிப்பிரான் (மலைகள் போல் ரத்னமயமான மாளிகைகள் உயர்ந்திருக்கிற) திருக்குருகூரில் எல்லாருக்கும் ஸுலபனாய் உபகாரகனாய் கிட்ட இருக்கையில் (அவனை விட்டு விட்டு) வேறு எந்தத் தெய்வத்தைத் தேடுகிறீர்கள்.

*2. தேவும் எப்பொருளும் படைக்க*
பூவில் நான்முகனைப் படைத்த*
தேவன் எம்பெருமானுக்கல்லால்*
பூவும் பூசனையும் தகுமே ?

திருவாய். (2-2-4): தேவ ஜாதிகளையும் எல்லா வஸ்துக்களையும் உண்டு பண்ணத் தன் நாபீகமலத்தில் பிரமனைப் படைத்த அழகாய் விளங்கும் எம்பெருமானைத் தவிர (மற்றொருவருக்கு) புஷ்பங்களும் பூஜை செய்வதும் தகுமோ ?

முகன் கருவுள் வீற்றிருந்து''*[1]; प्रजापति-पशुपति-सुरपति-पितृपति-जलपति-धनपति முதலான[1] भोक्तृ-प्रपञ्चத்தையும்[2], अतल-वितल-सुतलादिகள் என்றும் भूमि-अन्तरिक्ष-स्वर्गादिகள் என்றும சொல்லுகிற भोगस्थानங்களையும், இவற்றிலுட்பட்ட भौम-दिव्य-भोग्य-भोगोपकरण-विशेषங்களையும்[3], विविध-विचित्र-सन्निवेशங்களாகப்[4] பகுத்து; ''பண்டை நான் மறையும் வேள்வியும் கேள்விப்பதங்களும் பதங்களின் பொருளும் பிண்டமாய் விரிந்த பிறங்கொளியனலும் பெருகிய புனலொடு நிலனும் கொண்டல் மாருதமும் குரைகடல் ஏழும் ஏழுமாமலைகளும் விசும்பும் அண்டமும் தாஞகி''*[2] நின்று; தனக்கு औरस-पुत्रனுமாய்[5] अव्यवहित-शिष्यனுமான[6] चतुर्मुखனை चतुर्दश-भुवन-निर्वाहकனுக்கி வைத்தருள;

§ 5. யோகபலத்தால் எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்க பிரமன் முயலுதலும், கர்மத்தால் அது தடைப்பட்டதால் பிரமன் வருந்துதலும்

இவ் अधिकारம் பெற்ற ब्रह्मा नाभिजातனைய்த்[7] தோன்றச் செய்தே अभिजाततमனுகையாலும்[8], सर्वतोमुखமாக[9] वेदप्रवर्तनம் பண்ணுகையாலும்[10], सरस्वती-सहचरित-धर्मिவாகையாலும்[11], நாலு வர்ணங்களையும் ஸ்ருஷ்டித்த नानाविध-सामर्थ्यத்தாலும் ''நமக்கு நிகர் ஆர்?'' என்று अभिजन-विद्या-वृत्त-गर्वங்களும்[12] स्वातन्त्र्यச்செருக்கும் ஏறி ''கறந்த பாலுள் நெய்யே போல் இவற்றுள்

1—பிரமன், சிவன், இந்திரன், யமன், வருணன், குபேரன் முதலான. 2—அநுபவிப்பவர்களின் தொகுதியையும். 3—பூமியிலும், மேல் உலகங்களிலும் அநுபவிக்கப்படும் பொருள்களையும், அதன் கருவிகளையும். 4—வியப்பூட்டும் பல்வகை அமைப்புகளாக. 5—தான் பெற்ற பிள்ளையாய். 6—நேர் சிஷ்யனுமான. 7—தொப்புளில் உண்டானவனுய். 8—உயர் குடியில் பிறந்தவர்களுள் சிறந்தவனுகையாலும். 9—எல்லா பக்கங்களிலும் உள்ள (நான்கு) முகங்களாலே. 10—வேதத்தை அத்யாபனம் செய்தலா

லும். 11—ஸரஸ்வதியுடன் இல்லறம் நடத்துபவராகையாலும். 12—உயர்குடிப்பிறப்பு, கல்வி, நடத்தை இவற்றாலுண்டான கர்வங்களும்.

*1. திருவுருவு கிடந்தவாறும் கொப்பூழ்ச் செந்தாமரைமேல்*
திசைமுகன்
கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும்*
பொருவிலுன் தனிநாயகமவை கேட்குந்தோறும்
என்னெஞ்சம் நின்றுநெக்கு*
அருவி சோரும் கண்ணீர் என்செய்கேன் அடியேனே ?

திருவாய் (5-10-8): உன் அழகான திருமேனி பிரளய காலத்தில் ஆலிலையில் படுத்திருந்ததும், உன் திருநாபியில் (உண்டான) செந்தாமரைப்பூவின் மேலிருக்கிற பிரும்மாவின் உடலுக்குள் அவனுக்கு ஆத்மாவாக இருந்து உலகங்களைப் படைத்தலும், காத்தலும் ஆகிய ஒப்பற்ற உன் விலக்ஷணமான செய்கைகள் நீ ஸர்வேச்வரனாய் இருப்பதைக் காட்டுகின்றன. இவ்வாறு உன் செயல்களைக் கேட்கும் போதெல்லாம் என் மனம் உருகி கண்ணீர் அருவி போல ஓடுகிறது. அடியேன் எதைச் செய்வேன் ?

*2. பண்டை நான்மறையும் வேள்வியும்
கேள்விப் பதங்களும் பதங்களின் பொருளும்*
பிண்டமாய் விரிந்த பிறங்கொளியனலும்
பெருகிய புனலொடு நிலனும்*
கொண்டல் மாருதமும் குரை கடலேழும்
ஏழுமாமலைகளும் விசும்பும்*
அண்டமும் தானாய் நின்ற எம்பெருமான்
அரங்கமாநகரமர்ந்தானே.

பெரியதிரு. (5-7-1): அநாதியாக உள்ள நான்கு வேதங்களும், யாகங்களும், கேட்டறியவேண்டிய வியாகரணமும், அந்தந்த பதங்களினால் அறியப்படுகிற ஜீவஸமஷ்டியும், (காரியப் பொருள்களுக்கெல்லாம் காரணமாய்க் கொண்டு) பிண்ட ரூபமாயிருந்து பிறகு விரிவு பெற்றவைகளான மிக்க காந்தியுள்ள அக்நி-த்ரவரூபமான ஜலம்-பூமி-மேகம்-வாயு-ஆரவாரிக்கின்ற ஏழு ஸமுத்ரங்கள்-ப்ரஹ்மாண்டம் ஆகியவை தனக்கு ப்ரகாரமாயிருக்கப்பெற்ற அந்தர்யாமியான எம்பெருமான் திருவரங்கம் என்னும்திவ்யதேசத்தில் கண் வளர்ந்தருளா நின்றான்.

எங்கும் கண்டுகொள் இறந்து நின்ற பெருமாயனை''*1 स्वसामर्थ्यसाध्यமான[1] समाधिயைக்[2] கொண்டு ஸாக்ஷாத் கரிக்கலாம் என்று பார்த்து, ''இளைப்பினை இயக்கம் நீக்கி இருந்து முன் இமையைக் கூட்டி, அளப்பில் ஐம்புலனடக்கி, அன்பு அவர்கண்ணே வைத்து, துளக்கமில் சிந்தை செய்து தோன்றலும் சுடர்விட்டாங்கே விளக்கினை விதியில் கண்டு மெய்ம்மையைக்''*2 காண ஒருப்பட்டவளவிலே परस्वरूप-साक्षात्कार-विरोधिயாயிருப்பதொரு மாளாதவல்வினை இவனை समाधिயில் நின்றும் மீட்டது. அப்பொழுது,

வம்பவிழ் போதமர் மாதர் உகந்த அம்மாநிதியை*
தன் பலமேகொண்டு காணக் கருதிய
தாமரையோன்*
முன்பல குற்றத்து வல்வினை மொய்க்க
முகிழ்மதியாய்*
அம்புலி வேண்டிய பாலனைப் போல
அழுதனனே. (5)

§ 6: பிரமன் தன்னை வெறுத்துக் கொள்ளல்

இப்படிக் கலங்கின ब्रह्मा, ''என்னே! என்னே! நமக்கு सर्वान्तरात्म-विषयமான[3] समाधि கைபுகுராமைக்குக் காரணம் என்?'' என்று விசாரித்து, 'நின்றவா

1—தன் திறமையினால் செய்யக்கூடிய. 2—யோகத்தின் (பக்தியின்) மூலம். 3—எல்லோருக்கும் ஆத்மாவாயிருக்கிற எம்பெருமானைப் பற்றிய.

*1. பிறந்தமாயா! பாரதம் பொருதமாயா! நீ இன்னே*
சிறந்த கால் தீ நீர் வான் மண் பிறவுமாயபெருமானே!
கறந்த பாலுள் நெய்யே போல் இவற்றுளெங்கும்
கண்டுகொள்*
இறந்து நின்ற பெருமாயா! உன்னை எங்கே காண்கேனே?

திருவாய். (8-5-10): (அப்ராக்ருதமான உன் உருவத்தை மனித உருவம் போல் செய்து கொண்டு) அவதாரம் செய்த ஆச்சரியமானவனே! பாரதப் போரில் பல ஆச்சரியமான லீலைகளைச் செய்தவனே! வாயு, அக்னி, ஜலம், ஆகாசம், பூமி ஆகிய பஞ்சபூதங்களிலும், (அவைகளால் உண்டு பண்ணப்பட்ட தேவர் மனிதர் ஆகிய) மற்றவைகளிலும் இருக்கும் ஸர்வேச்வரனே! கரந்த பாலுள் நெய் (பாலை விட்டுப் பிரித்துப் பார்க்க முடியாது இருப்பது) போல, நீ இப்படி எங்கும் இருந்த போதிலும் அவற்றை விட்டுப் பிரித்துப் பார்க்க முடியாதபடி மிகவும் ஆச்சரியமாய் இருக்கிறாய். உன்னை எங்கே பார்ப்பது?

*2. இளப்பினை இயக்கம் நீக்கி இருந்து முன் இமையைக் கூட்டி*
அளப்பிலைம் புலனடக்கி அன்பு அவர் கண்ணே வைத்து*
துளக்கமில் சிந்தை செய்து தோன்றலும் சுடர்விட்டு ஆங்கே*
விளக்கினை விதியின் காண்பார் மெய்மையைக்
காண்கிற்பாரே.

திருக்குறுந்தாண்டகம் (18): க்லேசங்களுடைய ஸஞ்சாரத்தைத் தவிர்ந்து, (ஓர் ஆஸநத்தில்) இருந்து, மேலிமையை (கீழ் இமையோடு) சேர்த்து, அளவிறந்த இந்திரியங்களை அடக்கி (ப்ரத்யக் விஷயமாக்கி), அந்த ஸர்வேச்வரன் விஷயத்திலே விச்சேதமில்லாத ஸ்ம்ருதி ரூபமான பக்தியைப் பண்ணி, அவ்வவஸ்த்தையில் சுடர்விட்டுத் தோன்றுகிறதான ஜ்ஞாநத்தாலே, ஜ்யோதிஸ் ஸ்வரூபனாக ப்ரதிபாதிக்கப்படுமவனை, சாஸ்த்ரங்களில் விதித்தபடியே உபாஸித்துக் காண்பவர்கள் நிலை நின்ற தர்மமான அவனை காணுவார்களா? (அங்கப்ரபத்தி செய்யாவிடில் காண மாட்டார்கள் என்றபடி.)

5. வம்பு அவிழ்—வாசனையுள்ள மலர்ந்த; போது அமர்—புஷ்பத்தில் வசிக்கின்ற; மாதர்—பிராட்டியின்; உகந்த—அன்புக்கு உரியனான; அம் மா நிதியை—பெரிய சேமநிதி போன்ற அவ்வெம்பெருமானை; தன் பலமே கொண்டு—தன்னுடைய யோக பலத்தையே கொண்டு; காணக் கருதிய தாமரையோன்—ஸாக்ஷாத்கரிக்க நினைத்த ப்ரஹ்மா; முன் பல குற்றத்து—முன்பு பல தவறான செய்கையால் ஏற்பட்ட; வல் வினை மொய்க்க—வலிய கர்மங்கள் சூழ்ந்துகொள்ள; முகிழ் மதியாய்—மழுங்கிய அறிவுடையவனாய்; அம்புலி வேண்டிய—(எட்ட முடியாத) சந்திரனைப் பிடித்துத் தரும்படி விரும்பிய; பாலனைப் போல—குழந்தையைப் போல; அழுதனன்—(தன் எண்ணம் நிறைவேறாமையால்) அழுதான்,

நில்லாதே कपि-चपलமான[1] अन्तःकरणத்தின் कषायपाकम्[2] பிறவாமை' என்று பார்த்து, "मनो-मालिन्य-हेतुவான[3] कर्मविशेषத்தைக் கழிக்கப்பெறுதே, இத்தனை நாளும் என்ன கார்யம் செய்தோம்? இமையோர் வாழ் தனி முட்டைக் கோட்டையிலே கூறு செய்வதாக ஏறவுமிழியவும் நெடுங்காலம் निरर्थकமாக[4] कायक्लेशப் பட்டோம்[5]"*1 என்று "நெஞ்சுருகிக் கண்பனித்து"*2 நெடுமூச்செறிந்து நிலத்தைப் பார்த்திருந்தான்

அடங்காக் கரணங்கள் ஐந்துடன்
ஆறுமடக்கி மு(ன்)னம்*
நெடுங்காலம் இந்நிலமே
நிலையாய்ப் பூண்டு நீடுறைவான்*
சடங்கார் பெரிய தவங்கள்
செய்தேன் என்ன தன்மையிதென்று*
இடங்காத்திருந்த திசைமுகன்
தன்னை இகழ்ந்தனனே. (6)

---

1—குரங்கைப் போல சஞ்சல ஸ்வபாவமுடைய. 2—பாபங்களின் அழிவு. 3—மனக் கலக்கத்திற்குக் காரணமான. 4—வீணாக (பயனின்றி). 5—உடலை வருத்தினோம்.

*1. காட்டி நீ கரந்துமிழும் நிலம் நீர் தீ விசும்பு கால்*
ஈட்டி நீ வைத்தமைத்த இமையோர் வாழ் தனிமுட்டை*
கோட்டையினில் கழித்து என்னை உன் கொழுஞ்
சோதியுயரத்து*
கூட்டரிய திருவடிக்கள் எஞ்ஞான்று கூட்டுதியே ?

திருவாய். (4-9-8) : ஸ்ருஷ்டி காலத்தில் காணும்படி செய்து, பிரளய காலத்தில் மறையும்படி செய்து, மறுபடியும் ஸ்ருஷ்டி காலத்தில் - வெளிப்படுத்தும் பூமி - ஜலம் - தேஜஸ் - ஆகாசம்- வாயு ஆகிய பஞ்ச பூதங்களின் சில பாகத்தை ஒன்றாய்ச் சேர்த்து, மற்ற பாகத்தை ஆவரணங்களாகச் செய்து, அவைகளின் நடுவே நீ உண்டுபண்ணினதும் தேவர்கள் வஸிப்பதுமாகிய முட்டை போல் இருக்கிற அண்டமாகிய கோட்டையை நான் தாண்டும்

படி செய்து, தேஜோ ரூபமானதும் பிரகிருதி மண்டலத்திற்கு மேலே உள்ள ஸ்ரீ வைகுண்டத்தில், என் முயற்சியால் சேர முடியாத உன் திருவடிகளில் என்னை எப்போது சேர்ப்பாய் ?

*2. ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன் கொல் ?*
தாவி வையம் கொண்ட எந்தாய் ! தாமோதரா !
என்றென்று*
கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண் பனிசோர நின்றால்*
பாவி நீயென்று ஒன்று சொல்லாய் பாவியேன் காண வந்தே.

திருவாய். (4-7-3): திருவடிகளைப் பரப்பி பூமியை மஹாபலியிடமிருந்து எடுத்துக் கொண்ட என் ஸ்வாமியே ! உரலில் கட்டப்பட்டு ஆச்ரிதர்க்கு உட்பட்டிருப்பதைக் காட்டி 'தாமோதரன்' என்று பெயர் பெற்றவனே ! இவ்வாறு பலமுறை கூப்பிட்டு நெஞ்சு உருகி கண்ணீர் சொரிய நான் நின்றால், 'நீ பாபி; என்னைப் பார்க்க முடியாது' என்று பாவியான நான் உன்னைப் பார்க்கும்படி வந்து சொல்லு. (இதை எம்பெருமான் செய்யாததால் மேலும் அருளிச் செய்கிறார் ஆழ்வார்.) இப்படி என்னை உபேக்ஷிப்பதற்குக் காரணமாய் எல்லாக் காலமும் அநுபவித்து முடியாத பாபங்களில் எத்தனை நான் செய்திருக்கிறேனோ ?

6. இடம் காத்திருந்த—(தன்னுடைய ப்ரஹ்ம) பதவியை (வழுவாது) ரக்ஷித்துக் கொண்டிருந்த; திசை முகன்—ப்ரஹ்மா; நெடுங்காலம்—நீண்ட காலம்; இந்நிலமே—இந்த ப்ரஹ்ம லோகத்தையே; நிலையாய்ப் பூண்டு — ஸ்திரமாயிருப்பதாகக் கொண்டு; நீடு உறைவான்—நெடுநாள் (அப்பதவியில்) வாழ விரும்பி; முனம்—முன்பே; அடங்காக் கரணங்கள்—அடங்காத இந்த்ரியங்களாகிய; ஐந்துடன் ஆறும் அடக்கி—கர்மேந்த்ரியங்கள் ஐந்துடன் ஜ்ஞாநேந்த்ரியங்கள் ஆறையும் அடக்கி; சடங்கால்—வ்ரதங்களால்; பெரிய தவங்கள் செய்தேன்—பெரிய தபஸ்ஸுகளைச் செய்தேன்; இது என்ன தன்மை என்று—(நான் செய்த) இக்கார்யம் எத்தகையது ? (எவ்வாறு இழிவானது ?) என்று; தன்னை இகழ்ந்தனன் — தன்னையே வெறுத்துக் கொண்டான். (கர்மேந்த்ரியங்கள்—வாய், கை, கால், பாயு, உபஸ்தம் என்பன. ஜ்ஞாநேந்த்ரியங்கள்—செவி, வாய் (நாக்கு), கண், மூக்கு, உடல், மனம் என்பன.)

§ 7: பிரமன் தவம் புரிய பாரத நாட்டை அடைதல்

**युगकोटिसहस्राणि विष्णुमाराध्य पद्मभूः ।**
**पुनस्त्रैलोक्य-धातृत्वं प्राप्तवानिति शुश्रुम ॥***[1]

இப்படி अतिशयित-ऐश्वर्य-हेतुவான[1] தபஸ்ஸைப் பண்ணி, अधिकारம்[2] என்பதோர் அளறிலே[3] அழுந்தி अनतप्तஞன[4] ब्रह्मा, मधुसूदन-कटाक्ष-विशेषத்தாலே "मोक्षोपयुक्तமான[5] தபஸ்ஸுக்கு நிலமாவது[6] எது" என்று நிரூபித்து[7], 'பூமியொழிந்த லோகங்கள் பதின்மூன்றும்[8], பூமி தன்னில் ஜம்பூத்வீபமொழிந்த மஹாத்வீபங்கள் ஆறும்[9], ஜம்பூத்வீபம் தன்னில் भारतवर्षமொழிந்த வர்ஷங்கள் எட்டும்[10] भोग-भूमिகளாகையாலே[11] पुण्यकर्म-विशेष-अनुष्ठानத்திற்கு उचितक्षेत्रங்களன்று' என்று உபேக்ஷித்து[12], सर्व-दक्षिणமாய்[13] सर्वधर्मानुष्ठान-योग्यமுமான भारतवर्षத்தில் வந்து புகுந்தான்.

விண்ணுலகில் வீற்றிருந்த மேன்மையாலும்
வேதங்கள் ஈரிரண்டு விரித்தலாலும்*
கண்ணனை நான் கருத்துறவே காண்பன் என்னக்
காணுமல் விலக்கிய தன் வினையைக் காணு*
எண்ணிய நற்புவனங்கள் ஏழும் ஆறும்
இரு மூன்று தீவமும் எட்டு இடமும் விட்டு*
பண்ணிய நல் விரதமெல்லாம் பலிக்கும் என்று
பாரதத்தைப் பங்கயத்தோன்
படிந்திட்டானே. (7

---

1—பெருமை மிக்க செல்வத்திற்குக் காரணமான. 2—ப்ரஹ்ம பதவி. 3—குழை சேற்றிலே. 4—பச்சாத்தாபம்

அடைந்த. 5—மோக்ஷத்திற்கு வேண்டிய. 6—விஷயமாவது. 7—ஆராய்ந்து. 8—அதலம், விதலம், ஸுதலம்; தராதலம், மஹாதலம், ரஸாதலம், பாதாளம் என்பன கீழ் உலகங்கள். பூமி, புவ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப: ஸத்யம் என்பன மேலுலகங்கள். 9—த்வீபம்=பெரு நிலப்பகுதி. ஜம்பூ, ப்லக்ஷம், சால்மலி, குசம், க்ரௌஞ்சம், சாகம், புஷ்கரம் என்ற த்வீபங்கள். 10—பாரதம், கிம்புருஷம், ஹரி, இளாவ்ருதம், ரம்யகம், ஹிரண்யகம், குரு, பத்ராச்வம், கேதுமாலம் என்ற வர்ஷங்கள். 11—கர்மபலனை அநுபவிக்கும் இடங்களாகையால். 12—அசட்டை செய்து. 13—எல்லாவற்றுக்கும் தெற்கே உள்ள.

*1. பாரதம் (குண்டதரோபாக்யானம்): ஆயிரங்கோடி யுகங்கள் எம்பெருமானை ஆராதித்து ப்ரஹ்மா மறுபடியும் மூன்று உலகங்களைப் படைக்கும் அதிகாரத்தை அடைந்தான் என்று கேட்டிருக்கிறோம்.

7. பங்கயத்தோன்—(பகவானுடைய நாபிக்) கமலத்தில் பிறந்த ப்ரஹ்மா; விண்ணுலகில்—ப்ரஹ்ம லோகத்தில்; வீற்றிருந்த மேன்மையாலும்—ப்ரஹ்மபதவி வஹித்த பெருமையாலும்; வேதங்கள் ஈர் இரண்டும்—வேதங்கள் நான்கையும்; விரித்தலாலும்—(உலகுக்கு) வெளியிட்டமையாலும்; கண்ணனை—எம்பெருமானை; கருத்து உறவே—மனத்தில் நிலைபெற்று நிற்கும்படி; நான் காண்பன் என்ன—நான் ஸாக்ஷாத்கரிப்பேன் என்று நினைத்து (யத்நம் செய்து); காணுமல் விலக்கிய—அவ்வாறு ஸாக்ஷாத்கரிக்க முடியாமல் தடைசெய்த; தன் வினையைக் காணு—தன்னுடைய கர்மத்தைக் கண்டு (அதைப் போக்க நினைத்து); எண்ணிய நல் புவனங்கள் ஏழும் ஆறும்—(சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட சிறந்த லோகங்கள் பதின்மூன்றையும்; இரு மூன்று தீவும்—ஆறு தீவுகளையும்; எட்டு இடமும் விட்டு—எட்டு வர்ஷங்களையும் விட்டு; பண்ணிய நல் விரதம் எலாம்—செய்யப்படும் சிறந்த வ்ரதங்கள் எல்லாம்; பலிக்கும் என்று—பலன்தருமென்று உறுதி கொண்டு; பாரதத்தில்—பாரத தேசத்தில்; படிந்திட்டான்—வந்து தங்கினுன்.

§ 8: ஸ்ரீ ஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி அச்வமேத யாகம் செய்யுமாறு பிரமனுக்கு அசரீரி வாக்கு கூறுதல்

இப்படி ब्रह्मा भारतवर्षத்திலே வந்து புகுந்து தான் प्रधानமாக நினைத்திருந்ததொரு புண்ய க்ஷேத்ரத்திலே ஒரு காலாலே நின்று ऊर्ध्वभुजனையும்[1] उच्छ्वास-निःश्वासங்களை[2] அடக்கியும், ஒருவராலும் அநுஷ்டிக்கவொண்ணாத தபஸ்ஸைப் பண்ணினவளவிலும், अन्तःकरणம் अन्तरात्म - दर्शनानुगुणமல்லாமையாலே[3] अत्यन्त - विषण्णனையிருக்க[4]; अशरीरियாய் இருப்பதொருவாக்கு ஆகாசத்திலே கிளம்பி, "வாராய், ப்ரஹ்மாவே! நீ வெறுக்க வேண்டுவதில்லை. உனக்கு समाधि-विरोधियான கர்மம் கழிகைக்கு ஒரு உபாயத்தை உபதேசிக்கிறேன். अधिकारமாகிற ஆநந்தாநுபவத்திலே அழுந்தின உனக்கு ஆயிரம் अश्वमेघம் பண்ணினலல்லது अन्तः करण-शुद्धि உண்டாகாது. कर्तव्य-गौरवத்திற்கும்[5] काल-विलम्बத்திற்கும் நீ அஞ்சினையாகில், ஒரு अश्वमेघத்தினல் ஆயிரம் अश्वमेघத்தின் फलம் सिद्धिக்கும்படி अनवधिक-माहात्म्यமான सत्यव्रत-क्षेत्रத்திலே சென்று, அதின் நடுவே सर्वव्यापियான सर्वेश्वरன் நித்யமாக விசேஷ सन्निधि பண்ணியருளுகிற श्री हस्तिगिरियை उत्तरवेदियாக்கி,[6] அங்கே ஸர்வ யக்ஞங்களிலும் प्रधानமான अश्वमेघத்தாலே सर्वयज्ञ-भोक्ताவான सर्वेश्वरனை ஆராதிப்பாய்'' என்றது†[1].

§ 9: யாகவேதி-யாகத்திற்கு வருவோர் வஸிக்க ஏற்ற ராஜதானி ஆகியவற்றைப் படைக்க விசுவகர்மனுக்கு பிரமன் கட்டளையிடுதல்

அந்த अशरीरि-वाक्यத்தைக் கேட்டு अतिसन्तुष्टனான ப்ரஹ்மா அப்பொழுதே सत्यव्रत-क्षेत्रத்திலே வந்து विश्वकर्माவை அழைத்து, "நாம் இங்கே सर्वपाप-प्रायश्चित्त

மாக வேதங்கள் विधित्त वैஷ்ணவமான अश्वमेधத்தைப் பண்ணப் பாரானின்றோம். शिल्पविद्या-विशारदனை நீ हस्तिगिरिயை चतुरश्रமாக[7] வகுத்து[7], அதையே†[2] उत्तरवेदिயாக்கி, यागशालैயைச் சமைத்து, நம்முடைய यज्ञத்திற்கு வருகிற देव-असुर-यक्ष-राक्षस-किन्नर-किंपुरुष-सिद्ध-विद्याधर-मनुष्यादिகளெல்லாம் நெருக்கமற இருக்கும்படி நீண்டு அகன்று†[3] அமைந்திருப்பதொரு रमणीय-राजधानिயைச் சடக்கெனச் சமைப்பாய்'' என்று अतित्वरै யோடே[8] आज्ञाபித்தான்.

எத்திசை நிலனுமெய்தி
அருந்தவம் செய்த வந்நாள்*
சத்தியவிரதம் செல்வாய்
என்றதோர் உரையின் சார்வால்*
அத்திசை சென்றழைத்து
அங்கமரரில் எடுப்பான்தன்னை*
உத்தரவேதி செய்யென்று
உரையணங்குஇறை உரைத்தான். (8)

---

1—கைகளை உயரத் தூக்கியவனாய். 2—மூச்சை இழுப்பதையும் விடுவதையும். 3—மனம் அந்தர்யாமியைக் காண்பதற்குத் தகுந்ததல்லாமையாலே. 4—மிகவும் வருந்தியிருக்க. 5—செய்ய வேண்டியது பெரிதாய் இருப்பதற்கும். 6—யாக வேதியாகச் செய்து. [யாகசாலையில் அக்னிஹோத்ரம் பண்ணுவதற்கு ஆஹவனீயம் கார்ஹபத்யம் தக்ஷிணாக்னி ஆகிய மூன்று அக்னிகள் உண்டு. இவைகட்கு முன்புள்ள இடம் மஹாவேதி எனப்படும். அதில்முதலில் ஸதஸ் எனும் இடமும் அதற்குப் பிறகு ஹவிர்தானம். இவ்விடத்திற்கு முன்பு அக்னி ஸ்தாபனம் செய்து யாகம் பண்ணுவார்கள். இந்த இடம் உத்தரவேதி எனப்படும்.) 7—சதுரமாகச் செய்து. 8—மிகவேகமாக.

†1—என்று அந்த अशरीरि[1] 2—அதின்மேலே[1]. 3—'உயர்ந்த' என்று அதிகம்[4].

8. உரை அணங்கு இறை—வாக்கின் தேவதை(யான ஸரஸ்வதிக்கு) நாயகனாகிய ப்ரஹ்மா; எத்திசை—எல்லாத்

§ 10. காஞ்சியின் பெருமை

இப்படி ब्रह्मा ஆக்ஞாபிக்க, विश्वकर्मா‌வும் सर्वगुणोत्तरமான[1] हस्तिगिरिயை उत्तरवेदिயாக்கி, "இது ஸர்வேச்வரன் ஸந்நிதி பண்ணுகைக்கு இடமாம்" என்று விசாரித்தான்.

உத்தம வமர்த்தலம் அமைத்ததோர்
எழில் தனுவுயர்த்த கணையால்
அத்திர வரக்கன்†[1] முடிபத்தும் ஒரு
கொத்தென உதிர்த்த திறலோன்*
மத்துறு மிகுத்த தயிர் மொய்த்தவெணெய்
வைத்ததுணும் அத்தனிடமாம்*
அத்திகிரி பத்தர் வினை தொத்தற
அறுக்கும் அணி அத்திகிரியே. (9)

இவ்வண்ணம் சிந்தித்து उत्तरवेदिயும் यज्ञशालैயும்†[2] படைவீடுமாக[2] வகுத்து[2] विश्वकर्मा காட்டக் கண்ட ब्रह्मा தனக்கு बहुमति-विषयமாகையாலே[3] இந்நகரத்திற்கு काञ्ची[4] என்று பேராக்கினான்.

"अयोध्या मथुरा माया काशी काञ्ची ह्यवन्तिका।
पूरी द्वारवती चैव सप्तैता मुक्तिदाः†[3] स्मृताः ॥"*[1]

---

திக்கிலுமுள்ள; நிலனும் எய்தி—ஸ்தாநங்களுக்கும் சென்று; அருந் தவம் செய்த அந்நாள்—(ஒருவராலும்) செய்ய முடியாத தவத்தைச் செய்த அக்காலத்தில்; சத்திய விரதம்—ஸத்ய வ்ரதம் என்னும் க்ஷேத்ரத்திற்கு; செல்வாய் என்ற—போ என்ற; ஓர் உரையின் சார்வால்—ஓர் (அசரீரி) வார்த்தையின் ஆதாரத்தால்; அத்திசைச் சென்று—அந்த க்ஷேத்ரத்திற் சென்று; அமரர் இல் எடுப்பான் தன்னை அழைத்து—தேவர்களுக்குரிய வீடு (முதலியவற்றை) அமைப்பவ(னாகிய விசுவகர்ம)னை அழைத்து; அங்கு—அந்த க்ஷேத்ரத்தில்; உத்தரவேதி செய்—(யாகம் செய்வதற்கு) உத்தரவேதியைச் செய்து முடிப்பாயாக; என்று உரைத்தான்—என்று கட்டளையிட்டான். □

1—எல்லாகுணங்களும் நிரம்பிய. 2—பாசறையாகச் செய்து. 3—தனக்கு கொண்டாடத் தக்கதாகையாலே. 4—பூமிக்கு சலங்கை ஒட்டியாணம் போன்ற அழகிய நகரம் ['ப்ரஹ்மாவினால் பரமன் ஆராதிக்கப்பட்ட இடம்' என்பதும் காஞ்சீ என்பதன் பொருளாகும்.
केन अंचित: पूजित: भगवान् यत्र सा काञ्ची]

†1—அத்திறவரக்கன்[4]. 2—उत्तरवेदियையும் यज्ञशालैயையும்[1]. 3—मुक्तिदायिका:[2].

9. உத்தம அமர்த்தலம்—உயர்ந்த போர்க்களத்தில்; அமைத்தது ஓர் எழில் தனுவின்—அமைக்கப்பட்ட நிகரற்ற அழகிய வில்லினின்றும்; உயர்த்த கணையால்—உயரத் தள்ளப்பட்ட அம்பினால்; அத்திர அரக்கன் முடிபத்தும்—அஸ்த்ர பலமுள்ள ராக்ஷஸனாகிய ராவணனுடைய தலைகள் பத்தையும்; ஒரு கொத்து என—ஒரு குலை என்று சொல்லும்படி; உதிர்த்த திறலோன்—அறுத்துக் கீழே தள்ளின பலமுடைய இராமனும்; மத்து உறு—மத்தினால் கடையத் தகுந்த; மிகுத்த தயிர்—அதிகமான தயிரையும்; வைத்தது மொய்த்த வெ(ண்)ணெய் -(யசோதையால்) வைக்கப்பட்ட அதிகமான வெண்ணெயையும்; உ(ண்)ணும் அத்தன்—உண்ட கண்ணனுமான ஸ்வாமியினுடைய; இடம் ஆம்—வாஸஸ்தலமாகிய; அத்திகிரி—ஹஸ்திகிரி என்னும் காஞ்சி க்ஷேத்திரம்; பத்தர் வினை -பக்தர்களுடைய பாபங்களை; தொத்து அற அறுக்கும் -ஸம்பந்தம் இல்லாமல் ஒழிக்கவல்ல; அணி அத் திகிரியே—அழகிய அந்தச் சக்ராயுதம் போன்றதேயாகும்.

*1. அயோத்தி, வடமதுரை, மாயை, காசி, காஞ்சீ, அவந்தி, த்வாரகை என்னும் பட்டணங்களாகிய இவைகள் ஏழும் மோக்ஷத்தைக் கொடுப்பவைகள் என்று ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

§ 11: காஞ்சியைக் கண்டு பிரமன் மகிழ்தல்

திண்மணிகள் பொன்னுடனே சேர்தலாலும்
சிதையாத நூல்வழியிற் சேர்த்தியாலும்*
வண்மை எழும் ஈரிரண்டு வண்ணத்தாலும்
வானவர்க்கும் வியப்பான வகுப்பினாலும்*
உண்மையுடை வாசியொளி ஓசையாலும்
ஒரு காலும் அழியாத அழகினாலும்*
மண்மகளாற்கு அலங்காரம் என்ன மன்னும்
மதிட்கச்சி நகர் கண்டு மகிழ்ந்திட்டானே. (10)

§ 12: யாகம் செய்வதற்காக ஸரஸ்வதியை அழைத்துவர வசிட்டனை பிரமன் அனுப்புதல்

இப்படி பூமிக்கு அலங்காரமாக ஒரு காஞ்சியைச் சமைத்து, அங்கே अश्वमेध யாகத்திலே उद्युक्तனை[1] ब्रह्म मरीचि முதலான ब्रह्मर्षिகளை ऋत्विक्குகளாக்கிக் கொண்டு, ஸரஸ்வதீ என்ற ஆற்றிலே தபஸ்ஸு பண்ணுகிற தன் प्रधान-पत्निயான ஸரஸ்வதியை அழைத்துக் கொண்டு வருவாய் என்று வஸிஷ்ட பகவானை अनुशासित्தான்[2].

காமங்கள் பல கொண்ட வேதம் கொண்டு
கைதவமே செய்வார்க்குக் காணகில்லா*
பூமங்கை கேள்வனை நான் கண்டு போற்றப்
புண்ணியத்தின் நிகரில்லா விரதம் பூண்டேன்
சாமங்கள் கழிவதன்முன் சடக்கெனப் போய்த்
தன்னாற்றில் தனியிருந்து தவம் செய்கின்ற*
நாமங்கை வந்திட நீ அழைப்பாய் என்று
நன்மகனை நான்முகன் தான்
நவின்றிட்டானே. (11)

*1—முனைந்த 2—கட்டளையிட்டான்.*

10. **திண் மணிகள்**—*திடமான ரத்நங்கள்;* **பொன்னுடனே**—*தங்கத்தோடு;* **சேர்தலாலும்**—*சேர்த்து இழைக்கப் பெற்றிருப்பதாலும்;* **சிதையாத நூல் வழியில்**—*அழியாத சிற்ப சாஸ்த்ரத்தின் முறையில்;* **சேர்த்தியாலும்** — *அமைக்கப் பட்டிருப்பதாலும்;* **வண்மை எழும்** – *கொடை நிறைந்த;* **ஈர் இரண்டு வண்ணத்தாலும்**—*நான்கு ஜாதியாரும நிறைந்திருப்பதாலும்;* **வானவர்க்கும் வியப்பான**—*தேவர்கட்கும் வியக்கத்தக்க;* **வகுப்பினாலும்**—*அமைப்பினாலும்;* **ஒண்மையுடைய** –*இயற்கையழகமைந்த;* **வாசி**—*குதிரைகளின்;* **விளி ஓசையாலும்**—*கனைக்கும் குரல் ஓசையினாலும்;* **ஒருகாலும் அழியாத அழகினாலும்**—*ஒரு போதும் அழியாமல் நிலைபெற்ற அழகினாலும்;* **மண்மகளார்க்கு**—*பூமிக்கு;* **அலங்காரம் என்ன**—*ஆபரணம் என்னும்படி;* **மன்னும்**—*பொருந்திய;* **மதிள்**—*மதிள்களையுடைய;* **கச்சி நகர் கண்டு**—*காஞ்சீபுரத்தைக் கண்டு;* **மகிழ்ந்திட்டான்**—*(ப்ரஹ்மா) மகிழ்ச்சியடைந்தான்.*

11. **நான்முகன்**—*நான்கு முகங்களையுடைய ப்ரஹ்மா;* **நல்மகனை**—*(தன்னுடைய) நல்ல புத்திரனை வஸிஷ்டனை (அழைத்து);* **காமங்கள் பல கொண்ட**—*காம்யகர்மங்கள் பலவற்றை வெளியிடுகின்ற;* **வேதம் கொண்டு**—*வேதத்தைக் கொண்டு;* **கைதவமே செய்வார்க்கு**—*(பகவத்கைங்கர்யத்தைச் செய்யாது) கபடகார்யங்களையே செய்பவர்களுக்கு;* **காணகில்லா**—*ப்ரத்யக்ஷமாய்க் காணமுடியாத;* **பூ மங்கை கேள்வனை**—*பூவில் வாழும் பிராட்டியின் நாதனை எம்பெருமானை;* **நான் கண்டு போற்ற**—*நான் நேரில் ஸேவித்து ஸ்தோத்ரம் செய்வதற்காக;* **புண்ணியத்தில் நிகர் இல்லா**—*புண்யங்களுக்குள் ஒப்பற்ற;* **விரதம் பூண்டேன்**—*(அசுவமேதயாகமாகிய) விரதத்தைத் தொடங்கியுள்ளேன்.* **சாமங்கள் கழிவதன்முன்**—*யாமங்கள் கழிவதற்கு முன் (காலம் தாழாது);* **சடக்கு எனப் போய்**—*விரைவாக (நீ) போய்;* **தன் ஆற்றில்** –*தன் (பெயருள்ள ஸரஸ்வதி) நதிக்கரையில்;* **தனி இருந்து**—*தனியாக இருந்து;* **தவம் செய்கின்ற**—*தவம் செய்பவளான,* **நா மங்கை**—*வாக்கின் தேவதையான ஸரஸ்வதி;* **வந்திட**—*(இங்கு) வந்து சேரும்படி;* **நீ அழைப்பாய் என்று**—*நீ அழைத்து வருவாயாக என்று;* **நவின்றிட்டான்**—*கட்டளையிட்டான்.* **தான்**—*அசை.*

§ 13. கோபம் கொண்ட ஸரஸ்வதீ நதி வடிவங்கொண்டு யாகத்தை அழிக்கவரும் மிடுக்கு

இப்படி ब्रह्माவாலே नियुक्तனை[1] ஸ்ரீவஸிஷ்டபகவான் ஸரஸ்வதி பக்கலிலே சென்று प्रणिपात-अभिवादनங்களைப்[2] பண்ணி ब्रह्माவின் யாகத்தை அறிவிக்க, प्रणय-कलह-कलुषितैயான[3] ஸரஸ்வதி வாராதவளவில் (B—32), ब्रह्मा ஸாவித்ரீ முதலான பத்னிகளைக் கொண்டு यज्ञம் பண்ணத் தொடங்க, देवसत्कार-कुपितரான அஸுரர்கள் இந்த यज्ञத்தைக் கலக்க நினைத்துச் சென்று ஸரஸ்வதிக்கு அறிவிக்க, அவளும் अति-कुपित-हृदयैயாய்க் கொண்டு दक्षिणापथத்திலே[4] போந்து, வேறொரு மஹா நதியாய்ப் பெருகி, ब्रह्माவினுடைய यज्ञभूमिயை அழிப்பதாக उपक्रमिத்தாள்[5].

அன்னவடிவாள் அசையுமன்ன நடையாள்
உயருமன்ன வரசேறி வருவாள்*
அத்தனயன் அத்தநயன் உத்திதனை
அத்திதென வுத்தி புரியாள்*
நன்னடை விடா நடமிதென்ன நடவாநடுவுள்
நண்ணு குடகேறி யிழிவாள்*
நற்பதிக ளற்பதிகள் கற்புரள
வற்புத மருக் கதியினால்*

கன்னடை விடா விடமில் உன்னதி சிருவிகட
மன்னுகிரி கூடமிடிய*
கட்ட விடை யிற்றுவிழ முற்றும் விழி†[1]
யுற்றடைய விட்டருகுற*
அன்ன நய சீரயனி தென்னென விழாவமரர்
மன்னுபதியேறி மகிழ*
அச்சுதன் அணைத்தனுவில் அத்திசைவரத்
தகைய வற்றணுகிறாள். (12)

†1—முட்டவழி[2].

1—ஏவப்பட்ட. 2—வணங்கியும், இன்னார் என்று தன்னை அறிமுகப்படுத்தியும். 3—ஊடலால் கலங்கின. 4—தெற்கு திசையில். 5—தொடங்கினாள்.

12. அன்னவடிவாள—ஹம்ஸம் போன்ற அழகையுடையவளும்; அசையும் அன்ன நடையாள்—அசைகின்ற ஹம்ஸம் போன்ற நடையையுடையவளும்; உயரும் அன்ன அரசு ஏறி வருவாள்—உயர்ந்த ராஜஹம்ஸத்தின் மீது ஏறிக்கொண்டு வருபவளுமான ஸரஸ்வதீ தேவி;

அத்தன் அயன் -உயர்ந்தவனாகிய ப்ரஹ்மாவின்; அத்தனயன்—அந்தப் புதல்வனான வஸிஷ்டனுடைய; உத்திதனை—வேண்டுகோளை; இது அதது—இது அஸது (அப்படியேயாகுக); என உத்தி புரியாள்—என்று சொல்லாதவளாய்;

இது—இவ்வாறு ப்ரஹ்மா அழைத்தது; நல் நடை விடா—நல்லொழுக்கத்தினின்றும் வேறுபடாத(துபோல் தோற்றுகின்ற); நடம் என்ன—நாடகம் என்று (நினைத்து); நடவா—நடந்து; நடுவு நண்ணு குவடு—வழியிடையே எதிர்ப்படுகின்ற குன்று மீது; ஏறி இழிவாள்—ஏறி இறங்குபவளாய்;

நல் பதிகள்—நல்ல (ஸமமான) இடங்களிலும், அல்பதிகள்—அப்படியல்லாத (மேடுபள்ளமான) இடங்களிலுமுள்ள; கல் புரள—கற்கள் புரளும்படி, அற்புத—ஆச்சரியமான; மருற்கதியினால்—வாயு வேகத்தால்;

கல்நடை விடா—பாறைகள் அசைந்து உருளாத; இடம் இல்—இடமில்லாததும், உன்னதி சிறு—உயரம் குறையாததும்; விகடம் மன்னு—மேடுபள்ளம் பொருந்தியதுமான; கிரி கூடம் இடிய—மலையின் சிகரம் இடிந்து போகவும்;

அவ்விடை—அங்கே; கட்டு - மலைப்பக்கம் (தாழ்வரை); இற்று விழ—அடியற்று இடியவும்; விழி முற்றும் உற்று அடைய விட்டு—கண்களை நாநாதிசையும் சென்று பொருந்தும்படி செலுத்தி; அருகு உற—(யாகவேதியின) ஸமீபத்திற்கு வர;

அன்ன—அப்படிபட்ட, நய சீர் அயன்—நன்மையையும் சிறப்பையுமுடைய ப்ரஹ்மதேவன்; இது என் என—இது என்ன என்று (திகைத்து நிற்க); விழா அமரர்—(யாகமாகிய) உத்ஸவத்திற்கு வந்த (மற்றைத்) தேவர், மன்னுபதி ஏறி—ஸ்திரமான (தங்கள்) ஸ்தானத்திற்குச் சென்று; மகிழ—தாம் உயிர் பிழைத்து வந்ததற்கு மகிழ்ந்து நிற்க;

§14. நதிநடுவே எம்பெருமான் அணையாய்க் கிடந்தலும் அவ்வணையை மூவுலகினரும் கண்டு மகிழ்ந்து பேசுதலும்

அன்று நயந்த அயமேத மாவேள்வி
பொன்ற வுரையணங்கு பூம்புனலாய் கன்றிவர
ஆதி அயனுக்கருள் செய்தணையானன்*
தாதை அரவணையான் தான். (13)

இப்படி **सकल-लोकैक-सेतु**வான **सर्वेश्वर**ன் **सरस्वती-प्रवाह-मध्य**த்திலே அரவணையோடே[1] கூட அணையாகக் கிடந்தவளவில், கண்ணும் மனமும் களிக்கக் கண்டு நின்ற **त्रैलोक्यवर्ति**களும்[2] இவ்வண்ணம் பேசினார்கள்.

தரணியில் மன்னி அயனார் தனித்தவம் காத்தபிரான்*
கருணையெனும் கடலாடித் திருவணையைக்
கண்டதற்பின்*
திரணர கெண்ணிய சித்திரகுத்தன் தெரித்துவைத்த*
சுருணையிலேறிய சூழ்வினைமுற்றும் துறந்தனமே. (14)

§ 15. உத்தரவேதியில் புண்யகோடி விமாநத்துடன் பேரருளாளன் ஆவிர்பவித்தல்

இப்படி **वेगवति**யாய் வந்த **सरस्वति**யினுடைய **कोपवेग**மடங்கும்படி வெஃகாவில் துயிலமர்ந்த வேந்து[1] கடாக்ஷிக்க, கலக்கமற்றுவந்த ஸரஸ்வதியையும் கூட்டிக்கொண்டு **ब्रह्मा अश्वमेध-याग**த்தை நடத்த, **वपाहोम**ம் **प्रवृत्त**மானவளவிலே ஆயிரம் கோடி **आदित्य**ர்கள் **उदि**த்தாற் போலே **उत्तरवेदि-मध्य**த்திலே ஒரு **महा-तेजस्** தோன்றிற்று.

சுகலேசமெண்ணிய சூழ்வினை தீர்க்கத் துணிந்தயனார்*
அகலாத அன்புடன் கொண்ட அயமேத வேதியின் மேல்*
புகலோங்கு பொன்மலை என்றதோர் புண்ணிய
கோடியுடன்*
பகலோன் பகல்விளக்காகப் பரம் சுடர்
தோன்றியதே. (15)

அச்சுதன்—(பக்தர்களைக்) கைவிடாத எம்பெருமான்; **அணைத்தனுவில்**—அணையுருவத்தில்; **அத்திசை தகைய வர**—அங்கே தடுப்பதற்கு எழுந்தருள; **அற்று**—(வேகங்) கெட்டு; **அணுகினாள்**—நெருங்கினாள். □

†1—வேங்கைக்[1]; வேங்தன்(?)[5].

1—அரவணை = திருவநந்தாழ்வானாகிய (பாம்புப்) படுக்கை. 2—மூவுலகில் உள்ளவர்களும்.

13. **அன்று**—அப்பொழுது; **நயந்த**— (ப்ரஹ்மவிமானால்) விரும்பிச் செய்யப்பட்ட; **அயமேதம்**—அசுவமேதமென்னும்; **மா வேள்வி**—பெரிய யாகம்; **பொன்ற**—அழிந்துபோகும்படி; **உரை அணங்கு**—வாக்கின் தேவதையான ஸரஸ்வதி; **பூம்புனலாய்**—அழகிய நதியாக ஆகி; **கன்றிவர**—கோபித்துக் கொண்டு பெருகிவர; **தாதை**—(உலகுக்கே) தந்தையும்; **அரவு அணையான்**—ஆதிசேஷனைப் பள்ளியாகக்கொண்டவனுமான எம்பெருமான்; **ஆதி அயனுக்கு அருள் செய்து**—ஸ்ருஷ்டி காரணனான ப்ரஹ்மாவின் மீது கருணையை வைத்து; **தான்**—தானே; **அணை ஆனான்**—அணையாகப் பள்ளி கொண்டான்.

14. **தரணியில் மன்னி**—பூமியில் ஸ்திரமாயிருந்து; **அயனார்**—ப்ரஹ்மாவினுடைய; **தனித்தவம்** — ஒப்பற்ற தபஸ்ஸாகிய அசுவமேதத்தை; **காத்தபிரான்**—காப்பாற்றி மஹோபகாரம் செய்தருளிய எம்பெருமானுடைய, **கருணை எனும் கடல் ஆடி**—க்ருபை என்னும் கடலில் நீராடி; **திரு அணை கண்டதற்பின்**—அழகிய (அந்த) அணையை ஸேவித்த பிறகு; **நரகுத்திரள்**—நரகங்களின் கூட்டத்தை; **எண்ணி** கணக்கிட்டுப் பார்ப்பவனான; **இத்திரகுத்தன்**—(எமனுடைய கணக்கனான) சித்ரகுப்தனால்; **தெரித்து வைத்த**—கணக்குப் பார்த்து எழுதி வைக்கப்பட்ட; **சுருணையில் ஏறிய**—கணக்கோலையில் குறித்து வைக்கப்பட்ட; **சூழ்வினை முற்றும்**—(நம்மைச்) சூழ்ந்து நிற்கின்ற பாபங்கள் முழுதும்; **துறந்தனம்**—நீங்கப் பெற்றோம்

15. **அயனார்**—ப்ரஹ்மா; **சுகலேசம்**—அற்பமான (லோக) ஸுகத்தை, **எண்ணிய**—(பெரிதாக) எண்ணுவதற்குக் காரணமாயுள்ள; **சூழ் வினை**—சூழ்நது நிற்கும் (தம்) பாபங்களை; **தீர்க்கத் துணிந்து**—ஒழிக்க உறுதிகொண்டு, **அகலாத அன்புடன்**—நீங்காத பக்தியுடன்; **கொண்ட**—அனுஷ்டித்த; **அயமேத வேதியின் மேல்**—அசுவமேத யாகவேதியின் மீது; **புகல் ஓங்கு**—புகழ் நிறைந்துள்ள;

चैत्रे मासि सिते पक्षे चतुर्दश्यां तिथौ मुने
शोभने हस्तनक्षत्रे रविवार-समन्विते ।
वपाहोमे प्रवृत्ते तु प्रातस्सवनकालिके
धातुरुत्तरवेद्यन्तः प्रादुरासीज्जनार्दनः ॥*[1]

§ 16 நித்யஸூரிகள் திருச்சின்னம் ஒலித்தல்

இப்படிப் பெருமாள் தோன்றினபடிக்கு†[1] **नित्यसूरि**கள் **मुख**த்தாலே **காளங்கள்**[1] வலம்புரி கலந்தெங்கும் ஆர்த்தன[2].

आप्तः पाण्डवदूतोऽयमाप्तो देवकिनन्दनः ।
आगतो वासुदेवोऽयमित्यश्रावि च काहळी ॥
शरण्यस्सर्वलोकानां नारायण उपागतः ।
शङ्ख-चक्र-गदापाणिः नारायण उपागतः ॥
इति काहळिनादेन कर्णेष्वमृतसेचनम् ।
कुर्वता सहसा योगात् विरराम पितामहः ॥†[2]

பெருமையுடை அத்திகிரிப் பெருமாள் வந்தார்*
பேராது அருள்பொழியும் பெருமாள் வந்தார்*
அருமறையின் உச்சிதனில் நின்றார் வந்தார்*
அங்கமுடன் அவையாகும் பெரியோர்†[3] வந்தார்*

---

**பொன் மலை அன்ன**—ஸ்வர்ண பர்வதம் போன்ற; **ஓர் புண்ணிய கோடியுடன்**—ஒப்பற்ற புண்யகோடி என்னும் விமானத்துடன்; **பகலோன் பகல் விளக்காக**—ஸூர்யனும் பகலில் வைத்த விளக்கு என்னலாம்படி; **பரஞ்சுடர்**—உத்தமமான (பேரருளாளனாகிய) தேஜஸ்; **தோன்றியது**—ஆவிர்ப்பவித்தது. □

†1—ஆவிர்பவித்தருளினபடிக்கு[2]. 2—"ஆப்த:...பிதாமஹா:"—இந்த சுலோகங்கள் இல்லை[1]. 3—அரியோர்[1].

†1—ஒரு வாத்யம் (திருச்சின்னம்). 2—ஒலித்தன.

*1–मुने—முனிவரே!; चैत्रे मासि—சித்திரை மாதத்தில்; सिते पक्षे—சுக்லபக்ஷத்தில்; चतुर्दश्यां तिथौ—சதுர்தசி திதியில்; रविवार-समन्विते—ஞாயிற்றுக் கிழமையுடன்

கூடிய; शोभने—மங்களகரமான; हस्त-नक्षत्रे—ஹஸ்த நக்ஷத்ரத்தில்; प्रातस्सवन - कालिके—ப்ராதஸ்ஸவன காலத்தில் செய்யப்பட்ட; वपा होमे—வபா ஹோமமானது; प्रवृत्ते तु—நடந்து கொண்டிருக்கும் போது; धातु:—ப்ரும்மாவினுடைய; उत्तर-वेद्यन्ते—உத்தர வேதியின் நடுவில்; जनार्दन:—எம்பெருமான்; प्रादुरासीत्—ஆவிர்பவித்தார். (பசுயாகத்தில் ஒரு நாளில் காலை, நடுப்பகல், மாலை இவற்றில் ஸவனங்கள் அநுஷ்டிக்கப் படுகின்றன. அவற்றிற்கு முறையே ப்ராதஸ்ஸவனம், மாத்யந்தின ஸவனம், ஸாயம் ஸவனம் என்று பெயர். ப்ராதஸ் ஸவனத்தில் வபாஹோமம் நடைபெறும்.)

अयं पाण्डवदूत:—பாண்டவருக்குத் தூது சென்ற பெருமாள்; आप्त:—வந்தார். देवकि-नन्दन:—தேவகியின் புதல்வர்; आप्त:—வந்தார். अयं वासुदेव:—இந்த வாஸுதேவன்; आप्त:—வந்தார்; इति—என்று; काहली—திருச்சின்னம்; अध्वानि—ஒலித்தது.

सर्व-लोकानां—எல்லா உலகங்களுக்கும்; शरण्य:—புகலான; नारायण:—நாராயணன்; उपागत:—வந்தார். शङ्खचक्रगदापाणि:—சங்கு, சக்கரம், கதை இவற்றைக் கையிலேந்திய; नारायण:—நாராயணன்; उपागत:—வந்தார். इति—இவ்வாறு; कर्णेषु—காதுகளில்; अमृत-सेचनं—அம்ருதத்தைப் பொழிதலை; कुर्वता—செய்கிற; काहलि-नादेन—திருச்சின்ன ஒலியால்; पितामह:—நான்முகன்; सहसा—உடனே; योगात् विरराम—யோகத்தை முடித்தார்.

16. பெருமையுடை—(மிகப்) பெருமையுடையரான; அத்திகிரிப் பெருமாள்—ஹஸ்திகிரிநாதர்; வந்தார்—எழுந்தருளினார். பேராத அருள் பொழியும்—நீங்காத கருணையைப் பொழியும்; பெருமாள் வந்தார். அருமறையின் உச்சிதனில்—அருமையான வேதத்தின் சிகரத்தில் (வேதாந்தத்தில்); நின்றார்—போற்றப் பட்டு நின்றவர், வந்தார். அங்கமுடன்—அங்கங்களுடன்; அவையாகும்—அந்த வேதஸ்வரூபரான, அரியோர்—அருமையான ஸ்வாமி; வந்தார். திருஉரையாய்—பிராட்டி சப்தஸ்வரூபமாய் நிற்க; தாம் பொருளாய்—தாம் அர்த்த ஸ்வரூபமாய்; நிற்பார்—

திருவுரையாய்த் தாம் பொருளாய் நிற்பார் வந்தார்*
திருவருளால் செழுங்கலைகள் தந்தார் வந்தார்*
மருவிலர்க்கு மயக்குரைக்கும் மாயோன் வந்தார்*
வானேறவழி தந்தார் வந்தார் தாமே. (16)

அத்திகிரி அருளாளப்பெருமாள் வந்தார்*
ஆனை பரி தேரின் மேல் அழகர் வந்தார்*
கச்சிதனில் கண்கொடுக்கும் பெருமாள் வந்தார்*
கருத வரம் தரும் தெய்வப் பெருமாள் வந்தார்*
முத்திமழை பொழியும் முகில் வண்ணர் வந்தார்*
மூலமென ஓலமிட வல்லார் வந்தார்*
உத்தர வேதிக்குள்ளே உதித்தார் வந்தார்*
உம்பர் தொழும் கழலுடையார் வந்தார் தாமே. (17)

§ 17. அனைவரும் பேரருளாளன் வடிவழகை வருணித்தல்

இப்படி **आविर्भवित्**தருளின பெருமாளுடைய மஹா தேஜஸ்ஸிலே **भ्रम**மேறி[1] ஓடின **ब्रह्मा**வும் தேவர்களும் வருந்திக்[2] குறித்துப்பார்த்து[2], அததேஜோ மண்டலத்துக்குள்ளே **पुण्यकोटि-विमान**த்தையும் அவ் **विमानमध्य**த்திலே **हविर्गर्भ-मुख**ரான[3] பெருமாள் **कान्तिवर्षि**யாய்[4] இருப்பதொரு காளமேகம்[5] போலே நின்றருளின படியையுங்கண்டு **हर्ष-विस्मय-परवश**ராய்க் கொண்டு[6] இங்ஙனே பேசினார்கள்.

திருபரிதியிசைந்த மகுடமும்
எழில்மதி திகழ்ந்த வதனமும்*
இருவகை இலங்கு குழல்களில்
எதிர் பொர உகந்த மகரமும்*
ஒரு தகவுயர்ந்த திருமகள்
ஒளிமறுவில் மன்னும் அகலமும்*

1—செய்வதறியாது மயங்கி. 2—சிரமப்பட்டு உற்று நோக்கி. 3—வாயிலே ஹவிஸ்ஸை உடைய. 4—அழகைப் பொழிகின்றவராய். 5—கர்யமேகம். 6—மகிழ்ச்சி, ஆச்சர்யம் இவற்றிற்கு வசப்பட்டு.

நிற்பவர்; வந்தார். திரு அருளால்—(தம்) சிறந்த க்ருபையினால்; செழும் கலைகள்—உயர்ந்த சாஸ்த்ரங்களை; தந்தார்—(உலகுக்குத்) தந்தவர்; வந்தார். மருவலர்க்கு—(தம்மிடம்) அன்பற்ற நாஸ்திகருக்கு; மயக்கு உரைக்கும்—மோஹந சாஸ்த்ரங்களை வெளியிடுகின்ற; மாயோர்—வஞ்சகர்; வந்தார். வான் ஏற பரமபதத்திற்குச் செல்ல; வழிதந்தார்—உபாயத்தை உபதேசித்தவர்; வந்தார். தாம்—அசை.

17. அத்திகிரி—ஹஸ்திகிரியிலெழுந்தருளிய; அருளாளப் பெருமாள்—பேரருளாளரென்னும் பெருமாள்; வந்தார். ஆனைபரி தேரின் மேல்—யானை குதிரை தேர் ஆகிய வாஹநங்கள் மீது (எழுந்தருளும்); அழகர் வந்தார். கச்சிதனில்—காஞ்சீபுரத்தில்; கண்கொடுக்கும்—கண்ணைக் கொடுக்கும்(B—33); பெருமாள் வந்தார். கருத வரம் தரு—மனஸ்ஸினால் அநுஸந்தித்தால் வேண்டிய வரத்தைக் கொடுக்கும்; தெய்வப் பெருமாள்—தேவச் சிரேஷ்டர்; வந்தார். முத்தி மழை பொழியும்—மோக்ஷமாகிய மழையைப் பொழிகின்றவரும்; முகில் வண்ணர்—மேகம் போன்ற நிறமுடையவருமான எம்பெருமான்; வந்தார். மூலம் என ஓலம் இட—(முதலையால் பீடிக்கப்பட்ட கஜேந்திரன்) ஆதிமூலமே என்று கூக்குரலிட; வல்லார்—(அந்த யானையைக் காக்கச்) சக்தியுடையவர், வந்தார். உத்தர வேதிக்குள்ளே - (ப்ரஹ்மா ஏற்படுத்திய) உத்தர வேதிக்குள்ளே; உதித்தார்—ஆவிர்ப்பவித்தவர்; வந்தார். உம்பர் தொழும்—நித்யஸூரிகளால் தொழப்படுகின்ற; கழலுடையார்—திருவடிகளையுடைய எம்பெருமான்; வந்தார். தாம்—அசை.

18. இருபரிதி—(கிரணங்களால்) பெரிய சூர்யனை; இயைந்த மகுடமும்—ஒத்த கிரீடமும்; எழில் மதி—ப்ரகாசிக்கும் சந்திரன் போல்; திகழ்ந்த வதனமும்—விளங்குகின்ற திருமுக மண்டலமும்; இருவகை இலங்கு குழைகளில்—இரண்டு வகையாக ப்ரகாசிக்கும் குண்டலங்களில்; எதிர் பொர—எதிரே நின்று சண்டையிடுவதற்கு; உகந்த மகரமும்—விரும்பிய(ன போன்ற) மீன்களும்; ஒரு தகவு—ஒப்பற்ற கருணையினால்; உயர்ந்த திருமகள்—உயர்ந்து நிற்கும் பிராட்டி; ஒளி மறுவின்—ப்ரகாசிக்கின்ற (ஸ்ரீவத்ஸம் என்னும்) மறுவோடு; மன்னும் அகலமும்—நித்ய வாஸம் செய்யும் திருமார்பும்; உரு அரு—அசேதநத்தையும்

உருவரு உமிழ்ந்த உதரமும்
உலகடைய நின்ற கழல்களும்*
மருவினிடை யோங்கு புனலென
மலைகுனிய நின்ற மலையென*
மருளற விளங்கும் ஒளியென
மலரயன் உகந்த பயனென*
அருவில் உறைகின்ற உயிரென
அடியவர் உகந்த அமுதென*
அருமறைகள் ஒன்றி அடிதொழ
அருள் வரதர் நின்றபெருமையே. (18)

§ 18: ப்ரஹ்ம ஸூத்ரங்கள் பேசும் குணங்களைக் கொண்டு பேரருளாளனைத் துதித்தல்

இவ்வண்ணம் ஆச்சர்யரஸத்தாலும் भक्ति-प्रकर्षத்தாலும் प्रेरितராய்க் கொண்டு தொழுவதெழுவதாய், 'இவனுக்கு நாம் அடியோமாகப் பெறுவமே' என்று वेदान्त-सारமான அர்த்தத்தை இங்ஙனே விண்ணப்பம் செய்தார்கள்.

சித்தசித்தென விரித்துரைத்தன
அனைத்தமைத் துறையும் இறைவனார்*
சிறியபெரியவுரு வடைய உடலமென
நடலம் இலதிலகு நிலையினார்*
சித்திரத்தொழிலை யொத்த பத்தரொடு
முத்தர் பித்தியெனும் உணர்வினார்*
சிதைவின் மறை நெறியி லெறியவுருமுறைகள
முறிய சிறை யரிய நிறைவினார்*

---

சேதநத்தையும்; உமிழ்ந்த உதரமும்—ஸ்ருஷ்டித்த திருவயிறும், உலகு அடைய—உலகத்திலுள்ளவர் வந்து சரணடையும்படி, நின்ற கழல்களும்—நிற்கின்ற திருவடிகளும் ஆகிய இவற்றுடன், அருமறைகள்—அருமையான வேதங்கள்; ஒன்றி அடிதொழ—

ஒரே முகமாய் நின்ற திருவடிகளைத் தொழு(து பேசு)ம்படி; **அருள் வரதர் நின்ற பெருமை**—அருளே வடிவெடுத்த பேரருளாளர் நின்ற பெருமை (எவ்வாறு இருந்தது எனில்); **மருவின் இடை**—பாலைவனத்தின் நடுவில்; **பொங்கு புனல் என**—எழும்பிய ஜலம் என்னும்படியாகவும்; **மலை குனிய** (அத்திகிரி என்னும்) மலை வளையும்படி, **நின்ற மலை என**—நின்ற மலை என்னும்படியாகவும்; **மருள் அற**—அஞ்ஞானம் நீங்கும்படி; **விளங்கும் ஒளி என**—ப்ரகாசிக்கின்ற தேஜஸ் எனனும் படியாகவும்; **மலர் அயன்**—(பகவானுடைய நாபிக்) கமலத்தில் உதித்த ப்ரஹ்மா; **உகந்த பயன் என**—விரும்பிய பலன் என்னும்படியாகவும்; **அருவில் உறைகின்ற**—சேதநப் பொருள்களுக்குள் வஸிக்கின்ற; **உயிர் என**—உயிர் என்னும் படியாகவும், **அடியவர் உகந்த**—பாகவதர்கள் விரும்புகின்ற, **அமுது என**—அம்ருதம் என்னும் படியாகவும் (இருந்தது).

### ''சித்தசித்தென'' என்ற 19வது பாசுரத்தின் பொருள்

### முதல் அத்யாயத்தின் ஸாரார்த்தம்

19. **சித்து அசித்து என**—சேதநம் அசேதநம் என்று; **விரித்து உரைத்தன**—(சாஸ்த்ரங்களில்) விளக்கிக் கூறப்பட்ட; **அனைத்தும் அமைத்து**—ஸகல வஸ்துக்களையும் படைத்து; **உறையும் இறைவனுர்**—(அவற்றுள் அந்தர்யாமியாய்) வஸிக்கின்ற தலைவராயிருப்பவரும், (இதனுல் முதற்பாதத்தின் ஸாரார்த்தமான ''சேதநம்—அசேதநம் ஆகிய எல்லா வஸ்துக்களையும் ஈசுவரன் படைக்கிருன்'' என்பது கூறப்பட்டது.)

**சிறிய பெரிய**—ஸூக்ஷ்மமும் ஸ்தூலமுமான; **உரு அடைய**—உருவமுள்ள (சேதநம் அசேதநம் என்னும்) வஸ்துக்கள் முழுதும்; **உடலம் என**—(தமக்குச்) சரீரம் என்னும்படி நின்று; **நடலம் இலது**—(அவற்றிலுள்ள) தோஷம் தட்டாது; **இலகும் நிலையினுர்**—ப்ரகாசிக்கும் ஸ்வபாவமுடையவரும்; (இதனுல் இரண்டாவது பாதத்தின் ஸாரார்த்தமான ''ஸகல வஸ்துக்களையும் ஈசுவரன் சரீரமாகக் கொண்டுள்ளான'' என்பது கூறப்பட்டது.)

**எழில் சித்திரத்தை ஒத்த**—அழகிய சித்திரத்தைப் போன்ற; **பத்தரொடு முத்தர்**—பத்தருக்கும் முக்தருக்கும் (நித்யஸூரிகளுக்கும்), **பித்தி எனும்**—ஆதாரமான சுவர் என்று கூறப்படுகின்ற, **உணர்வினுர்**—ஸங்கல்பத்தையுடையவரும், (இதனுல மூன்ளும் பாதத்தின் ஸாரார்த்தமான ''ஈசுவரன வேறென்றையும்

கத்துவிக்க வல கத்து வித்தைவழி
கற்றவர்க்கசைவில் மாயனுர்*
கபிலர் கணசரணர் சுகதர் சமணரார்
வழிகள் அழியும் அருள் மொழியினுர்*
கத்திலக்கிலும் அருக்குலத்திலும்
அசித்திலொக்கும் ஒருமுதல்வனுர்*
கரணமிடு கடிய பதிஞெரிருடிகமும்
அடையமுடியும் அடியிருடியார்*

ஒத்தனைத்துலகும் ஒற்றியொற்றிவரும்
இப்பவத்திசையும் இசைவினுர்*
உருவமருவமெனும் உலகில் முடகிலெனில்
உவமையிலதிலகு தலைவனுர்*

---

*தமக்குஆதாரமாகக் கொள்ளாதவன்'' என்பது கூறப்பட்டது. சித்திரத்தைச் சுவர் தாங்குவது போல் தன் ஸங்கல்பத்தால் ஸர்வேச்வரன் உலகத்தைத் தாங்குகிறுன் என்று பொருள்.)*

சிதைவு இல்—*அழிவில்லாத; மறை நெறியில்—வேதமார்க்கத்தில்; எறி—ஒதுக்கப்பட்ட; அ உரு முறைகள்—அந்த அசேதநத்தின் ப்ரகாரங்கள்; முறிய—தொலைந்து போக; சிறை அரிய நிறைவினுர்—வரம்பு இல்லாத பெருமையையுடையவரும்; (இதனுல் நான்காவது பாதத்தின் ஸாரார்த்தமான ''அசேதநம் ஜகத் காரணமன்று; எல்லையற்ற பெருமையுடைய ஈசுவரனே ஜகத் காரணம்'' என்பது கூறப்பட்டது.)* □

இண்டாவது அத்யாயத்தின் ஸாரார்த்தம்

கத்துவிக்க வல—*(எடுத்த இடமெல்லாம் ஹேதுவை) ஆரவாரத்தோடு கல்பிக்கும்படி செய்யவல்ல; கத்துவித்தை வழி—ஜல்பமென்னும் வாத மார்க்கத்தை, கற்றவர்க்கு—பரிசயம் செய்தவரால்; இசைவு இல்—அசைக்க முடியாத; மறையினுர்—விசித்திரமான சக்தியாகிய ரஹஸ்யத்தையுடையவரும்; (இதனுல் முதல் பாதத்தின் ஸாரார்த்தமான ''ஜகத்காரணத்வத்தில் பிறமதத்தினர் ஸ்ம்ருதிகளுடனும் யுக்திகளுடனும் கல்பித்த விரோதங்கள் நீங்கியமை'' என்பது கூறப்பட்டது.)*

கபிலர்—கபிலரும்; கணசரணர்—கணாதரும்; சுகதர்—புத்தரும்; சமணர்—ஜைநரும்; அரர்—பாசுபதரும் (சைவரும்) ஆகிய இவர்களுடைய; வழிகள் அழியும்—மதங்கள் தொலைவதற்குக் காரணமான; அருள் மொழியினர்—(ஆச்ரிதரிடம்) அருளாலே (வந்த ஸ்ரீ பாஞ்சராத்ரம் என்னும்) ஸ்ரீஸூக்தியை வெளியிட்டவரும்; (இதனால் இரண்டாவது பாதத்தின் ஸாரார்த்தமான 'பிற மதங்களை ஒழிக்க ஸ்ரீ பாஞ்சராத்ர சாஸ்த்ரத்தை வெளியிட்டு அதைப் பின்பற்றுவோருக்கு ஈசுவரன் அநுகூலமாயிருப்பவன்' என்பது கூறப்பட்டது.)

கத்து இலக்கிலும்—(கம்=இந்த்ரியம்) இந்த்ரியங்களுக்கு இலக்கான ஐந்து பூதங்களிலும்; அருக்குலத்திலும்—ஜீவவர்க்கத்திலும்; அசித்தில் ஒக்கும்—(மஹான் அஹங்காரம் என்னும்) தத்துவங்களின் விஷயத்திற் போல்; ஒரு முதல்வனுர்—ஒரே காரணமாயிருப்பவன்; (இதனுல் மூன்ருவது பாதத்தின் ஸாரார்த்தமான பஞ்சபூதங்களையும் ஜீவர்களையும் தக்கவாறு ஈசுவரன் ஸ்ருஷ்டிக்கிறுன் என்பது கூறப்பட்டது.)

கரணம் இடு—கூத்தாடுகிற; கடிய—கொடிய; பதினொரு இருடிகமும்—(ஜ்ஞாநேந்த்ரியம் ஐந்து, கர்மேந்த்ரியம் ஐந்து, மனம் ஆகிய) பதினென்று இந்த்ரியங்களும்; அடைய—முழுதும்; முடியும் அடி—தோன்றுவதற்குக் காரணமான; இருடியார்—நேரில் எல்லாவற்றையும் காணவல்ல முனிவர் போன்றவரும்; (இதனுல் நான்காவது பாதத்தின் ஸாரார்த்தமான 'இந்த்ரியம் முதலியவற்றுக்கு ஈசுவரன் காரணமாயிருப்பவன்' என்பது கூறப்பட்டது.)

மூன்றும் அத்யாயத்தின் ஸாரார்த்தம்

ஒத்து—எப்பொழுதும் ஒரே தன்மையதாயிருந்து; அனைத்து உலகும்—ஸ்வர்க்கம் நரகம் இவற்றுக்குச் செல்லும்) ஸகல ஜீவர்களையும்; ஒற்றி ஒற்றி வரும்—தழுவித் தழுவி வருகின்ற; இப்பவத்து—இந்த ஸம்ஸாரத்தை நடத்துதற்கு; இசையும்—ஏற்ற; இசைவினுர்—ஸங்கல்பத்தையுடையவரும்; (இதனுல் சேதநருக்கு விழிப்பு, ஸ்வப்நம், நித்ரை, மூர்ச்சை, மரணம் ஆகிய நிலைமைகளிலும் நிர்வாஹகராயிருந்து ஸம்ஸாரத்தை நடத்தி வைத்தலாகிய முதற்பாதத்தின் ஸாரார்த்தம் வெளியிடப்பட்டது.)

உருவம் அருவம் எனும் உலகின்—அசேதநம் சேதநம் என்னப்படும் லோகத்தின்; முடுகு இலதில்—தோஷம் இல்லையென்னுமதில்; உவமை இலது—ஸமமில்லாமல்; இலகு தலைவனுர்—ப்ரகாசிக்கின்ற ஸ்வாமியாயிருப்பவரும்; (இதனுல் சேதநா

உத்தமப்படி வகுத்த வித்தைகளில்
உத்தரிக்க உணர் குணவனர்*
உரிய கிரிசைகளில் அரியதொருவிரகு
தெரிய விரையுமவர் பரிவினர்*

சத்தசெத்தெனும் அனைத்தனைத்தவினை
தொத்தறுக்க வல துணிவினர்*
சரியுமளவில் உரியவரை அறிவரிய
தமனி நெறிசொருகு விரகினர்*
தத்துவத்திரள் உதைத்துதைத் தடைவு
தத்துவிக்குமவர் தலைவனர்*
தருகவுணரு மவர் சரண மணுக
விடலரிய அருள் வரதரடியமே. (19)

---

*சேதநங்களில் கலந்து அந்தர்யாமியாயிருக்கும் போதும் அவற்றி லுள்ள தோஷம் தம்மிடத்துத் தட்டாதிருத்தல் என்ற இரண்டாவது பாதத்தின் ஸாரார்த்தம் வெளியிடப்பட்டது).*

**உத்தமப் படி**—*உயர்ந்த ப்ரகாரங்களில்;* **வகுத்த வித்தைகளில்**—*(பலவகையாய்ப்) பிரிக்கப்பட்ட பக்தியோகங்களில்;* **உத்தரிக்க உணர் குணவனர்**—*(வேறு உபநிஷத்துக்களிலிருந்து) எடுத்துக் கொள்ளக் கருதப்பட்ட குணங்களையுடையவரும்; (மோக்ஷத்திற்கு ஸாதநமான பக்தியோகம் தஹரவித்யை-சாண்டில்யவித்யை முதலிய பல வித்யைகளாகப் பிரிகின்றது. ஓர் உபநிஷத்தில் கூறப்பட்ட வித்யையை அநுஷ்டிக்கும்போது வேறு உபநிஷத்திலும் கூறப்பட்டுள்ள அதே வித்யையில் சொல்லிய மற்றைக் குணங்களையும் எடுத்துக் கொண்டு அவற்றுடன் கூடியதாகவும் ப்ரஹ்மத்தை உபாஸிக்க வேண்டும். இப்படிப் பலவகைப்பட்ட பக்தியோகத்தால் உபாஸிக்கப் படும் தன்மையாகிய மூன்றுவது பாதத்தின் ஸாரார்த்தம் இதனுல் வெளியிடப்பட்டது.)*

**உரிய கிரிசைகளில்**—*(பக்தியோகத்திற்கு அங்கமாய்த் தங்களுக்குத்) தக்கனவான வர்ணுச்ரம தர்மங்களில்;* **அரியது ஒரு விரகு**—*எளிதில் செய்யமுடியாத ஓர் உபாயத்தை;* **தெரிய விரையுமவர்** — *அறிய விரைபவரிடம்;* **பரிவினர் — அன்பு(டன்**

தலைக்கட்டி) வைப்பவரும்; (பக்தியோகத்திற்கு அங்கமான நித்ய - நைமித்திக - காம்யங்களாகிய வர்ணாச்சிரமதர்மங்களை, செய்வதற்கு அரிதான ஸாத்துவிக த்யாகத்துடன் செய்ய முற்படுவோருக்கு அந்தப் பக்தியோகத்தை எம்பெருமான் தலைக்கட்டி வைக்கின்றான். இதனால் சேதநர் செய்யும் உரிய கர்மங்களால் மகிழ்ந்து அருள் புரியுந்தன்மையாகிய நான்காம் பாதத்தின் ஸாரார்த்தம் கூறப்பட்டது.)

## நான்காம் அத்யாயத்தின் ஸாரார்த்தம்

**சத்து அசத்து** எனும்—புண்யம் பாபம் எனப்படுகின்ற; **அணைத்த**—(உபாஸிக்கும் ஜீவனைச்) சேர்ந்துள்ள; **அனைத்து வினை**—ஸகலகர்மங்களும்; **தொத்து**—தொடர்தலை; **அறுக்க வல**—ஒழிக்கவல்ல; **துணிவினார்** — உறுதியையுடையவரும்; (இதனால் உபாஸிப்பவர்களுடைய கர்மங்களையும் ஒழிக்கும் தன்மையாகிய முதற்பாதத்தின் ஸாரார்த்தம் வெளியிடப் பட்டது.)

**சரியுமளவில்**—சரீரத்தை விடுங்காலத்து; **உரியவரை**—(பரம பதம் செல்லத்) தக்க ஜீவர்களை; **அறிவு அரிய**—அறிவதற்கு முடியாத; **தமனி நெறி**—ப்ரஹ்மநாடி வழியில்; **செருகுவிரகினார்**—ப்ரவேசிக்கச் செய்யும் வல்லமையுடையவரும்; (இதனால் மோக்ஷத்திற்கு செல்லத்தக்கவரை ப்ரஹ்மநாடி வழியில் புகச்செய்தலாகிய இரண்டாவது பாதத்தின் ஸாரார்த்தம் கூறப்பட்டது.)

**தத்துவத் திரள்**—(ப்ரக்ருதியைச் சேர்ந்த ஸகல அசேதந) தத்துவங்களின் கூட்டத்தையும்; **உதைத்து உதைத்து**— (காலால்) உதைத்து உதைத்து (த்தள்ளி); **அடைவு**—வரிசையாக; **தத்துவிக்குமவர்**—(சேதநரை ஸம்ஸாரத்தை விட்டுத்) தாண்டு விப்பவ(ரான ஆதிவாஹிக)ருக்கு; **தலைவனார்**—ஸ்வாமியாயிருப்பவரும்; (இதனால் ஆதிவாஹிகரைக் கொண்டு சேதநரை ஸம்ஸார மண்டலத்தைத் தாண்டுவித்துப் பரமபதம் சேர்த்தலாகிய மூன்றாம் பாதத்தின் ஸாரார்த்தம் கூடப்பட்டது.)

**தருகை**—(எம்பெருமான் பலன்) கொடுப்பதை; **உணருமவர்**—நினை(ந்து உபாஸநம் செய்)யும் ஜீவர்; **சரணம் அணுக**—(தம்) திருவடிகளை நெருங்கி நிற்க; **விடல் அரிய**—(அவரை) விடாதவருமான; **அருள்வரதர்**—கருணையே வடிவெடுத்த பேரருளாளருக்கு; **அடியம்**—நாம் தாஸர்களாயிருக்கின்றோம். (இதனால்

§ 19. பேரருளாளன் திருமேனியை அநுபவித்துப் பிரமன் பேசுதல்

ब्रह्मा அப்பொழுது संभ्रम-सन्तोष-साध्वसங்களையுடையவனாய்க்[1] கொண்டு கிட்டிச்சென்று, सूरिभोग्यமான शुभाश्रयத்தை[2] அநுபவித்துத் தான் பெற்ற பேற்றை இங்ஙனே பேசுகிறான்.

திருமகள்மண்மகள் நீளைமுதலா எல்லாத்
தேவியரும் தன்னுடனே திகழ்ந்து நிற்க*
தருமமிரு மூன்றுமுதல் அனைத்தும் தோன்றத்
தன்னனைய சூரிகள்தன் அடிக்கீழ் வாழ*
அருமறைசேர் அளவில்லா அவனியின் கண்
அரவணைமேல் வீற்றிருப்பால் அனைத்தும் காக்கும்
கருமணியைக் கரிகிரிமேல் கண்டேன், என்தன்
கடுவினைகள் அனைத்தும் நான்கண்டிலேனே.(20)

இப்படிக் 'கண்கள் காண்டற்கரிய' मनोरथ விஷயத்தைக்கண்ட ब्रह्मा,

ततस्तमुद्वीक्ष्य पुरः स्थितं हरिं
वितान-वेद्यामतसी-समप्रभं ।
स तत्क्षणोद्भूत-सुखार्णवाप्लुतो[2]
ययौ तदा कृत्यविवेक-मूढताम् ॥

प्रदक्षिणं प्रैति तथाऽप्रदक्षिणं
प्रयाति दूरं पुनरेति सन्निधिम् ।
करेण पस्पर्श ममार्ज तद्वपुः
प्रियेण गाढं परिषस्वजे क्षणम ॥

---

திரும்புகையில்லாது தம் அநுபவத்தைத் தந்து தம்மைப் போலாக்குகையாகிய நான்காம் பாதத்தின் ஸாரார்த்தம் கூறப்பட்டது.)

இத்தகைய பெருமையுடைய பேரருளாளருக்கு அடியராகப் பெற்றோம்—என்று அவர்கள் மகிழ்ந்து வேதாந்த ஸாரமான அர்த்தத்தை இவ்வாறு விண்ணப்பம் செய்தார்கள். □

1—பரபரப்பு, ஸந்தோஷம், பயம் இவற்றை உடையவனாய். 2—(சுபம்) பாபங்களை போக்கக்கூடியதும், (ஆச்ரயம்) த்யானத்திற்கு எளிதாக விஷயமாவதுமான மங்கள மூர்த்தியை.

†2—सुधार्णवाप्लुतो[1].

20) திருமகள — லக்ஷ்மி; மண்மகள்—பூமிப்பிராட்டி; நீளை — நீளாதேவி; முதலா எலலாத் தேவியரும் — முதலிய எல்லாத் தேவிமாரும்; தன்னுடனே திகழ்ந்து நிற்க — தன்னுடனே ப்ரகாசித்துக் கொண்டு நிற்க; இரு மூன்று தருமம் முதல் — (ஜ்ஞாநம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும்) ஆறு குணங்கள் முதலிய; அனைத்தும் தோன்ற — எல்லாக் குணங்களும் ப்ரகாசிக்க; தன அனைய சூரிகள் — தன்னைப் போன்ற நித்யஸூரியர்; தன் அடிக்கீழ் வாழ — தன் திருவடிகளின் கீழே கைங்கர்யம் செய்ய, அருமறை சேர் — அருமையான வேதத்தால் புகழப்படுகின்ற; அளவு இல்லா அவனியின் கண் — அளவிட முடியாத தேசமாகிய பரமபதத்தில்; அரவு அணைமேல் — ஆதிசேஷனாகிய திருப்பள்ளியின் மேல், வீற்றிருப்பால் — எழுந்தருளி இருப்பதாலேயே; அனைத்தும் காக்கும் — ஸகலத்தையும் ரக்ஷிப்பவனான, கருமணியை — நீலரத்நம் போன்ற பேரருளாளனை, கரி கிரி மேல் கண்டேன் — ஹஸ்தி கிரியின் மேல் ஸேவித்தேன. என்தன் கடுவினைகள் அனைத்தும் — என்னுடைய கொடிய கர்மங்கள் முழுதையும், நான் கண்டிலேன் — நான் காணவிலலை (கர்மங்கள் தொலைந்தன).

ततः—பிறகு; पुरः स्थितं—முன்பே நிற்கிற; अतसी-समप्रभं—காயாம்பூ வர்ணம் போன்ற காந்தியையுடைய; तं—அந்த; हरिं—பகவானை; वितान-वेद्यां—யஞ்ய வேதியில்; वीक्ष्य—பார்த்து; तत्क्षणोद्भूत—அந்த க்ஷணத்திலே உண்டான; सुखार्णवाप्लुतः—ஸந்தோஷமாகிற ஸமுத்ரத்திலே முழுகினவராய்; कृत्य-विवेकमूढतां—இது செய்யத்தக்கது, இது செய்யத்தகாதது என்கிற ஜ்ஞாநம் இல்லாமையை; तदा—அப்பொழுது; सः—அந்த ப்ரும்மா; ययौ—அடைந்தார்.

प्रदक्षिणं प्रैति—ப்ரதக்ஷிணமாக வருகிறார்; तथा—அவ்வாறே; अप्रदक्षिणं प्रयाति—அப்ரதக்ஷிணமாக வருகிறார். दूरं अप्रयाति—வெகுதூரம் செல்லுகிறார். पुनः—மறுபடியும்; सन्निधिं—ஸமீபத்தை; एति—அடைகிறார். तत् वपुः—அந்த

§ 20. பேரருளாளனை உவமானங்களுடன் பிரமன் அநுபவித்தல்

இப்பிரகாரத்திலே†1 "மொய்ம்மாம் பூம்பொழில்" [1] படியே (B—32) அக்ரமமாக[1] ஹர்ஷ-சேஷ்டிதங்களைப் பண்ணின ப்ரஹ்மா சிறிது போது ஓடிக்கூடித் தரித்து†2, நாச்சிமாருடனே பெரியபெருமாள் எழுந்தருளியிருக்கிற†3 நிலையை இங்ஙனே அநுபவித்தான்.

பெடையிரண்டை யொரனமடைந்து
பிரிந்திடா வகை பேசலாம்*
பெருகுமருவிகள் அருகு மருவிய
பெரிய மணிவரை பயிலலாம்*
பிடியிரண்டொடு களபமொன்று
பிணைந்த பேரழகோதலாம்*
பிரிவிலொளியொடு நிழலுமருகுறும்
இரவி யிலகுதல் பரவலாம்*
கொடியிரண்டொடு விடவியொன்று
குளிர்ந்தவாறு குலாவலாம்*
குறைவில் சுருதியும் நினைவுமிலகிய
தருமவருநிலை இதென்னலாம்*†4
அடியிரண்டையும் அடையுமன்பர்
அறிந்த பேரருளாளனார்*
அணுகு மலர்மகள் அவனிமகளொடு
கரடிகிரியினிலவிர்தலே. (21)

---

பகவானுடைய திருமேனியை; करेण—கைகளினால்; पस्पर्श—தொட்டார்; ममार्ज—துடைத்தார்; प्रियेण—ப்ரீதியினால்; गाढं—கெட்டியாக; क्षणं—க்ஷணகாலம்; परिषस्वजे—கட்டிக் கொண்டார். □

1—முறை தப்பி.

†1—இப்படி[4]. 2—திரிந்து[1]. 3—எழுந்தருளி நிற்கிற[1]. 4—தருமவரு நிலையிலென்னலாம[1].

*1. மொய்ம்மாம் பூம்பொழில் பொய்கை முதலைச்
சிறைப்பட்டு நின்ற*
கைம்மாவுக்கு அருள் செய்த கார்முகில் போல் வண்ணன்
கண்ணன்*
எம்மானைச் சொல்லிப்பாடி எழுந்தும் பறந்தும் துள்ளாதார்*
தம்மால் கருமமென்? சொல்லீர் தண்கடல்
வட்டத்துள்ளீரே!

திருவாய். (3-5-1): நெருக்கமாயிருக்கிற பெரிய அழகிய சோலைகளால் சூழப்பட்ட தடாகமொன்றிலே முதலையாம் சிறையில் அகப்பட்டு (நீண்டகாலம் போர் செய்து வெறுமனே) நின்ற கஜேந்திரனுக்கு அருள் புரிந்த கருத்த மேகம் போன்ற வர்ணத்தையுடையவனை கண்ணனாகிய என் ஸ்வாமியை ஸ்தோத்திரம் பண்ணிப் பாடி (ஸந்தோஷமுள்ளடங்காமல்) இங்குமங்கும் ஓடியும், துள்ளிக் குதிக்கிறதில்லையோ, அவனால் (தனக்கோ பிறருக்கோ) என்ன பிரயோஜநம்? குளிர்ந்த கடலினால் சூழ்ப்பட்ட உலகத்தில் உள்ளவர்களே! நீங்களே சொல்லுங்கள்.

21) அடி இரண்டையும் — (தம்) திருவடிகள் இரண்டையும்; அடையும் அன்பர் — அடைபவர்களான பாகவதர்களால்; அறிந்த — அநுஸந்திக்கப்பட்ட; பேரருளாளனுர் — பேரருளாளர்; அணுகும் — நெருங்கியுள்ள; மலர்மகள் அவனிமகளொடு — பெரிய பிராட்டியுடனும் பூமிப் பிராட்டியுடனும்; கரடி கிரியினில் — ஹஸ்திகிரியில்; அவிர்தல் — ப்ரகாசித்தல்; ஓர் அனம்— ஓர் ஆண் ஹம்ஸம், பெடை இரண்டை — இரண்டு பெண் ஹம்ஸங்களை; அடைந்து — சேர்ந்து; பிரிந்திடாவகை — பிரியாமலிருக்கும் ப்ரகாரத்தை; பேசலாம்—(போலுமென்று) சொல்லலாம். பெருகும் அருவிகள் — பெருகுகிற அருவிகளை; அருகு மருவிய — பக்கத்தே பெற்றுள்ள; பெரிய மணிவரை — பெரிய ரத்ந பர்வதத்தை; பயிலலாம் — (ஒக்குமென்று) அநுஸந்திக்கலாம். ஒன்று களவம் — ஓர் ஆண் யானை; பிடி இரண்டொடு — இரண்டு பெண் யானைகளுடன்; பிணைந்த — சேர்ந்திருந்த; பேர் அழகு — பெரிய அழகை; ஓதலாம் — (போலுமென்று) கூறலாம். பிரிவு இல் ஒளியொடு — (தன்னை விட்டுப்) பிரியாத பிரகாசத்தோடு; நிழலும் — சாயையும்; அருகு உறும் — பக்கத்தே பொருந்தப் பெற்ற; இரவி — ஸூர்யன்; இலகுதல் — ப்ரகாசிப்பதை; பரவலாம் — (ஒக்குமென்று) புகழலாம். ஒன்று விடவி — ஒரு மரம்; கொடி இரண்டொடு — கொடிகள் இரண்டுடன்; குளிர்ந்தவாறு — குளிர்ந்து நிற்பதை; குலாவலாம் — (போலுமென்று) கொண்டாடலாம். குறைவு இல்—குற்றமில்

§ 21. பேரருளாளனின் திவ்யகுணங்களை அநுபவித்துப் பிரமன் பேசுதல்

अनन्तरम्[1] अनन्त-मङ्गल-गुणार्णवரான[2] பெருமாளுடைய दिव्यगुणங்களை அநுபவிக்கத் தொடங்கி, ஓரொரு आकारங்களுக்கு[3] ஓரொரு उपमान-आभासங்களைத்[4] தேடி, गुणसमुदायத்திற்கு ஒரு उपमान-आभासம்†[1] தேட வொண்ணாதென்று கொண்டாடினான்†[2].

வேரொப்பார் விண்முதலாம் காவுக்கெல்லம்
விழியொப்பார் வேதமெனும் கண் தனக்கு*
காரொப்பார் கருணைமழை பொழிந்திடுங்கால்
கடலொப்பார் கண்டிடினும் காணாக் கூத்தால்*
நீரொப்பார் நிலமளிக்கும் தன்மை தன்னால்
நிலமொப்பார்நெடும்பிழைகள் பொறுக்கும்நேரால்*
ஆரொப்பார் இவர் குணங்கள் அனைத்துங்கண்டால்
அருளாளர் தாமெனினும் தமக்கொவ்வாரே. (22)

இப்படிப் பெருமாளுடைய குணங்களை வகையும்[5] தொகையுமாக[5] வகுத்து[6] அநுபவிக்கிற सर्वतोमुखனான[7] ब्रह्मा மேல்முகத்தாலே[8] यज्ञवाटத்தின்[9] மேல் பாதியிலே வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தையும்†[3], கீழ்முகத்தாலே[10] उत्तरवेदिயிலே நின்றருளின பெருமாளையும் சேர[11] அநுபவித்து, இங்ஙனே अनुसन्धिத்தான்:

एकं वेगवतीमध्ये हस्तिशैले च दृश्यते ।
उपाय-फल-भावेन स्वयं-व्यक्तं परं महः ॥*1 என்று.

§ 22. பேரருளாளன் பிரமனுக்கு அருள்புரிதல்

இப்படி ब्रह्मा महाहर्ष-परवशனாய் முகிழ்த்தவுடம்பும்[12], பனியரும்பின[13] கண்களும், தழுதழுத்தமிடறும்[14], தளர்ந்த நிலையுமாய்க் கொண்டு, தன் अधिकारச் சுமையை மறந்து, அடிமையிலே அடிகொண்டு,

லாத; சுருதியும் நினைவும் — வேதத்தோடும் ஸ்ம்ருதியோடும்; இலகிய—(கூடி) ப்ரகாசிக்கின்ற; தரும அரு நிலை—தர்மத்தின் ஸூக்ஷ்மம்; என்னலாம் — (போலும்) என்று கூறலாம்.

1—பிறகு. 2—எல்லையற்ற கல்யாண குணக்கடலான. 3—நிலைக்கு. 4—தாழ்ந்த உவமைகளை. 5—தனித்தனியாகவும் சேர்த்தும். 6—பிரித்து. 7—நான்கு திக்குகளிலும் முகங்களை உடையவனை. 8—மேற்கு நோக்கியிருக்கும் முகத்தாலே. 9—யாக சாலையின். 10—கிழக்கு நோக்கியிருக்கும் முகத்தாலே. 11—ஒரே காலத்தில். 12—மயிர் கூச்செறியும் உடம்பும். 13—கண்ணீர் மல்கிய. 14—மிடறு=குரல் (தொண்டை).

†1—उपमानाभासங்களும்[1] 2—திண்டாடினேன். 3 — எந்தையையும்[5].

22) அருளாளர் — பேரருளாளர்; விண் முதலாம் — ஆகாசம் முதலிய (உலகமாகிய); காவுக்கு எல்லாம் — சோலைகள் அனைத்துக்கும்; வேர் ஒப்பார் — வேரைப்போல் (ஆதாரமாக) ஆவார். வேதம் எனும் கண் தனக்கு — வேதம் என்று சொல்லப் படும் (உலகின்) கண்ணுக்கு; விழி ஒப்பார் — நடுவேயுள்ள கருவிழியைப் போன்றவராவார். கருணை மழை பொழியும் நீரால் — கருணையாகிய மழையைப் பெய்யும் தன்மையால்; கார் ஒப்பார் — மேகத்தைப் போன்றவர் ஆவார். கண்டிடினும் — நேரில் பார்த்த போதிலும்; காணக் கூத்தால் — (ஸௌந்தர்யத்தை) முழுதும் காணமுடியாமையாகிய அதிசயத்தால்; கடல் ஒப்பார் — கடலைப் போன்றவராவார். நிலம் அளிக்கும் தன்மை தன்னால் — பூமியைக் காப்பாற்றுகின்ற ஸ்வபாவத்தால்; நீர் ஒப்பார் — ஜலத்தை ஒத்திருப்பார். நெடும் பிழைகள் — (நம்முடைய) பெரிய அபராதங்களை; பொறுக்கும் நேரால் — பொறுத்துக் கொள்ளும் ஸ்வபாவத்தால்; நிலம் ஒப்பார் — பூமி தேவியைப் போன்றிருப்பார். இவர் குணங்கள் அனைத்தும் கண்டால் — இவருடைய குணங்கள் முழுவதையும் ஆலோசித்தால்; ஒப்பார் ஆர் — இவரை ஒத்தவர் யார்? (ஒருவருமில்லை); தாம் எனினும் — தாமே என்றாலும்; தமக்கு ஒவ்வார் — தமக்கு ஒத்தவராக மாட்டார்.

*1. स्वयं व्यक्त—தானே தோன்றியதால்; पर—எல்லா வற்றிலும் மேம்பட்ட; एक—ஒரு; महः—தேஜஸ்; वेगवती-मध्ये—வேகவதீ நதியின் நடுவிலும்; हस्तिशैले च அத்திகிரியிலும்; उपाय-फल-भावेन—முறையே உபாய மாகவும் பலனாகவும்; दृश्यते—காணப்படுகின்றது.

**स्तोत्र-परंपरै**யை[1] விண்ணப்பம்செய்ய[1], **प्रसाद-सुमुख**ரான பெருமாள் 'உனக்கு வேண்டின வரம் கொள்வாய்' என்றருளிச்செய்தார்.

**वरं वरय तस्मात् त्वं यथाभिमतमात्मनः ।**
**सर्वं संपत्स्यते पुंसां मयि दृष्टिपथं गते ।।**[*1]

**எந்நிலமும் குரத்தால் குறி செய்த வெழிற்பரி கொண்டு***
**அன்னமுயர்த்த செய்யோன் அன்று வேள்வி**
**செய்வேதியின் மேல்***
**முன்னிலையாகிய மூர்த்தியுடன் நான்முக! மற்றுமுனக்கு***
**என்னவரம் தருவோமென்று நாதனியம்பினனே. (23)**

அப்பொழுது **ब्रह्मा**வும் 'நித்யஸூரிகள் **सदा दर्शनं** பண்ண **प्राप्त**மான தேவரீருடைய திருமேனியை நான் கண்டநுபவிக்கப் பெற்ற இதொழிய வேறு எனக்கு வேண்டுவது ஒரு வரமுண்டோ? †[1]ஸம்ஸாரிகள் "பொய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக் குடம்பும் இந்நின்ற நீர்மை இனி யாம் உறுதபடி"[*2] இங்கே தேவரீர் **नित्याविर्भूत**ராய் நின்று வேண்டு வார்க்கு வேண்டும் வரம் கொடுத்து வாழ்வித்தருள வேண்டும்' என்று விண்ணப்பம் செய்தான்.

**वैकुण्ठे तु यथा लोके यथैव क्षीरसागरे ।**
**तथा सत्यव्रतक्षेत्रे निवासस्ते भवेदिह ।।**[*3]

**हस्ति-शैलस्य शिखरे सर्व-लोकनमस्कृते ।**
**पुण्यकोटि-विमानेऽस्मिन् पश्यन्तु त्वां नरास्सदा ।।**[*4]

---

1—மேலும் மேலும் துதிக்க.

†1—"அதொழிய" என்று அதிகம்.

*1 पुंसां — மனிதர்களுக்கு; मयि दृष्टिपथ गते—நான் கண்ணுக்கு விஷயமாயிருககையை அடைந்திருக்கும்

போது; सर्वं—எல்லாம்; संपत्स्यते—கைகூடப் போகிறது. तस्मात्—ஆகையால்; त्वं—நீ; आत्मनः यथाभिमतं—உனக்கு இஷ்டமான; वरं वरय—வரத்தைக் கேட்டுக் கொள்.

23) **அன்னம் உயர்த்த** — ஹம்ஸத்தைக் கொடியாக உயர்த்தவனும்; **செய்யோன்** — செந்நிறமுடையவனுமான ப்ரஹ்மா, **எந்நிலமும்** — எல்லா நிலத்திலும்; **குரத்தால்** — கால் குளம்பினால்; **குறி செய்த** — அடையாளம் செய்த; **எழில் பரி கொண்டு** — அழகிய குதிரையைக் கொண்டு; **அன்று** — அந் நாளில்; **வேள்வி செய் வேதியின் மேல்** — யாகம் செய்த வேதிகையின் மீது; **நாதன்** — ஸ்வாமியான பேரருளாளன்; **முன்னிலையாகிய மூர்த்தியின்** — எதிரே நின்ற திருமேனியுடைய வனாகி; **நான்முக** — ப்ரஹ்மாவே! **உனக்கு மற்றும் என்ன வரம் தருவோம்** — உனக்கு வேறு எந்த வரத்தைக் கொடுக்க வேண்டும்? (கேட்பாயாக); **என்று இயம்பினன்** — என்று அருளிச்செய்தான்.

*2. **திருவிருத்தம் (1)**: (பாசுரம் பக்கம் 83) நித்யஸூரிகளுக்கு அதிபதியே! சேதநர்களை அநுக்ரஹிக்க எவ்வகையான ஜாதியாகவும அவதரித்தவனே! ப்ராந்தி ரூபமான ஜ்ஞாநமாகவும், கொடிய கர்மங்களாகவும், அசுத்தமான உடலாகவும், அநாதியாய் நின்றிருக்கும் இத்தன்மையை ஸம்ஸாரிகளான நாங்கள் இனியும் அடையாதபடி அடியேனுடைய விண்ணப்பத்தை திருமேனியுடன் நின்று திருச்செவி சார்த்த வேண்டும்.

*3 **वैकुण्ठे तु यथा लोके**—வைகுண்ட லோகத்தில் எப்படியோ; **यथैव क्षीर सागरे**—திருப்பாற்கடலில் எப்படியோ; तथा—அப்படியே; **इह**—இவ்வுலகில்; सत्यव्रतक्षेत्रे—ஸத்ய வ்ரத க்ஷேத்திரத்தில்; ते—தேவரீருக்கு; निवासः—வஸிப்பதானது; भवेत्—உண்டாகட்டும்.

*4. **सर्वलोक-नमस्कृते**—எல்லா ஜநங்களாலும்நமஸ்காரம் செய்யப் பட்டிருக்கிற; हस्तिशैलस्य—ஸ்ரீஹஸ்திகிரியினுடைய; शिखरे உச்சியில்; अस्मिन्—இந்த; पुण्यकोटि-; विमाने—புண்யகோடி விமானத்தில்; त्वां—தேவரீரை; नराः—மனிதர்கள்; सदा—எப்பொழுதும்; पश्यन्तु—ஸேவிக்கட்டும்.

என்று இப்படி ஸர்வகாலத்திலும் ஸர்வ ப்ராணிகளும்†[1] ஸாக்ஷாத்கரிக்கலாம்படி கோலம் செய்து இங்கே†[2] எழுந்தருளியிருக்க வேண்டும் என்று விண்ணப்பம் செய்ய,

**देव-तिर्यङ्-मनुष्याणां अहं प्रत्यक्षतां गतः ।**
**अत्रैव निवसिष्यामि सत्यमेतत् ब्रवीमि ते ॥** *[1]

என்று இப்படிப் பெருமாள் அருளிச்செய்கையாலே **कृतार्थ**ஞன[1] **ब्रह्मा** **क्रतु-शेष**த்தைத்[2] தலைக்கட்டி,

§23: மஹர்ஷிகளுக்குப் பிரமனது உபதேசம்—பஞ்சகால ப்ரக்ரியை

**कार्तयुग-धर्म-प्रक्रियै**யாலே[3] **सपूर्ण-समाराधन**ம் பண்ணி, **परमभागवत**ரான மஹர்ஷிகளைக் குறித்துத் தான் பண்ணின **अभिगमनादिरूप** **अच्छिद्र-पाञ्चकालिक-समाराधन-क्रम**த்தை[4] ஸங்கிரஹித்து உபதேசித்தான்.

சென்றுமலர் பறித்து என் நாதன் சேவடிப்போதுகந்து*
நன்றென நீர் சுடர் தூப நன்முகவாசவிலை கொடுத்து*
கன்னலிலட்டுவத்தோடு அன்னம் சீடை கறி படைத்து*
பின்னும் செபித்தவன் பாதம் பணிமின்கள்
என்றனனே.†[3] (24)

§ 24: பிரமன் தன்னுலகம் சென்று யோகத்திலிருத்தல்

**अनन्तर**ம் பெருமாளும் **अतिसन्तुष्ट**ராய், 'ப்ரஹ்மாவே! உனக்கு நான் தந்த அதிகாரக் குறை தீரும்படி ஸரஸ்வதி ஸாவித்ரிகள் முதலான **धर्म-पत्नि**களுடனே உன்னுடைய லோகத்தேறச் சென்று, **अधिकार-शेष**த்தை[5] நடத்துவாய்' என்றருளிச்செய்ய, **ब्रह्मा**வும்

**अण्डान्तर्वर्ति-लोक**ங்களுக்கு[6] மேலான ஸத்யலோகத்திலே சென்று **सत्यव्रतक्षेत्र-माहात्म्य**த்தையும் **सत्यव्रत**ரான பெருமாள் திருவருளையும் **अनुसन्धि**த்துக்கொண்டு, **संपूर्ण-भगवदनुभव-रसभरित-समाधिविशेष**த்தாலே[7] **चरितार्थ**னாயிருந்தான்[8].

---

1—பயனை அடைந்தவனாக. 2—வேள்வியின் மீதியை. 3—க்ருதயுகத்தில் செய்யக் கூடிய தர்மாநுஷ்டான (ஸ்ரீ பாஞ்சராத்ர) முறைப்படி. 4—அபிகமனம், உபாதானம், இஜ்யை, ஸ்வாத்யாயம், யோகம் என்னும் இடைவிடாது ஐந்து காலங்களிலும் செய்யப்படுகின்ற திருவாராதன முறையை. 5—மீதமுள்ள அதிகாரத்தை. 6—ப்ரம்மாண்டத்தின் உள் இருக்கிற உலகங்களுக்கு. 7—பூர்ண பகவதநுபவத்தால் ஏற்பட்ட ஆனந்தம் நிறைந்த தியானத்தாலே. 8—பயனைப் பெற்றவனாக இருந்தான்.

†1—ப்ராணிகளுக்கும[1]. 2—இங்ஙனே[1]. 3—பாதமெணாணுங்கள் முனிகளென்றான்[4]

*1. अहं;—நான; देव-तिर्यङ्-मनुष्याणां — தேவதைகள், விலங்குகள், மனிதர்கள் இவர்களுக்கு; प्रत्यक्षतां गतः— ப்ரத்யக்ஷமாயிருக்கையை அடைந்தவனாய்; अत्रैव—இங்கேயே; निवसिष्यामि — வஸிக்கப் போகிறேன். एतत् —இதை; ते—உனக்கு; सत्यं ब्रवीमि—ஸத்யமாகச் சொல்லுகிறேன்.

24) **சென்று** — எம்பெருமானிடம் சென்று (ப்ரபத்தியைச் செய்து), **மலர் பறித்து**—புஷ்பங்களைப் பறித்து; **எந்நாதன்**—எம்முடைய நாதனை பகவானுடைய; **சேவடிப்போது** — சிவந்த திருவடி மலர்களை; **உகந்து**—விரும்பி, **நன்று எனும்** — நல்லதென்று சொல்லப்படுகின்ற; **நீர்** - ஜலம்; **சுடர்** — தீபம்; **நல் முகவாசம் இலை** - நல்லதாய் திருமுகமண்டலத்திற்கு வாஸனை தரும் பண்டம், வெற்றிலை ஆகியவற்றை; **கொடுத்து** — ஸமர்ப்பித்து; **கன்னல் இலட்டுவத்தோடு** — சருக்கரை லட்டுடன், **அன்னம் சிடை கறி படைத்து** — அன்னம், சீடை, கறி ஆகியவற்றை ஸமர்ப்பித்து; **பின்னும் செவித்து** — மறுபடியும் மந்த்ர ஜபம் செய்து; **அவன் பாதம் பணிமின்கள்** — அவனுடைய திருவடிகளை த்யாநம் செய்யுங்கள்; **என்றனன்** — என்று உபதேசித்தான்,

ஆழிநிலை வினைகடிவான் அயமேத முடிந்ததற்பின்*
வேழமலை நாயகனார் விடைகொடுக்க விண்ணேறி*
நாழிகையில் வானவரை மாற்றியிடு நான்முகன்தான்*
ஊழியெலா மழியாத உயோக மடைந்திருந்தானே. (25)

§ 25. பேரருளாளன் நான்கு யுகங்களிலும் வரமளித்தல்

ஆதியுகத்தயன் கண்டிட நின்றவருள்வரதர்*
காதலுயர்ந்த களிற்றைத் திரேதையில் காத்தளித்து*
வாதுயர் தேவகுருவுக்கிரங்கித் துவாபரத்தில்*
சோதிஅநந்தன் கலியில் தொழுதெழ நின்றனரே. (26)

§ 26. பேரருளாளன் அருளால் இப்பிரந்தம் பாடினமை

புண்டரீக முயிர்த்த புராணனார்
பொய்யில் மாமக வுத்தரவேதியில்*
கொண்டலாரருள்மாரி பொழிந்திடக்
கொண்டதோருயர் கூர்மதியன்பினால்*
பண்டை நான்மறை மௌலி படிந்த யான்
பாரில் மெய்விரதக் கவி பாடினேன்*
தொண்டை மண்டல வேதியர் வாழவே
தூய தென்மறை வல்லவர் வாழவே. (27)

---

25) நாழிகையில் — அற்ப காலத்தில்; வானவரை — இந்த்ராதி தேவர்களை; மாற்றியிடும் — நீக்கி வேறொருவனை நியமிப்பவனும்; நான்முகன் — நான்கு முகங்களை உடையவனுமான ப்ரஹ்மா, ஆழி நிலை வினை — கடல் போன்ற கர்மங்களை; கடிவான் — போக்குவதற்காக; அயமேதம் — அசுவமேத யாகத்தை; முடித்ததற் பின் — செய்து முடித்த பிறகு; வேழமலை நாயகனார் — ஹஸ்திகிரி நாதரான பேரருளாளர்; விடை கொடுக்க — அநுமதி கொடுக்க; விண் ஏறி — ப்ரஹ்ம லோகம் சென்று; ஊழியெலாம் அழியாத — கற்ப காலத்திலும் அழியாத

தான; உயோகம் அடைந்து இருந்தான்—பகவானுடைய த்யாநத்தில் அமர்ந்திருந்தான். தான் — அசை.

26) **ஆதியுகத்து** — முதல் யுகமாகிய க்ருதயுகத்தில்; **அயன் கண்டிட நின்ற** — ப்ரஹ்மா ஸாக்ஷாக்கரிக்கும்படி நின்றவரும்; **அருள் வரதர்** — அருளே வடிவு கொண்டவருமான பேரருளாளர், **திரேதையில்** — திரேதாயுகத்தில், **காதல் உயர்ந்த** — (தன்னிடம்) பக்தி மிகுந்திருந்த; **களிற்றை** — கஜேந்திரனை; **காத்தளித்து** — (முதலை வாயினின்றும்) காப்பாற்றி அருள் புரிந்து; **துவாபரத்தில்** — த்வாபர யுகத்தில்; **வாது உயர்** — வாதம் புரிவதில் சிறந்த; **தேவ குருவுக்கு** — தேவர்களின் குருவான ப்ருஹஸ்பதிக்கு; **இரங்கி** — கருணை புரிந்து; **கலியில்** — கலி யுகத்தில்; **சோதி அனந்தன்** — தேஜஸ மிகுந்த ஆதிசேஷன்; **தொழுது எழ** — ('அநந்த ஸரஸ்' என்னும் புஷ்கரிணியின் ஸமீபத்தில் அதன் தலைவனாக இருந்து) வணங்கி உஜ்ஜீவிக்கும் படி; **நின்றனர்** — (ஹஸ்தி கிரியிலேயே நிலைபெற்று) நின்றார். (B — 33)

27) **பண்டை**—அநாதியான; **நான் மறை**—நான்கு வேதங்களின், **மௌலி**—அந்தத்தில (வேதாந்தத்தில்); **படிந்த யான்**—ஈடுபட்ட நான்; **புண்டரீகம் உயிர்த்த**—நாபித்தாமரை பிறப்பிக்கப் பெற்ற; **புராணனார்**—அநாதியான ப்ரஹ்மாவினுடைய; **பொய் இல் மா மக உத்தர வேதியில்**—கபட மில்லாது அநுஷ்டிக்கப்பட்ட பெரிய யாகத்தின் உத்திர வேதியில்; **கொண்டல்**—பேரருளாளனாகிற மேகம்; **ஆர் அருள் மாரி பொழிந்திட**—நிறைந்த க்ருபையாகிய மழையைப் பெய்திட்டு நிற்க; **கொண்டது** — (அதனால்) உண்டான; **ஓர் உயர்**—ஒப்பற்ற உயர்ந்த; **கூர் மதி அன்பினால்** — கூர்மையுள்ள அறிவாலும் பக்தியாலும்; **தொண்டை மண்டல வேதியர் வாழ** — தொண்டை நாட்டிலுள்ள வேதங்களைக் கற்ற அந்தணர் நீடூழி வாழவும்; **தூய தென்மறை வல்லவர் வாழ**—பரிசுத்தமான தமிழ்வேதம் வல்லார் வாழவும்; **பாரில்**—இப்பூமியில்; **மெய் விரதக் கவி**—ஸத்ய வ்ரதமென்னும் க்ஷேத்ரத்தைப் பற்றிய இப்பாசுரங்களை; **பாடினேன**—பாடி முடித்தேன்.

§ 27: இப்பிரபந்தம் பாடி வீறு பெற்றமை

உய்விரத மொன்றின்றி அடைந்தார் உய்ய
ஒருவிரதம் தான் கொண்டஉயர்ந்தமாலை*
செய்விரதம் ஒன்றாலும் தெளியகில்லாச்
சிந்தையினால் திசைபடைத்த திசைமுகன் தான்*
பொய் விரத நிலமெல்லாம் போயே மீண்டு
புகலிதுவே புண்ணியத்துக் கென்று சேர்ந்த*
மெய்விரத நன்னிலத்து மேன்மை யேத்தி
வேதாந்த வாசிரியன் விளங்கினானே. (28)

§ 28: முடிவுரை

சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்*
தாராரருளாளர் தாள் நயந்து* சீராக
மெய்விரத நன்னிலத்து மேன்மையிது மொழிந்தான்*
கையில் கனிபோலக் கண்டு. (29)

कविकथक-पञ्चवक्त्र' त्रय्यन्तगुरुस्त्रिलोक-महनीयम् ।
सत्यव्रत माहात्म्यं व्यतनुत ललितमिति वेंकटेशकविः†[1] ॥*[1]

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्र-स्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु

श्रीहस्तिगिरिमाहात्म्यं संपूर्णम् ॥

---

†1—वेङ्कटेशगुरुः[5].

28) திசை படைத்த — *திசைகளை ஸ்ருஷ்டித்தவனும்;* திசை முகன் — *(நான்கு) திசைகளிலும் முகத்தை உடையவனுமான ப்ரஹ்மா;* உய் விரதம் — *(தாம்) உஜ்ஜீவிப்பதற்கு உபாயம்;* ஒன்று இன்றி அடைந்தார் — *(வேறு) ஒன்றுமின்றிச் சரணமடைந்தவர்கள்;* உய்ய - *உஜ்ஜீவிப்பதற்காக;* ஒரு விரதம் — *('சரணாகத ரக்ஷணம்' என்னும்) ஒப்பற்ற வ்ரதத்தை;* தான் கொண்ட — *தானே கைக்கொண்டவனும்;* உயர்ந்த மாலை — *(அதனால்) உயர்ந்து நிற்பவனுமான எம்பெருமானை;* செய்

விரதமும் ஒன்றாலும் — (தன்னால்) செய்யப்பட்ட வேறு எந்த விரதத்தாலும்; தெளிய இல்லாச் சிந்தையினால் — ஸாக்ஷாத் கரிக்க முடியாத கவலையினால்; பொய் விரத நிலம் எல்லாம் — (பலன் கொடுக்கவில்லை யாதலின்) வீணாகப் போகும் வ்ரதங்களையுடைய க்ஷேத்ரங்களுக்கெல்லாம்; போய் மீண்டு—போய் (பயனற்றுத்) திரும்பி; இதுவே புண்ணியத்துக்குப் புகல் — இந்த க்ஷேத்ரமே புண்யத்தைப் பெற ஸாதனமாகும்; என்று சேர்ந்த— என்று வந்தடைந்த; மெய்விரத நல் நிலத்து — ஸத்ய வ்ரத மென்னும் சிறந்த க்ஷேத்ரத்தின்; மேன்மை ஏத்தி—வைபவத்தை (இப்பிரபந்தத்தில்) புகழ்ந்து; வேதாந்த ஆசிரியன் — வேதாந்த தேசிகன்; விளங்கினான் — சிறந்து விளங்கினான். தான் — அசை; போயே—ஏ — இசை நிறை.

29) சீர் ஆரும்—பெருமை நிறைந்த; தூப்புல்—தூப்புலில் அவதரித்த; திருவேங்கடமுடையான் — ஸ்ரீ வேங்கட நாதன் என்னும் தேசிகன், தார் ஆர் அருளாளர்—மாலை நிறைந்த பேரருளாளருடைய; தாள் நயந்து—திருவடிகளையே விரும்பி; மெய் விரத நல நிலத்து மேன்மை—ஸத்ய வ்ரதமென்னும் சிறந்த க்ஷேத்ரத்தின் பெருமையை; கையில் கனி போலக் கண்டு— உள்ளங்கையில் (உள்ள நெல்லிக்) கனியைப் போல அறிந்து; சீராக—சிறப்புடன்; இது—இந்த ப்ரபந்தத்தை; மொழிந்தான்— வெளியிட்டான்,

*1. कविकथक-पञ्चवक्त्रः—கவிதார்க்கிக ஸிம்ஹம் என்கிற பிருதை உடைய; त्रय्यन्त-गुरुः—வேதாந்தாசார்யன் என்னும்; वेंकटेशकविः—ஸ்ரீ வேங்கடநாதனாகிற கவி; त्रिलोक-महनीयं—மூன்று உலகங்களிலும் கொண்டாடத் தகுந்த; सत्यव्रत-माहात्म्यं—ஸத்யவ்ரத க்ஷேத்திரத்தின் மஹாத்ம்யத்தை; इति—இவ்வாறு; ललितं—எளிதாக; व्यतनुत— அருளிச் செய்தார்.

ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் முற்றும்.

।। श्रीमते निगमान्त महा देशिकाय नमः ।।

ஸ்ரீ நிகமாந்த மஹா தேசிகன் அருளிச்செய்த
ரஹஸ்யங்களில் ஒன்றான

# श्री परमपद-सोपानम्

# ஸ்ரீ பரமபதஸோபாநம்

[பரமபதம் என்னும் மிக உயர்ந்த ஸ்தானத்தை அடைவதற்கு ஒன்பது நிலைகளை படிகளாகக் கற்பித்து விளக்கும் நூல்]

[விஷயச் சுருக்கம்:

1. விவேக பர்வம் (ஆசார்யோபதேசத்தால் சிஷ்யன் பெறும் விவேகத்தை விளக்கும் பகுதி): ஸம்ஸாரத்திலிருந்து ஜீவனைக் கரையேற்ற எம்பெருமான் செய்யும் உபகாரங்கள்—ஆசார்யனிடமிருந்து ஞானம் பெறவேண்டிய முறை—ஆசார்யோபதேசத்தால் பெறும் விவேகம்—உபநிஷத்தின் வாயிலாக பெறும் விவேகம்.

2. நிர்வேத பர்வம் (ஸம்ஸாரத்தில் அநாதி காலமாக உழன்று வரும் தன் நிலையை எண்ணி வெறுப்படைதலைக் கூறும் பகுதி): விவேகம் பெற்றவன் பழுதே போன தன் பழைய நிலையை ஆராயவேண்டிய முறை (—மஹாதமஸ்ஸில் பல காலம் கரண களேபரங்களற்று அடைப்புண்டு கிடந்ததை எண்ணுதல்—பகவத் கைங்கர்யத்தை விரும்பாது புலன்களுக்கு அடிமையாயிருந்ததை எண்ணுதல்—எம்பெருமான் விஷயமாகப் பொழுது போக்க வேண்டியிருக்க சிற்றின்பங்களில் பொழுதை வீணுக்கியதை எண்ணுதல் — பகவதநுபவத்தை இழப்பதைப் பேரிழவாக நினைக்கவேண்டியிருக்க மற்ற விஷயங்களின் இழப்பைக் குறித்து அலற்றியதை எண்ணுதல்—எல்லா உயிர்களிடத்தும் அன்புடன் இருக்க வேண்டியிருக்க பிற உயிர்களைக் கொன்று தின்றதை எண்ணுதல்—பகவந்நாம ஸங்கீர்த்தனம் பண்ணவேண்டியிருக்க பகவதபசாரங்களையே செய்ததை எண்ணுதல்—பழுதே போன

பழைய நாட்களைக் குறித்து அழவேண்டியிருக்க ப்ரக்ருதியின் வசப்பட்டு கண்டபடி திரிந்ததை எண்ணுதல்)—பழுதே போன பழைய நிலையை நினைத்து மனம் ஒய்ந்து போய் இனி தீய வழிகளில் செல்ல நடுங்குதல்—விவேகத்தால் விளையும் மன ஒய்தலின் பயன்.

3. விரக்தி பர்வம் (விவேகத்தின் மூலமாக நிர்வேதம் அடைந்தவன் மோக்ஷம் தவிர்ந்த மற்றெல்லா ஸுகங்களிலும் உள்ள தோஷங்களை உணர்ந்து அந்த ஸுகங்களில் பற்றறுத்தலைக் கூறும் பகுதி): மோக்ஷம் தவிர்நத மற்ற ஸுகங்களில் உள்ள தோஷங்களை அநுஸந்திக்க வேண்டியமை — ப்ராக்ருத, மற்ற ஸுகங்களில் உள்ள தோஷங்களின் விவரம்—ஐச்வர்யம், உறவினர் இவற்றின் மூலமான ஸுகங்களில் உள்ள தோஷங்கள் — உடலைப் பற்றிய தோஷங்கள் — அரச போகத்தில் உள்ள தோஷங்கள் — ஸ்வர்க்க ஸுகத்திலுள்ள தோஷங்கள் — பிறவித்துயர் — இந்திராதி பதவிகளில் உள்ள தோஷம் — அஸுரர்களின் செல்வங்களில் உள்ள தோஷங்கள் — சிவனுடைய பதவியும், பிரும்ம பதவியும், கைவல்யமும் விரும்பத்தகாதவைகளே — மோக்ஷம் தவிர்ந்த மற்ற பயன்களில் பற்றற்றவன் நிலை.

4. பீதி பர்வம் (விவேகம், நிர்வேதம், விரக்தி இவற்றைப் பெற்றவன் கருமபலனுக்கு அஞ்சி மோக்ஷோபாயத்தைக் கைக்கொள்ள விரைவதைக் கூறும் பகுதி): அநாதியான கர்மங்களை பிராயச்சித்தம் பலாநுபவம் இவற்றால் போக்கிக்கொள்ள முடியாமை — கர்மபலனை அநுபவிக்க மாறிமாறிப் பலபிறவிகளை எடுக்க வேண்டியமை — பிறவித்துயரற தேவதாந்தரங்களை நாடுவதில் உள்ள தோஷங்கள் — நரக வேதனை, தாபத்ரயம் இவற்றுக்கு அஞ்சுதல் — வினைகளுக்கு பிராயச்சித்தமான நிவ்ருத்தி தர்மத்தைக் கைக்கொள்ள விரைதல்.

5. ப்ரஸாதந பர்வம் (விவேகம், மனம் சலித்தல், வைராக்யம், ஸம்ஸாரத்தில் பயம் இவைகளைப் பரிபூர்ணமாகப் பெற்றவன் எம்பெருமானுடைய திருவருளைப் பெற அவன் திருவடிகளை ஆச்ரயித்தலைக் கூறும் பர்வம்): பிறவிப் பிணிக்கு எம்பெருமானைத் தவிர மற்றவர் மருந்தறியமாட்டார்கள்—பக்தி யோகம் பற்றிய விஷயங்கள் (பக்தியோகம்: விளக்கம்—இரண்டு வகை பக்தர்கள்—பக்தனிடத்தில் இருக்கவேண்டிய மிகவும் முக்கியமான குணம்)—ப்ரபத்தி பற்றிய விஷயங்கள் (ப்ரபத்தி: விளக்கம்—ஆசார்ய நிஷ்டனுக்குப் பலம் நிச்சயம் கிடைத்தல்—ப்ரபத்திக்கு உள்ள பெருமை—ப்ரபத்தி பற்றி சிலர் கூறுவதின்

கருத்து)—உபாயத்தை அநுஷ்டித்தவனுக்குப் பாபங்கள் கழியும் முறை—எம்பெருமானுல் ஏற்றுக் கொள்ளப்பட்டவனுக்கு தன்னைக் காக்கும் பொறுப்பு, நரகபயம் முதலியவை இல்லாமை.

6. உத்க்ரமண பர்வம் (சரீரத்தை விட்டு ப்ரபந்நன் வெளியேறும் ப்ரகாரத்தை விளக்கும் பகுதி): இங்கிருக்கும் நாள் வரை ப்ரபந்நனின நிலை—உடலை விடுவதற்கு ப்ரபந்நனுக்கு தேசகாலாதி நியமம் இல்லாமை—உடலை விட்டு விடுவிக்கும் போது ப்ரபந்நனின் புண்ணிய - பாபங்களை எம்பெருமான் முற்றிலும் போக்கும் முறை—ப்ரபந்நனுக்கு அந்திம ஸ்ம்ருதியைக் கொடுதது உடலினின்றும் வெளியேற எம்பெருமானே காரண மாய் நிற்றல்—உடலினின்றும் ஜீவன் வெளியேறும்போது எம்பெருமான் பொதுவாகச் செய்பவை—உடலினின்றும் வெளி யேற்றும்போது எம்பெருமான் ப்ரபந்நனுக்கு விசேஷமாகச் செய்பவை.

7. அர்ச்சிராதி பர்வம் (மோக்ஷம் அடைபவன் அர்ச்சிராதிகதி யில் விரஜை நதியை அடையும் வரையில் வழியில் வரவேற்புப் பெறுதலை வரிசை க்ரமத்தில் விளக்கும் பகுதி): அக்நி என்னும் ஆதிவாஹிகன உபசரித்து வழிநடத்துதல்—பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், வருடம் இவற்றுக்கு அபிமானி தேவதைகள் உபசரித்து வழிநடத்துதல் — வாயுதேவதை உபசரித்து வழி நடத்துதல்—சூரிய மண்டலத்தைப் பிளந்துகொண்டு செல்லுதல் —சந்திரன் உபசரித்து வழிநடத்துதல்(தூமாதி மார்க்கம், அர்ச்சி ராதி மார்க்கம் இவற்றில் சந்திரனை அடைவதில் உள்ள வேற் றுமை)—மின்னலுக்கு அபிமானி தேவதையான அமாநவன் பரம பதத்தை அடைவித்தல்(வருணன், இந்திரன், பிரஜாபதி இவர்கள் தந்தாம் எல்லைவரை உபசரித்து வழி நடத்துதல்—அமாநவன் — மானஸன் இவர்கள வழிநடத்துதல் பற்றிய விளக்கம்) — அக்நி முதலிய வழிநடத்துவோர் பற்றிய வெவ்வேறு கொள்கைகள் — மோக்ஷத்திற்குச் செல்லும் முறை பற்றி மேலும் சில விஷயங்கள் (— பிரமன் உடலில் போகத்தை அநுபவித்துப் பின்னர் மோக்ஷம் செல்லுதல், சிசுபாலன், அயோத்யாவாசிகள் இவர்களின் மோக்ஷக்ரமம், மநுஸ்ம்ருதியில் கூறப்பட்டுள்ளதின் கருத்து, வைதிக புத்ரர்கள் வைகுண்டம் சென்று திரும்பியது ஆகியவை பற்றிய விளக்கம்)—விரஜா நதியை ஸங்கல்பத்தால் கடத்தல்.

8. திவ்யதேச ப்ராப்தி பர்வம் (விரஜா நதியைக் கடப்பதி லிருந்து ஆதிசேஷன் மேல் எம்பெருமானை ஸேவித்தல் வரை முக்தியடையும் ஜீவன் காணும் காட்சிகளையும், பெறும் வரவேற்பு

களையும் விவரிக்கும் பகுதி): விரஜாநதியில் மூழ்கி ஸூக்ஷ்ம சரீரத்தை விட்டு அமாநவனால் தொடப்பட்டு ப்ராக்ருத வாஸனையெல்லாம் கழிக்கப் பெறுதல்—ஸ்ரீவைகுண்டம் என்னும் திவ்ய லோகத்தை அடைதல்—அரம்-ண்யம் என்னும் அமுதக்கடல்களையும் ஐரம்மதீயம் என்னும் அமுதப் பொய்கையையும் பார்த்தல்—ஸோமஸவநம் என்னும் அரசமரத்தை அணுகுதல்—அப்ஸரஸ்ஸுக்களால் வரவேற்கப்பட்டு ப்ரம்மாலங்காரம் செய்விக்கப்படுதல்—ஸ்ரீவைகுண்டம் என்னும் திவ்யநகரத்தை அணுகுதல்—இந்திரன்-ப்ரஜாபதி என்னும் துவாரபாலர்களால் வரவேற்கப்படுதல் — ஸ்ரீ-பூ-நீளா தேவிகள் வரவேற்றல்—திவ்ய விமாநத்தை அணுகி பரமாத்மாவின் குணங்களைப் பெற்று திருமாமணிமண்டபத்தைச் சென்று ஏறுதல்—பெரியதிருவடியை வணங்குதல்—நித்யஸூரிகள் கோஷ்டியை அடைந்து அவர்களைப் போல் தொண்டு செய்ய விழைதல்—எம்பெருமானது திவ்ய ஸிம்ஹாஸநத்தின் அருகில் பூர்வாசார்யர்களைக் கண்டு வணங்குதல்—எம்பெருமானது திவ்ய ஸிம்ஹாஸநத்தை அணுகுதல்—பல்வேறு தத்துவங்களின் அபிமானிதேவதைகள் ஸிம்ஹாஸநத்தின் அவயவங்களாய் இருப்பதைக் காணுதல்—ஸிம்ஹாஸநத்தில் தாமரைப் பூவில் திவ்ய பணிப் பெணகளைக் கண்டு தானும் பணிசெய்ய விழைதல்—தாமரைக்காயின் மேலிருக்கும் ஆதிசேஷனை ஸேவித்தல்—ஆதிசேஷனின அருட்கடாக்ஷம் பெற்று எம்பெருமானை ஸேவித்தல்.

9. **பராப்தி பர்வம்** (பரிபூர்ண ப்ரஹ்மாநுபவத்தை முக்தன் பெறுவதை விளக்கும் பகுதி): ஆதிசேஷன் மீது எம்பெருமானையும் பிராட்டிமார்களையும் ஸேவித்தல் — எம்பெருமானுடைய திருமேனியின் ஸௌந்தர்ய லாவண்யங்களை அநுபவித்து அவனைத் துதித்தல் — (கிரிடம், திருமுடி, திருக்குழல், திருநெற்றி, திருப்புருவங்கள், திருக்கண்கள், திருமூக்கு, திருக்கபோலங்கள், திரு அதரங்கள், புன்சிரிப்பு, திருச்செவிகள், முழுத்திருமுகம், திருக்கழுத்து, திருத்தோள்கள், திருமார்பு, திருவயிறு, பீதாம்பரம், கணைக்கால்கள், திருவடிகள், திருவடிக்கீழ்த தாமரை, அவயங்களின் சேர்ந்த அழகு, திருவாபரணங்கள், திருக்கையில திருவாழி திருச்சங்கு ஆகியவற்றை முறையே அநுபவித்தல்) — எம்பெருமானது கல்யாணகுணங்களை அநுபவித்தல் — திருவடித்தாமரைகளை அருளும்படி வேண்டுதல்—முக்தன் தலையில் எம்பெருமான் தன் திருவடித்தாமரைகளைச் சூட்டி கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை அருளுதல் — திவ்யபர்யங்கத்தின் மீது ஏறி எம்பெருமானை அடைதல் — 'நீ யார் ?' என்ற எம்பெருமானுடைய வினாவிற்கு முக்தன் கூறும் விடை—திவ்ய தம்பதிகளின் கடாக்ஷத்திற்கு இலக்காகி அவர்களின் திருவருளைப் பெறுதல் — முடிவற்ற பரிபூர்ண ப்ரஹ்மாநுபவத்தைப் பெறுதல்.]

रामानुजदयापात्रं ज्ञानवैराग्य भूषणम् ।
श्रीमद्वेङ्कटनाथार्यं वन्दे वेदान्तदेशिकम् ।।[1]

சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

ஸ்ரீ பரமபதஸோபாநத் தனியன்கள்

व्याजीकृत्य विमुक्ति-सौध-पदवी-सोपानसद्वर्णनम्
शारीरार्णव-रत्नजातमिह यः प्राचीकशत् सर्वशः ।
तस्मिन् तिष्ठति वेंकटेश्वर कवौ श्रीभाष्यकारोपमे
यं कञ्चित् पुरुषं ह्युपासितुं अये मा गा मनः स्वस्ति ते ।।[2]

तस्मै नमोऽस्तु गुरवे तादृश विभवाय वेंकटेशाय ।
प्रावर्तयन् जनानां भूमौ परमपद-हर्म्य-सोपानम् ।।[3]

தேனேறு தாமரையாள் திருமார்பன்தன்
திண்ணருளால் அவனடியில் விவேகம் பெற்று
கூனேறு பவக்குழியை வெறுத்ததற்பின்
கூர்விரத்தியுடன் வினையின் திரளுக்கஞ்சி
கூனேறு பிறையிறையோன் சாபம் தீர்த்தான்
குரை கழலே சரணடைந்து குரம்பைவிட்டு
வானேறும் வழிப்படிகள் அடைவே கண்ட
வண்புகழ் தூப்புல் வள்ளல் அருள் பெற்றோமே[4].

---

1—लक्ष्मीनाथ - समारम्भां नाथयामुनमध्यमाम् ।
अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरुपरम्पराम् ॥ என்று அதிகம்.

2. विमुक्ति—மோக்ஷமாகிற; सौध—மேன்மாடத்திற்கு; पदवी-सोपान—ஏறும் வழியான படிகளை; सद्वर्णनं—நன்றாக விளக்குவதை; व्याजीकृत्य—வ்யாஜமாகக் கொண்டு; शारीरार्णव—வேதாந்த சாஸ்த்ரங்களாகிற கடலிலிருக்கிற; रत्नजातं—ரத்னங்களின் கூட்டங்களை;

सर्वश·—முழுமையும்; इह—இவ்வுலகில்; यः—எந்த ஆசார்யன்; प्राचीकशत्—(பரமபதஸோபாநமென்னும் கிரந்தத்தின் மூலமாய்) வெளியிட்டாரோ; तस्मिन्—அத்தகைய; श्रीभाष्यकारोपमे—ஸ்ரீ பாஷ்யகாரருக்குச் சமமானவரான; वेंकटेश्वर-कवौ— ஸ்ரீ வேங்கடேசன் என்கிற கவியாகிற ஸ்ரீ மந்நிகமாந்த மஹாதேசிகன்; तिष्ठति—இருக்கும்பொழுது; अये मनः !—ஓ மனமே!; यं कश्चित् पुरुषं—வேறு ஒரு அற்ப மனிதனை; उपासितुं—பூஜிப்பதற்கு; मा गाः—போகாதே (முயலாதிரு; அவ்வாறு இருந்தால்); ते—உனக்கு; स्वस्ति—மங்களம் உண்டாகட்டும்.

3. भूमौ—இப்பூமியில்; जनाना—மக்களுக்கு; परमपद-हर्म्य-सोपानं-பரமபதமாகிற மாளிகைக்குச் செல்லும் படிகளை (வெளியிடும் இப்பிரபந்தத்தை); प्रावर्तयत्—(எந்த ஆசார்யன்) வெளியிட்டாரோ; तादृश विभवाय—அத்தகைய பெருமைவாய்ந்த; वेंकटेशाय—ஸ்ரீ வேங்கடநாதன் என்னும் திருநாமத்தை உடைய; तस्मै गुरवे—அந்த ஆசார்யனுக்கு; नमः अस्तु—(நம்) வணக்கம் சேரக்கடவது.

4. தேன் ஏறு தாமரையாள்—தேன் நிறைந்த தாமரைப்பூவில் வஸிக்கும் பிராட்டியை; திருமார்பன் தன்—திருமார்பில உடையவனை எம்பெருமானுடைய; திண் அருளால்—வலிய க்ருபையினால்; அவன் அடியில் விவேகம் பெற்று—அவனுடைய திருவடிகளில் நல்ல ஞானத்தைப் பெற்று; இங்கு—இப்பூமியில்; ஊன் ஏறு பவக்குழியை—சரீரத்தையே வ்ருத்தி செய்கிற ஸம்ஸாரமாகிய படுகுழியை; வெறுத்தறபின் –வெறுத்துத் தள்ளிய பின்; கூர் விரத்தியுடன் — பரவுகிற வைராக்யத்துடன்; வினையின் திரளுக்கு அஞ்சி —பாபக் கூட்டத்தால் வரும் பயனுக்குப் பயந்து; கூன் ஏறு— வளைவு நிறைந்த; பிறை இறையோன் — சந்த்ர கலையைத் தரித்த சிவனுடைய, சாபம் தீர்த்தான் — சாபத்தைப் போக்கிய எம்பெருமானுடைய; குரைகழலே சரண் அடைந்து—(கழல்) ஒலிக்கின்ற திருவடிகளையே சரணமாகப் பற்றி; குரம்பை விட்டு—சரீரத்தை விட்டு; வான் ஏறும் வழிப்படிகள்—பரமபதத்திற்கு ஏறும் வழியின் படிகளை; அடைவே கண்ட — வரிசையாகக் கண்டறிந்து வெளியிட்ட; வண்புகழ் — சிறந்த புகழுடைய; தூப்புல் வள்ளல்—தூப்புலில் அவதரித்த தாநசீலரான தேசிகனுடைய; அருள் பெற்றோம்—க்ருபையைப் பெற்றோம்.

# ஸ்ரீ பரமபதஸோபாநம்

# प्रथमं विवेकपर्व

सेयं सोपान-पदवी श्रीमता विहिता स्वयम् ।
शुद्धसत्त्वमयं भृत्यान् स्वसौधं नेतुमिच्छता ॥[1]

विवेक-निर्वेद-विरक्ति-भीतयः
प्रसादहेतूत्क्रमणार्चिरादयः ।
प्रकृत्यतिक्रान्त-पदाधिरोहणं
पराप्तिरित्यत्र तु पर्वणां क्रमः ॥[2]

அடற்புள்ளரசினும் அந்தணர் மாட்டினும்* இன்னமுதக்
கடற்பள்ளி தன்னினும் காவிரியுள்ளம்†[1] உகந்தபிரான்
இடைப்பிள்ளையாகி உரைத்தது உரைக்கும் எதிவரனார்
மடைப்பள்ளி வந்த மணம் எங்கள் வார்த்தையுள்
மன்னியதே. (1)

கள்ளமனத்துடன் கண்டு முயன்ற கடுவினையால்*
நள்ளிருளாழியில் நற்சுவை ஐந்தென நாடியதோர்*
அள்ளலில் நாளும் விழுந்தழியாவகை ஆரணநூல்*
வள்ளல் வழங்கிய வான்பாடியான வழிஇதுவே. (2)

---

†1—காவிரியுள்ளும்.

1. भृत्यान्—தன் அடியார்களை; शुद्धसत्त्वमयं—சுத்த ஸத்வம் என்னும் வஸ்துவால் ஆன; स्व-सौधं—தன் இருப்பிடமான ஸ்ரீ வைகுண்டம் என்கிற மாடிக்கு; नेतुं इच्छता—அழைத்துச் செல்ல விரும்புகின்ற; श्रीमता—ஸ்ரீய: பதியினால்; स्वयं विहिता—தானே ஏற்படுத்திய; सा सोपान पदवी—அத்தகைய படிகளாலான வழியானது; इयं—இது (மேலே சொல்லப்படுவது).

2. विवेक—சித்து, அசித்து, ஈச்வரன் என்கிற தத்துவங்களைப் பற்றிய ஜ்ஞானமாகிய பகுத்தறிவு; निर्वेद—இவ்வளவு காலம் தான் ஸ்வரூப விருத்தமான

காரியங்களை அநுஷ்டித்துப் போந்ததை நினைத்ததி ஞல் உண்டான வெறுப்பு; विरक्ति- தன் ஸ்வரூபத்திற்கு விருத்தங்களான ப்ராக்ருத போகங்களை அநுபவிப் பதில் வைராக்யம்; भीतय:—மறுபடியும் இந்த ஸம்ஸாரம் தொடருமே என்ற பயம்; प्रसाद-हेतु—பகவா னுடைய அனுக்ரஹத்திற்குக் காரணமான பக்தி ப்ரபத்திகளாகிய உபாயம்; उत्क्रमण—சரீரத்தை விட்டு வெளிப்புறப்படுதல்; अर्चिरादय:—அர்ச்சிராதிகதிகள்; प्रकृति-अतिक्रान्त-पद-अधिरोहणं—ப்ரக்ருதி மண்டலத்துக்கு மேலான பரமபதத்தை அடைதல்; प्राप्ति:—அங்கு பரமாத்மாவை அநுபவித்தல்; इति—என்று; अत्र—இந் நூலில் சொல்லப்படுகிற; पर्वणा क्रम:—பர்வங்களுடைய (படிகளுடைய) வரிசை (அறியத்தக்கது).

1. அடல் புள் அரசினும் — பலமுடைய பக்ஷிகளுக்கு அரசனு கிய கருடனிடத்திற் காட்டிலும்; அந்தணர் மாட்டினும்—ப்ராஹ் மணர்களின் தநமாகிய வேத வேதாந்தங்களிடத்திற் காட்டிலும்; இன் அமுதக் கடல் பள்ளி தன்னினும் — இனிய அமுதாகிய பிராட்டி அவதரித்த திருப்பாற்கடலாகிய திருப்பள்ளியிற் காட்டிலும்; காவிரி — காவிரிக்கரையிலுள்ள ஸ்ரீரங்கம் முதலிய திவ்யதேசங்களில்; உளளம் உகந்தபிரான் — மனம் மிக மகிழ்ந்து எழுந்தருளிய எம்பெருமான்; இடைப்பிள்ளை ஆகி — இடைச் சிறுவனாய் அவதரித்து; உரைத்தது — வெளியிட்ட பகவத் கீதை யின் தாத்பர்யத்தையே; உரைக்கும் — தம் பாஷ்யங்களில் விளக்கியவரான; எதிவரனர் — யதிகளுள் சிறந்த ஸ்ரீ பாஷ்ய காரருடைய; மடைப்பள்ளி வந்த மணம் — திருமடைப்பள்ளி வழி யாக வீசிய வாஸனை (கிடாம்பி ஆச்சான் வழியாக வந்த ரஹஸ் யங்களின் கருத்துக்கள்); எங்கள் வார்த்தையுள் — யாம் வெளி யிடும் க்ரந்தங்களுள்; மன்னியது — பொருந்தியுள்ளது.

2. கள்ள மனத்துடன் — வஞ்சனை நிறைந்த மநஸ்ஸினுல்; கண்டு — (தத்துவங்களை விபரீதமாய்) அறிந்து; முயன்ற கடுவினை யால் — செய்த கொடிய கர்மங்களால்; நள் இருள் ஆழியில் — அடர்ந்த (அஜ்ஞாநமென்னும்) இருளாகிய கடலில்; ஐந்து நல்சுவை என — (ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம், சப்தம் என் னும்) ஐந்து புலன்களின் விஷயங்களையும் நல்ல ஸாரங்கள் என்று னைத்து; நாடிய ஓர் அள்ளலில் — (நம்மால்) தேடப்பட்ட

## § 1. 1 ஸம்ஸாரத்திலிருந்து ஜீவனை கரையேற்ற எம்பெருமான் செய்யும் உபகாரங்கள்

अशेष-चिदचित्-वस्तुशेषियான श्रियःपतिக்கு अनन्यार्ह-निरुपाधिक-शेषभूतராய்[1], "அந்தமில் பேரின்பத்து அடியரோடு"*[1] இருந்து 'அனைத்துலகுமுடைய அரவிந்த லோசனனைத் தினைத்தனையும் விடாதே'*[2] அநுபவிக்கப்प्राप्तரான क्षेत्रज्ञர்[2] अनादि-अविद्या-कर्मादि प्रवाहத்தில்ஒழுகி, கரையேற விரகற்று[3] அலமருகின்றபடியைக்[4] கண்டருளின பரமகாருணிகனை பரமசேஷி, (i) நானே ஞானக்கை கொடுத்து இவர்களை எடுக்க இடம் பார்த்து; (ii) अज्ञात-यादृच्छिक-आनुषङ्गिक-प्रासङ्गिक-सामान्य-बुद्धिमूल-सुकृत-विशेषங்களை (B—36) व्याजமாகக்கொண்டு விசேஷ கடாக்ஷம் பண்ணி; (iii) अद्वेष-आभिमुख्य-सात्त्विक-संभाषणादिகளையுண்டாக்கி[5]; (iv) साधारण-नित्य-स्वसंबन्ध-सहकारियான[6] आचार्यसंबन्धத்திலே अभिमन्ழியை[7] உண்டாக்கி†[1]; (v) विशेषण-विशेष्य-उभयस्वभाव-विषयமாக்கத்[8] "திருந்தக்கண்டு உரைக்கவல்ல"*[3] 'தெளிவுற்ற சிந்தையனாய்'*[4] कुलिङ्ग-शकुनि-वृत्तान्त-वैदेशिकனை[9] (B—37) देशिकன் திருவடிகளிலே சேர்த்து; (vi) அவன் மநஸ்ஸிலும் வாக்கிலும் கோயில்கொண்டு, 'பிரமகுருவாகி'*[5] நின்று, 'தீதில் நன்னெறி காட்ட'*[6] ஒருப்பட்டு; आत्मोज्जीवन-अपेक्षितங்களான रहस्य-शब्दार्थங்களை[10] अज्ञान-संशय-विपर्यय-विपरीतरुचिகள்[11] புகாதபடி உபதேசிக்க;

---

(விரும்பப்பட்ட)ஒரு பெருஞ்சேற்றில், நாளும் — எப்பொழுதும்; விழுந்து அழியாவகை — (நாம்) விழுந்து அழிந்து போகாமலிருக்கும்படி; வள்ளல் — (ஸகலார்த்தங்களையும் வெளியிடுதலால்) கொடையிற் சிறந்த; ஆரணநூல் — வேத வேதாந்தங்களில்; வழங்கிய — உபதேசிக்கப்பட்டதும்; வான்படியான — பரமபதத்திற்கு (முதற்)படியாயுள்ளதுமான; வழி—மார்க்கம்; இதுவே — இந்தப் பர்வத்தில் கூறப்பட்ட விவேகமே, ☐

1. வேறொருவருக்கு உரிமையில்லாமல் காரணமின்றி (எம்பெருமானுக்கு) அடியராய். 2—ஜீவாத்மா. 3—வழியில்லாமல்; (உபாயமில்லாமல்). 4—வருந்துகிறபடியைக், சுழல்கின்றபடியைக். 5—(எம்பெருமானிடத்தில்) பகைமையின்மை, சிறிதளவு ப்ரீதி உண்டாவது, நல்லோர்களுடன் உரையாடல் இவற்றை உண்டாக்கி. 6—(எல்லா ஜீவாத்மாக்களுக்கும்) பொதுவாயும், எப்பொழுதும் உள்ள தன்னுடைய சேஷ-சேஷி-பாவம் முதலான ஸம்பந்தத்துக்கு உதவியாக இருக்கிற. 7—ஈடுபாட்டை. 8—சரீரமான சேதனாசேதனங்கள், சரீரியான எம்பெருமான் ஆகிய இவ்விருவருடைய ஸ்வரூப ஸ்வபாவங்களைப் பற்றி. 9—குளிங்கம் என்கிற பறவை போல் நடந்துகொள்ளாத. 10—மந்திர மந்திரார்த்தங்களை. 11—அறியாமை, ஸந்தேஹம், விபரீதஜ்ஞாநம், விபரீத நடத்தையில் ஆசை இவைகள்.

†1—आचार्यसंबन्धத்தை अभिसन्धि பண்ணி'.

*1. திருவாய். (10-9-11). முடிவில்லாத (அளவில்லாத) அதிகமான ஆநந்தத்தை அநுபவித்துக் கொண்டிருக்கிற தாஸபூதர்களான நித்ய முக்தர்களோடு இருந்து.

*2. திருவாய். (6-7-10): எல்லா உலகங்களையும் தனக்கு சேஷபூதமாக உடையவனும், தாமரைப் புஷ்பங்கள் போன்ற திருக்கண்களை உடையவனுமான ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபம், ரூபம், குணங்கள், விபூதி முதலியவற்றில் ஒன்றையும் சிறிதும் விடாமல்.

*3. திருவாய். (6-1-8): நன்றாக (நிச்சயரூபமாக) அறிந்து உபதேசிக்கக்கூடிய.

*4. திருவாய். (7-5-11): தெளிவான புத்தியை உடையவனாய்.

*5. பெரியாழ்திரு. (5-2-8): ப்ரும்மவித்யையை உபதேசிக்கிற ஆசார்யனாகி.

*6. பெருமாள்திரு. (2-6): குற்றமற்ற நல்ல மார்க்கத்தைப் பிரகாசம் செய்ய.

§ 1-2 ஆசார்யனிடமிருந்து ஞானம் பெறவேண்டிய முறை

उपदेशो निरर्थक:*[1] என்றதபடி 'கருவிலே திருவுடையனாய்'*[2], सम्यगुपसन्नனாய்[1], 'शिष्यस्तेहं शाधि मां त्वां प्रपन्नं', (59*[2]) என்று செவிதாழ்த்த இச்சேதனன்†[1]—

§ 1-3 ஆசார்யோபதேசத்தால் பெறும் விவேகம்

(i) "சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவில் பெரும் பாழில்"*[3] எழுந்த "மான் ஆங்கார மனங்கள்"*[4] முதலான विविध-विषयங்களினுடைய बहुप्रकार-बाधकत்வத்தையும்[2], (ii) 'சூழ்ந்து அதனில் பெரிய பர நன்மலர்ச் சோதி'யான'*[5] ஜீவாத்மாக்களுடைய शरीर-कारागृह-निवास-कैङ्कर्य-साम्राज्य-दशैகளையும்[3], (iii) 'சூழ்ந்து அதனில் பெரிய சுடர்ஞான இன்பமான'*[6] 'உயர்வற உயர்நல முடையவன்'*[7] படிகளையும்[4] अवहितனாய்க்[5] கேட்டு, 'உய்வதோர் பொருளால் உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து'*[8],

§ 1: 3: 1 திருமந்த்ரார்த்த அநுஸந்தானத்தால் பெறும் விவேகம்

स्वरूप - भर-फल-समर्पण - प्रधानமாக शेष-शेषिகளைப்†[2] பிரியாதபடி பிணைத்து வணக்கி[6] उल्लसितமாக்குகிற[7] पदत्रयத்திலே[8] தன்னுடைய ज्ञातृत्व-कर्तृत्व-भोक्तृत्वங்களை परार्थங்களாகவும்[9] पराधीनங்களாகவும்[10] பார்த்து,

§ 1: 3: 2 உபநிஷத்தின் வாயிலாகப் பெறும் விவேகம்

முதல்தனிவித்தாய்*[9], 'திருத்தித் திண்ணிலை

---

1—ஆசார்யனை முறைப்படி அடைந்தவனாய். 2—பலவகையிலும் ப்ரதிகூலமாய் இருத்தலையும். 3—உடலாகிற சிறையில் இருக்கும் நிலையையும், மோக்ஷதசையில் பெறப்போகிற கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தையும். 4—நிலைகளையும். 5—கவனத்தோடு. 6—ஒன்றாகச் சேர்த்து வணங்கும்படி செய்து

7—மகிழச் செய்கிற. 8—(திருமந்த்ரத்தில் இருக்கும்) மூன்று சொற்களிலே. 9—எம்பெருமானுக்கேயாகவும். 10—எம்பெருமானுக்கு வசப்பட்டவைகளாகவும்.

†1—செவிதாழ்த்திச் சேதனன்[1]. 2—சேஷசேஷி தத்வங்களைப்[2].

*1 (?): உபதேசம் செய்தது பயனற்றது.

*2 கர்பவாஸம் செய்யும் தசையிலேயே தேவஸம்பத்திற்குக் காரணமான பகவத் கடாக்ஷத்தைப் பெற்றவனாய்.

*3 திருவாய். (10-10-10): எல்லா வஸ்துக்களையும் மேலும் கீழும் நான்கு பக்கங்களிலும் வியாபித்துக் கொண்டு ஸ்வரூப நாசமில்லாமல் அளவில்லாமல் இருக்கிற மூல ப்ரக்ருதியில்.

*4 திருவாய். (10-7-10): மஹத், அஹங்காரம், மனம் இவைகள்.

*5 திருவாய். (10-10-10): (அந்த ப்ரகிருதியையும் தங்களுடைய ஞானம் என்கிற குணத்தால்) வியாபித்து, அந்த ப்ரகிருதியைக் காட்டிலும் பெரியவைகளான உயர்ந்த நல்ல எங்கும் விளங்குகிற ஜ்ஞாநம் என்கிற ப்ரபையையுடைய-

*6 திருவாய். (10-10-10): (முக்தாத்மாக்களையும்) வியாபித்துக் கொண்டு, அவர்களைக் காட்டிலும் பெரிய ப்ரகாசத்தையுடைய ஜ்ஞாநாநந்தஸ்ரூபனை.

*7 திருவாய். (1-1-1): (வேறொன்றுக்கும் தன்னைக் காட்டிலும் அதிக) உயர்த்தி இல்லாதபடி உயர்ந்த (ஆநந்தம் முதலான) நல்லகுணங்களை உடையவன்.

*8 பெரிய திரு. (1-1-1): உஜ்ஜீவிப்பதற்குக் காரணமான ஸர்வேச்வரன் க்ருபையாலே ஜ்ஞாநமாகிற பெரிய ஸ்தாநத்தை உள்ளபடியே அறிந்து.

*9 திருவாய்.(10-10-9): முக்கியமான நிமித்த காரணமும், இரண்டாவது இல்லாதவனும் (ஸஹகாரிகாரணமும்), உபாதாந காரணமுமாய்.

மூவுலகும் தன்னுள் இருத்திக் காக்கும் இயல்பினனாய்'*[1], 'தனதே உலகென நிற்குமவனாய்'*[2], 'அடைக்கலங்கொண்டு அஞ்சல் என்னப்'*[3] प्राप्तனாய்[1], 'உலகங்களுக்கெல்லாம் ஓர் உயிராய்'*[4], 'உலகு தன்னோடு ஒன்றி நிற்க வேறு நிற்கு' மவனாய்*[5], उपाय-उपेयभूतனை "श्रियःपतिயை உளன் என்று தேறி[2] இருக்கும்[2], உணர்த்தியுடையவன்[3] தானும் உளனும்" என்று तैत्तिरीयादि-श्रुतिகள் (C-35) சொல்லலுற்றன†[1].

அருவுருவானவை அனைத்தும் அறிவாரேலும்
அருங்கலைகள் கற்றுரைக்க வால்லாரேலும்*
தருமவழி அழியாமல்†[2] காப்பாரேலும்
தனி மறையின் தாத்பரியம் தருவாரேலும்*
இருவினையின் ஒழுக்கத்தால் ஏவலோரா (து)
இங்கே நாம் சிறையிருந்த ஈனம் தீர்க்கும்*
திருமகளார் பிரியாத தேவன் திண்ணம்
தேருதார் திண்படியில் ஏருதாரே. (3)

इति श्रीपरमपदसोपाने प्रथमं विवेकपर्व ।।



# द्वितीयं निर्वेदपर्व

மறுத்தார் திருவுடன் மார்பில் தரித்தவன் வாசகத்தை†
மறுத்தார் மயக்கமும் மற்றதனால் வந்த மாநரகும்*
நிறுத்தார் பவத்தில் நெடுநாள் உழன்றமைகண்டு*
அதனால்
வெறுத்து ஆரண நெறியே வெள்கியோட விரைவர்
களே. (4)

1—உரியவனாய். 2—நிச்சயித்து இருக்கும். 3—ஞானமுடையவன்.

†1—சொல்லிற்றன. 2—தவிராமல்[3].

*1. திருவாய். (2-2-8): உலகங்களைப் படைத்து, திடமான ஸ்திதியையுடைய மூன்றுவித சேதநாசேதநங்களையும் தனக்குள்ளே இருக்கும்படி செய்து அவைகளை ரக்ஷிக்கும் ஸ்வபாவனாய்.

*2. திருவாய் (4-5-10): உலகங்கள் தனக்கே சேஷமானது என்று தோன்றும்படி இருப்பவனாய்.

*3. திருச்சந்தவிரு. (92): நம்மை ரக்ஷ்யவஸ்துவாக ஏற்று 'பயப்படாதே' என்று அபயப்ரதானம் பண்ண.

*4. திருவாய். (8-1-5): உலகங்களுக்கெல்லாம் ஒப்பற்ற அந்தர்யாமியாய்.

*5. திருச்சந்தவிரு. (12): உலகத்தோடு சேர்ந்து நின்ற போதும் இவற்றைக் காட்டிலும் வேறுபட்டு நிற்குமவனாய். (அதாவது, இவற்றின் தோஷங்கள் தன்னிடம் ஒட்டாமல் நிற்குமவனாய்).

(3). அருஉரு ஆனவை—உருவமில்லாத சேதநம், ஸ்தூலமான அசேதநம் ஆகிய; அனைத்தும் அறிவாரேனும்—ஸகல பதார்த்தங்களையும் அறிந்தவரேயானாலும்; அரும் கலைகள் கற்று—அருமையான கல்வியைத் தாம் கற்று; உரைக்க வல்லாரேனும் — (பிறருக்கும்) உபதேசிக்க ஆற்றலுடையவரேயாயினும்; தரும வழி அழியாமல் — தர்ம மார்க்கம் அழியாமல்; காப்பாரேனும் — (அதன்படி) அநுஷ்டிப்பவர்களேயானாலும்; தனிமறையின் — ஒப்பற்ற வேதத்தின்; தாற்பரியம் தருவாரேனும் — ஸாரத்தை பிறருக்கு போதிப்பவரேயானாலும்; இருவினையின் ஒழுக்கத்தால் — (புண்யம், பாபம் என்னும்) இரண்டு கர்மங்களின் மார்க்கத்தில் நடத்தலால்; ஏவல் ஓராது — (நாம் செய்ய வேண்டிய) கைங்கர்யத்தைப்பற்றி ஆராயாமல்; இங்கே நாம் சிறையிருந்த— இந்த ஸம்ஸாரத்தில் நாம் சிறையிருந்தமையாகிய; ஈனம் தீர்க்கும் — தாழ்வைப்போக்குகின்ற; திருமகளார் பிரியாத — பிராட்டியைப் பிரியாதவனை; தேவன் திண்ணம் தேறாதார் — எம்பெருமானுடைய உறுதியைத் தெளிந்து கொள்ளாதவர்; திண் படியில் ஏறாதார் — (மோக்ஷத்திற்கொண்டு சேர்க்கும்) திடமான படியில் ஏறமாட்டார்கள்.

(4). மறு — (ஸ்ரீ வத்ஸமென்னும்) மறுவையும்; தார் — (வைஜயந்தி என்னும்) மாலையையும்; திருவுடன் — பிராட்டியுடன்; மார்பில் தரித்தவன்—தன்திருமார்பில் தரித்தவனை எம்

### §2. 1 விவேகம் பெற்றவன் பழுதே போன தன் பழைய நிலையை ஆராய வேண்டிய முறை

இப்படித் தானும் பிறரும் தனக்கு **शेषि**யும் தஞ்சமும்[1] **भोग्य**மும் அன்று என்று தோன்றும்படி **दयाशील-देशिकोपदेशसिद्ध-पदत्रयार्थ-परामर्श**த்தாலே[2] **दिव्य-गङ्गाजलम्** **प्रसन्न-मधुर-पवित्र-शीत**லமான **परावरतत्त्व**விவேகம்†[1] பெற்றவன் —

#### § 2. 1. 1 மஹாதமஸ ஸில் பலகாலம் கரணகளேபரங்களற்று அடைப்புண்டு கிடந்ததை எண்ணுதல்

தான் முன்பு அநாதிகாலம் அஸமஞ்ஜன் படியே(B—5) நடக்கையாலே "**न क्षमामि**"*[1], "**क्षिपामि**"*[2] என்னும்படி துறப்புண்டு[3], **अनन्त-आयाम-विस्तार**மான[4] **त्रिगुण-मरुकान्तार**த்திலே[5] **अनेकजन्म-साहस्रि**யான*[3] **संसार-पदवि**யை[6] அடைந்து, **अनुचित-विषय-मृगतृष्णिका-आस्वाद-लुब्ध**னாய்[7], அடிதரியாதே[8](†[2]) ஓடி, **वासना-रेणु-कुण्ठित**னாய்[9], **विपरीत-परिश्रम-फल**னாய்[10] ஒரு **विश्रमस्थान**மும்[11] பெறுதே **कल्पान्त-कालरात्रि**கள்[12] வந்தாலும்†[3] முன்பு **परसंकल्प-**

---

பெருமானுடைய; வாசகத்தை—(கீதை முதலிய) உபதேசத்தை; **மறுத்தார்**—மீறி நடப்பவர்களுடைய, **மயக்கமும்** — அஜ்ஞாநத்தையும்; **மற்று**--மேலும், **அதனால் வந்த மாநரகும்**—அந்த அஜ்ஞாநத்தால் வந்த பெரிய நரகங்களையும், **நிறுத்தார்**—ஆராய்ந்து பார்த்த விவேகிகள்; **பவத்தில்**—ஸம்ஸாரத்தில்; **நெடுநாள் உழன்றமை கண்டு**—வெகுகாலம் துன்பமுற்றதைக்கண்டு; **அதனால் வெறுத்து**—அதனால் (ஸம்ஸாரத்தில்) வெறுப்படைந்து; **வெள்கி** — (இது வரையில் தாம் நடந்ததற்கு) வெட்கமடைந்து; **ஆரண நெறியே ஓட** — வேதத்தில் கூறப்பட்ட உபாயத்தை அனுஷ்டிக்க; **விரைவர்கள்** (விவேகிகள்) விரைவில் முற்படுவர். ☐

1—ரக்ஷகனும். 2—ஆசார்யர்களின் உபதேசத்தில் கிடைத்த மூன்று சொற்களால் அமைந்த திருமந்திரத்தின் பொருளை ஆராய்வதாலே. 3—நிக்ரஹிக்கப்பட்டு. 4—எல்லையில்லாத அகல நீளங்களையுடைய. 5—ப்ரக்ருதியாகிய பாலைவனத்தில்,

6—ஸம்ஸாரமாகிற மார்க்கத்தை. 7—தகாத சப்தாதி விஷயங்களாகிற கானல்நீரைப் பருகுவதில் ஆசையுடையவனாய். 8—எங்கே அடி வைப்பது என்று தெரிந்து கொள்ளாமல்; காரணம் தெரியாமல். 9—சப்தாதி விஷயங்களை அநுபவிப்பதனால் உண்டாகிய வாஸனையாகிய புழுதியினால் மறைக்கப்பட்ட ஜ்ஞாநம் சக்தி முதலியவைகளை உடையவனாய். 10—ஸ்வரூபத்திற்குத் தகாத உழைப்பைப் பயனாக உடையவனாய். 11—இளைப்பாறும் இடமும். 12—ப்ரளய காலங்களாகிற பயங்கரமான ராத்திரிகள்.

†1—பராபரதத்வ விவேகம்[1]. 2—அடி தெரியாதே[1]. 3—வந்து[1].

*1. पद्मपत्र - शतेनापि न क्षमामि वसुन्धरे ॥
प्रमादादपि कीलालं यः स्पृशेत् वैष्णवो नरः ।
उपचार शतेनापि न क्षमामि वसुन्धरे ॥

வராஹபு: பூமிதேவியே! நூறு தாமரைப் பூக்களால் பூஜித்தாலும் பொறுக்க மாட்டேன். பூதேவியே! எந்த விஷ்ணு பக்தன் ரக்தத்தை அறியாமல் தொட்டாலும் அந்தக் குற்றத்தை நூறு உபகாரங்கள் செய்தாலும் நான் பொறுக்கமாட்டேன்.

*2. तानहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्रं अशुभान् आसुरीष्वेव योनिषु ॥

கீதை (16-19): கீழ்க்கூறியபடி என்னிடம் த்வேஷமுள்ளவர்களையும், நான் (எம்பெருமான்) இல்லையென்று ஸாதிப்பதற்காகக் கோணலான யுக்திகளைச் சொல்லும் மிகக் கொடியவர்களையும், என்னைப் பற்றி அறிந்திருந்தும் என்னிடம் நெருங்காதவரையும், நான் இருக்கிறேன் என்ற அறிவு அடியோடு இல்லாதவர்களையும் அசுரப் பிறவிகளிலேயே நான் எப்பொழுதும் தள்ளுகிறேன்.

*3. अनेकजन्मसाहस्रीं संसारपदवीं व्रजन् ।
मोहश्रमं प्रयातोऽसौ वासनारेणु - कुण्ठितः ॥

வி.பு.(6-7-94): அவன் அநேகம் ஆயிரம் பிறவிகள் ஸம்ஸாரமாகிய மார்க்கத்தில் சென்று மோஹத்தையும் ச்ரமத்தையும் அடைந்து வாஸனைகளாகிய புழுதி படியப்பெற்று ஜ்ஞாநசக்திகளை இழந்தவனாகிறான்.

प्रसृतैயான[1] प्रज्ञैஇழந்து[2] மூச்சடங்க प्रसुप्तனாய், भोग-मोक्षार्थ-प्रवृत्तिகளுக்குப் प्रसङ्गமில்லாதபடி करण-कळेबरங்களை[3] இழந்து "लूनपक्ष इव अण्डजः"*1 என்னும் படியாய், தனக்கு விशेषித்தொரு பேரிடவொண்ணாத மஹாதமஸ்ஸிலே[4] இரும்புண்ட நீர்போலே இறுகச் சுவறி[5], ஒரு மூலையிலே संहार-विक्षेप-सहस्रकोटीस्तिष्ठन्ति जीवाः*2 என்னும்படி ஆயிரம் கோடி ப்ரஹ்மகல்பங்கள்[6] அடைப்புண்டு கிடக்கும் படிகளையும்;

§ 2. 1. 2 பகவத் கைங்கர்யத்தை விரும்பாது புலன்களுக்கு அடிமையாயிருந்ததை எண்ணுதல்

மீண்டு परम-कारुणिक-स्वतन्त्रशेषि-संकल्पविशेष-नियत-காலம் வந்தால், "प्रचरन्ति चान्ये"*2 என்னும்படி महदादि வழியே[7] போந்து, परमशेषि-पाद-निवेदनार्थயான[8] विचित्र-देह-संपत्तिயைப்[9] பெற்றாலும் 'ஆக்கையின் வழி யுழன்று'*3(†1), 'நீ भगवत् किंकरன்' என்றால், 'ஓம்' என்று இசையாதே யமகிங்கரர்க்கு இடமாம்படி इन्द्रियकिंकरனாய்ப் போந்த படிகளையும்;

§ 2. 1. 3 எம்பெருமான் விஷயமாகப் பொழுது போக்க வேண்டியிருக்க சிற்றின்பங்களில் பொழுதை வீணாக்கியதை எண்ணுதல்

'தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிப்பட்டும் பூசித்தும்'*4 பொழுது போக்கப் प्राप्तமாயிருக்க 'சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து சுரிகுழல் மடந்தையர் திறத்துக் காதலே மிகுத்தும்'*5

---

1—பகவானுடைய ஸங்கல்பத்தினால் பரவினதான. 2—ஞானத்தை இழந்து. 3—புலன்களையும் உடலையும். 4—ப்ரக்ருதியினுடைய ஸூக்ஷ்மாவஸ்தையான தமஸ் என்கிற த்ரவ்யத்திலே. 5—தனியாக அறிய முடியாதபடி ஒன்றாகி. 6—ப்ரம்மாவின் ஆயுட்காலங்கள் வரையில். 7—மஹான் அஹங்காரம் முதலிய தத்துவங்களின் வழியாக. 8—எல்லோருக்கும் ஸ்வாமியான எம்பெருமானுடைய திருவடிகளில் ஸமர்ப்பிப்பதற்காக ஏற்பட்ட. 9—பல்வேறு சரீரங்களைப்-

†1—வழியுழல்வேனென்று[1].

*1. संसारवागुरान्तस्थो लूनपक्ष इवांडजः ।
अपश्यन् निर्गमोपायमागामिष्वपि जन्मसु ॥

**வங்கீபுரத்துநம்பி காரிகை (5): ஸம்ஸாரமாகிற வலையினுள் அகப்பட்டதும், வெட்டப்பட்ட சிறகையுடையதுமான பறவை போல வரவிருக்கும் பிறவிகளிலும் ஸம்ஸார பந்தத்திலிருந்து வெளியேறுவதற்கான உபாயத்தைக் காணுதவனுய்.**

*2. संहारविक्षेप - सहस्रकोटीस्तिष्टन्ति
जीवाः प्रचरन्ति चान्ये ।
प्रजाविसर्गस्य च पारिमाण्यं वापी
सहस्राणि बहूनि दैत्यः ॥

**பார. (சாந்தி - 286 - 30): (ஸநத்குமாரர் வ்ருத்ராஸுரனுக்கு உபதேசித்த விஷ்ணுவின் பெருமையை பீஷ்மர் கூறுகிறுர்): விஷ்ணு அனேககோடி ஜீவராசிகளை மேன்மேலும் பாபச்செயல் களில் ஈடுபடாமலிருக்க ஸம்ஹாரத்தைச் செய்கிறுன். ஸம்ஹார காலத்தில் ஏற்படும் குழப்பங்களில் சிக்குண்டு அனைவரும் மடிகிறுர்கள். மீண்டும் கருணையினுல் உலகையும் ஜீவராசிகளையும் படைக்க, ஜீவர்கள் வாழ்வைப் பெறுகிறுர்கள்.**

*3. திருவாய். (3-2-1): உடம்பு எப்படி இழுத்துக்கொண்டு போகிறதோ அப்படியே போய்க் கொண்டு.

*4. நான் திருவந். (63) மனதில் தியானித்தும், க்ரந்தங்கள் எழுதியும், பிறர் போதிக்கக் கேட்டும், நமஸ்கரித்தும், பல ஸேவைகளைச் செய்தும், ஆராதித்தும்.

*5. பெரிய திரு. (1-6-3): பொருள் சேர்க்க மேன மேலும் பகலில் சூதாடியும், அந்தப் பொருள் போதாதென்று இரவில் அச்சமின்றி மேன்மேலும திருடியும், அந்தப் பொருளைக்கொண்டு சுருண்ட கூந்தல் அழகுடைய மாதர்களிடம் மிகுந்த ஆசையைச் செய்தும்.

"வென்றியே வேண்டி வீழ்பொருட்கிரங்கி வேற் கண்ணார் கலவியே கருதி"*1 "புலன் படிந்து உணும போகமே பெருக்கிப் பொழுதினை வாளாப் போக்கின"*2 படிகளையும்;

§ 2. 1. 4 பகவதநுபவத்தை இழப்பதைப் பேரிழவாக நினைக்க வேண்டியிருக்க மற்ற விஷயங்களின் இழப்பைக் குறித்து அலற்றியதை எண்ணுதல்

**भगवत्-अनुभव-विश्लेषादि** களில் '**सा हानिः**'*3 என்று இழவுபட்டு, **दस्युभिर्मुषित**ஞைற்போலே[1](*4) கூப்பிட வேண்டியிருக்க, "தாயொரு பக்கம் தந்தையொரு பக்கம்"*5 இத்யாதிகளிற்படியே **अप्राप्त-विषय-विश्लेषत्**தில்[2] அலற்றும படிகளையும[3];

§ 2. 1. 5 எல்லா உயிர்களிடத்திலும் அன்புடன் இருக்கவேண்டியிருக்க பிற உயிர்களைக் கொன்று தின்றதை எண்ணுதல்

'நிற்கின்றதெல்லாம்'*6 'உடன்மிசை உயிரெனக் கரந்த நெடுமால்'*7 என்று ஓர்ந்து[4] **मित्रामित्रकथै**யற்று

---

1—திருடர்களினால் அபஹரிக்கப் பட்டவனைப்போல. 2—தனக்குத தகாத விஷயங்களின் பிரிவுகளில். 3—கதறுகிற ப்ரகாரங்களையும். 4—யோசித்து; நிச்சயித்து.

*1. பெரிய திரு. (1-1-4): ஜயத்தையே விரும்பி, அழியக் கூடிய ஸ்வபாவத்தை உடைய பொருள்களுக்காக கவலையுற்றும், வேல் போன்ற கண்களையுடைய மாதர்களின் புணர்ச்சியையே இலக்காகக் கொண்டு.

*2. பெரிய திரு (1-6-2): இந்திரியங்களெல்லாம் மிக்கப் பற்றுடன் இழிந்து அநுபவிக்கின்ற இன்பத்தையே மேன்மேலும் விருத்தி செய்து காலத்தை வீணாகக் கழித்த விதத்தையும்.

*3. यन्मुहूर्तं क्षणं वापि वासुदेवो न चिन्त्यते ।
सा हानिः तन्महच्छिद्रं सा भ्रान्तिः सा च विक्रिया ।।

கருடபு. (322-22): ஒரு முஹூர்த்த காலமோ, ஒரு க்ஷணமோ வாஸுதேவனை நினைக்காவிடில் அது இழப்பாகும்; அது பெரிய அழிவாகும்; அது மயக்கமுமாகும்; அது (ஆத்மாவின்) இயல்புக்கு மாறானதும் ஆகும்.

*4. एकस्मिन्नपि अतिक्रान्ते मुहूर्ते ध्यानवर्जिते ।
दस्युभिः मुषितेनेव युक्तं आक्रन्दितुं भृशम् ।।

(?) ஒரு முஹூர்த்த காலங்கூட பகவத் தியானம் இல்லாது கழிந்தால், திருடர்களால் திருடப்பட்டவன் போல் மிகவும் கூச்சலிட்டு அழவேண்டும்.

*5. வாயொருபக்கம் வாங்கிவலிப்ப
வார்ந்த நீர்குழிக்கண்கள் மிழற்ற*
தாய் ஒரு பக்கம் தந்தை ஒரு பக்கம்
தாரமும் ஒரு பக்கம் அலற்ற*
தீ ஒரு பக்கம் சேர்வதன் முன்னம்
செங்கண் மாலொடும் சிக்கெனச்சுற்ற
மாய்* ஒரு பக்கம் நிற்க வல்லார்க்கு
அரவதண்டத்தில் உய்யலுமாமே*

பெரியாழ். திரு. (4-5-9): வாயுப்ரகோபத்தாலே (வாத விகாரத்தாலே) வாயானது ஒரு பக்கத்திலே இழுக்கப்பெற்று வலிக்கும் படியும், பந்துக்களை விட்டுப் போகிறேனென்று அவர்கள் பக்கல் ஸங்கத்தாலே அழுகிற அளவிலே யமபடரைக் கண்டவாறே பயத்தால் கண் உள்ளே இடிய இழிந்து கலங்கி நிற்கவும், தாய் ஒரு பக்கமும், தகப்பன் வேறொரு பக்கமும், மனைவி மற்றொரு புறமுமிருந்து கதறி அழும்போது இன்னமொரு பக்கத்திலே நெருப்பானது ஸம்ஸ்கரிப்பதற்கு முன்னே, ஸம்ஸாரிகளோடு உள்ள உறவை நினையாமல், வாத்ஸல்யத்தையும் வ்யாமோஹத்தையுமுடைய ஸர்வேச்வரனை நிருபாதிக ஸர்வவித பந்துவுமாகப் பற்றவல்லாருக்கு யமபடரையும் அவர்களது க்ரூரமான தண்டங்களையும் தப்பி உஜ்ஜீவித்துப் போகலாம்.

*6. நான் திருவந். (54): மனுஷ்யாதி ரூபங்களாயும், ஸர்வ வஸ்துக்களாயும் இருப்பவையெல்லாம்.

*7. திருவாய். (1-1-7): உடம்பில் ஜீவாத்மா இருப்பது போல் (அந்தந்த பொருள்கள் ஒவ்வொன்றிலும்) மறைந்து நிற்கும் திருமால்.

यच्छील: स्वामी*[1] என்கிற ந்யாயத்தாலே सर्वभूत-सुहृत् ஆகை உசிதமாயிருக்க, 'அறப்பொருளை அறிந்து ஓராதே மறுக்கி வல்வலைப்படுத்திக் குமைத்திட்டுப் பல்லுயிரைக் கொன்று உண்ணும் படிகளையும்'*[2];

§ 2. 1. 6 பகவந்நாம ஸங்கீர்த்தனம் பண்ணவேண்டியிருக்க பகவதபசாரங்களையே செய்ததை எண்ணுதல்

हरिरित्यक्षरद्वयத்தை*[3] अवशமாகவாகிலும்[1] உச்சரித்து, परमपद-गमनத்திற்குப் परिकरबन्धம்[2] பண்ணுகையே पण्डित-कृत्यமாயிருக்க, ब्रह्मकल्प-नियुतानुभवத்திலும்*[4] உண்டறுக்கவொண்ணாதபடி[3] अक्षय-फलமான†[1] अपचारवर्गத்தை क्षणार्धमात्रந்தோறும்[4] நடத்திப் போந்த படிகளையும்;

§ 2. 1. 7 பழுதே போன நாட்களைக் குறித்து அழவேண்டியிருக்க ப்ருக்ருதியின் வசப்பட்டு கண்டபடி திரிந்ததை எண்ணுதல்

இந்நடப்பைப்†[2] புரிந்து பார்த்து[5], "வாடினேன் வாடி"*[5]

---

*8. सर्वभूतात्मके तात जगन्नाथे जगन्मये ।
परमात्मनि गोविन्दे मित्रामित्रकथा कुत: ।।

வி.பு. (1-19-37): எல்லா ஜீவர்களையும் சரீரமாகக்கொண்டு உலகெங்கும் அந்தர்யாமியாய்ப் பரவி அனைவருக்கும் தலைவனாய் பரமாத்மாவான கோவிந்தன் இருக்கும் போது, 'இவன் நண்பன், இவன் பகைவன்' என்ற பேச்சுக்கு இடமேது? □

1—புத்திபூர்வகமாக இல்லாமலும். 2—வேண்டியவற்றை எடுத்துக் கொள்ளுகை. 3—அநுபவித்துத் தீர்க்க முடியாதபடி. 4—ஒவ்வொரு அரை க்ஷணத்திலும். 5—திரும்பிப் பார்த்து.

†1—अक्षय्यफलமான[1]. 2—முன்னடப்பை[4].

*1. यच्छील: स्वामी तच्छीलो दास: ।

எஜமானன் எத்தகைய ஸ்வபாவமுடையவனாக இருக்கிறானோ தாஸனும் அத்தகைய ஸ்வபாவத்தை உடையவனாய் இருக்க வேண்டும் — என்பது ந்யாயம்

*2. திருவாய். (4-9-6) எப்பொழுது மிருக்கிற உபாயமாகச் சொல்லப்படுகிற உன்னுடைய உண்மையைச் சாஸ்த்திரத்தைக் கொண்டு அறிந்து, (உன்னை அடைவதே பிழைக்கும் வழி என்று) நிரூபணம் செய்யாமல், பிறர் மனதைக் கலக்கி அவர்களை வசப் படுத்திக்கொண்டு, துன்பப்படுத்தி, அதற்கு மேலும் பல உயிர்களைக் கொன்று தங்கள் வயிற்றை நிரப்பிக் கொள்ளும் முறைகளையும்.

*3. सकृदुच्चरितं येन हरिरिति अक्षरद्वयम् ।
बद्धः परिकरः तेन मोक्षाय गमनं प्रति ।।

இதி.ஸமு. (வி.தர். 70-74): 'ஹரி:' என்ற இரண்டு எழுத்துக்கள் எவனால் ஒரு தரம் சொல்லப்பட்டனவோ அவனால் மோக்ஷத்தைப் பெறுவதற்கு ஸாதனம் தயாரிக்கப்பட்டது.

*4. यद् ब्रह्मकल्प - नियुतानुभवेऽपि अनाश्यं
तत्किल्बिषं सृजति जन्तुः इह क्षणार्धे ।
एवं सदा सकलजन्मसु सापराधं
क्षाम्यस्यहो तदभिसन्धि - विराम - मात्रात् ।।

ஸ்ரீ வைகுண்டஸ்தவம் (61) : எந்த பாபமானது ப்ரம்மாவினுடைய பத்துலக்ஷம் கலபங்கள அநுபவித்தாலும் அழியாதோ' அத்தகைய பாபத்தை இவ்வுலகில ஒரு ஜீவன் அரை க்ஷணத்தில் செய்து விடுகிறான்.

*5. வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து*
கூடினேன் கூடி இளையவர் தம்மோடு
அவர்தரும் கலவியே கருதி*
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து*
நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன
நாராயணா என்னும் நாமம்.

பெரிய திரு. (1-1-1): மிகுந்த துன்பத்துக்குக் கொள்கலமாய் துன்பங்களுக்கெல்லாம் காரணமான சரீரத்தில் பிறந்து, சரீரமென்றும் ஆத்மாவென்றும் பகுத்தறியக்கூடாதபடி ஒன்றாய்ப் பொருந்தினேன். இப்படி நெடுங்காலமிருந்து யுவதிகளான ஸ்த்ரீகள் கொடுக்கும் புணர்ச்சியையே நினைதது அவர்கள் போன

''வாணிலா முறுவல்''*1, ''தாயே தந்தை''*2 (B—38) இத்யாதிகளிற்படியே பச்சாத்-தாபம் பிறந்து ''பழுதே பல பகலும் போயின''*3 என்று அஞ்சி அழப் ப்ராப்தமாயிருக்க, ப்ரக்ருதி-வேதாளீ-பரவசனாய்[1], ''காலமேதத் ந புத்தவாந்''*4 என்னும்படி கலங்கிக் கண்டவா†1 திரிந்தபடிகளையும் கண்டு;

---

அடிவழியே பின் தொடர்ந்து ஓடினேன். இப்படி ஓரிடத்திலும் கால்தாழாதே விஷயங்கள் தோறும் விசேஷம் தேடிக் கொண்டோடி, விஷயங்களிலே சென்ற சிந்தையாலே துக்கத்தை அநுபவித்தேன். பின்பு (கொள் கொம்பில்லாக் கொடி போலே) வாடிப் போந்தேன. வாட்டத்தை உடையவனாயிருந்து உஜ்ஜீவிப்பதற்குக் காரணமான ஸர்வேச்வரன் க்ருபையாலே ஜ்ஞாநமாகிற பெரிய ஸ்தாநத்தை உள்ளபடியே அறிந்து 'பகவத் விஷயம் நன்று, ஸம்ஸாரம் தீது' என்று ஆராய்ந்தேன். ஆராய்ந்து இவ்வளவு நீசனாகியும் பாக்யமுற்ற நான் 'நாராயணா' என்ற சொல் அடங்கிய மந்திரத்தைக் கேட்டு, பொருள் தெளிந்து, இசைந்தேன். □

1—ப்ரக்ருதியாகிற பிசாசுக்கு வசப்பட்டவனாய்.

†1—கண்டவாறு[1].

*1. வாணிலா முறுவல் சிறுநுதல் பெருந்தோள்
மாதரார் வனமுலைப் பயனே
பேணினேன் அதனைப் பிழையெனக் கருதிப்
பேதையேன் பிறவி நோயறுப்பான்
ஏணிலேன் இருந்தேன் எண்ணினேன் எண்ணி
இளையவர் கலவியின் திறத்தை
நாணினேன் வந்து உன் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள் எந்தாய்.

பெரிய திரு. (1-6-1): நைமிசாரண்யத்தில் எழுந்தருளியிருக்கும் வனமே உருவான என்னப்பனே! ஒளி பொருந்தியிருக்கிற புன்சிரிப்பையும், சிறிய நெற்றியையும், பெருத்த தோள்களையும் உடையரான ஸ்த்ரீகளுடைய அழகிய ஸ்தநங்களையே பரமப்ரயோஜநமாக ஆதரித்துக்கொண்டு போந்தேன். அறிவற்ற நான் அதனைத் தப்பென்று நினைத்து ஸம்ஸாரமாகிற வியாதியைப் போக்கிக் கொள்வதற்குத் தேவையான சக்தியற்றவனாய் திகைத்திருந்தேன். பின்னர் அஷ்டாக்ஷரத்தை ஜபித்து

ஆராய்ந்தேன். சிற்றின்பத்திலுள்ள தோஷங்களையும் எண்ணி யுவதிகளுடைய போகத்திற்கு ஜீவனையழிக்கும் வல்லமை இருப் பதை அறிந்ததால் வெட்கமுற்றேன். இப்படி வெட்கமுற்றவனாய் உனது திருவடிகளைக் கிட்டி (அந்த வினைகளெல்லாம் விலகி நன்னிலை பெற)ச் சரணமடைந்தேன்.

*2. தாயே தந்தையென்றும் தாரமே கிளை மக்களென்றும்
நோயே பட்டொழிந்தேன் நுன்னைக் காண்பதோராசை
யினால்*
வேயேய் பூம்பொழில்சூழ் விரையார் திருவேங்கடவா !*
நாயேன் வந்து அடைந்தேன் நல்கி ஆளென்னைக்
கொண்டருளே.

பெரிய திரு. (1-9-1): மூங்கில்களால் நெருக்குண்டதும், புஷ்பித்துப் பரிமளம் மிகுந்திருப்பதான சோலையால் சூழப்பட்ட திருவேங்கடமலையில் வசிப்பவனே! (தாயல்லாதாளைத்)தாயென் றும், (தந்தையல்லாதானைத்) தகப்பனென்றும் (மனையாளல்லா தவளை) மனையாட்டியென்றும், (பந்துக்களல்லாதவர்களை) பந்துக் களென்றும், மக்களல்லாதாரைப் பிள்ளைகளென்றும நினைத்து அநர்த்தப்பட்டுப் போனேன். நாய்போலே மிகவும் நீசனான நான காரணமின்றி இயற்கையாகவே (நிருபாதிக) ஸர்வவித பந்துவான தேவரீரைக் காணவேண்டுமென்கிற நிலைநின்ற ஆசையினால், (திருமலைக்கு)வந்து உன்னைச் சரணம் புகுந்தேன். எல்லாம் விட்டு வந்த என்னை கிருபைசெய்து அடிமை கொண்டருளவேண்டும்.

*3. பழுதே பல பகலும் போயினவென்று * அஞ்சி
அழுதேன் அரவணைமேல் கண்டு – தொழுதேன்*
கடலோதம் காலலைப்பக் கண்வளரும் * செங்கண்
அடலோத வண்ணரடி.

முதல் திருவந். (16): இத்தனை நாட்களும் வீணாகவே கழிந்தன என அறிந்து பயப்பட்டு அழுது நிர்வேதமடைந்தேன். கடல் அலைகள் திருவடிகளில் மெதுவாக ஸ்பர்சிப்பதால் நித்திரை கொண்டவனும், சிவந்த திருக்கண்களை உடையவனும், நெருங்கிய அலைகள் போன்ற நிறத்தை உடையவனுமான எம்பெருமானுடைய திருவடிகளை திருவநந்தாழ்வானாகிய படுக்கையின் மேல் கண்டு வணங்கினேன்.

*4. अनयाऽहं वशीभूतः कालमेतन्न बुद्धवान् ।
उच्च मध्यम नीचान्तां तामहं कथमावसे ।।

பார. (சாந்தி — 312 - 30): இந்த ப்ரக்ருதியினால் நான் வசம்

### § 2. 2 பழுதே போன பழைய நிலையை நினைத்து மனம் ஓய்ந்து போய் இனி தீயவழிகளில் செல்ல நடுங்குதல்

**अहो मे महती याता निष्फला जन्म-सन्ततिः**[*1], "யானே என்னை அறியகிலாதே யானே என்தனதே என்றிருந்தேன்"[*2], "நானே நாநாவித நரகம் புகும் பாவம் செய்தேன்"[*3], "அருநரகத்தழுந்தும் பயன் படைத்தேன்" (49 [*1]), **न सन्ति तावन्ति जलानि लोके**[4], **सिंहेन भूत्वा बहवो मयात्ताः**[*5] **इत्यादि परिदेवन**ங்களைப் பண்ணும்படி[1] முன்பு **सात्विक-संभाषणादि**களாலே முகிழ்த்த[2] **निर्वेद**ம்[3] **नमश्शब्द-**

---

செய்யப்பட்டவனாய் வீணாய்க் கழிந்தகாலம் எவ்வளவு என்று அறியவில்லை. உயர்ந்த தேவசரீரத்தையும், நடுத்தரமான மனித சரீரத்தையும், தாழ்ந்த விலங்கு ஸ்தாவரம் முதலிய சரீரத்தையும் உடைய இந்த ப்ரக்ருதியில் நான் எவ்வாறு வசிப்பேன்? □

1—வருந்தி அழும்படி. 2—அரும்பின. 3—பச்சாத்தாபம்.

*1. अहो मे महती याता निष्फला जन्म - सन्ततिः ।
अनाराधित - गोविन्द-चरणाम्भोरुहद्वया ॥

வங்கீ. காரிகை (11) : அந்தோ ! கோவிந்தனின் இரு திருவடித் தாமரைகளை ஆராதிக்காமல் பல பிறவித்தொடர் எனக்குப் பயனற்றதாகக் கழிந்தது.

*2. யானே என்னை அறியகிலாதே*
யானே என்தனதே என்றிருந்தேன்*
யானே நீ என்னுடைமையும் நீயே*
வானேயேத்தும் அவ்வானவரேறே!

திருவாய். (2-9-9): பரமபதத்திலுள்ளவர்களாலே ஸ்தோத்ரம் பண்ணப்பட்ட அவர்கள் ஸ்வாமியே! நான் உனக்குச் சரீரமாயிருப்பதால் நான் நீதான்; என்னுடையது என்று நான் எண்ணுகின்றவைகளும் நீயே. இப்படி எப்பொழுதும் உன்னுடைய சொத்தான நானே என் ஸ்வரூபத்தை அறிய சக்தியில்லாமல் 'நானும் என்னுடையதும் எனக்காகவே இருக்கின்றன' என்று இவ்வளவு காலம் எண்ணியிருந்தேன். (குறிப்பு: நித்யஸூரிகளின் அநுபவத்தைச் சொல்வதால் ஆழ்வார் அவ்வித அநுபவத்தை இதுவரையில் இழந்திருப்பதால் மிகவும் வருத்தப்படுகிறார் என்பது காட்டப்படுகிறது).

*3. மானேய் கண்மடவார் மயக்கில் பட்டு* மாநிலத்து
நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்*
தேனேய் பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலை * என்
ஆனாய்! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே.

பெரிய திரு. (1-9-2). தேன் நிறைந்த பூக்களையுடைய சோலைகளாலே சூழப்பட்ட திருமலையில் எழுந்தருளியிருப்பவனாய், என் குற்றங்களை ஆனைபோல பொறுக்குமவனே! மான் போன்ற கண்களையும் மடப்பத்தையும் உடைய ஸ்த்ரீகளது கண்மயக்கிலே அகப்பட்டு மஹாப்ருதிவியிலே பலவிதமான நரகங்களிலும் ப்ரவேசிக்கும்படியான பாபத்தை அடியேன் ஒருவனுமே செய்திருக்கிறேன். (இப்பொழுது அப்பாபச் செயல்களை விட்டொழித்து) தேவரீரைக் கிட்டி தேவரீர் திருவடிகளைச் சரணமாகப் பற்றினேன். சேஷபூதனை என்னை அடிமை கொண்டருள வேண்டும்.

*4. न सन्ति तावन्ति जलानि लोके सर्वेषु नानाब्धिषु
सर्वकालम् ॥
स्तन्यानि यावन्ति मयाऽतिघोरे पीतानि
संसारमहासमुद्रे ।

வி.தர் (98-12) (க்ஷத்ரபந்து உபாக்யானம்) ஹே நாத! பயங்கரமான இந்த ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தில் மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து, ஒவ்வொரு பிறவியிலும் தாயிடம் உண்ட பாலையெல்லாம் சேர்த்துப் பார்த்தால், அநாதி காலமாக எல்லா ஸமுத்ரத்திலிருந்ததும் இப்போது இருப்பதுமான ஜலமெல்லாங்கூட அதன் அளவு ஆகாது.

*5 सिंहेन भूत्वा बहवो मयाऽत्ताः ।
व्याघ्रेण भूत्वा बहवो मयाऽत्ताः ॥

வி.தர். (98 17): சிங்கமாய்ப் பிறந்து பல பிராணிகளைக் கொன்று தின்றிருக்கிறேன். புலியாய்ப் பிறந்து பல பிராணிகளைக் கொன்று தின்றிருக்கிறேன்,

निषेध्य-निरूपणத்தாலே முற்றி; "செய்யாதன செய்யோம்"*[1], "நயவேன் பிறன்பொருளை, நள்ளேன் கீழாரோடு"*[2] என்னும்படி "செய்யேல் தீவினை என்று அருள் செய்யும் கையார் சக்கரக் கண்ணபிரான்"*[3] अनुमतिபண்ணாத வழிகளில் आपत्-दशैயிலும் அடியிட நடுங்கும்படியாம்.

§ 2. 3. விவேகத்தால் விளையும் மனம் ஓய்தலின் பயன்

ईर्ष्यादिகளாலே[1] நிர்வேதம் பிறக்குமாகில், அது மேலும் विपरीत-वृत्तங்களிலே கைவளரப்பண்ணும். अनादि-मायानिद्रैயாலே உறங்கினவனுக்கு உணர்த்தியாலே[2] நிர்வேதம் பிறந்தால், இது डंभ-दर्पादिகளான आसुर-स्वभावங்களை அடியறுத்து[3], अमानित्वादिகளான आत्मगुणங்களோடே अविनाभूतமாய்[4], अपवर्ग-साधनाधिकारिயாக்கும்[5]. ஆனபின்பு अकृत्य-पर्यवसायिயான[6] अत्यन्त-सन्तोषத்திலும் ஆழங்கால்படாதே[7], सर्वकार्य-अवसादक

---

1—பொறாமை முதலானவற்றாலே. 2—நல்லறிவால். 3—வேருடன் அறுத்து. 4—(குணங்களை) விட்டுப் பிரியாததாய். 5—மோக்ஷத்தைப் பெற உரியவனாக்கும். 6—செய்யக் கூடாததில் முடியும். 7—முழுகிப்போகாமல்.

*1. வையத்துவாழ்வீர்காள்! நாமும் நம்பாவைக்கு*
செய்யும் கிரிசைகள் கேளீரோ* பாற்கடலுள்
பையத்துயின்ற பரமனடிபாடி*
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி*
மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்*
செய்யாதன செய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்*
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி*
உய்யுமாறெண்ணி உகந்தேலோரெம்பாவாய்.

திருப்பாவை (2): பூவுலகில் வாழப்பிறந்தவர்களே! நாமும் நம்முடைய நோன்புக்கு அநுஷ்டிக்கவேண்டிய சடங்குகளைக் கேளுங்கள். திருப்பாற்கடலில் மெள்ள கண்வளர்ந்தருளுகிற

எம்பெருமானுடைய திருவடிகளை (ப்ரீதி ப்ரேரிதைகளாய்ப்) பாடி நெய்யை உண்ணுதவர்களாயும், பால் அமுது செய்யாதவர் களாயும், விடியற் காலத்தில் ஸ்நாநஞ்செய்து கண்களை அஞ்ஜநங் கொண்டு அலங்கரியாதவர்களாயும், (நல்ல வாஸனையுள்ள) பூக் களைக் கொண்டு குழலில் தரியாதவர்களாயும், முன்னோர்கள் அநுஷ்டியாதவற்றைச் செய்யாதவர்களாயும், தீய கோட் சொல்லை ஒருவரிடமும் சென்று சொல்லாதவர்களாயும், யோக்ய விஷயத்திற்கொடுக்கும் பொருளையும் (ப்ரம்மசாரிகளுக்கும் ஸந்யாஸிகளுக்கும் கொடுக்கும்) பிக்ஷையையும் முடிந்தவரை கொடுத்தும் உஜ்ஜீவிக்கும் வழியை நன்கு சிந்தித்து மகிழ்ந் திருப்போம்.

*2. நயவேன் பிறர் பொருளை நள்ளேன் கீழாரோடு*
உயவேன் உயர்ந்தவரோடல்லால்* — வியவேன்
திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்*
வருமாறு என் (நம்) மேல் வினை?

முதல் திருவந். (64). எம்பெருமானுடைய உடைமையான ஆத்ம வஸ்துவை எனக்கென்று ஆசைப்பட மாட்டேன். ஆத்மா வைத் தம்முடையதாக நினைத்திருக்கும் ஸம்ஸாரிகளோடு நெருங்கமாட்டேன். எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கை யாலே உயர்ந்திருப்பவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைத் தவிர வேறொருவரிடமும் பேசமாட்டேன். ச்ரிய:பதியைத் தவிர வேறு யாரையும் தெய்வம் என்று துதிக்கமாட்டேன்; அவர்களைக் கண்டு வியக்கவும் மாட்டேன். இப்படிப்பட்ட அடியேனுக்குப் பாபம் எப்படி வரும்?

*3. செய்யேல் தீவினையென்று அருள்செய்யும்* என்
கையார் சக்கரக் கண்ணபிரானே!*
ஐயார் கண்டம் அடைக்கிலும்+ நின்கழல்
எய்யாது ஏத்த அருள்செய் எனக்கே.

திருவாய். (2-9-3): திருவாழியும் கையுமாயிருக்கிற உன் அழகைக் காட்டி, என் மனது வேறு விடயங்களில் போய் விழாதபடி அருள் புரிந்த என்னுடைய கண்ணபிரானே! நான் இவ்வுடலை விட்டுப் போகும்போது கபம் என் தொண்டையில் நிறைந்து என்னைப் பேசவொட்டாமல் செய்தாலும், உன்னுடைய திருவடி களை ஓயாமல் ஸ்தோத்திரம் பண்ண எனக்கு உன் க்ருபையாலே செய்தருளவேண்டும்.

மான[1] अत्यन्त-निर्वेद த்திலும் இழியாதே, सात्त्विक-धृति யைக்[2] கைப்பிடித்து निषिद्ध-प्रवाह த்தை[3] விலக்குகை

**निश्चल-विवेकपूर्व-निर्वेदफल**ம்

வான் பட்ட மன்னிருளில் மயங்குமாறும்
மறித்தொருகால் எனையூழி சென்றால் அன்றே*
ஊன்பட்ட உடலாழி வினையொழுக்கில்
ஒருகரையும் காணாதே ஒழுகுமாறும்*
தேன்பட்டவிடம் போல தித்திக்கின்ற
சிறுபயனே உறுபயன் என்றருந்து மாறும்*
தான்பட்டபடியிந்நேர்†[1] தானே கண்டு
தளர்ந்திடுமேல் வளர்ந்திடுமே தக்கவாறே. (5)

**इति श्री परमपदसोपाने द्वितीयं निर्वेदपर्व**



# ३. विरक्तिपर्व

உலகத் துயர்ந்தவரொன்றும் பயனில் உறுந்துயரும்*
அலகிற்படாதவப்போகம் கவர்ந்தெழுமம்புயத்தோன்*
கலகத்தொழில் மதுகைடபரால்படும் கட்டமெண்ணில்†[2]
பலகற்ற மெய்யடியார் படியார் இக்கடும் பவத்தே.* (6)

§ 3: 1. மோக்ஷம் தவிர்ந்த மற்ற ஸுகங்களிலுள்ள தோஷங்களை அநுஸந்திக்க வேண்டியமை

இப்படி विवेकमूल-निर्वेद पूर्त्தியாலே अपाय-प्रावण्य மற்றொலும்[4], सुखसङ्गेन बध्नाति*[1] என்னும் அளவான सत्त्वம்

---

1—எந்த காரியத்திலும் மனம் செல்லாதபடி செய்யும். 2—ஸாத்விகமான தைர்யத்தை. 3—செய்யக்கூடாத கர்மங்களின் பரம்பரையை. 4—நிஷித்த கர்மங்களில் ஆசை இல்லாமல் போனாலும்.

†1—தான்பட்ட படியின்றே[3]. 2—கட்டமெண்ணாம்[5],

5. (விவேகம் பெற்ற சேதநன்) வான்பட்ட—மூலப்ரக்ருதி அடையும் நிலையாகிய; மன் இருளில் — வலியதமஸ்ஸில்; மயங்கு மாறும் — (ப்ரளயத்தில்) அறிவிழந்து கிடக்கும் நிலைமையையும்; எனைஊழி சென்றால் — (இப்படியே)எவ்வளவோ யுகங்கள் கழிந்த பிறகு; அன்று — ஸ்ருஷ்டி காலத்தில்; மறித்து ஒருகால் —மறு படியும் ஒருமுறை; ஊன்பட்ட உடல் — மாம்ஸம் சேர்ந்த உடலைத் தருகின்ற; ஓர் வினை ஆழி ஒழுக்கில் — ஒப்பற்ற கர்மங்களாகிய ஸமுத்ரத்தில்; ஒருகரையும் காணுதே — ஒரு கரையையும் காண முடியாமல்; ஒழுகுமாறும் — சென்றுழலும் நிலைமையையும்; தேன்பட்ட விடம் போல — தேனுடன் கலந்த விஷத்தைப் போல; தித்திக்கின்ற—(ஸ்தூலமாய்ப் பார்த்தால்) ஸுகமாகத் தோன்று கின்ற; சிறுபயனே — அற்ப பலன்களையே; உறுபயன் என்று— (தனக்குத்) தக்க பலனென்று (கருதி); அருந்துமாறும்— அநுபவிக்கும் வகையையும்; இந்நேர்—இவ்வாறே; தான் பட்டபடி — தான் அல்லல்பட்ட ப்ரகாரங்களையும்; தானே கண்டு வளர்ந்திடுமேல்—தானே பார்த்து மனம் தளர்ந்தால்; தக்க ஆறு வளர்ந்திடுமே—(தன் ஸ்வரூபத்திற்குத்) தக்க உபாயம் வ்ருத்தி யாகும் (அனுஷ்டிக்கப்பெறும்).

6. உலகத்து உயர்ந்தவர் ஒன்றும் பயனில்—உலகத்தில் உயர்ந் தவர்கள் ஈடுபட்டு அநுபவிக்கின்ற பலனில்; உறும் துயரும்— (நடுவே) வரும் துன்பத்தையும்; அலகில்படாத—அளவில் அகப் படாத; அப்போகம் கவர்ந்து—ப்ரம்ஹலோக ஸுகத்தை அநுப வித்து; எழும் அம்புயத்தோன் — உயர்ந்திருப்பவனும் தாமரை யில் இருப்பவனுமாகிய ப்ரஹ்மதேவன்; கலகத்தொழில் மதுகை டபரால் — சண்டையே தொழிலாகக் கொண்ட மது, கைடபன என்னும் அஸுரர்களால்; படும் கட்டம் எண்ணில் — படுகின்ற கஷ்டங்களையும் நினைத்துப்பார்த்தால்; பல கற்ற மெய் அடியார் — பல நூல்களையும் கற்ற உண்மையான அடியார்கள் (பாகவதர்); இக்கடும் பவத்து—இந்தக்கொடிய ஸம்ஸாரத்தில்; படியார்—ஈடு படமாட்டார்கள் (வெறுப்படைவார்கள்).

*1. तत्र सत्त्वं निर्मलत्वात् प्रकाशकमनामयम् ।
सुखसङ्गेन बध्नाति ज्ञानसङ्गेन चानघ ॥

கீதை (14-6): குற்றமற்றவனே! அந்த குணங்களில் ஸத்துவ குணம் அழுக்கற்றதாகையால் தெளிவான ஞானத்தை உண்டு பண்ணும்; ஆரோக்யத்துக்குக் காரணமாகும்; ஸுகத்தில் பற்று தலை அளித்தும், ஞானத்தில் பற்றுதலை அளித்தும் ஸம்ஸாரத்தில் ஜீவனை அது பிணைக்கிறது.

அடியாக [1]ऐहिक-आमुष्मिक-सुखसङ्ग-अनुषङ्गத்தாலே[1] **भोगहेतु-पुण्य**ங்களாகிற பொன்விலங்குகளைப் பூட்டிக்கொள்ளுமாகில், இவன் முமுக்ஷு அல்லனும். ஆகையால் "கடையறப் பாசங்கள் விடும்படி"*1 **इतर-सुख-दोष**ங்களை **यथा-अवस्थित**மாக **अनुसन्धि**க்க வேண்டும்.

**§ 3. 2 ப்ராக்ருத ஸுகங்களில் உள்ள தோஷங்களின் விவரம்**

**§ 3. 2. 1 ஐச்வரியம்-உறவினர் இவற்றின் மூலமான ஸுகங்களில் உள்ள தோஷங்கள்**

எல்லாருக்கும் தம்தம்[2] **सुख**ங்களை "ஒருநாயகம்"*2 "நண்ணுதார் முறுவலிப்ப"*3, "கொண்ட பெண்டிர்"*4 (B—39) இத்தியாதிகளிற் படியே தெளியப்பார்க்கு

---

1—இவ்வுலகிலும், பரலோகத்திலும் உண்டாகும் ஸுகத்தில் ஆசையின் சம்பந்தத்தினுல்.

†1—என்னுமளவாக ஸத்வமடியாய்[1]; என்னும்படி அளவுனை ஸத்வமடியாக[8]. 2—தத்தம்[1]

*1. திருவாய். (8-2-8) வாசனைகூட இல்லாமல் ஆசை அற்றுப் போகும்படி.

*2. ஒரு நாயகமாய் ஓடவுலகுடனுண்டவர்*
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்
பெருநாடுகாண இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்*
திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்துய்ம்மினே.

திருவாய். (4-1-1): (இந்தத் திருவாய் மொழியில் 'ஐஸ்வர்யம் அற்பமாய் நிலையற்றதாய் இருப்பது, ஆத்மாநுபவம் தாழ்ந்தது, பகவதநுபவமே தலை சிறந்தது' என ஆழ்வார் உபதேசிக்கிறுர்.) ஏக சக்ராதிபதியாய் பூவுலகம் முழுவதும் ஆண்ட பேரரசர், போரில் தோற்று பிறர் அறியாதிருக்க பிச்சைக்காரன் வேடம் பூண்டு இரவில் நிலாபடாத இடமாகச் சென்று தன்னையும் தன் குடும்பத்தையும் காக்க பிச்சை எடுக்கும்போது கருத்த நாயின் மீது கால் வைக்க, அது பிடுங்க, கையிலிருந்த சோற்றுப்பானை விழுந்து சிதற, விழுந்த சோற்றை அள்ளி எடுத்து நகரும்போது வீட்டிலுள்ளவர் விளக்குடன் வந்து பார்த்து 'ஐயோ! பாவம்'

என ஏங்குவதைப் பொறுக்காது கிராமம் தோறும் சென்று வெட்கத்தை விட்டு பிச்சை எடுத்துப் பிழைப்பர். ஏன் இந்த நிலே? இம்மையில் எல்லா ஐச்வர்யங்களேயும் பெறவேணும் என்கிற பேராசையன்றே அனைத்தையும் பெறச் செய்து அவற்றை இழந்ததும் இந்நிலைக்கு ஆளாக்குகிறது. எனவே பொருளாசையை விட்டு எம்பெருமான் திருவடிகளை தியானித்து உய்யும் வழியைக் கொள்வீராக.

3. நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க*
எண்ணாராத் துயர்விளைக்கும் இவையென்ன உலகியற்கை?*
கண்ணாளா! கடல் கடைந்தாய்! உனகழற்கே வரும் பரிசு*
தண்ணாவாதடியேனைப் பணிகண்டாய் சாமாறே.

திருவாய். (4-9-1)(இந்தத் திருவாய்மொழியில் தன்னைச் சுற்றிலுமுள்ளவர்களின் தன்மை கூறப்படுகிறது): ப்ரதிகூலர்கள் (நமக்குக் கெடுதி வரும்போது நம்மைக் கண்டு ஏளனமாகச்) சிரித்துக்கொண்டிருக்க, நல்ல உறவினர்கள் (நமக்கு வேண்டியவனுக்கு துக்கம் வந்ததே என) மனமுருகி வருந்தும் படியாகவும் கணக்கற்ற துன்பங்களை உண்டு பண்ணுகிற இந்த உலகினது ஸ்வபாவமிருப்பது ஏனோ? ஆகையால், நிறைந்த கருணையும் குளிர்ந்த பார்வையும் உடையவனே! திருப்பார்க்கடலைக் கடைந்தவனே! உன் திருவடிகளுக்கே நான் வந்து சேரும் பிரகாரத்தைச் சொல். (இப்படிச் செய்யத் திருவுள்ளமில்லாவிடில்) தாமதமில்லாமல் நான் மரணமடையும் வழியை அருளிச் செய்யவேண்டும்.

4. கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும்*
கண்டதோடு பட்டதல்லால் காதல் மற்றுயாதுமில்லை*
எண்திசையும் கீழும் மேலும் முற்றவும் உண்ட பிரான்*
தொண்டரோமாய் உய்யல்லால் இல்லை கண்டீர் துணையே.

திருவாய். (9-1-1): (இந்தத் திருவாய்மொழியில் கர்மத்தால் ஏற்பட்ட உறவினரைவிட்டு இயற்கையுறவினனாய் அடியார்க்கு ஆட்படுத்தும் எம்பெருமானைப் பற்றுமாறு ஆழ்வார் உபதேசிக்கிறார்.) (உலகத்திலிருப்பவர்களே!) உங்களுக்கு பந்துக்களாக உங்கள்மனதால் எண்ணப்பட்ட மனைவிகளும், பிள்ளைகளும், ஸம்பந்திகளும், ஜ்ஞாதிகளும், மற்றபந்துக்களும் உங்களுக்கு உண்மையில் பந்துக்கள் அல்ல. உங்கள் கையில் இருக்கும் பொருளோடு ஸம்பந்தம் தவிர வேறு ஒரு நட்பும் உங்களிடம் இல்லாதவர்கள்

மளவில், இவை निरन्तर-व्याप्त-दुःखान्धकारத்தின்[1] நடுவே மின்னொளி போலே†[1] தோற்றுவதும் மறைவதுமாம்படி தோற்றும். भोक्ताவுக்கு भोगस्थानமுமாய்†[2] भोगोपकरणமுமான स्व-पर-शरीरवर्गம निपुणனுக்குக் कुणपादि-बुद्धियोग्यமாய்[2], अत्यन्त-दुःखमयமாய், अत्यन्त-हेयமுமாய்[3] तटित्-चञ्चल-जीवितமுமாய்[4] இருக்கும என்னுமிடம் सप्त-धातुमयं त्रिमलं शुक्ल-शोणित-सम्भवं[1] என்றாற்போலே சொல்லுகிற श्रुतिகளிலும (C—36), अस्थि-स्थूणं स्नायु-बद्धं*2, मांसासृक्पूयविण्मूत्र*3, अनित्यमसुखं लोकं*4, गन्त्री वसुमती नाशं*5, मानुष्ये कदलीस्तंभ*6, यामेव रात्रिं प्रथमां*7, आसन्नतरतां याति*8,

---

*அவர்கள். ஆகையால் எட்டுத் திக்குகளையும், கீழே உள்ள உலகங்களையும், மேலே உள்ள உலகங்களையும் ஒன்றுவிடாமல் (பிரளய காலத்தில்) தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்த உபகாரகனுக்கு அடியார்களாய் (தாஸர்களாய்) உஜ்ஜீவிப்பதல்லது வேறொரு துணையில்லை. நமக்கு இது நிச்சயம்.* □

*1—இடைவிடாமல் நிறைந்திருக்கிற துக்கமாகிற இருட்டின். 2—பிணம் முதலியன போல் எண்ணக் கூடியதாய். 3—மிகவும் அருவருக்கத் தக்கதாய். 4—மின்னல் போல் நிலையற்ற ப்ராணனையுடையதாய்.*

*†1—மின்போலே[1]. 2—ஸ்தானமுமாய்[1].*

**1. கர்போபநிஷத் (1): ரஸம்—ரக்தம்—மாம்ஸம்—மேதஸ்—எலும்பு—மஜ்ஜை—சுக்ரம் என்னும் ஏழுவித தாதுக்களால் ஆனதும், வாதம்—பித்தம்—கபம் என்னும் மூன்று மலங்களை உடையதும், சுக்லம்—சோணிதம் இவற்றின் சேர்க்கையால் உண்டாவதுமான (சரீரம்).*

*2. अस्थिस्थूणं स्नायुबद्धं मांस - शोणित लेपनं ।
चर्मावनद्धं दुर्गन्धि पात्रं मूत्रपुरीषयोः ।

जराशोक समाविष्टं रोगायतनं आतुरम् ।
रजस्वलं अनित्यं च भूतावासं इमं त्यजेत् ॥

மநு. (6-76): ஜீவனுடைய சரீரமாகிற வீடு—எலும்புகளாகிற தூண்களை உடையதும், நரம்புகளாகிற கயிற்றால் கட்டப்பட்டதும், மாம்ஸ ரக்தங்களால் மெழுகப்பட்டதும், தோலினால் மூடப்பட்டதும், மல மூத்ரங்கள் நிறைந்ததும், துர்நாற்றமுடையதும், கிழத்தனம் சோகம் சூழ்ந்ததும், வியாதிகட்கு நிலைக்களமாயும், பசி தாகம் குளிர்ச்சி வெப்பங்களுக்கு பயந்ததும், ரஜோகுணம் நிறைந்ததும், அழியும் தன்மையுடையதும், பஞ்சபூதமயமாயும் இருப்பது. இத்தகு சரீரத்தை விடுவதே சிறப்பாம்.

*3. मांसासृक्पूय - विण्मूत्र - मेदो - मज्जास्थि संहतौ ।
देहे चेत् प्रीतिमान् मूढ: भविता नरकेऽपि स: ॥

வி.பு (1-17-63) மாம்ஸம், ரக்தம், ஊந்தண்ணீர், விஷ்டை, மூத்ரம், மேதஸ், மஜ்ஜை, எலும்பு என்ற இவற்றின் சேர்க்கையாலுண்டான சரீரத்தில் ஒரு முட்டாள் ஆசையை வைப்பானாகில் நரகத்திலும் அவன் ப்ரீதியையே செய்வான். (கருத்து: நரகத்தில் தள்ளுவது அவனுக்கு தண்டனை யாகாது).

*4. अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥

கீதை. (9-33): அழிவுள்ளதும், துக்கத்தை விளைவிப்பதுமான இந்த உலகத்தை அடைந்திருக்கிற நீ என்னையே பஜனம் செய்.

*5. (?) பூமியே அழிவை அடையப்போகிறது. (மற்றும் அதனுள் இருக்கும் பொருள்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?)

*6. (?) வாழைக் கட்டைபோல் ஸாரமற்ற மனித உடலில்.

*7. यामेव रात्रिं प्रथमां गर्भो विशति मातरम् ॥
तामेव रात्रिं प्रस्वाप्य मरणाय विवर्तक: ॥

பார. (சாந்தி-283-12): எந்த முதல் ராத்ரியில் கர்பமானது தாய் வயிற்றில் பிரவேசிக்கிறதோ, அந்த ராத்ரியிலேயே இவனை இறக்கச் செய்வதற்காக இவனை உறங்கச் செய்து யமனும் பிரவேசிக்கிறான்.

*8 (?): (உதய—அஸ்தமனங்கள் ஆக ஆக மரணம்) மிகவும் மிகவும் அருகில் இருக்கும் தன்மையை அடைகிறது.

मस्तकस्थायिनं मृत्युं†1, प्रातर्मूत्रपुरीषाभ्यां*2, "ஊனிடைச் சுவர் வைத்து"*3, "பொல்லாவாக்கை"†4, "புண்ணு ராக்கை"*5, "மின்னின நிலையில மன்னுயிராக்கைகள்"*6, "வேதநூல் பிராயம் நூறு"*7 இத்யாதிகளிலும் விளங்கக் காணலாம்.

---

†1—कदलीस्तम्भं1.

*1 (?): உச்சந்தலையிலேயே நிற்கிற யமனை (அறிகிறேனில்லை).

*2. प्रातः मूत्रपुरीषाभ्यां मध्याह्ने क्षुत्पिपासया ।
नृणाकामेन वाध्यन्ते प्राणिनो निशि निद्रया ॥

(ஸுபாஷித ரத்னகரம்) : காலையில் விடப்படும் மல மூத்ரங்களாலும், பகலில் பசியினாலும் தாகத்தினாலும், ராத்ரியில் ஆசை காமங்களாலும் தூக்கத்தினாலும் பிராணிகள் (ஜீவர்கள்) கஷ்டப்படுகிறார்கள்.

*3. ஊனிடைச் சுவர்வைத்து என்புதூண் நாட்டி
உரோமம் வேய்ந்து ஒன்பது வாசல்
தானுடைக்குரம்பை பிரியும் போது
உன்தன் சரணமே சரணமென்றிருந்தேன்*
தேனுடைக் கமலத்திருவினுக்கரசே!
திரைகொள் மாநெடுங்கடல் கிடந்தாய்!*
நானுடைத் தவத்தால் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள் எந்தாய்!

பெரியதிரு. (1-6-9); மதுவை உடைத்தான தாமரைப் பூவை இருப்பிடமாக உடைய பெரிய பிராட்டியார்க்கு வல்லபனே! அலையையுடையதும் பரந்தும் ஆழ்ந்ததுமான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனே! திருநைமிசாரணியத்தில் எழுந்தருளியிருக்கிற பரமோபகாரகனே! மாம்ஸத்தை நடுநடுவே சுவராக வைத்து, எலும்பைத் தூணாக நட்டு, மயிராலே மூடப்பட்டதாய், ஒன்பது துவாரங்களையுடைய குடிலாகிற இச்சரீரத்தை விட்டு உயிர் பிரியுங்காலத்தில் தேவரீருடைய திருவடிகளே ரக்ஷகமாக வேண்டும்—என்று நினைத்திருந்தேன். இப்போது என்னுடைய தபஸ்ஸான தேவரீராலே தேவரீருடைய திருவடிகளைக் கிட்டப் பெற்றேன்.

*4. கொல்லா மாக்கோல் கொலை செய்து, பாரதப்போர்*
எல்லாச் சேனையும் இருநிலத்து அவித்த எந்தாய்!*
பொல்லாவாக்கையின் புணர்வினையறுக்கலறு*
சொல்லாய் யான் உன்னைச் சார்வதோர் சூழ்ச்சியே.

திருவாய் (3-2-3): (ஆயுதம் போல்) கொலை செய்யாத குதிரையோட்டும் கோலாலே குருக்ஷேத்திரம் என்னும் உயர்ந்த இடத்தில் பாரத யுத்தத்தில் எல்லாச் சேனைகளையும் நாசம் செய்த என் ஸ்வாமியே! கொடுமையான இந்த உடம்பின் சேர்க்கையை எங்கள் முயற்சியால் அறுக்க முடியாது. ஆகையால் உன் திருவடிகளை நான் வந்து சேறுவதற்கு ஒரு உபாயத்தை நீ சொல்ல வேண்டும்.

*5. மண்ணாய் நீர் எரி கால் மஞ்சுலாவும் ஆகாசமுமாம்*
புண்ணாராக்கை தன்னுள் புலம்பித்தளர்ந்து
எய்த்தொழிந்தேன்*
விண்ணார் நீள்சிகர விரையார் திருவேங்கடவா! *
அண்ணா! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே.

பெரியதிரு. (1-9-6): ஆகாசத்தை அளாவும்படி உயர்ந்த கொடுமுடிகளையும் பரிமளத்தையும் உடைத்தான திருமலையை வாஸஸ்த்தானமாகவுடையவனே! எல்லா உறவு முறையுமானவனே! பூமியாயும், ஜலமாயும், அக்நியாயும், வாயுவாயும், மேகங்கள் ஸஞ்சரியா நின்றுள்ள ஆகாசமுமாகிய ஐந்து பூதமயமானதாய் வ்ரணத்தோடொத்த தேஹத்திலே (அகப்பட்டு, அங்கு கிடந்து) கூப்பிட்டு, மெலிந்து மிகவும் இளைத்தவனான அடியேன் தேவரீர் திருவடிகளை உபாயமாகப் பற்றினேன். அடியேனை அடிமை கொண்டருளவேண்டும்.

*6. மின்னின் நிலையில* மன்னுயிராக்கைகள்*
என்னுமிடத்து* இறை உன்னுமின் நீரே.

திருவாய். (1-2-2): 'ஸ்திரமான (அழிவற்ற) ஆத்மாக்களுடைய உடல்கள் மின்னலுடைய இருப்புக்கூட இல்லாதவைகள்' என்கிற விஷயத்தை நீங்களே கொஞ்சம் ஆலோசியுங்கள்.

*7. வேதநூல் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேலும்*
பாதியும் உறங்கிப்போகும் நின்றதில் பதினையாண்டு*
பேதைபாலகனதாகும் பிணி பசி மூப்புத் துன்பம்*
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமாநகருளானே!

திருமாலை (3): அரங்கமாநகருளானே! வேதசாஸ்த்திரத்தின்படி மனிதர்கள் நூறு வருஷகாலம் ஜீவித்திருப்பார்களே

§3. 2. 2 அரசபோகத்திலுள்ள தோஷங்கள

धर्मोत्तரராய்[1](†[1]) चक्रवर्तिपदं பெற்றிருந்த नल-नृग-नहुषादिகளுள்பட उन्मत्त-कृकलास-भुजङ्ग-नरकादि அவஸ்தைகளையும் அடைந்து அவர்கள் பட்டபாடுகளையும் (B—40), அவர்கள் தந்தாம்†[2] கதைகளும்†[2] அநுமரணம்[2] பண்ணிப் போன படிகளையும் கேட்டால், "இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்"[1] என்னும்படி राज्यादि-सुखसङ्गம் अनुषङ्गியாது[3].

§3. 2. 3: ஸ்வர்க்க ஸுகத்திலுள்ள தோஷங்கள்

தன்னோடொக்க ஒழுகுசங்கிலியிலே[4] கோப்புண்டு[5] உழலுகிற தேவர்களுக்கு இறைக்குடிமகனாய்[6] நெடுநேர்த்திகளோடும்[7] நெடும் காயக்क्लेशங்களோடும் நெடுநாள் பண்ணின यज्ञादि-प्रयासத்திற்குப் फलமாக स्थूलशरीरं விழுந்தால் संपिण्डित-सर्वंकरणமான[8] भूतसूक्ष्म-समुदायத்தோடே கூடி†[3] प्राण - पवन - वेग - विक्षिप्तனாய்க் கொண்டு[9] धूम-रात्रि-अपरपक्ष-दक्षिणायन-पितृलोक-आकाश-चन्द्र-क्रमத்தாலே स्वर्गப் பரணிலே ஏறி, அங்கே தேவஜாதி என்னும்படி ஒரு देहத்தை எடுத்து, எழுது பரதேசம் போன கணக்காய் (B—41), தனக்கு மேலான தேவர்களுக்கு 'पशु' என்னலாம் படி எடுத்துச் சுமந்து திரிந்து, ஏறவிட்ட[10] கர்மம்[10] விசையற்றவளவிலே[11] अन्तवत् तु फलं तेषां*[2], आब्रह्म-भुवनाल्लोकाः*[3], "சுவர்க்கமெய்தி

---

யானாலும் அதில் பாதியான ஐம்பது வருஷங்களும் ஒன்றுமறியாத குழந்தைப் பருவமாயும், பாலப் பருவமாயும், பின்னர் விஷயப்ரவணனாய்த் திரியும் யௌவனாவஸ்தையாயும், வியாதியினால் பீடிக்கப்பட்டவனாயும், ஐந்து இந்திரியங்கட்கும் ஐம்புலனிலுண்டான ஆசையைத் தணிக்கும் காலமாயும், கிழத்தனமாயும் மற்றும் பல துன்பங்களாயும் இப்படி ஆயுள் முழுதும் பெரும்பாலும் பிரதிகூலமாகக் கழிகிறபடியால், மீண்டும பிறப்பதை ஒரு காலும் விரும்பமாட்டேன். □

1—தர்மத்திஞல் உயர்ந்தவர்களாய். 2—உடன் கட்டை ஏறுதல். 3—உண்டாகாது. 4—பல மாடுகளை சேர்த்து கட்டக் கூடிய சங்கிலியிலே. 5—கோர்க்கப்பட்டு; கட்டப்பட்டு. 6—கப்பம் கட்டுகிற குடியில் பிறந்தவஞய். 7—நீண்ட காலத்திய ஆசைகளோடும். 8—ஒன்ருக சேர்க்கப்பட்ட எல்லா இந்திரியங்களையும் உடையதுமான. 9—ப்ராணவாயுவின் வேகத்திஞல் தள்ளப்பட்டவஞய். 10—ஸ்வர்க்காதி பதங்களை அடைவதற்கு காரணமாயிருந்த ஜோதிஷ்டோமம் முதலிய கருமங்கள். 11—வேகம் குறைந்தபோது (அதாவது, கர்மபலனைக் கொடுத்த பிறகு).

†1—ஆகையால் தர்மோத்தரராய்[1]. 2—"தந்தாம் கதைகளும்" என்பதற்கு பதிலாக "दारங்களும்"[1]. 3—கூட[3].

*1. கம்பமதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து*
இம்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்*
எம்பெருமான் ஈசன் எழில் வேங்கடமலைமேல்*
தம்பகமாய் நிற்கும் தவமுடையெஞவேனே.

பெருமாள் திரு. (4-5)· கண்டவரெல்லாரும் நடுங்கும்படியான மதங்கொண்ட யானையினுடைய கழுத்தின் மேலே (பெருமை தோன்ற) வீற்றிருந்து எல்லா போகங்களையும் அநுபவிக்கும்படியான ஐச்வர்யத்தையும், (அதற்கு ஸாதனமான) இந்த அரசாட்சியையும் நான் விரும்ப மாட்டேன். எனக்கு ஸ்வாமியும் எல்லா உலகுக்கும் தலைவனுமான ஸர்வேச்வரனுடைய அழகிய திருமலையிலே (ஒரு காரியத்துக்கும் உதவாது முளைத்துத் தீய்ந்து போவதொரு) தாவரமாக இருக்கும் படியான பாக்யத்தை உடையவஞகக் கடவேன்.

*2. अन्तवत्तु फलं तेषां तद् भवत्यल्पमेधसाम् ।
देवान् देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥

கீதை (7-2-3): அற்பபுத்தியையுடைய மற்ற தேவர்களை ஆராதிப்பவர்களுக்கு அந்த ஆராதனத்தின் பலன் அழிவுள்ளதாகவே ஆகின்றது. மற்ற தேவர்களை ஆராதிப்பவர் அந்த தேவர்களை அடைகின்றனர். என்னையே அன்புடன் ஆராதிப்பவர்களோ என்னையே அடைகின்றனர்.

*3. आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥

யும் மீள்வர்கள்''[*1] இத்யாதிகள்படியே தள்ளுண்டு தகரவிழுந்து[1], அங்கே தேவசரீரத்தையும் இழந்து,

§3: 2: 4. பிறவித் துயர்

அதின் **भूतसूक्ष्म-समुदाय**த்தோடேகூட **चन्द्रस्थान**த்தினின்றும் **आकाश-वायु-धूम-अभ्र-मेघवृष्टि-व्रीह्यादि**களாலே[2] பிரியப்[†1] பேரிடவொண்ணாதபடி கலந்து போந்து, **अन्नमिश्रित**னாய்க் கொண்டு **पुरुषशरीर-नरक**த்திலே **प्रवेशि**த்து, **रेतोरूप-परिणाम**த்தாலே[3] **स्त्रीशरीर-शोणित-गर्त**த்திலே[4] விழுந்து, **कलल - बुद्बुदादि - अवस्थै**களையும்[*2] அடைந்து **स्राव-पातादि**[5] விபத்துக்களுக்குத் தப்பிளுகில் 'புண்ணை மறைய வரியுண்டு'[*3] **शकृत्-मूत्र-महापङ्कशायि**யாய்[6] **संपिण्डित-सर्वगात्र**னாய்[7](†[2]) முகம் புதையுண்டு, **अतिदुस्सह**ங்களான **गर्भवास-क्लेश**ங்களையும் **अनुभवि**த்து, **उल्ब-संवेष्टित**னாய்[8] (B—42) **भुग्नपृष्ठग्रीव**னாய்க் கொண்டு[9](†[3]) **प्राजापत्यवायु**வாலே[10] தலைகீழாய்த் திருப்புண்டு **प्रसूति-मारुत-बल**த்தாலே[11] **योनियन्त्र-पीडित**னாய்க் கொண்டு மஹாதுக்கத்தோடே **मलान्तर**ங்கள் போலே **अशुचि-प्रस्तर**த்திலே[12] விழுந்து **बाह्य-वायुस्पर्शकाल**த்திலே[13] மோஹிநியான **भगवन्माय**யாலே **अपहृत-प्रज्ञ**னாய் **जन्म-मरण-शुभ-अशुभकर्म-स्मृति**களை இழந்து, "ஐவர் திசைதிசை வலித்தெற்ற''[*4] **बाल्यादि-वार्धकान्त-दुर्निवार-दुःखपरंपरै**யாலே

---

*கீதை (8-16): அர்ஜுனா! நான்முகனின் லோகம் உட்பட எல்லா லோகங்களும் அழிகின்றவை (மீண்டும் அவை உண்டாகும்). குந்தீபுத்ரனே! என்னை அடைந்தாலோ (எனது லோகம் பெற்ருலோ) மீண்டும் பிறவி இல்லை.* □

†1—பிரித்து[4]. 2—संपीडित-सर्वगात्रனாய்[1]. 3—भुग्नपृष्ट-शिरोग्रीवனாய்க்[1] கொண்டு[4].

1—தலைகீழாக (அடிபட்டு) விழுந்து; சிதறும்படியாக விழுந்து. 2—தூமம் = புகை. அப்ரம் = ஜலத்தைக் குடித்திருக்கும் மேகம். மேகம் = மழை பெய்து கொண்டிருக்கிற மேகம். வ்ருஷ்டி = மழை,

வ்ரீஹி=நெல். 3—விந்துவாக மாற்றத்தினால். 4—சோணித கர்தம்=ரத்தம் தங்கும் பள்ளத்தில். 5—கரைதல் விழுதல் முதலிய. 6—மல மூத்திரமாகிற பெருஞ்சேற்றிலே கிடப்பவனாய். 7—நெருங்கிப் பிணைக்கப்பட்ட எல்லா அவயங்களை உடையவனாய். 8—தோலால் சுற்றப்பட்ட கர்பத்தில் உள்ளவனாய். 9—மடங்கிய கழுத்தையும் முதுகையும் உடையவனாய். 10—ப்ரஸவத்திற்குக் காரணமான வாயுவால். 11—வெளியே தள்ளும் காற்றின் பலத்தால். 12—தூய்மையற்ற (படுக்கையில்) இடத்தில். 13—வெளியே உள்ள சடம் என்ற காற்று தொடுகிற காலத்தில்.

*1. படிமன்னு பல்கலன் பற்றோடறுத்து ஐம்புலன் வென்று*
செடிமன்னுகாயம் செற்றார்களும் ஆங்கவனையில்லார்*
குடிமன்னுமின் சுவர்க்கமெய்தியும் மீள்வர்கள் மீள்வில்லை*
கொடிமன்னு புள்ளுடை அண்ணல் கழல்கள் குறுகுமினோ.

திருவாய். (4-1-9): வீடு நிலம் முதலானவைகளையும், தலைமுறை தலைமுறையாய் வந்திருக்கிற பல ஆபரணங்களையும் அடியோடு விட்டுவிட்டு, ஐந்து இந்திரியங்களையும் வென்று, உடம்பில் செடி வளர்ந்து கெடும்படி அதைக் கவனிக்காமலிருந்து தவம்புரிந்தாலும் எம்பெருமானை உபாயமாக ஆச்ரயிக்காவிடில் அந்த சுவர்க்கம் கிடைக்காது. ஜநங்கள் நிலையாயிருந்து அநுபவிக்கக் கூடிய இனியதான சுவர்க்கத்தை அடைந்தும் (புண்ணியம் நசித்தவுடன் அதைவிட்டுத் திரும்புவார்கள்). (ஆகையால்) சுவர்க்கம் முதலியவற்றை விரும்பாது த்வஜத்தில் நிலையாய் கருடனையுடைய ஸ்வாமியினுடைய திருவடிகளைக் கிட்டுங்கள் (ஆச்ரயிங்கள்). அவைகளை விட்டுத் திரும்புவதில்லை.

*2. கலலம்—ஒரு இரவு ஆன கர்ப்பம். புத்புதம்—ஏழு இரவுகளான கர்ப்பம். ஸ்ராவம்—(நான்கு மாதத்திற்குள் ஏற்படும்) ஜலரூபமான கர்ப்ப விநாசம். பாதம்—(ஐந்தாவது அல்லது ஆறாவது மாதத்தில் வரும் கடினமான கர்ப்பம்) விழுதல்.

*3. திருவாய். (5-1-5): (சரீரத்திற்குள் இருக்கும்) புண்முதலிய தோஷங்களைக் காணவொண்ணாதபடி, இடைவெளியில்லாமல் கட்டி.

*4. திருவாய் (7-1-10): ஐம்புலன்களும் வெவ்வேறு திசைகளில் (சப்தாதி விஷயங்களில்) பலாத்காரமாக இழுத்துப் பிடிக்க,

न्नனாய், एकोत्तरशतं मृत्युमथर्वाणः प्रचक्षते*[1] என்கிறபடியே ஏதேனுமொரு வயஸ்ஸிலே மரணவேதனையோடே தலைக்கட்டி பழைய வட்டத்திலே சூருவளிக்காற்று போலே சுழலும்படிகளைக் கேட்டால் स्वर्गादि-सुखसङ्ग-निवृत्तियுண்டாம்[1].

§3. 2. 5. இந்திராதி பதவிகளில் உள்ள தோஷம்

रावण-हिरण्य-वृत्रादिகள் (B—43) கையிலே इन्द्रादिகள்†[1] படும்பாட்டைக் கேட்டால், சந்தனக் கழுவோடொத்த[2](†[2]) लोकपालादि-पदங்களிலும் सङ्गம் தீரும்.

§3. 2. 6. அஸுரர்களின் செல்வங்களில் உள்ள தோஷம்

அவர்களைப் பிடித்த रावणादिகள் தாங்களும் कार्तवीर्यादिகள் (B—44) கையிலே கட்டுண்டும் நெருக்குண்டும் முடிவில் पुत्र-मित्रादिகளையும் இழந்து கழுகு நிழலிலே कलत्रங்கள் கதறக் கிடந்தபடிகளைக் கேட்டால் 'திண்கழற்கால் அசுரர்கள்'*[2] செல்வங்களிலும் சிந்தை செல்லாது†[3].

§3. 2. 7. சிவனுடைய பதவியும் விரும்பத் தகாததே

இவர்களுக்கு வரங்கொடுத்து வாழ்விக்க வல்லனாய், सर्वमेघ-यज्ञத்தாலே[3] 'தேவதேவன்' என்று பேர் பெற்றுத் திரிபுரம் எரிக்கும் (B—45) சேவகமுடையனான[4] सृष्टिसंहार-अधिकारिக்கு (B—46) वृक-अन्धकादि-वृत्तान्तங்களில் பிறந்த விசேஷங்களைக் கேட்டால் (B—47) रुद्रपदத்திலும் ருசி பிறவாது.

§3. 2. 8. பிரும்ம பதவியும் விரும்பத் தகாததே

சில सृष्टि-विशेषங்களிலே ருத்ரனுக்கு ज्येष्ठभ्राताவாயும் பிதாவாயும் பிறந்து ஸர்வேச்வரனுக்கு औरस-पुत्रனுமாய் अव्यवहित-शिष्यனுமாய்க் கொண்டு, क्षेत्रज्ञ

ருடைய ஆநந்தங்களெல்லாவற்றிலும் மேலான ஆநந்தத்தை உடையவனான ब्रह्मा தான் "பெருவிசும் பின்மீது போயிருக்கும் நெடுவெள்ளமெல்லாம் கணைக்காலளவாம்படி'*3 வளர்ந்துவந்த மது கைடபர்களைக் கண்டு महाभयाक्रान्तனாய், தனக்குக் கண்களும் धनங்களுமான வேதங்களைப் பறிகொடுத்து, சுருணை[5] சோர்ந்த[6] கணக்கனைப்போலே நீர்க்கடை[7] நிலக்கடை[8](†[4]) அறியாதே विलापம் பண்ண[9], அப்போது கேட்டருளினனொரு பரமகாருணிகனானவன் विरोधि - निराकरणம் பண்ணி[10] வேதங்களையும் மீட்டுக் கொடுக்க, மீண்டும் 'अण्डाधिपति' என்று வீற்றிருந்த படியையும் அநுஸந்

---

*1—ஸ்வர்க்கம் முதலிய ஸுகங்களில் ஈடுபாடு கழியும். 2—சந்தன மரத்தினால் ஆன கழுமரத்தில் ஏற்றப்பட்டது போல. (சந்தன மரத்தால் ஆன கழுவில் ஏற்றப்பட்டாலும், இறப்பவனுக்கு ஸுகம் இருக்காது. அதுபோன்றவை இந்த்ராதி பதவிகள்.) 3—ஸர்வமேத யஜ்ஞம்=தன்னுடையது அனைத்தையும் கொடுத்து, கடைசியில் தன்னையும் ஹோமம் செய்யும்யாகம். 4—வீரமுடையவனான. 5—நன்செய், புன்செய் விவரம் காட்டும் கணக்கின் ஓலைச் சுருள்; செய்=வயல். 6—இழந்த. 7—நீர் தங்கும் குளம் முதலியவற்றின் எல்லை. 8—நிலங்களின் அளவு. 9—அழ. 10—பகைவரை அழித்து.*

†1—'இந்த்ராதிகள்' என்பது இல்லை[3]. 2—கழியோடொத்த. 3—சேராது[3]. 4—நீர்க்கிடை, நிலக்கிடை[4].

*1. (?): அதர்வண வேதம் தெரிந்தவர்கள் நூற்றொரு விதமான மரணத்தைச் சொல்லுகிறார்கள்.

*2. திருவாய். (3-5-2) திருடமான வீரக்கழல்களை அணிந்த கால்களையுடைய அஸுரர்களுடைய.

*3. பெரியதிரு (11-6-6): பெரிய ஆகாசத்தின்மேல் போய் வ்யாபித்திருக்கும் ப்ரளய ஸமுத்திரம் கணைக்கால் அளவு இருக்கும்படி,

தித்து, आब्रह्म-स्तम्ब-पर्यन्ताः*[1], कर्मणां परिपाकत्वात आविरिञ्चादमङ्गलं*[2], शक्या गणयितुं लोके न व्यतीताः पितामहाः*[3], "நிணைப்பான் புகில் கடலெக்கலின் நுண் மணலிற் பலர்''*[4] இத்யாதிகளையும் நிரூபித்தால்[11], पत्युः प्रजानां ऐश्वर्य*[5] इत्यादिகளிற்படியே हिरण्यगर्भ-पदத்தையும்[1] तृणीकरित्து[2], "கூட்டரிய துயரறு சுடரடியே கூடலாமாகில்''*[6], ஒரு कदम्बादि-स्थावर-जन्मத்தையே ஆகாங்க்ஷிக்கும் படியாம்[3].

§3:2:9 கைவல்யமும் விரும்பத் தகாததே

இப்படி†[1] परमपद-स्वभावத்தைக் கேட்டவர்களுக்கு

एते वै निरयास्तात*[7],

---

1—ப்ரஹ்மாவின் ஸ்தானத்தையும். 2—துச்சமாக எண்ணி. 3—ஆசைப்படும் படியாம்.

†1—'இப்படி' என்பது இல்லை[2].

*1. आब्रह्मस्तंभपर्यन्ताः जगदन्तर्व्यवस्थिताः ।
प्राणिनः कर्मजनित - संसारवशवर्तिनः ।।

வி.தர். (104-23): ப்ரஹ்மா முதல் சிறு புழு வரையிலுள்ள இவ்வுலகிலுள்ள எல்லாப் பிராணிகளும் புண்யபாப ரூப கர்மங்களால் ஏற்பட்ட ஸம்ஸாரத்திற்கு அதீனமாய் இருப்பவர்கள்.

*2. कर्मणां परिपाकत्वात् आविरिञ्चात् अमङ्गलम् ।
इति मत्वा विरक्तस्य वासुदेवः परा गतिः ।।

பாகவதம் (11-19 18): கர்ம பலன்களை அநுபவிப்பதற்காகப் பிறந்தவர்களாகிய ப்ரஹ்மா முதலானோர் அமங்களம் ( = தியானிப்பவரின் பாபத்தைப் போக்கத் திறமையற்றவர்) என எண்ணி அவர்களை அடைய விருப்பமற்றவனுக்கு வாஸுதேவன் மிகவும் உயர்ந்த அடைய வேண்டியவன்.

*3. गङ्गायास्सिकता धारा यथा वर्षति वासवे ।
शक्या गणयितुं लोके न व्यतीताः पितामहाः ।।

வைஷ்ணவதர்ம சாஸ்த்ரம்: கங்கையின் மணல் போலவும்,

இந்திரன் வர்ஷிக்கும் போது மழை தாரைகள் போலவும் இவ்வுலகிலிருந்து கழிந்தவர்களான ப்ரம்மாக்கள் எண்ண முடியாதவர்கள்.

*4. நினைப்பான்புகில் கடலெக்கலின் நுண்மணலிற் பலர்*
எனைத்தோறுகங்களும் இவ்வுலகாண்டு கழிந்தவர்*
மனைப்பால் மருங்கற மாய்தல்லால் மற்றுக்கண்டிலம்*
பனைத்தாள் மதகளிறட்டவன் பாதம் பணிமினே.

திருவாய். (4-1-4): முன் அநேக யுகங்கள் எல்லாவற்றிலும் இந்த உலகத்தை ஆண்டு போனவர்களின் எண்ணிக்கையை நினைக்க ஆரம்பித்தால், (அவர்கள்) ஸமுத்திரத்தில் அலைகளால் உண்டு பண்ணப்பட்ட மணல்மேட்டிலிருக்கும் பொடி மணல்களைக் காட்டிலும் அதிகமாயிருக்கிறார்கள். (அது மாத்திரமன்று.) தங்கள் வீட்டின் பக்கத்திலுள்ள வீடுகளும் நசிக்கும்படி நாசத்தை அடைவதல்லது வேறொன்றைப் பார்த்தோமில்லை (= அவர்கள் வம்சத்தில் ஒருவரும் மீதியில்லை). (ஆதலால்) பனைமரம் போன்ற கால்களையுடைய குவலயாபீடம் என்கிற மத யானையைக் கொன்றவனான கண்ணனுடைய திருவடிகளை வணங்குங்கள்.

*5. पत्युः प्रजानां ऐश्वर्यं पशूनां वा न कामये ।
अहं कदंबो भूयासं कुन्दो वा यमुना तटे ।।

(?) பிரமன் சிவன் இவர்களுடைய ஐச்வர்யத்தை நான் ஆசைப்படவில்லை. யமுனைக் கரையில் (கண்ணன் ஏறி விளையாடும்) ஒரு கதம்ப மரமாகவாவது குந்த மரமாகவாவது இருக்க விரும்புகிறேன்.

*6. திருவாய். (4-9-9), (1-1-1): அடைய முடியாததும் ஆச்ரிதர்களின் துக்கத்தையெல்லாம் போக்கடிப்பதுமான காந்தியையுடைய திருவடிகளையே அடையலாகில்.

*7. रुद्रादित्यवसूनां च तथान्येषां दिवौकसां ।
एते वै निरयास्तात स्थानस्य परमात्मनः ।।

பார. (சாந்தி - 196-4): குழந்தாய்! எம்பெருமானது ஸ்தாநமாகிய ஸ்ரீ வைகுண்டத்தைப் பார்க்கும் போது (பதினொரு) ருத்ரர்கள், (பன்னிரெண்டு) ஆதித்யர்கள், (எட்டு) வஸுக்கள், மற்ற தேவர்கள் இவர்களின் உலகங்களை நரகம் என்னுதல் பொருந்தும் (பீஷ்மர் தருமபுத்ரருக்குக் கூறுவது).

**तस्यान्तरायो मैत्रेय***[1] என்கிறபடியே "இமையோர் வாழ் தனிமுட்டைக் கோட்டைக்குட்பட்ட"*[2] குறிச்சிகளெல்லாம்[1] மூவேழு நரகங்களோடு டொக்க இவையும் ஈரேழு †[1]நரகம் என்று எண்ணலாம் படியிருக்கும் (B-48). **यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः***[3] என்னும்படியாய் நிர்துக்கமான "தெரிவரிய வளவில்லா"*[4] **आत्ममात्र-अनुभवसुख**மும் **प्रतिबन्धक-विशेष**த்தாலே[2] **परमात्मानुभव**த்தோடே கூடாதே சிற்றின்பமாய், "இறுகல் இறப்பென்னும் ஞானிக்கும் அப்பயனில்லையேல்"*[5] என்றும்†[2] **सर्वे च्यवन-धर्माणः***[6] †[3]என்றும் சொல்லுகிறபடி கழிப்பாளுகையாலே "ஒழிந்தேன்"(393*[1]) என்று **उपेक्षा-विषय**மாம்[3], **भोक्तृ-**

---

1—குறிச்சி=கிராமம். 2—ஒருவித தடங்கலாலே. 3—ஒதுக்குவதற்கு உரியதாம்.

†1—நரகம் என்னலாம்படியிருக்கும்[1]. 2—என்னுபடி[1]. 3—என்று சொல்லும்படி[1].

*1. वासुदेवे मनो यस्य जपहोमार्चनादिषु ।
तस्य अन्तरायो मैत्रेय देवेन्द्रत्वादिक फलम् ॥

வி.பு. (2-6-43): மைத்ரேயரே! ஜபம்-ஹோமம்-அர்ச்சனை முதலிய காலங்களில் எவனுடைய மனது வாஸுதேவனிடம் இருக்கிறதோ அவனுக்கு இந்திரப் பதவி கிடைப்பதும் இடையூறுதான்.

*2. திருவாய். (4-9-8): தேவதைகள் வாழும் ஒப்பற்ற அண்டமாகிற கோட்டைக்கு உட்பட்ட.

*3. यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन् स्थितो न दुःखेन गुरुणाऽपि विचाल्यते ॥

கீதை (6-22 : எந்த யோகத்தைப் பெற்ற பிறகு யோகத்தை விட்ட ஸமயத்திலும் யோகஸுகத்தையே விரும்புபவனாய் வேறு

லாபத்தை (வெளிஸுகத்தை) யோகத்தில் அநுபவித்ததைவிட மேம்பட்டதாக நினைக்கமாட்டானே, எந்த யோகத்திலிருந்தவன் யோகத்தை விட்ட சமயத்தில் மிகுந்ததுக்கத்தினாலும் மனம் கலங்க மாட்டானே (அப்படிப்பட்ட யோகத்தை அறிய வேண்டும்).

*4. திருவாய். (4-9-10): இந்திரியங்களால் அறிய முடியாததும் அளவற்றதாயும் இருக்கிற.

*5. குறுகமிகவுணர்வத்தொடு நோக்கி எல்லாம் விட்ட*
இறுகலிறப்பென்னும் ஞானிக்கும் அப்பயனில்லையேல்*
சிறுக நினைவதோர் பாசமுண்டாம் பின்னும் வீடில்லை*
மறுகலிலீசனைப் பற்றி விடாவிடில் வீடஃதே,

திருவாய், (4-1-10): ஞானயோகத்தைக் கொண்டே அறிய வேண்டிய ஜீவாத்மாவில் வேறு விஷயம் கலக்காமல் மனதை வைத்து, அதைத் தவிர வேறு எல்லாப் பயன்களையும் விட்டவனாய், சிறிய கைவல்ய ஸுகத்தையே மோக்ஷஸுகம் என்று எண்ணியிருக்கும் ஞானயோகிக்கும் அந்த பகவதுபாஸனம் இல்லாவிட்டால் விஷயங்களில் உள்ள பற்றுதலானது மறுபடியும் வந்து ஆத்ம ஸ்வரூபத்தைத் தெளிவாகப் பார்க்க முடியாமல் செய்யும். எம்பெருமானை உபாஸித்து ஆத்மஸ்வரூபத்தைப் பார்த்தாலும் மரணமடையும் காலத்தில் எம்பெருமானைப் பலனாகநினைத்து ஞானமாயும் ஆநந்தமாயுமிருக்கிற ஆத்மாவின் ஸ்வரூபத்தை அநுபவிப்பதாகிற கைவல்யத்தையும் புண்ய பாபங்களையும் விடாதபோது மோக்ஷம் கிடைக்காது. எம்பெருமானைப்பற்றி, அவனுக்குச் செய்யும் கைங்கர்யமே உண்மையான மோக்ஷம்.

*6. ये च शिष्टाः त्रयो भक्ताः फलकामा हि ते मताः ।
सर्वे च्यवन-धर्माणः प्रतिबुद्धिस्तु मोक्षभाक् ॥

பார. (சாந்தி - 350 - 35): (இழந்த ஐச்வர்யத்தை திரும்பவும் பெற விரும்புகிறவன், புதிதாக ஐச்வர்யத்தைப் பெற விரும்புகிறவன், ஆத்மாநுபவமாகிய கைவல்யத்தை விரும்புகிறவன், எம்பெருமானையே விரும்புகிறவன் ஆகிய நால்வருள்) முதல் மூன்று வகையான பக்தர்களும் பயனை விரும்புகிறவர்களாகக் கருதப்பட்டார்கள். அவர்கள் (பயனைப் பெற்ற பிறகு) பகவத் பக்தியினின்றும் நழுவுகின்றவர்கள். ஞானியோவெனில் மோக்ஷத்தை அடைவான்.

नित्यत्वம் போலே भोग्य-नित्यत्वமும் भोग-नित्यதைக்கு व्यवस्थापकமன்று[1]. ''மன்னுறில்''*[1] என்னும் व्यतिरेकोक्तिயாலும் இவ்வர்த்தம்[2] सिद्धம்.

§3;3. மோக்ஷம் தவிர்ந்த மற்ற பயன்களில் பற்றற்றவன் நிலை

இப்படி प्रयोजनान्तर-विरक्ति பிறந்தால், "உன்னலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்'' (63*[3]) என்னும்படி†[1] परिमित-फलप्रदமான ' மற்றொரு தெய்வம் தொழாதே''*[2], "மற்றுமோர் தெய்வம் உளதென்று'' இருக்கும் शौरिचिन्ता-विमुख-जनத்தோடும்*[3] நெருங்காதே, यूयं यूयं वयं वयं *[4] என்று வேறுபட்டு, ''கொள்ளக்குறைவில்லாத வள்ளல் மணிவண்ணன்''*[5] பக்கலிலும் ''கூறை சோறு''*[6] என்றாற்போலே தனக்கு மற்றொரு

---

1—நிலை நிறுத்தக் கூடியது அல்ல. 2—கைவல்யமும் அநித்யம் என்னும் இவ்வர்த்தம்.

†1—என்றும், உன்னித்து மற்றோர் தெய்வம் தொழாளவனையல்லால் என்னும்படி (என்றும் சொல்லுகிறபடி) பரிமித பலப்ரதமான[1].

*1. அற்றது பற்றெனில்* உற்றது வீடு உயிர்*
செற்றது மன்னுறில்* அற்றிறை பற்றே.

திருவாய். (1-2-5): விஷயங்களின் ஸங்கமானது முழுவதும் போனால், (உங்களுடைய) ஆத்மா விடுதலை அடைந்தது (= உங்களுக்கு ஆத்மஸ்வரூபம் தோன்றும்). அந்த ஆத்மாநுபவத்தை உபேக்ஷித்து (எம்பெருமானுக்கே சேஷமென்பதில் ருசியோடு இருப்பதாகிய) உங்களுடைய ஸ்வரூபத்தை அடைந்து ஸ்திரமாயிருக்க விரும்பினால், விஷயங்களின் பற்றை விடும்போதே (ஆத்மாநுபவத்தில் அகப்படாமல்) எம்பெருமானைப் பிடித்துக்கொண்டு பற்றை விடுங்கள்.

*2. உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள் அவனையல்லால்*
நும்மிச்சை சொல்லி நும் தோள் குலைக்கப்படும் அன்னைமீர்!*
மன்னப்படு மறைவாணனை வண்துவராபதி*
மன்னனை* ஏத்துமின் ஏத்துதலும் தொழுதாடுமே.

திருவாய். (4-6-10): (எம்பெருமான் பிரிந்தவுடன் பராங்குச நாயகி மயங்க, மயக்கம் தீர தேவதாந்தரக்கட்டுவிச்சியைக் கொணர்ந்த தாயைத் தோழி விலக்குதலைக் கூறும் பாசுரம்.) உங்களுக்குத் தோன்றியபடி சிறிய தேவதையைத் துதித்து உங்களுடைய தோள்கள் குலுங்கும்படி ஆயாஸப்படும் தாய்மார்களே! கிருஷ்ணனை விட்டு வேறு ஒரு தேவதையை இவள் மனதால் (ஸ்வப்நத்திலும்) வணங்கமாட்டாள். ஆகையால் எல்லோராலும் விதிப்படி படிக்கப்படுகின்ற வேதத்தாலே ப்ரதாநமாய் சொல்லப்படுபவனாய், விலக்ஷணமான துவாரகைக்கு நாதனுமான கிருஷ்ணனை ஸ்தோத்திரம் செய்யுங்கள். நீங்கள் ஸ்தோத்திரம் பண்ணியவுடன் இவளும் பிரஜ்ஞை திரும்பி வணங்கி ஆனந்தமாக ஆடுவாள்.

*3. वरं हुतवहज्वाला पञ्जरान्तर्व्यवस्थितिः
न शौरिचिन्ताविमुखजन - संवासवैशसम् ॥

(?): தீக்கொழுந்துகளால் ஆன கூட்டுக்குள் இருப்பது மேலானது. எம்பெருமானுடைய சிந்தனையில் முகங்கெடாதவர்களுடன் கூட இருப்பதாகிய வதமானது கொஞ்சமும் நல்லதன்று.

*4.(?): உலகத்தீரே! இன்று முதல் நீங்கள் வேறு; நாங்கள் வேறு. நீங்கள் செல்வத்திலும் இன்பத்திலும் ஈடுபட்டவர்கள்; நாங்கள் நாராயணனிடம் ஈடுபாடு உடையவர்கள் (சுலோகம் : பக்கம் 343)

*5. திருவாய். (4-6-10): எடுத்துக்கொள்ள எடுத்துக்கொள்ள குறைந்து போவது இல்லாதவனான பரமோதாரனான நீலமணி போன்ற நிறமுடைய எம்பெருமான்.

*6. நெடுமையால் உலகேழுமளந்தாய்!
நின்மலா! நெடியாய்!* அடியேனைக்
குடிமைகொள்வதற்கு ஐயுறவேண்டா
கூறைசோறு இவை வேண்டுவதில்லை*
அடிமையென்னும் கோயின்மையாலே
அங்கங்கே அவை போதரும் கண்டாய்*
கொடுமைக் கஞ்சனைக் கொன்று நின்தாதை
கோத்தவன் தளைகோள்விடுத்தானே!

பெரியாழ்வார். (5-1-4): ஒரு தோஷமுமற்றவனே! (விச்வரூபி

**प्रयोजनान्तर**த்தை அபேக்ஷியாதே, **महाप्रभाव**மான, **मन्त्र-रत्न**த்தில் **उत्तरखण्डार्थ**த்திலே ஊற்றமுடையனும்.

**தந்திரங்கள் அளவிலராய்த் தனத்தால் மிக்க**
**தார் வேந்தர் தொழ வையம் ஆண்டார் மாண்டார்***
**சந்திரனும் சூரியனும் வீயும் காலம்**
**தாரகையின் வடமும்†[1] அற்றுத் தனிவான் ஆளும்†[2]***
**இந்திரனும் ஏறுயர்த்த ஈசன் தானும்**
**ஈரிரண்டு முகத்தானும் இல்லா அந்நாள்***
**நம் திருமால் நிலைகண்டார் நாகமெல்லாம்**
**நரகென்று நற்பதமே நாடுவாரே. (7)**

**इति श्री परमपदसोपाने तृतीयं विरक्तिपर्व ॥**



# चतुर्थं भीतिपर्व

**துறவறமே துணிவார் துணுக்கற்ற இளம் துணிவோர்***
**உறவிலராதலில் நாமுயர்ந்தாருடன் ஒன்றி நின்றோம்***
**மறவழி மாற்றி எம் மையலைத் தீர்த்தவர் மன்னருளால்***
**கறவையுகந்தபிரான் கழல்சூடும் கருத்தினமே. (8)**

§4.1 அநாதியான கர்மங்களை பிராயச்சித்தம் பலாநுபவம் இவற்றால் போக்கிக்கொள்ள முடியாமை

இப்படி விவேக - விசேஷத்தாலே **आत्मापहारादि-निवृत्ति**யும், **निर्वेद-विशेष**த்தாலே **निषिद्ध-निवृत्ति**யும், **विरक्ति-**

---

*யாய் வளரும்) விஷ்ணுவே! நீண்டு வளர்ந்ததால் ஏழு உலகங்களையும் (த்ரிவிக்ரமாவதாரத்தில்) அளந்தவனே! கொடுங்கோன்மையுடைய கம்ஸனைக் கொன்று உன் தந்தையான வஸுதேவரின் காலில் கட்டியுள்ள வலிதான விலங்கை வெட்டிவிட்டவனே! அடியேனை குலகிங்கரனாக ஸ்வீகரிப்பதற்கு ஸந்தேஹமகப்பட*

வேண்டாம். உடுக்க உடை உண்ண உணவு இவற்றில் எனக்கு அபேக்ஷையில்லை; ஏனெனில் உனக்கு அடிமையாயிருந்தலையே அபேக்ஷிக்கும் எனக்கு எங்கிருந்தாலும் அங்கு அவை தாமே கிட்டும். ☐

†1—வடம்[5]. 2—ஆகும[5].

7. **தந்திரங்கள் அளவிலராய்**—சேனையை அளவில்லாது பெற்றவர்களாய்; **தனத்தால் மிக்க தார் வேந்தர் தொழ**—செல்வத்தால பெரியராய் மாலையைத் தரித்தவர்களான அரசர்கள் (தம்மை வந்து) வணங்கும்படி; **வையம் ஆண்டார்**—உலகத்தை ஆண்டார்(களான மநு மாந்தாதா முதலியவர்)கள்; **மாண்டார்**—இறந்தொழிந்தனர். **தாரகையின் வடமும் அற்று**—நக்ஷத்ரங்களின் வரிசையும் அழிந்து; **சந்திரனும் சூரியனும் வீயும் காலம்**—சந்திரனும் ஸூரியனும் அழியுங்காலமாகிய; **வான் தனி ஆளும் இந்திரனும்**—ஸ்வர்க்க லோகத்தை ஒருவனாய் ஆள்கின்ற தேவேந்திரனும்; **ஏறு உயர்த்த ஈசன்தானும்**—காளையைக் கொடியாக உயர்த்த சிவனும்; **ஈர் இரண்டு முகத்தானும்**—நான்கு முகமுடைய ப்ரஹ்மாவும்; **இல்லா அந்நாள்**—இல்லாமற்போன அந்த (மஹாப்ரளய) காலத்தில; **நம் திருமால் நிலை கண்டார்**—நம் பெருமானது ஸ்தாந(மாகிய பரமபதத்தின் ஸ்வபாவ)த்தை அறிந்தவர்கள்; **நாகம் எல்லாம்**—(ப்ரஹ்மலோகம் வரையில் உள்ள) தேவ லோகங்களை எல்லாம்; **நரகு என்று** (பரமபதத்தோடும் ஆராயும் போது) நரகத்திற்கு ஸமமென்று (நினைத்து); **நல் பதமே நாடுவார்**—சிறந்த ஸ்தாநமாகிய ஸ்ரீவைகுண்டத்தைப் பெறவே விரும்புவார்கள்.

8. **துறவறமே**—(ஸம்ஸார பந்தத்தை நீக்குவதற்காகச் செய்யும்) நிவ்ருத்தி தர்மங்களையே; **துணிவார்**—(சிறந்தனவாகத்) துணிந்து பற்றுமவர்; **துனுக்கு அற்ற**—ஸம்ஸார பயம் இல்லாத; **இளம் துணிவோர்**—முதிராத நிச்சயத்தையுடையவர்களோடு; **உறவு இலர்**—ஸம்பந்தம் கொள்ளமாட்டார்கள். **ஆதலின்**—ஆதலால்; **நாம் உயர்ந்தாருடன்**—நாம் (அவ்வாறு செய்யாது) சிறந்தவரான பாகவதருடன்; **ஒன்றி நின்றோம்**—கலந்து நின்றோம். **மறவழி மாற்றி**—(நம்மைப்) பாப வழியிலிருந்து விலக்கி; **எம் மையலைத் தீர்த்தவர்**—எம்முடைய அஜ்ஞாநத்தைப் போக்கிய ஆசார்யர்களின்; **மன் அருளால்**—வலிய க்ருபையால்; **கறவை உகந்த பிரான்**—பசு மேய்த்தலை விரும்பிய கண்ணபிரானுடைய; **கழல் சூடும் கருத்தினம்**—திருவடிகளைச் சூடிக் கைங்கர்யம் செய்யும் உறுதியுடையராளோம்.

विशेषத்தாலே बन्धक-काम्य - निवृत्तियும்[1] பிறந்தாலும், पूर्वार्जितமுமாய், भुक्तफलமுமன்றிக்கே कृतप्रायश्चित्तமன்றிக்கே आरब्धकार्यமுமாய்[2], अनारब्धकार्यமுமாய்க்[3] கிடக்கிற कर्मवर्गத்தைப் பார்த்தால், भोगத்தாலே யாதல் प्रायश्चित्तத்தாலேயாதல் निश्शेषமாகக் கழிக்க அரிதாய் இருக்கிற படியையும்;

§4.2 கர்மபலனை அநுபவிக்கப் பல பிறவிகளை எடுக்க வேண்டியமை

இவற்றின் फलமான अनन्त-चराचर-शरीरங்களைப் பரிக்ரஹித்து अगाधமான[4] दुःख-सागरத்திலே அழுந்த வேண்டும்படி வரும் गर्भ-जन्म-जरा-मरणादि-चक्र-परिवृत्ति-प्रवाहத்தையும்;

§4.3 பிறவித் துயரற தேவதாந்தரங்களை நாடுவதில் உள்ள தோஷங்கள்

உயர ஏறித் துல்ய சீலராய்த் தோற்றினாரை छलத்தாலே[5] "ध्वंस" என்று தகரவிழவிடுவார்[6] (B—49), स्व-विषय-वृत्तिகளை मनुष्य - मांस - भक्षणத்திற்கு गतागतம் பண்ணி வைப்பார் (B—50), भृत्यवर्गமானாரை अविनीतராக்கிக்கொண்டு[7] ஆள்வாரான देवतान्तरங்களினுடைய प्राप्तियில் दोषங்களையும் (B—51);

§4.4 நரகவேதனை தாபத்ரயம் இவற்றுக்கு அஞ்சி நிவ்ருத்தி தர்மத்தைக் கைக்கொள்ள விரைதல்

"நமன் தமர் பாசம் விட்டால் அலைப் பூணுண்ணும்"*[1] அவ்வல்லல்களையும்; வெஞ்சொலாளரான நமன்தமர் செய்யும் வேதனைகளையும்; धीरனான धर्मपुत्रன் கேட்டு மோஹித்து விழும்படியான नरकमार्गத்தின் படிகளையும்; अतिदुस्सह-अनन्त-नरक-यातनैகளையும் तापत्रय-अध्यायादिகளிலே[8] பரக்கக் கேட்டு (B—52), अहं भीतोऽस्मि*[2], "தெளிதொறும் நன்றும் அஞ்சுவன் நரகம் நான் அடைதல்"†[3] என்னும் तीव्र-भीतियாலே

1—ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமான காம்யகர்மங்களை விடுகையும். 2—பலன் கொடுக்கத் தொடங்கியதாயும். 3—பலன் கொடுக்க ஆரம்பிக்காததாயும். 4—ஆழமான. 5—வஞ்சனையாலே. 6—'அழிந்துபோ' எனத் தலைகீழாக விழச் செய்வார். 7—அடங்காதவர்களாய்ச் செய்து.

*1. திருவாய் [3-2-10]; யமதூதர்கள் பாசத்தைப் பிரயோகித்தால் (ஆசை இங்கும் பாசம் அங்கும்) இருப்பதால் படும் கோரமான கஷ்டங்களையும்.

*2. अहं भीतोऽस्मि देवेश संसारेऽस्मिन् भयावहे ।
पाहि मां पुण्डरीकाक्ष न जाने शरणं परम् ॥

ஜிதந்தே (8): தேவர்களுக்குத் தலைவனே! பயங்கரமான இந்த ஸம்ஸாரத்தில் அடியேன் அஞ்சிக் கிடக்கிறேன். செந்தாமரைக் கண்ணனே! அடியேனை ரக்ஷித்து அருள்வாயாக. உன்னைத்தவிர வேறொரு புகலை அறிகிலேன்.

*3. யானும் நீதானேயாவதோ மெய்யே
அருநரகவையும் நீயானால்
வானுயரின்பமெய்திலென்? மற்றை
நரகமேயெய்திலென்? எனிலும்*
யானும் நீதானாய்த் தெளிதொறும், நன்றும்
அஞ்சுவன் நரகம் நானடைதல்
வானுயரின்பம் மன்னி வீற்றிருந்தாய்!
அருளு நின்தாள்களை எனக்கே.

திருவாய். (8-1-9): நானும் நீயேயாயிருப்பது உண்மையே. பொறுக்க முடியாத நரகம் போலிருக்கும் ஸம்ஸார மண்டலத்திலிருக்கிறவைகளும் நீதான். இப்படி தத்துவஞானம் நிலைத்த பிறகு பரமபதத்தில் உயர்ந்த ஆநந்தத்தை அடைந்தால் என்ன? அதற்கு எதிரிடையானதும் நரகம் போலிருக்கிறதுமான ஸம்ஸார மண்டலத்தையே அடைந்தால் என்ன?—இப்படி நானும் நீயேயாயிருப்பதை நன்கு அறிந்த போதிலும், நான் நரகம் போலிருக்கும் ஸம்ஸாரத்தை அடைந்திருப்பதை நினைத்து மிகவும் பயப்படுகிறேன். பரமபதத்தில் அழிவில்லாத ஆநந்தத்துடன் உன் பெருமை தோன்றும்படியிருப்பவனே! உன் திருவடிகளை எனக்கு பரமபதத்தில் அளித்து அருள்வாயாக.

''காற்றத் திடைப்பட்ட கலவர்மனம்''*1 போலவும், ''ஆற்றங்கரை வாழ்மரம்''*2 போலவும், ''இருபாடெரி கொள்ளியினுள் எறும்பு''*3 போலவும், ''பாம்பொடு ஒரு கூரையிலே பயின்றாற்''*4 போலவும், ''வெள்ளத் திடைப்பட்ட நரியினம்''*5 போலவும், உள்ளம் துளங்கி[1] **प्रयोजनान्तरमात्रपर**னாதல்†1, **तत्प्रधान**னாதல், **उभय-समबुद्धि**யாதல், **मोक्षप्रधान**னாதல் அன்றிக்கே **मोक्षैकपर**னானவன் **सर्वकर्मप्रायश्चित्त**முமாய்†2 இட்ட படை கற்படையாய் (B—47) **विघ्न-विलम्ब-रहित**மான **निवृत्ति-धर्म**த்திலே **मानुष्यं प्राप्य***6, **महता पुण्य-पण्येन** (57*+), ''கிளரொளி இளமை கெடுவதன் முன்னம்''*7 இத்யாதிகள் படியே விலக்கற்ற[2] விரைதலுடையனாம்†3.

வந்தனபோல் வருவனவும் அநந்தமாகி
    மாளாத துயர் தரு வல்வினை நெருப்புக்(கு)*
இந்தனமாய் எண்ணிறந்த காலமெல்லாம்
    இன்னமும் மிப்பவக் குழிக்கே இழியாவண்ணம்*
வெந்ததொரு குழவியை நற்குமரன் ஆக்கும்
    வெறித்துளவ வித்தகனார் விதியேகொண்டார்†4
பந்தனமாம் அவையனைத்தும் பாறுகைக்குப்
    பழமறையின் பரமநெறி†5 பயிலுவாரே...(9)

**इति श्री परमपदसोपाने चतुर्थं भीतिपर्व ॥**

---

1—தளர்ந்து. 2—தடையில்லாத.

†1—ப்ரயோஜநாந்தபரனாதல்[1]. 2—ஸர்வ ப்ராயச்சித்தமுமாய்[3] 3—விலக்கத தவிர்த்தலுடையனாம்[3]. 4—விதியேகொண்டு[3]. 5—பதமொன்றே, மர்மநெறி[3].

*1 பெரியதிரு. (11-8-2): பெருங்காற்றிலே அகப்பட்ட மரக்கலத்துள்ளோர் மனம் போலவும்.

*2. பெரியதிரு. (11-8-1): ஆற்றின் கரையில் வாழும் மரம் (ஆற்றின் ப்ரவாஹத்தால் வேர் களையப்பட்டு என்றைக்குக் கீழே விழவேண்டி வருமோ என்று பயந்திருக்குமாப்) போலவும்.

*3. பெரியதிரு. (11-8-4): இரண்டு பக்கங்களிலும் எரிந்து கொண்டிருக்கிற கொள்ளிக்கட்டையின் நடுவில் இருக்கும் எறும்பைப்போலவும்.

*4. பெரியதிரு. (11-8-3): பாம்போடு ஒரு குடிசையிலே வசிப்பதைப்போலவும் (கண்டதெல்லாம் பயத்தை உண்டுபண்ணக் கூடிய தாயிருக்கும் என்றபடி).

*5. பெரியதிரு. (11-8-5): மஹா ப்ரவாஹத்தின் இடையில் அகப்பட்டுக் கொண்ட நரிகளின் கூட்டம் போலவும்.

*6. मानुष्यं प्राप्य लोकेऽस्मिन् मूको वा बधिरोऽपि वा ।
नापक्रामति संसारात् स खलु ब्रह्महा भवेत् ॥

(?) எவன் இவ்வுலகில் மனித உடலை அடைந்து ஊமையாகவோ செவிடனாகவோ இருந்தாலுங்கூட ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்குரிய உபாயத்தைச் செய்யவில்லையோ அவன் ப்ரஹ்மஹத்தி செய்தவனாவான் அன்றோ.

*7. கிளரொளியிளமை கெடுவதன் முன்னம்*
வளரொளி மாயோன் மருவியகோயில்*
வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ்சோலை*
தளர்விலராகில் சார்வது சதிரே.

திருவாய். (2-10-1): ஜ்ஞாநம் விருத்தியாகும் இளமைப் பருவம் அழிவதற்கு முன்னாகவே, மேன்மேலும் அதிகமாகும் காந்தியையுடையவனும் ஆச்சரிய லீலைகளைச் செய்கிறவனுமான எம்பெருமான் எப்பொழுதுமிருக்கும் கோயிலான இளஞ்சோலைகளால் சூழப்பட்ட திருமாலிருஞ்சோலை மலையை அடைவது துக்கங்களெல்லாம் இல்லாதவர்களாக ஆவதற்கு அறிவுள்ளவன் செய்யும் உபாயமாகும்.

9. வந்தனபோல்—(இதுவரை) வந்த துக்கங்களைப் போல்; வருவனவும்—இனிவரப் போகும் துக்கங்களும்; அநந்தமாகி —எல்லையற்றனவாகி; மாளாத—அழியாத; துயர்தரு—துக்கத்தைத் தருகின்ற; வல்வினை—வலிய கர்மங்களாகிய: நெருப்புக்கு—அக்நிக்கு: இந்தனமாய்—விறகாய் நின்று; இன்னமும்—இன்னமும்; எண்ணிறந்த காலம் எல்லாம்—அளவில்லாத காலம் முழுவதும்; இப்பவக்குழிக்கே—இந்த ஸம்ஸாரமாகிய படுகுழி

## ।। पंचमं प्रसादनपर्व ।।

கருமாலையில் வரும் கட்டங்கழிக்கும் கருத்துடையார்*
ஒருமால் பெருகிய யோகின் முயன்றும் அதன்றியும் நம்
திருமால் அடியிணை திண் சரணுகுமென வரித்தும்*
தருமால் இனியவை தானே எனத் தக வெண்ணுவரே.
(10)

### §5: 1: பக்தியோகம் பற்றிய விஷயங்கள்

இப்படி பரிபூர்ண - விவேக-निर्वेद-विरक्ति-भीतिகள் பிறந்தவனுடைய **पुण्य-पाप-रूप-व्याधिविशेष**ங்களுக்கெல்லாம் எருத்துக கொடியுடையானும் பிரமனும இந்திரனும் மற்றும் ஒருத்தரும் மருநதறியாதிருக்க†[1]—

### §5: 1: 1. பக்தியோகம்—விளக்கம்

"மருத்துவனாய நின்ற மாமணிவண்ணன்"*[1], **भजस्व मां***[2] என்றும், "**मामेकं शरणं व्रज**"†[3] என்றும்

---

யிலேயே; **இழியா வண்ணம்**—விழுந்து துன்புறுதபடி (நினைந்து); **வெந்தது ஒரு குழவியை**—வெந்து கருகிய ஒரு குழந்தையை; **நல் குமரனுக்கும்**—அழகிய சிறுவனுக்கியவரும்; **வெறித்துளவ வித்தகனுர்**—மணமுள்ள திருத்துழாயை அணிந்த அதிசயச் செய்கையையுடைவருமான பகவானுடைய; **விதியே கொண்டார்**—("பக்தியோகம் செய்", "ப்ரபத்தி செய்" என்ற) கட்டளையே (சிறந்தவனவாகப்) பற்றிய சேதநர்கள்; **பந்தனமாம் அவை அனைத்தும்**—(ஸம்ஸாரத்திலேயே) பிணிக்கும் அந்தக்கர்மங்கள் முழுதும்; **பாறுகைக்கு**—அழிவதற்கு, **பழமறையின்**—அநாதியான வேதத்திற் கூறிய; **பரமநெறி** சிறந்த (பக்தி—ப்ரபத்தியாகிய) உபாயங்களில்; **பயிலுவார்**—(தங்கள் அதிகாரத்துக்குத் தக்கபடி) ஈடுபடுவார்கள்.

□

†1—மற்றுமொருத்தரும் இப்பிறவி என்னும் நோய்ககு மருந்தறியாதிருக்க[1].

10. கருமாலையில் வரும் கட்டம்—கர்ப்ப வரிசையில் (இருப்ப தால் வருகின்ற கஷ்டத்தை; கழிக்கும் கருத்துடையார்—நீக்கும் நினைவுடைய பாகவதர்கள்; ஒருமால் பெருகிய—ஒப்பற்ற பக்தி வ்ருத்தியாகக் கூடிய; உயோகில் முயன்றும்—பக்தி யோகத்தில் முயன்றுகொண்டும்; அது அன்றியும்—அது தவிர (அதில் சக்தி இல்லாதவர்கள்); நம் திருமால் அடியிணை — நம்முடைய எம்பெருமானுடைய திருவடிகள் இரண்டும்; திண்சரண் ஆகும்—திடமான உபாயமாகும்; என வரித்தும்—என்றும் (நினைத்து அவற்றில்) ப்ரபத்தி செய்தும்; மால்—எம்பெருமான்; இனியவை—(வரப்போகும்) நன்மைகளை; தானே தரும் என—தானே தருவான் என்று உறுதிகொண்டவராய்; தகவு—(அவனது) க்ருபையையே; எண்ணுவர்—எதிர் பார்த்திருப்பர்.

*1. பெரியாழ்வார் திரு. (5-3-6): மருந்து செய்யவும் வைத்தியம் செய்யவும் திறமை இல்லாவிட்டாலும் இந்நோய்க்கு இதுதான் மருந்து என்றுவது சிலர் அறிந்திருப்பர். ருத்ரனோ நான்முகனோ, இந்திரனோ மற்ற தேவர்களோ பிறவி நோய்க்கு இதுதான் மருந்து என்று கூட அறிந்தாரில்லை. திருமாலிருஞ் சோலை எம்பெருமானே! நீயே மருந்தை அறிந்த வைத்யனுவாய். (அதோடு ஸித்தோபாயனுன படியால் மருந்தும் ஆவாய்.) எனவே எனக்கு மறுபிறவி இல்லாதபடி பாபத்தைப் போக்கி உன் கோயிலான வைகுண்டத்தின் வாயிலில் நுழைந்து போகும்படி அருள்புரிவாயாக.

*2. किं पुनः ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।
अनित्यमसुखं लोकमिमंप्राप्य भजस्व माम् ।।

கீதை. (9-83): புண்ணியத்தால் பிறந்தவர்களும் பக்தர்களுமான அந்தணர்களும் ராஜர்ஷிகளும் என்னைப் பற்றினுல் சிறந்த கதியை அடையலாம் எனபதைக் கூறவும் வேண்டுமோ ? ஆகையால் அழிவுள்ளதும் துக்கத்தை விளைவிப்பதுமான இவ்வுலகை அடைந்திருக்கிற ராஜர்ஷியான நீ என்னை பஜனம் செய்.

*3. सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ।।

கீதை. (18-66): நிவ்ருத்தி தர்மங்களாகச் சொன்ன கர்மயோக-ஜ்ஞாநயோக-பக்தியோகங்களை ஸாத்விகத் தியாகமாக விட்டு, கர்த்தாவும், ஆராதிகப்படுபவனும், ப்ராப்யனும் ஒருவனே

विधित्த भेषजங்கள்[1] இரண்டில், भक्तियोगம் कर्मयोगादि களை முன்னிட்டுக் கொண்டு மேலும் वर्णाश्रमादि-धर्मங் களை அபேக்ஷித்து, ஆரம்பத்திலும் अन्तराय-अवसरங் களிலும்[2] प्रपत्तिயைக் கைதொடுமானமாகக்[3] கொண்டு प्रवृत्तமாய், अमृतधारै போலே अविच्छिन्न-स्मृति-सन्तानरूप மாய், 'स्वप्नधी'[4] 'दर्शनादि'[5] शब्दங்களாலே சொல்லும் படியான வெளிச்சிறப்பையுடைத்தாய்[6], आसनादि-परिकरयुक्तமாய்க் கொண்டு एकाग्रतानुगुण-देशकालங்களிலே अनुदिनம்[7] अनुवर्तिக்க[7] வளர்ந்து வருவதாய், अन्तिम-प्रत्ययान्तமாய்[8] இருக்கும். இது नाना शब्दादि भेदात्*[1] என்கிறபடியே அனேக விதமாயிருக்கும். இவற்றில் अनन्य-प्रयोजनனுக்கு फलवैषम्यமில்லாமையாலே यथामति[9] विकल्पம்[10].

§5: 1: 2: இரண்டு வகை பக்தர்கள்

नाहमुत्सृज्य गोविन्दं अन्यमाराधयामि भोः*[2] என்கிற படியே, அவனையல்லால் "மற்றொரு தெய்வம் தொழாதே"*[3], प्रणमन्ति देवताः*[4](†[1]) என்னும்படியே அவர் கள் தொழ நிற்குமவன்†[2] अनन्य-भक्तன். प्रयोजनान्तरपर னுடைய[11] भगवत्प्रेमं गणिकानुराग-तुल्यம்[12]; अनन्य-प्रयोजन னுடைய[13] भगवत्प्रेमं पतिव्रतानुराग-तुल्यம்.

§5: 1: 3: பக்தனிடத்தில் இருக்கவேண்டிய முக்கிய குணம்

'आत्मगुणங்கள் (C—37) இல்லாதவனுக்கு ஸம்ஸ் காரங்களெல்லாமுண்டாலும் (B—1) முக்தியில்லை' என்றும், 'आत्मगुणपूर्तिயுடையவன் ஸம்ஸ்காரங்களில் பெற்றதுகொண்டு[14] முக்தனும்' என்றும் गौतमादिகள்:

---

என்னலாம்படி இருக்கிற என்னை உபாயமாகப் பற்று. நான் மோக்ஷம் பெறத் தடையாயுள்ள அநாதி புண்யபாபங்கள் எல்லாவற்றிலிருந்தும் உன்னைவிடுவிப்பேன். வருத்தப்படாதே. □

1—மருந்துகள். 2—தடை ஏற்படும்பொழுதும். 3—ஊன்று கோலாக, உதவியாக, பிடிப்பாக (குயவன் மண்பாண்டங்களைச் செய்யும்போது அடிக்கடி தண்ணீரைக் கையால் தொட்டு வேலை செய்வதுபோல் பக்தியோகம் அநுஷ்டிப்பவனுக்கு ஆரம்பத்திலும், இடையிடையே விக்னங்கள் நேரும் போதும் ப்ரபத்தியை அநுஷ்டிக்கவேண்டியிருக்கிறது.) 4—கனவில் உண்டான ஞானம். 5—நேரில் பார்ப்பது. 6—ஞானத்தின் தெளிவை உடையதாய். 7—தினந்தோறும் தொடர்ந்து செய்ய. 8—கடைசி நினைவோடு முடிவதாய். 9—அவரவர் புத்திக்குத் தக்கபடி (=உபாஸனத்தின் படியே). 10—ஏதாவது ஒன்று. 11—வேறொரு பலனை விரும்புமவனுடைய. 12—வேசியின் அன்போடு ஒக்கும். 13—வேறொரு பயனை விரும்பாதவனுடைய. 14—உள்ளதைக் கொண்டு.

†1—देवाः[1]. 2—தொழா நிற்குமிவன்[1].

*1. ப்ரஹ்மஸூ. (3-3-56): சப்தம் முதலியவை வேறு வேறாக இருப்பதால் ப்ரஹ்மவித்யைகள் வேறு வேறு.

*2. स त्वं प्रहर वा मा वा मयि वज्रं पुरन्दर ।
नाहं उत्सृज्य गोविन्दं अन्यं आराधयामि भोः ॥

வி. தர். (2-28): இந்திரா! நீ வஜ்ராயுதத்தால் என்னை அடித்தாலும் ஸரி, அடிக்காவிட்டாலும் ஸரி. நான் கோவிந்தனைத் தவிர வேறு ஒருவரை ஆராதிக்கமாட்டேன்.

*3. திருவாய் (4-6-10).

*4. द्रवन्ति दैत्याः प्रणमन्ति देवताः
नश्यन्ति रक्षांसि अपयान्ति चारयः ।
यत्कीर्तनात् सोऽद्भुतरूपकेसरी
ममास्तु माङ्गल्य-विवृद्धये हरिः ॥

வி.தர். (43-28) (மாங்கள்ய ஸ்தவம்): எவருடைய திருநாமத்தைச் சொன்ன மாத்திரத்திலேயே அசுரர்கள் பயந்து ஓடுகிறார்களோ, தேவர்கள் பக்தியுடன் வணங்குகிறார்களோ, அரக்கர்கள் (பயந்து) அழிகிறார்களோ, பகைவர்கள் விலகிச் செல்கிறார்களோ அத்தகைய ஆச்சர்யமான ந்ருஸிம்ஹரூபியான பகவான் எனக்கு மங்களங்களைமேன்மேலும் அளிக்கட்டும்.

சொன்ன குணங்களில் मयि चानन्य-योगेन भक्तिरव्यभि-चारिणी*1 என்கிற परमपुरुष-वरणीयताहेतु-गुणविशेषம் श्रेष्ठतमம்.

### §5.2 ப்ரபத்தி பற்றிய விஷயங்கள்

#### §5.2.1 ப்ரபத்தி — விளக்கம்

இப்படி सपरिकरமான भक्तियोगத்தில் अधिकरिக்கைக்கீடான[1] विलम्बक्षमत्व-ज्ञान-शक्त्यादिகளின்றிக்கே "நின்னருளே புரிந்திருந்தேன்"*2, "துணியேன் இனி நின் அருளல்லது எனக்கு"(62*1), "உன் திருவருளன்றிக் காப்பரிதால்"*3 என்றிருக்கும் अधिकारिக்கு अनुष्ठेयமான शरणवरणம்[2] आनुकूल्य-सङ्कल्पादि-परिकरयुक्तமாய் अनन्य-साध्ये स्वाभीष्टे(304*1) इत्यादिகள்படியே प्रार्थनान्वित-सकृत्-भरन्यासरूपமாயிருக்கும். अत्यन्त-अकिञ्चनனுடைய भरन्यासத்திற்கு†1 அவ்விஷயத்தில் कर्तव्य-शेषமில்லை; सर्वशक्तिயினுடைய ஸங்கல்பத்திற்கு अवान्तर-व्यापारापेक्षा-नियमமில்லை[3]; இரண்டும் இப்படி सकृत்தாயிருக்கும்[4].

---

1—ஈடுபடுவதற்குத் தக்க. 2—அடைக்கலம் புகுதல். 3—இடையிலே வேறொரு செயல் தேவையில்லை. 4—ஒருமுறை செய்ய வேண்டியதாய் இருக்கும்.

*1. मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वं अरतिर्जनसंसदि ॥

கீதை. (13-10): ஸர்வேச்வரனாகிய என்னிடத்தில் மற்றப் பலன்களுடன் தொடர்பற்ற நிலையான பக்தியும், ஜனங்கள் இல்லாத இடத்தில் வாஸமும், ஜனத்திரளில் வெறுப்பும் (—இவை ஆத்ம ஜ்ஞாநத்துக்கு ஸாதனங்களான குணங்கள்.)

*2. சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையாய்! *உலகு
தன்னைவாழ நின்றநம்பீ! தமோதரா! சதிரா!*
என்னையும் எனதுடைமையையும் உன் சக்கரப்பொறி
யொற்றிக் கொண்டு*
நின்னருளே புரிந்திருந்தேன் இனி என் திருக்குறிப்பே?

**பெரியாழ்வார். (5-4-1):** உயர்ந்த கொடிமுடிகளையுடையதும் குளிர்ந்ததுமான திருவேங்கடமலையை இருப்பிடமாக உடையவனே! உலகிலுள்ள எல்லாச் சேதநரையும் வாழ்விக்க அடியிணையைக் காட்டி நிறைவண்ணமிருக்கும் ஸகல கல்யாண குண பரிபூர்ணனே! அந்தப் பூர்த்தியை அநுஷ்டான பர்யந்தமாகவாக்கி யசோதைப் பிராட்டி கட்டக் கட்டுண்டு அதனால் வந்த தழும்பை நிருபகமாக உடையவனே! ஆச்ரிதர் தோஷத்தைப் பொருட்படுத்தாதவனே! என்னைச் சேர்ந்த சேதநா சேதனங்களிலும் என உடலிலும் உன் திருவிலச்சினை சாத்தியுள்ளேன். வேறு குறிப்பு என்னவேண்டும். இதுவே திருக்குறிப்பாம்.

***3.** இறையோ இரக்கினும் ஈங்கோர்பெண்பால் எனவும் இரங்காது*
**அ**றையோ! என நின்றதிரும் கருங்கடல்* ஈங்கு இவள்தன்
நிறையோ இனியுன திருவருளாலன்றிக் காப்பரிதால்
முறையோ?* அரவணை மேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே.

**திருவிரு. (62):** தாய் தன் பெண்ணான சடகோபநாயகியைக் காதலனான எம்பெருமானிடம் சேர்ப்பிக்க திருபாற்கடற்கரைக்கு வருகிறாள். கடல் வழி விடவில்லை. கடலே! ஆபத்தில் சிக்கியவர்கட்கு உதவுவது பெரியோரின் கடமையாயிற்றே. என் பெண்ணோ அபலை; நாயகனைப் பிரிந்து வாடுகிறாள். முகில் வண்ணனின் கரியநிறம் கடலில் பரவியதால் வெண்கடல் கருங்கடலாகக் காட்சியளிக்கிறது. இக்கருமையைக் கண்டு கடலுக்குக் கோபம் என்றெண்ணிப் பேசுகிறாள். கடலே! வருந்தும் என் பெண்ணின் மீது ஏனோ இந்தக் கோபம்? அதைத் தலைவனிடம் காட்டுகிறது தானே. ஸீதாப்பிராட்டியைப் பிரித்தபோது ஸமுத்திரராஜன் பட்டபாடு நினைவில்லையோ? ஏன் பேரலைகளை வீசி இரக்கமின்றி இரைச்சல் போடுகிறாய்? அந்தோ! பரமனே! நீ இக்கடலில் தானே சேஷசயனத்தில் படுத்திருக்கிறாய். நீ அறிந்தும் வாளாவிருப்பது நியாயமா? என் பெண் உன்னைப் பொறுமையிழந்து அச்சம், நாணம், மடம் முதலிய குணங்களை விடவேண்டிய நிலை ஏற்படுமே. நீதான் அவளிடம் அருள் கூர்ந்து பெண்மைக்குரிய குணங்களை விடாதவாறு காப்பாற்ற வேண்டும். அதாவது, அவளை விரைவில் ஏற்று அருளவேண்டுமென தாய் பிரார்த்திக்கிறாள்.

† 1 — भरन्यासத்திற்கும்[1].

§5.2.2 ஆசார்ய நிஷ்டனுக்குப் பலம் நிச்சயம் கிடைத்தல்

ஆசார்யனாலே தன்னை **ந்யஸ்தபர**னாக அறிந்த **ஶிஷ்ய**ன் தான் **பரந்யாஸ**ம் பண்ணான். இவனுக்குப் **பல**த்தில் **ஶங்காதி**கள் வந்தாலும் **ஆசார்ய**னுடைய **பரந்யாஸ**ம் **பல-அவிநாபூத**ம்[1]. அவன் தனக்காகப் பண்ணின **பரந்யாஸ**ம் தனக்குப் **ப்ரமித**மல்லாத போது[2] **பரந்யாஸ**ம் பண்ணினால் பூர்வ **பரந்யாஸ**ம் பலித்தேவிடும். பின்பிலது[3](†1) மிகுதியான **ஸுக்ருத**த்தின்படியாம்.

§ 5.2.3 ப்ரபத்திக்கு உள்ள பெருமை

உயர்ந்த திடர்க்கு[4] அடைத்து[5] ஏற்றலாம்படி, தாழ்ச்சியுடைய விஷயத்தில் தானே ப்ரவஹிக்கும்படியான **க்ருபாகுண**த்தாலே **ஸ்வதந்த்ரஶேஷி** தன் கூறாகவும்[6], தன் பேறாகவும்[7] மேலுள்ள நன்மைகளையெல்லாம் விளைக்கும். இந்தப் ப்ரபத்தி "**தாவதார்தி:**"*1 **இத்யாதி**கள் படியே **அங்க**மாயும் **ஸ்வதந்த்ர**மாயும நின்று **ஸகல-பல-ஸாதன**மாகையாலும், **அபேக்ஷித-ஸித்தி**க்குக் கைமுதல்[8] அற்று **ஶரண்ய-ஸ்வபாவாதி-பரிஜ்ஞான**முடையாரெல்லாருக்கும் அதிகரிக்கலாமாகையாலும் தன் **பல**ம் போலே **தேஶ-காலாதி-நியம**மில்லாமையாலும், **ஸபரிகர**மாக **ஸக்ருத்** **கர்தவ்ய**மாகையாலும், **ஸுகர** மாகையாலும், **उपायस्सुकरश्चायं दुष्करश्च मतो मम***2 என்னும்படியான **வ்யவஸாய-கௌரவ**த்தை[9] உடைத்தாகையாலும்[9] **ப்ரஹ்மாஸ்த்ர-துல்யை**யாகையாலும்†2, **யஜ்ஞாதி ஸுக்ருத**ங்களைப் போலே*3 **நாஶ-ப்ரதிபந்தார்ஹ**மல்லாமையாலும்[10] **ஶரண்யோபநிஷ**த்துக்களுக்கெல்லாம்[11] **ஶிரோபூஷண**ம் என்னும்படி மேலாய் நிற்கையாலும், இதின் **ப்ரபாவ**ம் "**ஸத்கர்ம-நிரதா:**"*4 **இத்யாதி**களாலே பரக்கப் பேசப்பட்டது.

---

1—நிச்சயம் பலன் தரும். (பலனை விட்டுப் பிரியாததாயிருக்கும்). 2—தெரியாத போது. 3—பின்னால் செய்தது. 4—மேட்டு நிலத்திற்கு. 5—தடுத்து. 6—பங்காகவும் (தான் செய்யவேண்டிய கார்யம்). 7—ப்ரயோஜனமாகவும்.

8—ஸாதனம். 9—விச்வாஸத்திற்கு அதிக ப்ரயாஸம் தேவைப் படுவதாலும். 10—அழியக் கூடியதோ தடைபடக் கூடியதோ அல்லாமையாலும். 11—சரண்யோபநிஷத்துக்கள் = ஸர்வரக்ஷகனை ஸ்ரீ கிருஷ்ணனால் அருளிச் செய்யப்பட்ட உபநிஷத்து = ஸ்ரீ பகவத் கீதை.

†1—பின்பிலிது[1]. 2—ப்ரஹ்மாஸ்த்ர துல்யதையாலும்[1].

*1. तावदार्तिस्तथावाञ्छा तावन्मोहस्तथाऽसुखम् ।
यावन्नयाति शरणं त्वामशेषाघनाशनम् ॥

வி. பு. (1-9-73): (எம்பெருமானே!) எதுவரையில் எல்லாப் பாபங்களையும் போக்கவல்ல உன்னிடத்தில் ப்ரபத்தி பண்ணவில்லையோ, அதுவரையில்தான் மனிதனுக்குத் தான் இழந்த ஐச்வர்யத்தை மறுபடி பெறவேண்டுமென்ற கவலையும், அதுவரையில்தான் புதிய ஐச்வர்யம் கிடைக்கவேண்டுமென்ற ஆசையும், அதுவரையில்தான் சரீரத்தைவிட வேறான ஆத்மாவைப் பார்த்து அநுபவிக்காமலிருப்பதும், அதுவரையில்தான் ஸம்ஸார துக்கமும் (பரமாத்மாநுபவமில்லாமை) இருக்கும்.

*2. उपायस्सुकरश्चायं दुष्करश्च मतो मम ।
शिष्टैः निषेव्यते सोऽयं अकामहतचेतसैः ॥

ல. த. (17-104): இந்த ப்ரபத்தி என்னும் உபாயம் சில விதத்தில் (அங்கங்களில்) சுலபமானதும், (மஹா விச்வாஸம் செய்ய வேண்டியிருப்பதால்) ஒரு விதததில் கஷ்டமானது என்றும் என் எண்ணம். இதுவே வேறு பலனை நாடாத மனமுடைய பெரியோர்களால அநுஷ்டிக்கப்படுகிறது.

*3. यज्ञोऽनृतेन क्षरति तपः क्षरति विस्मयात् ।
आयुः विप्रापवादेन दानं च परिकीर्तनात् ॥

(?): பொய் சொல்வதால் யாகமும், பெருமைப்படுவதால் தவமும், ப்ராம்மணனைப் பழிப்பதால் ஆயுளும், பிறரிடம் கூறுவதால் தானமும் அழிகின்றன.

*4. सत्कर्मनिरताश्शुद्धाः साङ्ख्ययोगविदस्तथा ।
नार्हन्ति शरणस्थस्य कलां कोटितमीमपि ॥

ல.த. (17-62): நிவ்ருத்தி தர்மங்களான கர்மயோகத்

§ 5.2.4 ப்ரபத்தி பற்றிச் சிலர் கூறுவதின் கருத்து

மற்றுமுள்ள शास्त्रार्थங்கள் போலே अधिकारिकृत्यமான प्रपदनத்தில் சிலருடைய अधिकारि विशेषणत्वादि-व्यपदेशம் सिद्धोपाय - प्राधान्यपरம் (B—48). ச்ருதியில் (C—38) न्यास - ब्रह्मशब्द - सामानाधिकरण्यம்[1] अन्यपरம்[2]. 'भगवत् अनन्यार्ह-शेषभूतனுக்கு भगवदभिमतமில்லாத விஷயத்தில் பக்தியும் ப்ரபத்தியும் கைங்கர்யமும் स्वरूपविरुद्धம்' என்னலாயிருக்க, பக்தி யோகத்தை விசேஷித்து स्वरूप-विरुद्धம் என்றவர்களுக்கு अधिकारि-विशेष-स्वरूप-विरोधத்திலே தாத்பர்யம். देश - काल - अधिकार्यादि - भेदத்தாலே गुरु - लघु - विकल्पம் प्रायश्चित्तादिகள் எல்லாவற்றிலும் प्रसिद्धம்.

§5.3. உபாயத்தை அநுஷ்டித்தவனுக்குப் பாபங்கள் கழியும் முறை

இப்படி यथाधिकारம் सर्वकर्म - प्रायश्चित्तமாக विधित्त பக்தி-ப்ரபத்திகளில் ஒருவழியிலே இழிந்தவனுக்கு அப்போதே उत्तर - पूर्वाघ - अश्लेष -विनाशங்கள் உண்டாம். उत्तराघ - अश्लेषம்[3] प्रामादिक - विषयம்[4]. विवेकादि - पूर्तियுடையாருக்கு बुद्धि - पूर्वोत्तराघம் अनापத்தில் புகாது. मन्द-विवेकருக்கு மின்னொளி போலே தோற்றிப் प्रायश्चित्त-अन्तமாய் மறையும रागादि - काठिन्य முடையாருக்கு शिक्षा - विशेषங்களாலே பிரிதலுண்டாம்†[1]. पूर्वाघविनाशம் प्रारब्ध - व्यतिरिक्त - विषयம். स्वतन्त्र - प्रपत्तिनिष्ठனை செய்த வேள்வியனுக்குப்†[2] प्रारब्धकार्यமான कर्मवर्गத்திலும் आर्तियின் அளவுக்கீடாக देहान्तरादि - हेतुவான[5] अंशம் கழியும். "यस्य प्रसादे सकलाः"*[1], "प्रसन्नमभवत् तस्मै"*[2] इत्यादिகளின்படியே இவனளவில் सत्वस्थரானவர்களெல்லாரும் सुप्रसन्नராவார்கள்[6].

§5:4: எம்பெருமானுல் ஏற்றுக் கொள்ளப்பட்டவனுக்கு தன்னைக் காக்கும் பொறுப்பு-நரகபயம் முதலியவை இல்லாமை

**भगवत्-परिगृहीत**னுக்கு[7] **यम-वश्यत्वादि**கள் இல்லை என்னுமிடம் "**परिहर मधुसूदनप्रपन्नान्**"*[1], "**देवं शार्ङ्गधरं**

---

*தையே செய்து கொண்டு ஜ்ஞாநயோக-பக்தியோகங்களைச் செய்கிறவர்கள், ப்ரபந்நனுடைய கோடியில் ஒரு பாகத்தைக் கூடப் பெறத் தகுந்தவர்கள் அல்லர்.* □

*1—ந்யாஸமே ப்ரும்மம் என்று சொல்லியிருப்பது 2—வேறு கருத்துடையது. 3—ப்ரபத்திக்குப் பின்பு செய்த பாபங்கள் ஒட்டாது என்றது. 4—கவனக்குறைவால் ஏற்பட்டவை பற்றியது. 5—இன்னுமொரு உடலைப் பெறுவதற்குக் காரணமான. 6—மகிழ்வர். 7—எம்பெருமானுல் ஏற்றுக் கொள்ளப்பட்டவனுக்கு.*

†1. *பிரித்தலுண்டாம்[1]. 2—வேள்வியனுனவனுக்கு[1].*

*1. यस्य प्रसादे सकलाः प्रसीदेयुरिमाः प्रजाः ।
स रामो वानरेन्द्रस्य प्रसादमभिकाङ्क्षते ॥

*ராமா. (4-4-21): எவருடைய அநுக்ரஹம் இருக்கும்போது இந்த ஸகல ப்ரஜைகளும் எப்பொழுதும் ஸந்தோஷத்தை அடைவார்களோ, அப்பேர்ப்பட்ட ராமன் (தன்னுல் அநுக்ரஹிக்கப் படுமவருள் ஒருவரான) வானரராஜனின் அநுக்ரஹத்தை எதிர் பார்த்து நிற்கிருர்.*

*2. प्रसन्नमवभत् तस्मै प्रसन्नाय चराचरम् ।
प्रसन्ने देवदेवेशे केशवे भक्तवत्सले ॥

*(?): தேவதேவனும் பக்தர்களிடம் பிரியமுள்ளவனுமான கேசவன் அவனிடத்தில் ப்ரஸந்நமாயிருக்கும் போது, தெளிந்த மனமுடைய அவனிடத்தில் ஸகல சராசரங்களும் ப்ரஸந்நமாக ஆயின.*

*3. स्वपुरूषमभिवीक्ष्य पाशहस्तं वदति यमः किल
तस्य कर्णमूले ।
परिहर मधुसूदनप्रपन्नान् प्रभुरहं अन्यनृणां न
वैष्णवानाम् ॥

விஷ்ணு''*1, ''நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கு யாதொன்றுமில்லை''*2, ''நமன் கூறு செய்து கொண்டிறந்த குற்றமெண்ணவல்லனே''*3, ''நாவலிட்டுழி தருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே''*4, ''நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி''*5

---

வி.பு. (3-7-14): யமன் தன் கையில் பாசத்துடன் நிற்கும் தன் பணியாளனைப் பார்த்து அவனது காதில் ரஹஸ்யமாய், ''நான் ஸாதாரண ஜநங்களுக்குத்தான் பிரபு ஆவேன். விஷ்ணு பக்தர்களிடம் எனது அதிகாரம் செல்லாது. ஆதலின் எம்பெருமானிடம் சரண் புகுந்தவர்களை அணுகாது விலகிவிடு'' என்று கூறினான். □

*1. देवं शार्ङ्गधरं विष्णुं ये प्रपन्नाः परायणम् ।
न तेषां यमसालोक्यं न च ते नरकौकसः ।।

வாமனபு. (99-43): சார்ங்கமென்னும் வில்லாண்ட எம்பெருமானே! உயர்நத புருஷார்த்தமெனக் கருதி விஷ்ணுவினிடம் ப்ரபத்தி செய்பவர் யமலோகத்திற்குச் செல்லமாட்டார்கள்; நரகத்திலும் இருக்கமாட்டார்கள்.

*2. பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்*
நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு யாதொன்றுமில்லை*
கலியும் கெடும் கண்டு கொண்மின் கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்*
மலியப் புகுந்து இசைபாடி ஆடியுழிதரக் கண்டோம்.

திருவாய். (5-2-1): ஜீவாத்மாக்களுக்கு அநாதியாய் திடமான பாபமெல்லாம் தொலைந்தன. அதனால் பாபிகளுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் நரகமும் பாபபலன்களைக் கொடுப்பதை விட்டது. இந்தப் பூமியில் யமனுக்கு ஒரு கார்யமும் இல்லை. இனி கலியுகமும் கெடும். இதை நீங்களே காணலாம். (இவைகள் எதனால் உண்டாயிற்று எனில்) ஸமுத்திரத்தின் ஸ்வபாவத்தையுடைய எம்பெருமானிடத்தில் பக்தியுடையவர்கள் பூமியிலே நிறைந்திருக்கும்படி வநது (எம்பெருமானுடைய ஸ்வரூப ஸ்வாபாவஙகளைப் பற்றிய) பாட்டுக்களைப் பாடி, ஆநந்தமாய் ஆடி இங்கும் அங்கும் போவதைப் பார்த்தோம். மேன்மேலாகவே இந்நிலமை என்றும் விளங்குக.

*3. மாறுசெய்தவாளரக்கன் நாளுலப்ப* அன்று இலங்கை
நீறு செய்து சென்று கொன்று வென்றி கொண்ட வீரனார்*
வேறு செய்து தம்முள் என்னை வைத்திடாமையால்* நமன்
கூறுசெய்து கொண்டிறந்த குற்றம் எண்ணவல்லனே?

தி.ச.வி. (115) : எதிரிட்டுக் கொண்டவனாய் வாளையேந்தின ராக்ஷஸனான ராவணனுடைய ஆயுளை முடிப்பதற்காக பிராட்டியைப் பிரித்த அன்று இலங்கையை சாம்பலாக்கி வானர சேனையுடன் சென்று (பந்துக்களோடு கூடிய ராவணனைக்) கொன்று ஜயத்தையடைந்த மஹாவீரரான ஸ்ரீ இராமபிரான் தம் திருவுள்ளத்தில என்னை வேறுபடுத்தி வைக்காதபடியால, யமனானவன் பெருமாளோடு கூடின என்னைப் பிரித்து, கழிந்த பாபத்தை எண்ண ஸமர்த்தனாவானோ?

*4. காவலில் புலனை வைத்துக் கலிதன்னை கடக்கப் பாய்ந்து*
நாவலிட்டு உழிதருகின்றோம் நமன் தமர் தலைகள் மீதே*
மூவுலகுண்டுமிழ்ந்தமுதல்வ! நின்நாமம் கற்ற*
ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமாநகருளானே!

திருமாலை (1): எல்லா உலகங்களையும் (ப்ரளகாலயத்தில்) தன் திரு வயிற்றிலே வைத்து ரக்ஷித்துப் பின்னர் ச்ருஷ்டியின் தொடக்கத்தில் வெளிப்படுத்திய ஜகத்காரணபூதனே! உன்னுடைய திருநாமத்தை ஆசார்யன் மூலமாகக் கற்றதனால் உண்டான கர்வத்தினாலே ஐந்து இந்திரியங்களையும் காவலில்லாதபடி கண்டபடி திரியவிட்டும் (அல்லது, உன் திரு நாமங்களைக் கற்றதனால் புலன்களைக் காவலில் வைத்து பட்டிமேயாதபடி அடக்கி) பாபராசியை வாஸனையுடன உதரித்தள்ளி வெற்றிக் கூச்சலிட்டு யமன் அவனுடைய கிங்கரர்கள் இவர்களின் தலைகள் மேலே அடியிட்டுத் திரிகின்றோம்.

*5 நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க*
நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி*
அவனதூர் அரங்கமென்னாது அயர்த்து வீழ்ந்தளிய மாந்தர்*
கவலையுள்படுகின்றாரென்று அதனுக்கே கவல்கின்றேனே.

திருமாலை (12): யமனும் முத்கலன் என்பவனும் திருநாமப்ரஸ்தாவம் செய்ய நேர்ந்தபோது நரகத்தில் உள்ளவர்கள் (அவ்வார்த்தைகளைக்) கேட்டவுடனே அந்த நரகமே ஸ்வர்க்க லோகம் போல ஆகும்படியான திருநாமங்களையுடைய கல்யாணகுண பரிபூர்ணனான எம்பெருமானது ஊராவது திருவரங்கம் என்று சொல்லாது, எளியரான மனிதர்களும்(பகவந்நாமத்தை) மறந்து

इत्यादिகளாலே அறியலாம். ஆகையால் இப்படி निस्संशयனை இவன் ''ஆள்கின்றான் ஆழியான் ஆரால் குறைவுடையம்''*1 ''எத்தினால் இடர்க்கடல் கிடத்தி ஏழைநெஞ்சமே''*2, ''திருமால் தலைக்கொண்ட நங்கட்கு எங்கே வரும் தீவினையே''*3 இத்யாதிகளின் படியே நிரபேக்ஷனாய், निर्भरனாய், निर्भयனாம்†1. மங்கும் அவஸ்தையில்லாத போது[1](†2) மடலூரும் அவஸ்தை யாய்[2] ''மாகவைகுந்தம் காண்பதற்கு மனம் ஏகம் எண்ணியிருக்கும்''*4.

---

விஷயங்களாகிற படுகுழியில் விழுந்து துக்கத்தினால் பீடிக்கப்படு கிறார்கள் என்று அதற்காகவே நான் கவலைப்படுகிறேன். □

1—பகவானை விட்டுப் பிரிவினால் உண்டான தளர்ச்சி அதிகமாய் அதனால் மூர்ச்சித்துக் கிடக்கும் நிலைமையில்லாத போது. 2—வழியல்லா வழியிலாவது அடையவிரும்பி மடல் எடுத்து, பகவானை நிர்பந்தப்படுத்திப் பெறும் நிலைமையாய்.

†1—நிர்ப்பயனாய் நிஸ்ஸம்சயனுமாம்[3]. 2—அங்கும் அவ்வவஸ்தையில்லாதபோது[1].

*1 ஆள்கின்றான் ஆழியான் ஆரால் குறைவுடையம்?*
மீள்கின்றதில்லைப் பிறவித்துயர் கடிந்தோம்*
வாள்கெண்டையொண்கண் மடப்பின்னைதன் கேள்வன்*
தாள்கண்டு கொண்டு என் தலைமேல் புனைந்தேனே.

திருவாய். (10-4-3): திருவாழியையுடைய எம்பெருமான் என்னை அடிமை கொள்ளுகிறான். ஆகையால் இனி யாரால் என்ன குறை எனக்கு? இனி இந்த ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருகிறதில்லை. பிறப்பு முதலியவற்றால் உண்டாகும் துக்கத்தை போக்கினோம். கத்தியைப் போல் கூர்மையாகவும் நீண்டும், கெண்டை மீனைப் போல் அழகியதுமான கண்களை உடைய நப்பின்னைக்கு நாயகனின் திருவடிகளைக் கண்டு கொண்டு அவற்றை என் தலைமேல் வைத்துக் கொண்டேன்.

*2 அத்தனாகி அன்னையாகி ஆளும் எம்பிரானுமாய்*
ஒத்தொவ்வாத பல்பிறப்பொழித்து நம்மை ஆட்கொள்வான்*
முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார்*
எத்தினால் இடர்க்கடல் கிடத்தி? ஏழை நெஞ்சமே!

தி.ச.வி. (115): எல்லா ஹேயங்களாலும் விடப்பட்டவனும், மோக்ஷமளிப்பவனுமான எம்பெருமான், ஜ்ஞாநஸ்வரூபமாய் இருக்கையாலே ஒத்திருப்பதாயும் தேவாதி பேதத்தாலே பலவித மாயிருக்கிற நம்முடைய அநேக ஜந்மங்களைப் போக்கி, நம்மை அடிமை கொள்வதற்காக பிதாவுமாய், மாதாவுமாய், அடிமை கொள்ளும் என் ஸ்வாமியுமாய் நமக்குள்ளே ப்ரவேசித்து ப்ரீதி வைத்திருக்கிறான். (அப்படியிருக்க) அறிவிலியான நெஞ்சே! எக்காரணத்தினால் துன்பக்கடலிலே விழுந்து கிடக்கிறாய்?

*3. திருமாலுருவொக்கும் மேரு* அம்மேருவில் செஞ்சுடரோன்
திருமால் திருக்கைத் திருச்சக்கரமொக்கும்* அன்னகண்டும்
திருமாலுருவோடு அவன் சின்னமே பிதற்றா நிற்பது ஓர்
திருமால்தலைக் கொண்ட நங்கட்கு* எங்கே வரும் தீவினையே.

திருவிரு. (88): (இங்கு நம்மாழ்வார் நாயிகாபாவத்தை விடுத்து தாமான தன்மையிலேயே பேசுகிறார். இது வரை நாயிகத் தன்மையைக் கொண்டதில் ஒருவாறு ஆறுதல் பெற்றவ ராய் எம்பெருமானை அநுபவிப்பதில் ஆழ்ந்து பேசுகிறார்.) பெருமாள் நீருண்டமேகம் போன்று நீலவண்ணமுடையவன். ஆயினும் பிராட்டியின் சேர்க்கையினால் நீலமேனி "திருக்கண் டேன் பொன் மேனி கண்டேன்" என்றபடி பொன்மேனி யாகக் காட்சி தருகிறது. எனவே மஹாமேருவைக் கண்டதும் திருமாலே என பிரமித்து புலம்புகிறார். திருமாலுக்குக் கையில் சக்கரம் இருக்குமே எனில் மேருவின் மீது உதயமாகும் செங்கதிர் களை உடைய ஸௌரியனை திருச்சக்கரமாகக் கண்டார். இவ்வாறு கதிரவனோடு கூடிய மேருவை சக்ரபாணியான திருமாலாக நினைத்து பிரமத்தினால் ச்ரிய: பதியே குடிகொண்டிருப்பதால் "ஹரி: ஹரதி பாபாநி துஷ்டசித்தை: அபி ஸ்ம்ருத:" என்றபடி தீவினைகள் (இன்னல்கள்) எவ்வாறு வரும்? விரைவில் திருமாலின் சேர்த்தி கிடைக்குமன்றோ

*4. திருவாய். (9-3-7): பரமாகாசமான வைகுண்டத் தைக் கண்டு அநுபவிப்பதற்கு அதையே என் நெஞ்சு அல்லும் பகலும் ஏக்கத்தினால் நினைத்தவண்ணம் இருக்கும்

முன்செய்த வினைத்திரளில் முளைத்ததன்றி
மற்றுள்ள முதலரிந்து முளைத்த கூற்றில்*
தன்செய்ய திருவருளால் இசைவு பார்த்துத்
தழல் சேர்ந்த தூலமெனத் தானே தீர்த்து*
பின் செய்யும் வினையில் நினைவொன்றுதொன்றும்
பிழை பொறுத்து வேறுளது விரகால் மாற்றும்*
என்செய்ய தாமரைக்கண் பெருமான் எண்ணம்
எண்ணுதார் எட்டிரண்டும் எண்ணுதாரே. (11)

॥ इति श्री परमपदसोपाने पञ्चमं प्रसादनपर्व ॥

---

11. முன் செய்த வினைத்திரளில் — முன்பு செய்த பாபப கூட்டத்தில்; முளைத்தது அன்றி — பலன் கொடுக்கத் தொடங்கிய பாபம் தவிர; உள்ள முதல் (கைம்முதலாக) உள்ள பாபங்களை; முற்று அரிந்து — முழுதும் போக்கி; முளைத்த கூற்றில் — பலன் கொடுக்கத் தொடங்கிய பாகத்தில்; இசைவு பார்த்து — (ப்ரபந்நனுடைய) அங்கீகாரத்தை எதிர்பார்த்து (அவன் விரும்பிய காலத்தில்); தன் செய்ய திரு அருளால் – தன்னுடைய ருஜுவான சிறந்த க்ருபையால்; தழல் சேர்ந்த தூலம் என — அக்நியில் சேர்ந்த பஞ்சு என்னும்படி; தானே தீர்த்து — தானே போக்கி; பின் செய்த வினையில் — (ப்ரபத்திக்குப்) பிறகு செய்த பாபங்களில்; நினைவு ஒன்றுது ஒன்றும் — அறிவு இல்லாமல் (தெரியாமல்) நேர்ந்த; பிழை பொறுத்து — பாபங்களைப் பொறுத்து; வேறு உளது—தெரிந்து செய்த குற்றத்தை; விரகால் மாற்றும் — ப்ராயச்சித்தம் முதலியவற்றில் மூட்டிப் போக்குபவனை; செய்ய தாமரைக்கண் - சிவந்த தாமரை போன்ற கண்களையுடைய; என் பெருமான் — எனக்கு நாதனை ஸர்வேசுவரனுடைய; எண்ணம் எண்ணுதார் — திருவுள்ளத்தின் போக்கை அறியாத மானிடர்; எட்டும் இரண்டும் எண்ணுதார் — எட்டெழுத்தாகிய திருமந்த்ரம், இரண்டாகிய த்வயம் - சரமச்லோகமென்னும் ரஹஸ்யத்ரயத்தையும் அறியாதவர்களே.

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# ।। षष्ठं उत्क्रमणपर्व ।।

உறையிட்ட வாளென ஊனுள் உறைகின்ற யோகிகளை*†[1]
நறைமட்டொழிவற்ற†[2] நற்றுளவேந்திய நாயகனார்*
நிறைமட்டிலாத நெடும்பயன் காட்ட நினைத்து*
உடலச் சிறை வெட்டிவிட்டு வழிப்படுத்தும்
வகை செப்புவமே. (12)

§6:1 இங்கிருக்கும் நாள்வரை ப்ரபந்நனின் நிலை

இப்படி முன்பு பண்ணின बन्धकங்களுக்கெல்லாம் तत्तदधिकारानुगुणமாக प्रपत्त्यादि-प्रायश्चित्तं பண்ணி மேல் बन्धकங்களில் முயலாதபடி 'உள்ளம் உரை செயல் உள்ள இம்மூன்றையும் உள்ளிக்கெடுத்து'*1,

---

1—கட்டுப்படுத்துபவைகளுக்கு எல்லாம்.

†1—யோகிதனை[4]. 2—நறுமட்டொழிவற்ற; நறுமட்டெழிலுற்ற.

12. நறை மட்டு ஒழிவற்ற — வாஸனையுள்ள தேன் நீங்காத; நல் துளவு — சிறந்த திருத்துழாய் மாலையை; ஏந்திய நாயகன் — தரித்த ஸர்வேசுவரன்; உறையிட்ட வாள் என — உறையிற் செருகிய கத்தி என்னும்படி; ஊனுள் உறைகின்ற யோகிகளை — சரீரத்திற்குள் வஸிக்கும் (பக்தர், ப்ரபந்நர் என்ற) யோகிகளை; மட்டு இலாத நிறை — எல்லையில்லாத பெருமையையுடைய; நெடும் பயன் — பெரிய பலனாகிய மோக்ஷத்தை; காட்ட நினைந்து — அநுபவிக்கச் செய்யத் திருவுள்ளங்கொண்டு; உடலச் சிறை வெட்டிவிட்டு — சரீரமாகிய சிறையை ஒழித்து; வழிப்படுத்தும் வகை — பயணப்படுத்துவதாகிய ப்ரகாரத்தை; செப்புவம் — சொல்லுவோம்.

*1. திருவாய். (1—2—8): மனம், வாக்கு, காயம் ஆகிய (நம்மிடமே யிருக்கும்) இம்மூன்றையும் இவற்றின் ப்ரயோஜநத்தை ஆராய்ந்து, தகாத விஷயங்களில் செல்வதைத் தவிர்த்து.

'குன்றமெடுத்த பிரானடியாரொடும் ஒன்றி நின்று'*1, 'நாட்டாரோடு இயல்வொழிந்து'*2, ஸூரிஸத்ருசமான பரிபூர்ணநுபவம பெருமையாலே, வாய்க் கட்டுண்டு திருப்பாற் கடலிலே முழுகினவனைப் போலே, தன் அவஸ்தையைக் கண்டு 'இரக்கமனத்தோடு எரியணை அரக்குமெழுகும் ஒத்துக்'*3 'கரிய நாழிகை ஊழியில் பெரியதாய்'*4, 'கங்குலும் பகலும் கண் துயில் அறியாதே'*5, ''என் சொல்லி உய்வன் இங்கு அவனை விட்டு''*6 என்னும்படி ஸம்ஸாரத்தில் அடிதரியாதே[1] (†1), ''மருளொழி''*7,

---

*1—நிலை நிற்காமல்; கால் ஊன்றாமல்.*

†1 – அடிதெரியாதே.

*1. திருவாய். (7—4—11): கோவர்த்தன பர்வதத்தைத் தூக்கி உபகாரம் செய்த கிருஷ்ணனுடைய அடியாரோடு ஒன்றாய்க் கலந்து நின்று.

*2. திருவாய். (10—6—2): (அன்ன பானாதிகளை விரும்பி ஓடும்) சாமான்ய ஜநங்களோடு ஸஹவாஸத்தை விட்டு.

*3. திருவாய். (2—4—3): (துக்கத்தினால்) தளர்ந்த மனத்தோடு நெருப்புக்கு ஸமீபத்திலிருக்கும் அரக்கும் மெழுகும் போல் இருந்து (அவை போல் உருகி).

*4. பெரியதிரு. (8—5—6): க்ரூரமான ஒவ்வொரு நாழிகையும் கல்ப காலத்தைக் காட்டிலும் பெரியதாய்.

*5. திருவாய். (7—2—1): இரவும் பகலும் (ஒரு ஸமயத்திலாவது) கண்கள் துயிலவேண்டுமென்று அறியாது.

*6. மாலையும் வந்தது மாயன் வாரான்
மாமணி புலம்பவல்லேறணைந்த*
கோல நன்னாகுகளுகளுமாலோ
கொடியன குழல்களும் குழறுமாலோ!*
வாலொளி வளர்முல்லை கருமுகைகள்
மல்லிகையலம்பி வண்டாலுமாலோ!*
வேலையும் விசும்பில் விண்டலறுமாலோ!
என் சொல்லி உய்வன் இங்கு அவனை விட்டே?

திருவாய். (9—9—10): (கண்ணனோடு மாடு மேய்க்கப்போன அவன் தோழர்கள் வந்த பின்னரும் கண்ணன் வராமலிருப்பதைப் பார்த்து வருந்திப் பேசிய கோபிகையின் நிலையைப் போன்ற தம் நிலையை அருளிச்செய்தல்). மாலை நேரமும் வந்து விட்டது. ஆனால் ஆச்சரியமான கண்ணன் வருகிறானில்லை. கழுத்தில் கட்டப்பட்ட பெரிய மணிகள் சப்திக்கும்படி பலமுள்ள காளை மாடுகளாலே தழுவப்பட்டு அதினாலுண்டான சந்தோஷத்தாலே கிடாரிகள் துள்ளிக் குதிக்கின்றன. கண்ணனின் நினைவை உண்டு பண்ணி என்னைத் துன்புறுத்தும் அவனுடைய தோழர்களின் வேணுகானம் இனிமையாக ஒலிக்கிறது. மிகவும் அழகிய முல்லை, கருமுகை, மல்லிகை முதலான புஷ்பங்களில் வண்டுகள் குடைந்து தேனைக்குடித்து மகிழ்ந்து பாடுகின்றன. ஸமுத்திரமும் அலைகளின் வழியாய் ஆகாசம் வரையில் கிளம்பி வாயை விட்டுக் கோஷிக்கிறது. இப்படி இவைகளெல்லாம் ஸந்தோஷப் படும்போது, அவனைவிட்டுப் பிரிந்திருந்து எதைக்கொண்டு உயிரோடிருப்பேன்?

*7 அருள்பெறுவார் அடியார்தம் அடியனேற்கு* ஆழியான்
அருள் தருவான் அமைகின்றான் அது நமது விதிவகையே*
இருள்தருமா ஞாலத்துள் இனிப் பிறவி யான் வேண்டேன்*
மருளொழி நீ மடநெஞ்சே! வாட்டாற்றான் அடி வணங்கே.

திருவாய். (10—6—1): எம்பெருமானுடைய கிருபையை அடைவதையே ஸ்வரூப நிரூபகதர்மமாயுடையவர்களான தாஸர்களுக்கு தாஸனாய் இருக்கிற எனக்குத் திருவாழியைத் தனக்கு ஸ்வரூப நிரூபகமாகவுடைய எம்பெருமான் (வைகுந்தத்திற்கு அழைத்துக் கொண்டு போய்த்) தன் திருவடிகளை அநுபவிப்பதாகிய உயர்ந்த ஸம்ருத்தியைக் கொடுப்பதற்கு ஸித்தமாக இருக்கிறான். இதைச் செய்ய நான் கட்டளையிடுவதை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறான். அஜ்ஞாநத்தை மேன்மேலும் வளர்க்கும் இந்த விஸ்தாரமான உலகில் பிறப்பதை இனி நான் வேண்டேன். எனக்கு உட்பட்டு நான் சொன்னபடி செய்கிற மனதே! நீயும் எம்பெருமானுடைய அர்ச்சாரூபத்தில் பற்றாகிய அஜ்ஞாநத்தையும் விட்டு விடு. (குறிப்பு: இஸ்ஸம்ஸாரம் பண்டிதர்களையும் மயங்கப் பண்ணும் கொடிய ஸ்வபாவமுடையதால் இங்கு இருக்க ஆழ்வார் விரும்பவில்லை.) வைகுந்தத்திற்கு நம்மை அழைத்துச் செல்வதற்காகத் திருவாட்டாற்றில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளை வணங்கு.

"மங்கவொட்டு உன் மாமாயை"*[1], 'மாயம் செய்யேல்'*[2] என்று வளைத்து, प्रपत्ति-वाक्य-उच्चारणமே प्रस्थान-शङ्खनादமாம்படி[1] 'அவாவற்று வீடு பெறும்'*[3] आधिकारिक்கு——

§6.2 உடலை விடுவதற்கு ப்ரபந்நனுக்கு தேச - காலாதி நியமம் இல்லாமை

"வைத்த நாள் வரை எல்லை குறுகி"*[4], योगशास्त्रங்களில் சொல்லும் आयुरवसान-चिह्नங்களாலும்[2](†[1]) அதிஸந்தோஷத்தை உண்டாக்கி, 'ஒன்பது வாசல் தானுடைக் குரம்பை பிரியும் போது'*[5] உத்தராயணம், தக்ஷிணாயநம், பூர்வபக்ஷம், அபரபக்ஷம், பகல், இரவு, प्रशस्त-अप्रशस्त-देशविशेष-निमित्तविशेषங்கள் என்கிற வாசியறச் 'சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம், மரணமானால்'*[6] 'இருள் தருமாஞாலத்துள் இனிப்பிறவி வேண்டாதபடி'*[7] வைகுந்தம் கொடுக்கும் பிரான்——

---

1—புறப்படுவதற்கு ஒலிக்கும் சங்கநாதம்போல. 2—ஆயுள் முடிவதைத் தெரிவிக்கும் அடையாளங்களாலும்.

†1—ஆயுரவஸாநங்களாலும்[1].

*1 மங்கவொட்டு உன்மாமாயை திருமலிருஞ்சோலைமேய*
நங்கள் கோனே! யானே நீயாகி என்னையளித்தானே!*
பொங்கைம் புலனும் பொறியைந்தும் கருமேந்திரியம்
ஐம்பூதம்*
இங்கு இவ்வுயிரேய் பிரகிருதி மானாங்காரமனங்களே.

திருவாய். (10—7—10): திருமாலிருஞ்சோலை மலையில் ப்ரீதியுடன் நித்யவாஸம் செய்கிற எங்களுடைய ஸ்வாமியே! என்னை ரக்ஷிக்க நான் செய்ய வேண்டியவைகளையெல்லாம் நீயே செய்து என்னை ரக்ஷித்தவனே! மேன்மேலும் விருத்தியடைகிற சப்தம் முதலிய ஐந்து விதமான விஷயங்களும், (அவைகளில் இழுத்துத் துன்புறுத்துகிற) ஐந்து ஜ்ஞாநேந்திரியங்களும், ஐந்து கர்மேந்திரியங்களும், பூமி முதலான ஐந்து பூதங்களும், இந்த ஸம்ஸாரத்திலே இந்த ஜீவனோடு சேர்ந்த மூலப்ரகிருதியும்,

மஹத் என்ற தத்துவமும், அஹங்காரமும், மனதும் ஆகிய இவைகளான உனது பெரிய மாயையானது என் விஷயத்தில் நசிக்கும்படி அநுமதியைச் செய்ய வேண்டும்.

*2. மாயஞ்செய்யேல் என்னை உன்திருமார்வத்துமாலை நங்கை*
வாசஞ்செய் பூங்குழலாள் திருவாணை நின்னாணை கண்டாய்*
நேசஞ் செய்து உன்னோடு என்னை உயிர்வேறின்றிஒன்றாகவே*
கூசஞ்செய்யாதுகொண்டாய் என்னைக் கூவிக் கொள்ளாய்
வந்தந்தோ!

திருவாய். (10—10—2): என்னை வஞ்சிக்க வேண்டாம். உனக்கும் ஸம்பத்தாயிருக்கிறவளும், உன்னுடைய நீலமான திருமேனிக்குப் பொன்னால் செய்யப்பட்ட மாலை போல் அழகு செய்கிறவளும், இயற்கையாகவே உயர்ந்த வாஸனையுள்ள உன் திருமேனிக்கும் வாஸனையைக் கொடுக்கிற அழகிய திருக்குழல்களை உடையவளுமான பிராட்டியின் மேல் ஆணை. உன் மேலும் ஆணை. (உம்முடைய யோக்யதையைப் பாராமல் இப்படி ஆணையிடலாமோ என்று எம்பெருமான் கேட்டதாக நினைத்துக்கொண்டு பதில் சொல்கிறார்.) என் உடம்பின் கீழ்மையைப் பார்த்து அருவருப்புப் படாமல் ப்ரீதி பண்ணி, 'நான் வேறு, நீ வேறு' என்று எனக்குத் தோன்றாதபடி என்னுடன் ஒன்றாகச் சேர்ந்தாய். அந்தோ! சீக்கிரமாக வந்து என்னை (வைகுந்தத்திற்கு) அழைத்துக்கொள்ள வேணும்.

*3. திருவாய். (10—10—11): அவா (ப்ரதிபந்தகங்கள் எல்லாம்) நீங்கி மோக்ஷத்தைப் பெறும்.

*4. திருவாய். (3—3—10): இவனுக்கு விஹிதமான ஆயுளின் முடிவு ஸமீபித்து.

*5. பெரியதிரு. (1—6—9): (இரண்டு கண்கள், இரண்டு செவிகள், இரண்டு மூக்கு, வாய், மல மூத்ர த்வாரங்கள் ஆகிய ஒன்பது த்வாரங்களை (வாசல்களை) உடைய குடிசையாகிற உடலை விட்டுப் பிரியும் காலத்தில்.

*6 திருவாய். (9—10—5): தன் திருவடிகளையே உபாயமாகப் பற்றினார்க் கெல்லாம் எல்லாவிதமான ரக்ஷகனாய் நிற்குமவனாய், அவர்கள் இறந்ததுமே.

*7. திருவாய் (10—6—1): மேனமேலும் அஜ்ஞாநத்தையே தருகிற பெரிய ஸம்ஸாரத்தில இனியும் பிறவி உண்டாகாதபடி.

**§6;3 உடலை விட்டு விடுவிக்கும் போது ப்ரபந்நனின் புண்ணிய பாபங்களை எம்பெருமான் முற்றிலும் போக்கும் முறை**

இவனுக்கு அடியிலே **अश्लेष-विनाश-व्यपदेशविषय**ங்களாய்க் கொண்டு, மாற நினைப்பிட்டுக் கிடந்த[1] **उत्तर-पूर्व-पुण्य-पाप**ங்களை மாற்றி, ''**प्रियेषु स्वेषु सुकृतं अप्रियेषु च दुष्कृतं**''*1 **इत्यादि**களின் படியே ''நாட்டிலுள்ள பாவமெல்லாம் சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே''*2 என்னும்படி அநுகூல ப்ரதிகூலருடைய **आनुकूल्य-प्रातिकूल्य**ங்களுக்குப் **फल**மாகக் கொடுத்து†1, ''சாமிடத்து என்னைக் குறிக்கொள் கண்டாய்''*3, ''அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்''*4 என்றவன்†2 கர்ம விசேஷத்தாலே

---

1—மாற நினைப்பிட்டுக் கிடந்த=ப்ரபந்நனுடைய புண்ய பாபங்களை அவனிடமிருந்து பிரித்து அவனுடைய ஸுஹ்ருத்துக்களிடமும் த்வேஷிகளிடமும் முறையே போகும்படி ஸங்கல்பித்த.

†1—ஆநுகூல்யப் பிராதிகூல்யங்களுக்கும் பலம் கொடுத்து[1]. 2—அவன்[1]; என்னும் இவன்[4].

*1. प्रियेषु स्वेषु सुकृतं अप्रियेषु च दुष्कृतम् ।
विसृज्य ध्यानयोगेन ब्रह्माप्नोति सनातनम् ।।

மநு. (6-79): தனது நண்பர்களிடத்தில் புண்ணியத்தையும், பகைவர்களிடத்தில் பாபத்தையும் விட்டுவிட்டு பக்தியோகத்தின் (ப்ரபத்தியின்) பயனாக நித்யமான ப்ரஹ்மத்தை அடைகிறான்.

*2. எம்மனா! என்குலதெய்வமே! என்னுடைநாயகனே!*
நின்னுளேனாய்ப் பெற்றநன்மை இவ்வுலகினில் ஆர்பெறுவார்?*
நம்மன் போலே வீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ள பாவமெல்லாம்*
சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே!

பெரியாழ்வார். (5—4—3): எமது மன்னரே! எனது குலத்துக்கு எப்போதும் ஆராத்யனான பரதேவதையே! எனக்கும் நாயகனா

யிருப்பவனே! நான் உனது அபிமானத்திற்குள் இருப்பவனாகி இப்போதடைந்துள்ள பலனை இந்த உலகத்தில் யார்தாம் பெற முடியும்? (அது யாதெனில்) யமனைப் போலே கீழே தள்ளி மேலே அழுத்துவனவும், உலகத்தில் ப்ரஸித்தங்களுமான எல்லாப் பாபங்களும் மூச்சுவிடாதே அடியோடு விட்டு ஓடிப்போய் ஸம்ஸாரிகளிடம் புகுந்துவிட்டன.

*3. சாமிடத்து என்னைக் குறிக்கொள் கண்டாய்
சங்கொடு சக்கரமேந்தினானே!*
நாமடித்து என்னை அனேக தண்டம்
செய்வதாநிற்பர் நமன்தமர்கள்*
போமிடத்து உன் திறத்து எத்தனையும்
புகாவண்ணம் நிற்பதோர் மாயை வல்லை*
ஆமிடத்தே உன்னைச் சொல்லிவைத்தேன்
அரங்கத்தரவணைப் பள்ளியானே!

பெரியாழ்வார். (4—10—2): ஸ்ரீ பாஞ்சஜன்யத்தையும் திரு வாழியாழ்வானையும் திருக்கைகளில் கொண்டவனே! நான் மரணமடையும் போது என்னை (நீ உபேக்ஷியாது) திருஉள்ளம் பற்றியருள்; (இல்லையாகில்) யமபடர்கள் சினந்து நாக்கை மடித்துக்கொண்டு எனக்குப் பல தண்டனைகளைக் கொடுப்பர். அவர்கள் இழுத்துக் கொண்டு போகும் போது உன்னிடத்தில் சிறிதும் மனம் செல்லாதபடி செய்யும் ஒப்பற்ற மாயையை சிருஷ்டிக்க வல்லவனாவாய் (நீ). ஆகையால் கரணங்கள் என் வசமாய் உள்ள தசையிலேயே "மரண தசையில் என்னைத் திரு வுள்ளம்பற்று' என்று (உன்னைக் குறித்துச்) சொல்லிவைத்தேன். (எனக்கு விண்ணப்பம் செய்யலாம்படி) திருவரங்கத் திருப்பதி யிலே திருவநந்தாழ்வானாகிற திருவணையின் மேலே பள்ளி கொண்டருள்கிறவனே!

*4. துப்புடையாரை அடைவதெல்லாம்
சோர்விடத்துத் துணையாவரென்றே*
ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன்
ஆனைக்கு நீ அருள் செய்தமையால்*
எய்ப்பு என்னை வந்து நலியும் போது
அங்கு ஏதும் நானுன்னை நினைக்கமாட்டேன்*
அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன்
அரங்கத்தரவணைப் பள்ளியானே!

பெரியாழ்வார். (4—10—1): (ரக்ஷிக்கைக்காகவே) திருவரங்கத் தில் திருவனந்தாழ்வானாகிற திருப்படுக்கையின் மேலே கண்

"**यं योगिनः प्राणवियोग-काले यत्नेन चित्ते विनिवेशयन्ति**" (73*2) என்னுமவஸ்தை இல்லையாய், **काष्ठपाषाण-सन्निभ**னாய்க் கிடக்கிலும்[1] "**अहं स्मरामि**" (67*4) என்கிற படியே தன் நினைவை இவனுக்கு நினைவாக்கி, '**केवलं मदीययैव दयया अतिप्रबुद्धः**' (73*3) என்கிறபடியே **अयत्न**மாக **स्वविषय**த்தில் வெளிச்சிறப்பாலே[2] **अप्रच्युत-पूर्वसंस्कार-मनोरथ**னும்படி பண்ணி†[1] **ब्रह्म-रुद्र-इन्द्र-यमादि**களுக்குப் போலே **यमकिंकर-निरपेक्ष**மாகத் தானே **उत्क्रमण-निमित्त**மாக நின்று,

**वागादि-इन्द्रिय**ங்கள் பத்தையும் மநஸ்ஸிலும், இவற்றோடு கூடின மநஸ்ஸை ப்ராணவாயுவிலும், இந்த்ரியங்கள் பதினொன்றோடும் கூடின ப்ராணனை ஜீவாத்மாவிலும், இப்படிச் சேர்ந்த திரளை இச்**शरीर-एकदेश**மான[3] ஸூக்ஷ்ம பஞ்சபூதங்களிலும், இவை எல்லாவற்றையும் கூட **हृदयगत**னை[4] தன் பக்கலிலே சேர்த்து, இவனை இளைப்பாற்றி;

### §6-4 உடலினின்றும் வெளியேற்றும் போது எம்பெருமான் ப்ரபந்நனுக்கு விசேஷமாகச் செய்பவை

இப்படிப் பொதுவான **उत्क्रान्ति-क्रम**ம் நடந்தால் முமுக்ஷுவான இவனை **लोकान्तर**ங்களுக்கு[5] (†2) வழிகளான **हृदयनाडी** நூற்றிலும் **प्रवेशि**ப்பியாதே, "ஸுஷும்நை" என்றும் "**ब्रह्मनाडी**" என்றும் "**मूर्धन्य-नाडी**" என்றும் பேர்பெற்ற **हृदय-मध्यनाडि**யில் **मुक्तिमार्ग-द्वार**மான **मुख**ம்[6] வெளிச்செறிக்கப்பண்ணி[6], அதிலே **प्राणेन्द्रिय-संयुक्त-सूक्ष्मशरीर**த்தோடே கூடப் பிரவேசிப்பித்து, **पद्म-कोशस्तन - कदलीपुष्प - दृष्टान्त - दर्शित**மாய்க் கொண்டு[7] **अवलंबि**க்கிற[8] (†3) **हृत्पुण्डरीक-मध्य**த்திலே*1 ஸூக்ஷ்ம ஸுஷிரத்தினின்றும்[9] மேலே கொண்டேறி, **एकादश-द्वार**மான[10] '**ब्रह्मपुर**ம்'[11] என்று பேர்பெற்ற **स्थूलशरीर**த்தில் '**ब्रह्मरन्ध्र**ம்' என்கிற தலைவாசலைத்[12] திறந்து கொண்டு

புறப்பட்டு, நாடிகளோடே[13] சங்கிலித்துவக்குப் போலே[14] பிணைத்துவைத்த†[2] ஸூக்ஷ்ம ஸூர்ய கிரணங்களை अवलम्बமாக்கி[15] வைகுந்தம் புக வழிப் படுத்தும்.

---

வளர்ந்தருளுகின்ற பெருமானே! ரக்ஷண ஸாமர்த்யம் உடையவரை சரணமடைவதும் தான் சக்தியற்றிருக்கும் விஷயத்தில் ஸஹாயமாயிருப்பர் என்கிற உறுதியாலன்றோ? உன்னை ஆச்ரயிக்கைக்கு யோக்யதையில்லாதபடி தோஷயுக்தனாய் இருக்கும் இருப்புக்கு நிகரற்றவனானாலும், (உன்னுடைய வாத்ஸல்யாதி குணங்களை அநுஸந்தித்து) உன்னை ஆச்ரயித்தேன். நீ கஜேந்திராழ்வாலுக்கு அருள் செய்ததால், (சரணாகதி ப்ரபாவம் தெரிந்து) உன்னைச் சரணமாகப் பற்றினேன். மரணகாலத்தில் எல்லாக் கரணங்களும் சோர்வடைந்து என்னை வருத்தும் தசையில் (அஸ்வாதீனனான) நான் உன்னைச் சிறிதும் நினைப்பது ஸாத்யமாகாது. அந்த ஸமயத்திற்கு பதிலாக ஸ்வாதீனமாயுள்ள இந்த ஸமயத்திலேயே விண்ணப்பம் செய்து வைத்தேன். □

1—மரக்கட்டை போன்றும் கல் போன்றும் (அறிவின்றி) கிடந்தாலும். 2—தெளிவான ஞானத்தாலே. 3—உடம்பின் ஒரு பகுதியான. 4—இதயத்தில இருக்கிற. 5—வேறு உலகங்களுக்கு. 6—வாசலைப் ப்ரகாசப்படுத்தி. 7—தாமரை மொட்டு மூலை, வாழைப்பூ எனற உவமைகளால் காட்டப்பட்டதாய். 8—கீழ் நோக்கியிருக்கும். 9—நுண்ணிய த்வாரத்திலிருந்து. 10—பதினொறு துவாரங்களை உடைய (அவையாவன இரண்டு கண்கள், இரண்டு காதுகள், இரண்டு மூக்கு, வாய், மூத்திர த்வாரம், மலத்வாரம், நாபீ, ப்ரும்ம ரந்திரம் என்பவை). 11—பரமாத்மா வஸிக்கும்படியான இடம். 12—முக்கியமான வாசல்படியை (தலையிலிருக்கும் வாசல் படியை). 13—நரம்புகளோடே. 14—சங்கிலி ஒன்றோடொன்று சேர்ந்திருக்குமாப் போலே. 15—பிடிப்பாகக் கொண்டு.

†1—'பண்ணி' என்பது இல்லை[1] 2—லோகாந்தரங்களுக்கும்[1]. 3—லம்பிக்கிற[4]. 4—பிணைத்து வைத்து[1].

*1. पद्मकोशप्रतीकाशं हृदयं चाप्यधोमुखं ।

கழுத்துக்கட்டுக்குக் கீழே தொப்புளுக்கு மேலே கீழ் முகமாய் சிறிது விரிந்து சிறிது மூடியிருக்கிற தாமரை மொட்டு போன்று நம் இதயம் இருக்கிறது. அது அந்தர்யாமிக்கு இருப்பிடமாகும். தியானம் பண்ணுபவனை அனுக்ரஹிப்பதற்காக நுனியிலுள்ள சிறு த்வாரத்தில் ஸாந்நித்யம கொண்டிருக்கிறார்.

முன்கருவி ஈரைந்தும் மனத்தில் கூட்டி
முக்கியமாம் மருத்திலவை சேர்த்ததெல்லாம்*
நன்குணரும்உயிரில் சேர்த்தைம் பூதத்தை
நண்ணுவித்துத் தான் தன்பால் வைக்கும் நாதன்*
ஒன்பதுடன் வாசலிரண்டுடைத்தாய் உள்ளே
ஒருகோடிதுயர்விளைக்கும் உடம்பாய் ஒன்றும்*
வன்சிறையின் தலைவாசல் திறந்து நம்மை
வானேறும் வழிப்படுத்த மனமுற்றானே (13)

॥ इति श्री परमपदसोपाने षष्ठं उत्क्रमणपर्व ॥

---

य एष स्तन इवावलम्बते । (तैत्तिरीय उप. 1-6)

*இதய குகையில் உள்ள தூய மனதால் அறியப்படுபவனும், ஸம்ஸாரமற்றவனும், அழகிய திவ்யமங்கள விக்ரஹமுடையவனுமான எம்பெருமான் உபாஸிக்கத்தக்கவன். அவ்வாறு உபாஸனம் செய்தவன் நாக்கில் மத்தியில் பசுவின் மடிபோன்று தொங்குகிற உள்நாக்கு வழியாக அர்ச்சிராதி கதியில் சென்று முக்த ஐச்வர்யத்தைப் பெறுகிறார்.* □

13. **முன்** — *முதலில்;* **கருவி ஈர் ஐந்தும்** — *(ஜ்நாநேந்த்ரியங்கள் ஐந்து, கர்மேந்த்ரியங்கள் ஐந்து ஆக) இந்த்ரியங்கள் பத்தையும்;* **மனத்தில் கூட்டி** — *மனஸ்ஸாகிய இந்த்ரியத்துடன் சேர்த்து;* **அவை** — *அந்தப்பதினொன்று இந்த்ரியங்களையும்;* **முக்கியமாம் மருத்தில் சேர்த்து** — *முதன்மை பெற்ற ப்ராண வாயுவில் சேர்த்து;* **அது எல்லாம்** — *அவையனைத்தையும்;* **நன்கு உணரும்** — *நன்றாய் அறியும் சக்தியுள்ள;* **உயிரினில்** — *ஜீவனில்* **சேர்த்து** *(அந்த ஜீவாத்மாவை);* **ஐம்பூதத்தை நண்ணுவித்து** — *ஐந்து பூதங்களிடம் சேர்த்து (அந்த ஜீவாத்மாவின் களைப்பு நீங்குவதற்காக);* **தான் தன்பால் வைக்கும்நாதன்** — *தான் தன்னிடம் வைத்து இளைப்பாற்றும் ஸர்வேசுவரன்;* **ஒன்பதுடன் இரண்டு வாசல் உடைத்தாய்** — *பதினொன்று த்வாரங்களையுடையதாய்;* **உள்ளே ஒரு கோடி துயர் விளைக்கும்** — *உள்ளே கோடிக் கணக்கான துன்பங்களைத் தருகின்ற;* **உடம்பாய் ஒன்றும்** — *சரீரமாய் (ஜீவனோடு) சேர்ந்திருக்கின்ற;* **வன் சிறையின்** — *வலிய சிறையின்;* **தலை வாசல் திறந்து** — *முதல் வாசலாகிய ப்ரஹ்ம ரந்த்ரத்தைத்திறந்து;* **நம்மை வான் ஏறும் வழிப்படுத்த** — *நம்மைப் பரமபதம் ஏற ப்ரயாணப்படுத்த;* **மனமுற்றான்** — *மனங்கொண்டான்.*

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

# ॥ सप्तमं अर्चिरादिपर्व ॥

தெருளார் பிரமபுரத்திறை
சேர்ந்துஇடர் தீர்ந்தவர்†[1] தாம்*
இருளார்†[2] பிரமபுரச்சிறை
தீர்ந்தபின் வந்தெதிர்கொண்டு*
அருளால் அமரர் நடத்த
இம்மாயை கடந்ததற்பின்*
சுருளார் பவநரகச் சுழலாற்றின்
சூழ்ச்சியிலே†[3]. (14)

**§7:1 அக்நி என்னும் ஆதி வாஹிகன் உபசரித்து வழிநடத்துதல்**

இப்படிப் புண்ய பாபங்களாகிற பொன்னும் இரும்புமான விலங்குகளைக் கழித்து†[4], स्थूलशरीर மாகிற†[5] சிறையினின்றும் सौहार्द-सुभगனை[1] हार्दन्[1]

---

1—அன்பின் காரணமாக அழகிய உருவத்தோடு ஹ்ருதயத்தில் இருக்கும் பகவான்.

†1—சேர்ந்திட வந்தவர்[2]. 2—அருளால்[1]. 3—சுழற்சியிலே[1]. 4—கழற்றி[3]. 5—ஸ்தூல சரீரங்களாகிற[1].

14. தெருள் ஆர்—ஜ்ஞாநம் நிறைந்தவனும்; பிரமபுரத்து இறை சேர்ந்து—சரீரத்தின் தலைவனுமான அந்தர்யாமியோடு சேர்ந்து; இடர் தீர்ந்தவர்தாம் — துன்பம் நீங்கி (இளைப்பாறிய) ஜீவர்கள்; மருள் ஆர்—அஜ்ஞாநம் நிறைந்த; பிரமபுரச்சிறை—சரீமாகிய சிறையை; தீர்ந்த பின்—விட்டு நீங்கிய பின்; அருளால் —(பகவானுடைய) க்ருபையினால்; அமரர்—ஆதிவாஹிகர்களான தேவர்; எதிர் கொண்டு வந்து நடத்த எதிர் வந்து அழைத்து நடத்திப்போக; இம்மாயை கடந்ததன் பின்-இந்தப்ரக்ருதி மண்டலத்தைத் தாண்டிய பிறகு; பவநரகச் சுழல் ஆற்றின்—ஸம்ஸாரமாகிய நரகமென்னும் சுழல் நிறைந்த நதியின்; சூழ்ச்சியில்—சுழலில்; சுருளார்—(மறுபடி) சுழலமாட்டார்கள்.

நயிப்பிக்கப்[1] புறப்பட்டவனைப் பண்டு இறை கொண்ட[2] தேவர்கள் பரவசராய்[3], अतिभीतராய் प्रणतिपरராய்[4], காணிக்கையிட்டுக் காணமுற்பட, अर्चिस् என்றும் अग्नि என்றும் பெயரையுடைய आतिवाहिकன்[5] வந்தெதிர் கொண்டு தன் वैभवமெல்லாவற்றையும் ஸமர்பித்து, 'சூழ்விசும் பணிமுகிலில்' சொன்ன (B—9) ஸத்காரத்தோடே[6] தனக்கடைத்த எல்லை நடத்தும்.

### §7.2 பகல்-சுக்ல பக்ஷம்-உத்தராயணம்-வருடம் இவற்றுக்கு அபிமானி தேவதைகள் உபசரித்து வழிநடத்துதல்

அநந்தரம்[7] பகலும்[8] சுக்லபக்ஷமும் உத்தராயணமும் ஸம்வத்ஸரமும் அடைவே எதிர்கொண்டு வழி நடத்துவார்கள். कालवाचि-शब्दங்கள் இங்கு काल-अभिमानि-देवतैகளைச் சொல்லுகின்றன. शाकटायन-संहितैயில் 'अर्चिर्घस्रं कौमुदीं शुक्लपक्षं'' என்று பகலுக்கும் சுக்ல பக்ஷத்துக்கும் நடுவே 'कौमुदीं' என்று ஒன்றைச் சொன்னது श्रुतिसिद्धமான क्रमத்திற்கு अनुगुणமாக शुक्लपक्ष-अङ्गமாகக் கொள்ளலாம். शाखाविशेष-उक्त-पृथिव्यादिகளுக்கும்[9] अनेकशाखानुगुणமாக நிர்வாஹம் கண்டு கொள்வது.

### §7.3 வாயுதேவதை உபசரித்து வழிநடத்துதல்

ஸம்வத்ஸர தேவதைக்கு அநந்தரம் வாயுதேவதை வந்து எதிர்கொண்டு வழி நடத்தும். இந்த வாயு தன்னை தேவர்களுக்கு இருப்பிடமாகையாலே शाखान्तरங்கள் देवलोक-शब्दத்தாலும் वायुलोक-शब्दத்தாலும் சொல்லும்.

### §7.4 சூரிய மண்டலத்தைப் பிளந்துகொண்டு செல்லுதல்

வாயுவுக்கு அநந்தரம் रथचक्र-रन्ध्र[10] போலே இருப்பதொரு வழியாலே மேலே போய் ஆதித்யனைக் கிட்டும்.

"தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டு புக்கு''*1 என்றும், "மன்னும் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள் அனனதோர் இல்லியினூடு போய்''*2 என்றும், "சண்டமண்டலத்தினூடு சென்று''*3 என்றும், "இருளகற்றும் எரிகதிரோன்

---

**1**—அழைத்துச் செல்ல. **2** (நம்மிடம்) கப்பம் பெற்றுக். கொண்ட. **3**—மகிழ்ந்தவராய். **4**—வணங்கியவராய். **5**—வைகுந்தத்திற்கு வழி நடத்துபவன். **6**—உபசாரத்தோடே **7**—பிறகு. **8**—பகல்=பகலுக்கு அதிபதியான தேவதை. (இவ்வாறே சுக்லபக்ஷம் முதலியவற்றுக்கும் பொருள் கொள்க). **9**—ஒரு சாகையில் சொனன ப்ருத்வீ முதலானவற்றிற்கும். **10**—தேர்ச் சக்கரத்தின் (நடுவிலுள்ள) துவாரம்.

*1. காரார்புரவியேழ் பூண்டதனியாழி*
தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு*
ஆராவமுதமங்கெய்தி*—அதினின்றும்
வாராதொழிவதொன்றுண்டே?* அது நிற்க,

சிறிய திருமடல் (8): பச்சை நிறமான ஏழு குதிரைகள் கட்டப் பட்டிருப்பதும், ஒரே சக்கரமுள்ளதுமான தேரில் பொருந்திய ஆயிரம் கிரணமுள்ள சூரியனின் மண்டலத்தைப் பிளந்து அதன் வழியாகச் சென்று ஸ்ரீ வைகுண்டத்தில் தெவிட்டாத அமுதமான எம்பெருமானைப் பெற்று அங்கிருந்து திரும்பி வராமலிருப்பதே தான் உண்மையாகுமோ? அந்த மோக்ஷமும் உண்டா இல்லையா என்கிற விமர்சம் வேண்டாம்.

*2. மன்னும் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள்*
அன்ன தோரில்லியினூடு போய்*—வீடென்னும்
தொன்னெறிக்கண் சென்றாரைச் சொல்லுமின்கள்,

பெரிய திருமடல் (16): நித்யமானதும் அணுகவொண்ணாதபடி கொடிதான கிரணங்களையுடைய ஸௌரியமண்டலத்தின் மத்தியில் அப்படிப்பட்ட ஒரு சிறுவழியின் நடுவே சென்று—

*3. சண்டமண்டலத்தினூடு சென்றுவீடுபெற்று* மேலை
கண்டுவீடிலாத காதலின்பம் நாளும் எய்துவீர்*
புண்டரீகபாத புண்யகீர்த்தி நும்செவிமடுத்து
உண்டு* நும்முறுவினைத் துயருள் நீங்கி உய்ம்மினோ.

தி. ச. வி. (67): அடையவரிய சூரிய மண்டலத்தின் நடுவே

மண்டலத்தூடு ஏற்றிவைத்து'' (79*4) என்றும், "**आदित्यो द्वारमुच्यते**''*1 என்றும், "**यो भित्वा सूर्यमण्डलं**''*2 என்றும், ''**ममैष मण्डलं भित्वा**''*3 என்றும் சொல்கிற **सूर्य-मण्डल-भेदादि**கள்[1] **प्राकृत-प्रलयादि**களில் அண்டாதிபதி[2] முதலானோர் முக்தராம்போது **अर्थलुप्त**ங்களாகை யாலே[3], இவை இங்குள்ளார்க்கு ஆகக்கடவன. **सूर्यद्वार**த்தாலே போவார்களென்றது **शाखान्तर**ங்களிலே "**आडम्बर**த்தினுடைய[4] **रन्ध्र**[5] போலே'' என்று **विशेषित**மாயிற்று.

### §7.5 சந்திரன் உபசரித்து வழிநடத்துதல்

அவ்வழியாலே ஆதித்யன் நடத்தப்போய், சந்திர னைக் கிட்டும். **धमादि-मार्ग**த்தில்[6] சொன்ன **चन्द्र-प्राप्ति** ஸ்வர்க்கத்தில் **शरीरविशेष-प्राप्ति**க்காகச் சொல்லிற்று. **दक्षिणायन-मृत**னை முமுக்ஷுவுக்கு **न्यासविद्या**யில் சொன்ன **चन्द्र-सायुज्यम्** **उत्तरायण-मृत**னுடைய **सूर्य-सायुज्यம்** போலே **विश्रम-विशेषार्थ**ம்[7]. இங்கு **आतिवाहिक**ரில் ஒருவனை **चन्द्र**னுடைய ப்ராப்தியைச் சொல்லுகிறது.

### §7.6 மின்னலுக்கு அபிமானி தேவதையான அமாநவன் பரமபதத்தை அடைவித்தல்

#### §7.6.1 வருணன்-இந்திரன்-ப்ரஜாபதி இவர்கள் தந்தாம் எல்லை வரை உபசரித்து வழிநடத்துதல்

சந்த்ரன் வழிநடத்த **दुन्दुभि-रन्ध्र**ம் போலே இருப்ப தொரு வழியாலே மேலே போமளவில், **विद्युत्-अभिमानि-देवतै** வந்து எதிர் கொண்டு வழிநடத்தும். **वैद्युत**ன் தன்னையே '**अमानव**ன்' என்றும்†1, அவன்தானே ப்ரஹ்மத்தை **प्रापि**க்கும்[8] என்றும் **श्रुति**கள் சொல்லுகையாலே, **विद्यु**த்தோடுண்டான[9] துவக்கையும்[10] அதனுடைய **गत्यभाव**த்தையும்[11] இடமாகக் கொண்டு வந்த வருண

னும், அவன் பின்னே அடையுண்ட[12] இந்த்ரனும் ப்ரஜா பதியும், அமாநவன் நடத்துகிற வழியில் தந்தா மெல்லையளவே सहकारिகளாய்க்கொண்டு[13] வழிநடத்து வார்கள்.

---

சென்று அர்ச்சிராதி மார்க்கம் முழுதும் கடந்து பரமபதத்தை அடைந்து பரமபதத்தில் எம்பெருமானைக் கண்டு விட்டுப் போவ தில்லாத பரமபக்தி கலந்த பரமானந்தத்தை ஒழிவில் கால மெல்லாம் பெற இட்டுப் பிறந்தவர்களே! (எம்பெருமானுடைய) செந்தாமரை போன்ற திருவடிகளினுடைய உபாயத்வப் புகழிலே உங்களுடைய காதுகளை ஈடுபடுத்தி அதை அநுபவித்து, நீங்களே விளைவித்துக் கொண்டதாய் (அநுபவிக்கும் வரை) உங்களை விடாத பாபபலமான துக்கத்திலிருந்து நீங்கி உஜ்ஜீவியுங்கள். □

1—சூரிய மண்டலத்தைப் பிளப்பது முதலான. 2—நான் முகன். 3—வஸ்துக்கள் (அதாவது, சூரியன் முதலானோர்) அப் பொழுது இல்லாமையால். 4—ஆடம்பரம் ஒருவகை வாத்யம். 5—துவாரம். 6—புகை, ராத்திரி, க்ருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனம், சந்திரன் மூலமாக ஸ்வர்க்கம் செல்லும் வழி. (தூமம்=புகை). 7—இளைப்பாறும் இடத்தைக் கூறுவதாகும். 8—அடைவிப்பன். 9—வித்யுத்=மின்னல். 10—சம்பந்தத்தையும். 11—நடுவிலே இடம் கொடுக்க இயலாமையாலே 12—சேர்ந்த. 13—உதவி யாளர்களாய்

†1—'மானஸன் என்றும்' என்று அதிகம்[4].

*1. तेषां वै क्षेममध्वानं गच्छतां द्विजसत्तम ।
सर्वलोके तमोहन्ता आदित्यो द्वारमुच्यते ।।

பார. (சாந்தி - 354-13): சிறந்த அந்தணரே! க்ஷேமமான மார்க்கத்தில் செல்லுகிற அவர்களுக்கு ஸகல லோகத்திலும் இருட்டைப் போக்கிக் கொண்டு ப்ரகாசிக்கிற ஸூர்யன் வழி யாகச் சொல்லப்படுகிறான்.

*2. யாஜ்ஞ. ஸ்ம். (4-167): எந்த வழி ஸூர்ய மண்ட லத்தைப் பிளந்து மேலே செல்கின்றதோ.

*3. (?): இவன் என்னுடைய (ஸூர்யனுடைய) மண்ட லத்தைப் பிளந்து போகப் போகிறான்.

'அமாநவனுடைய गमयितृत्वम्[1] व्यवधानसहम्[2]' என்கிற भाष्यम्[1] 'வருணாதிகள் अनुग्राहकர்' என்கையாலே अनुग्राहक-अन्वयमात्रத்திலே[2] ஸ்வரஸம்[1] (C—39). ஒரு श्रुतिயிலே அமாநவன் என்றும்[3], வேறொரு श्रुतिயில் மாநஸன் என்றும்[4] சொல்லப்பட்டவர்களில் 'முற்பட அமாநவனும் பிற்பட மாநஸனும வழிநடத்துவார்கள்' என்றும் சிலர் சொல்லுவார்கள். क्रमनियामकம் दुर्बलமாகையாலே, 'विकल्पமாதல் समुच्चयமாதல்'[5] என்று சிலர் கொள்ளப் பார்ப்பார்கள். विकल्प-दोषादिகளைப் (C–40) பார்த்து 'ஒருவருக்கு இரண்டு பேர்' என்று சிலர் சொல்லுவார்கள். இங்கே भाष्यादिகளையும் "अर्चिषस्तुः शुक्लपक्ष", "भूलोकेशाग्नयोऽस्तु"[5], "अर्चिरहस्सितपक्षान्"[6] इत्यादिகளான अभियुक्त-ग्रन्थங்களையும்[6] அநுஸந்திப்பது 'மாநஸனென புருஷன் வந்து वैद्युतन் பக்கலினின்றும் ப்ரஹ்மலோகமேறக் கொண்டு போம்' என்று श्रुति சொன்னது[4] वैद्युतेनैव ततः तत्-श्रुतेः*[7] என்கிற सूत्रानुगुणமாக स्थानत्रय-कल्पनादि

---

1—அடைவிப்பவனின் தன்மை; (அழைத்துச் செல்வது) 2—இடைவெளியைப் பொறுக்கக் கூடியது. 3—உதவி செய்பவர்கள். 4—கருத்துடையது; தாத்பர்யத்தை உடையது. 5—முன பின் என்ற க்ரமம் சொல்லுவதற்குக் காரணமான ப்ரமாணம் (बल)பலமற்றதால், சிலர் இவர்களுள் ஒருவன் என்றே(விகல்பம்), சிலர் இருவரும் சேர்ந்தோ (சமுச்சயம்) என்றே கூறுவர். 6—முன்னோர் நூல்களையும்.

*1. ततश्च अमानवस्य गमयितृत्वं व्यवधानसहमित्यवगम्यते ।

ஸ்ரீ பாஷ்யம் (4-3-3): ஆகையால் அமாநவன் அழைத்துக் கொண்டு போகிறான் எனபது மற்றவர்களையும் ஸஹாயமாய் வைத்துக் கொண்டு போவதையும் பொறுத்துக் கொள்ளுகிறது என்று அறியப்படுகிறது.

*2. वरुणादयस्त्वमानवानुग्राहका इति तेषामप्यातिवाहिकत्वेनान्वयो विद्यत एव ।

ஸ்ரீ பாஷ்யம் (4-3-4): வருணன் முதலியவர்கள் அமாநவனுக்கு உதவிபுரிகிறவர்களாகையால் ஆதிவாஹிகர்கள் என்கிற ஆகாரத்தில் ஸம்பந்தமுண்டு.

*3 तत्पुरुषोऽमानवस्स एनान् ब्रह्म गमयति ।

சாந்தோக்ய உப. : அமாநவன் என்னும் புருஷன் இவர்களை ப்ரம்மத்தினிடம் சேர்ப்பிக்கிறான்.

*4. तान् वैद्युतात् पुरुषो मानस एत्य ब्रह्मलोकान् गमयति ।

ப்ருஹதாரண்யக உப. (8-2-15) : மானஸஞன புருஷன் வந்து வைத்யுதன் பக்கலினின்றும ப்ரம்மலோகமேறக் கொண்டுபோம்

*5. भूलोकेश-अग्नयोऽष्टौ प्रथममहरतः पूर्वपक्षः सितात्मा
मासाष्षड् वत्सरोऽयो दशतनु-पवन-सूर्क आदित्यवर्गः ।
चन्द्रो विद्युत् जलेशस्समरुदधिपतिः स प्रजानामधीशः
ते मार्गस्य अर्चिरादेः अतिवहनविधौ विश्वनेत्रा नियुक्ताः ॥

(தத்வமுக்தாகலாபம்-ஜீவஸரம்-60வது சுலோக வியாக்யானத்தில் உதாஹரிக்கப்பட்டுள்ள சுலோகம்)

*6. अर्चिः अहः सितपक्षान् उदगयनाब्द मरुदर्केन्दून् ।
अपि वैद्युत-वरुणेन्द्र-प्रजापतीन् आतिवाहिकानाहुः ॥

தத்வஸாரம் (102) : அக்நி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், ஆண்டு, காற்று, சூரியன், சந்திரன், மின்னல், வருணன், இந்திரன், பிரும்மா இவர்களையும் ஆதிவாஹிகர்கள் (வழிநடத்துபவர்கள்) என்று சொல்லுகிறார்கள்.

*7. ப்ரஹ்மஸூ. (4-3-5): வித்யுத் தேவதைக்கு மேல் (அமாநவனென்னும்) வைத்யுதனாலேயே உபாஸகர்கள் அழைத்துச் செல்லப்படுகிறார்கள்; அப்படியே ச்ருதி சொல்லுகிறபடியால்,

களாலே[1] நிர்வஹிக்கலாம்[2]. இதனால் அக்கரையில் அமாநவனைச் சொன்ன ஸமஹிதைகளும் விரோத மில்லை.

### §7.7 அக்நி முதலிய வழிநடத்துவோர் பற்றிய வெவ்வேறு கொள்கைகள்

இவ்வர்ச்சிராதி தேவதைகளெல்லாம், 'கர்ம விசேஷங்களாலே பதம் பெற்ற प्रसिद्ध-अग्न्यादि-देवतैகள்' என்றும், 'அமாநவனை नित्यसूरिகளிலே ஒருவனாக இசைந்து†[1], கீழுள்ளாரைக் कर्मवश्यர்' என்றும், 'இவர் களெல்லாரும் அமாநவனைப் போலே भगवन्नियुक्तராய்[3] अग्न्यादि-विभूतिகளுக்கு अधिदेवतैகளான சில நித்யஸூரி கள்' என்றும் मतभेदங்கள் நடக்கும். இவ் अर्चिरादिगति அண்டந்தோறும் உண்டாயிருக்கும்.

### ‡ 7.8 மோக்ஷத்திற்குச் செல்லும் முறை பற்றி மேலும் சில விஷயங்கள்

முமுக்ஷுவுக்கு ब्रह्मकाय-निर्वणादिகள்[4] சொல்லு மிடங்கள் मधुविद्या-न्यायத்தாலே (B—49) विशेष-विषयம். विभव-व्यूह-लोकादि प्राप्तिक्रमம் சொல்லுமிடங்களுக்கும், पुण्डरीक-शिशुपाल-आयोध्यकादि मुक्तिक्रमம் சொன்னதற்கும் இதுவே நிர்வாஹம் (B—50).

'निवृत्तिधर्मपरன் पञ्चभूतங்களையும் அதிக்ரமிக்கும்[5]' என்று மநு சொன்னது (C—41) 'शीर्ष-कपालம்[6] முத லாகத்தொடங்கி अण्डान्तवर्ति-लोकங்களையும்[7] अण्डकटाहத் தையும்[8], दशगुणितोत्तरங்களான[9] आवरण-सप्तकங்களை யும்[10]†[2] (B—51), இவை எல்லாம் உள்ளாம்படி†[3] பரந்த தமஸ்தத்வத்தையும் भेदिக்கும்' என்று श्रुतिகள் சொன்ன (C—42) तत्त्वान्तरங்களுக்கும் उपलक्षणம்.

இவ்வர்ச்சிராதி गतियாகப் போனவர்கள் आवर्ति யார்கள்[11] என்கிறது सर्वलोक-अनुसञ्चरण-श्रुतिबलத்தாலே

(C—43) ஸம்ஸாரியார்கள் என்றதாமத்தனை. வைதிகன் புத்ராதிகள் இவ்வர்ச்சிராதி गतियாலே देशविशेष प्राप्ति பெற்றவர்கள் அல்லாமையாலே அவர்களை மீட்டது विरुद्ध மன்று (B—52).

§7, 9. விரஜாநதியை ஸங்கல்பத்தால் கடத்தல்

இவ்வழியாலே त्रिगुण-महकान्तारத்தைக்[12] கடந்தவன் भगवत्कृपै போலே†[4] ஸர்வ காலத்திலும் ஏகரூபமாகப் ப்ரவஹிக்கிற 'விரஜை' என்கிற अमृतनदिயைக் கிட்டும். ''वैकुण्ठसीम्नि विरजां स्यन्दमानां महानदीं''*[1] என்கையாலும், ''गत्वाऽथो†[5] विरजां विमुञ्चति तनुं सूक्ष्मां''*[2] என்று अभियुक्तர்

---

1—இரண்டு இடங்கள் என்று கூறுவதாலே (அதாவது பரமபதத்தில் சிறிது தூரம் வரையில் அமாநவனும், அதற்குப் பிறகு மானஸன் என்று கல்பிப்பதாலே). 2—முடிவு சொல்லலாம். 3—எம்பெருமானால் நியமிக்கப்பட்டவர்களாய். 4—பிரமனின் சரீரத்துடன் சேர்ந்திருப்பது. 5—விஞ்சி நிற்பன். 6—மண்டை ஓடு. 7—அண்டத்தில் அடங்கிய உலகங்களையும். 8—ப்ரம்மாண்டத்தை மூடியிருக்கும் ஓட்டையும். 9—பத்து மடங்கு அதிகமான. 10—ஏழு உறைகளையும். 11—திரும்பி வரமாட்டார்கள். 12—ஸத்வம்-ரஜஸ்-தமஸ் என்கிற மூன்று குணங்களை உடைய ப்ரக்ருதியாகிற பாலைவனத்தை.

†1—இசைத்து[1]. 2—ஆவரணங்களையும். 3—உள்ளாம்படியான[1]. 4—भगवत्कृपै யாலே[1]. 5—गत्वाऽतो[3].

*1. (?) : வைகுண்டத்தின் எல்லையில் ப்ரவஹிக்கிற விரஜை என்னும் மஹாநதியை.

*2. अर्चिर्वासर शुक्लपक्ष षडुदङ्मासांश्च संवत्सरं
वायुं भास्कर चन्द्र विद्युदुदपान् सेन्द्रं प्रजानां पतिम् ।
गत्वाऽथो†[5] विरजां विमुच्य च तनुं सूक्ष्मां ततोऽमानव-
स्पर्शात् क्षालितवासनास्सुकृतिनो गच्छन्ति विष्णोः पदम् ॥

संग्रहிக்கையாலும்[1], விரஜையைச் சிலர் त्रिगण-शुद्धसत्त्वங்களுக்கு[2] எல்லை எனப் பார்ப்பார்கள். वैकुण्ठ-शब्दம் பொதுவாகையாலும்†[1] 'ப்ரஹ்மலோகத்தில் ஆறு†[2] ह्रदादिகளுக்கு अनन्तरம் விரஜையைக் கிட்டும்' என்று[3] श्रुति சொல்லுகையாலும் (C—44), दिव्यजनपदத்திற்கு எல்லை என்றும் சிலர் சொல்லுவார்கள். 'விரஜையை மநஸ்ஸாலே கடக்கும்' என்றது 'தன் सङ्कल्पத்தாலே கடக்கும்' என்றபடி. 'முக்தன் மநஸ்ஸாலே ஸர்வகாமங்களையுங்கண்டு அநுபவிக்கும்' என்பதற்கும்†[4] இதுவே நிர்வாஹம்.

விழியல்லால் வேலில்லை விண்ணின் மாதர்
மேனியல்லால் வில்லில்லை மீனவர்க்கு*
மொழியல்லால் அமுதில்லை என்று முன்னாள்
முத்திவழி முனிந்தடைந்த மோகம் தீர்ந்தோம்*
கழியல்லால் கடலில்லை என்பார் போலக்
காரியமே காரணமென்றுரைப்பார் காட்டும்*
வழியல்லா வழியெல்லாம் கடந்தோம் மற்றும்
வானேறும் வழி கண்டோம் மகிழ்ந்திட்டோமே. (15)

॥ इति श्रीपरमपदसोपाने सप्तमं अर्चिरादिपर्व ॥

---

(தத்வமுக்தா கலாபம்—ஜீவஸரம்—60வது சுலோக வியாக்யானத்தில்): இங்கு அமாநவனின் கைபட்டதும் பழையவாஸனைகள் கழிந்த ஸுக்ருதிகள் விஷ்ணு பதத்தை அடைகிறார்கள் என்று கூறப்படுகிறது. வாஸனையாவது ஞான விகாஸத்தைத் தடுக்கும் சக்தியின் அம்சம், அல்லது இவ்வம்சத்தோடு கூடிய ஸூக்ஷ்ம ப்ரக்ருதியின் அம்சம் எனக் கொள்ளவேண்டும். □

1—எடுத்துக் கூறுகையாலும். 2—ப்ராக்ருதமான லீலா விபூதிக்கும் ஶுத்தஸத்வமயமான பரமபதத்திற்கும்.

†1—பொதுவாகையாலே. 2—அரம் என்கிற. 3—என்றும். 4—என்பதற்கு[1].

15. முன்னாள்—முன்பு; முத்தி வழி முனிந்து—மோக்ஷ

|| श्रीमते निगमान्त महादेशिकाय नमः ||

# अष्टमं दिव्यदेश - प्राप्तपर्व

வன்பற்றுடன் மயல் பூண்டு மற்ரேர் கதியாலின நாள்*
என்பெற்றது பெறுந்தானமும் எத்தனை போதுளதாம்*
துன்பற்ற நீர் துணிவால் துயர்தீர்க்கும் துழாய்
முடியான்*
இன்புற்ற நல்வழியால் ஏற்றும்†[1] நற்பதம்
எண்ணுவமே. (16)

---

*மார்க்கத்தை வெறுத்து;* மீனவற்கு—*மீனைக்கொடியாகவுடைய மன்மதனுக்கு;* விண்ணின் மாதர்—*தேவலோக ஸ்திரீகளுடைய;* விழி அல்லால் வேல் இல்லை—*கண்ணல்லது வேலாயுதம் இல்லை;* மேனி அல்லால் வில் இல்லை—*(அப்பெண்களுடைய) சரீரத்தைத் தவிர வேறு வில் இல்லை;* மொழியல்லால் அமுது இல்லை—*(அவர்கள் பேசும்) பேச்சைத் தவிர வேறு அம்ருதம் இல்லை;* என்று அடைந்த—*என்று (நாம்) அடைந்த;* மோகம் தீர்ந்தோம்—*மயக்கம் நீங்கப்பெற்ரேம்;* கழி அல்லால் கடல் இல்லை—*(கடலின் கழி நீரை மாத்திரம் கண்டு) கழி நீரைத் தவிர வேறு கடல் இல்லை;* என்பார் போல்—*என்று சொல்லும் மூடர்கள் போல;* காரியமே காரணம் என்று — *(ப்ரஹ்மத்தினிடமிருந்து) உண்டான ஜகத்தையே காரணமென்று (கொண்டு அதையன்றி வேருன ப்ரஹ்மமில்லை யென்று);* உரைப்பார் காட்டும்—*கூறுகிற மதாந்தரஸ்தர்களால் காட்டப்படுகின்ற;* வழியல்லா வழியெல்லாம்—*நல்வழியல்லாத வழிகளையெல்லாம்;* கடந்தோம்—*தாண்டிவிட்டோம்;* மற்றும் வான் ஏறும் வழி கண்டோம்—*மேலும் பரமபதத்திற்குச் செல்லும் அர்ச்சிராதி மார்க்கத்தை அடைந்தோம்; (அதனுல்)* மகிழ்ந்திட்டோம்—*மகிழ்ச்சியடைந்தோம்.* □

*†1—''ஏற்றும்'' என்பது* இல்லை.

***16.*** வன் பற்றுடன்—*(நாம் அற்ப* விஷயங்களில்) வலிய *ஆசையுடன்;* மயல் பூண்டு—*அஜ்ஞாநத்தைப் பெற்று;* மற்று ஓர் கதியால் *(நமக்குத் தகாத)* வேறு ஒரு வழியில் *நடந்ததால்;* இன நாள்—*இங்ஙனே பல நாளாக;* பெற்றது என்?—*அடைந்த பயன்*

§8. 1- விரஜாநதியில் மூழ்கி ஸூக்ஷ்ம சரீரத்தை விட்டு அமாநவனால் தொடப்பட்டு ப்ராக்ருத வாஸனையெல்லாம் கழிக்கப் பெறுதல்

இப்படி अनादिकालम் अनुचित-पुरुषार्थ-सङ्गत्தாலே அடிக்கடியும் अनन्त-दुःख-व्याप्तैயான संसार-पदविயிலே ஓடினவிடாய் எல்லாம் தீர अत्यद्भुतैயான अर्चिरादि-पदवि யில் 'அமரரோடு உயர்வில்'*[1] சென்று, विमल-मधुर-सुरभि-शीतलமான[1] விரஜாப்ரவாஹத்தை अवगाहित्து[2] அழுக்கற்று, पवित्र-पाणिயான அமாநவனுடைய करस्पर्शத்தாலே वासना - विशेषம் கழிந்தவன்[3],

§8. 2. ஸ்ரீவைகுண்டம் என்னும் திவ்யலோகத்தை அடைதல்

दिव्यदेश-प्राप्तिயாலே सर्वेश्वरனோடு सलोकனாய், अप्राकृत-अमृतमय - विलक्षण - विग्रहयोगத்தாலே सरूपனாய், கீழ்ச் சொன்ன योग्यतैகளில்லாதார்க்கு 'न तत्र मूढा[1] गच्छन्ति'*[2] इत्यादिகளில்படியே கிட்டவரிதாய், पतिव्रता - धर्म - निरतரான பரமைகாந்திகளுக்குப் प्राप्यமாய், அயர்வறும் அமரர்களுக்கு अनवरत-दर्शनीयமாய்[4], अकाल-काल्यமாய்[5], अत्यर्क-अनल-दीप्तமாய்*[3], अन्यनिरपेक्ष-प्रकाशமாய்[6], परम-योगि वाङ्मनसा-अपरिच्छेद्यமான*[4] नित्य-निरवद्य-निरतिशय-भोग्यतादि-प्रकर्षத்தையுடையதாய்[7], शुद्धसत्त्व-मयமாய், கொழும்

---

யாது? பெறும் தானமும்—(அவ்வழிகளால்) பெறக்கூடிய (ப்ரஹ்மபதம் வரையிலுள்ள) ஸ்தாநமும்; எத்தனை போது உளதாம்?—எத்தனை காலம் நிலைத்திருக்கும் ? துன்பு அற்ற—துக்கமில்லாதவனும்; தன் துணிவால்—தன்னைப் பற்றிய (பக்தி, ப்ரபத்தி என்னும் உபாயமாகிய) ஜ்ஞாநத்தினால்; துயர் தீர்க்கும்—ஸம்ஸார துக்கத்தைப் போக்குபவனும்; துழாய் முடியான்—திருத்துழாய் மாலையை முடியில் அணிந்தவனுமான எம்பெருமானால்; இன்புற்ற நல்வழியால் ஏற்றும்—ஸுகம் நிறைந்த சிறந்த (அர்ச்சிராதி) மார்க்கத்தால் அடைவிக்கப்படுகின்ற; நல் பதம் எண்ணுவம்—உயர்ந்த பதமாகிய பரமபதத்தை அநுஸந்திப் போம். □

1—அழுக்கற்றதும், இனியதும், நறுமணம் பொருந்தியதும், குளிர்ந்ததுமான; 2—மூழ்கி. 3—கர்மவாஸனை போனவன்; 4—எப்பொழுதும் பார்க்கத் தக்கதாய்; 5—காலத்தாலே அழிக்கப் படாததாய். 6—இன்னொன்றை எதிர்பாராத ஒளியுடையதாய்; (ஸ்வயம் ப்ரகாசமாய்); 7—எப்பொழுதும் இருக்கிறதும், ஒரு வித தோஷமும் இல்லாதநும், எல்லையற்றதுமான போக்யதை முதலிய மேன்மையை உடையதாய்.

†1—विप्र !

*1. திருவாய். (1—3—11); ஆதிவாஹிகர்களோடு உயர்ந்த தான பரமபதத்தில்.

*2. न तत्र मूढा[1] गच्छन्ति पुरुषाः विषयात्मकाः ।
दम्भ-लोभ-महाक्रोध-मोह-द्रोहैः अभिद्रुताः ॥

பார. (வந-262—39): டம்பம், ஆசை, பெருங்கோபம், அஜ்ஞாநம், மதிமயக்கம், த்ரோஹம் இவற்றால் துன்புறுகின்றவர்களும், விஷய ஸுகங்களிலேயே படிந்த மனதை உடையவர்களுமான அறிவற்றவர்கள் அவ்விடத்தை (பரமபதத்தை) அடையமாட்டார்கள்.

*3. अत्यर्कानलदीप्तं तत् स्थानं विष्णोर्महात्मनः ।
स्वयैव प्रभया राजन् दुष्प्रेक्ष्यं देवदानवैः ॥

மஹாத்மாவான மஹாவிஷ்ணுவினுடைய இடமான வைகுண்டமானது அவனுடைய ஒளியினாலேயே கதிரவனையும் அக்நியையும் விஞ்சியதாய் பிரகாசிக்கிறது. இது தேவர்களாலோ அஸுரர்களாலோ பார்க்க முடியாதது.

*4. ச. கத்.—மிகச் சிறந்த யோகிகளுக்கும் வாக்கினாலும் மனதினாலும் அளவிடமுடியாததான,

சோதி உயரம் (408*[1])என்றும், "சேணுயர் வானம்"*[1], என்றும், "தெளிவிசும்பு"*[2] என்றும் சொல்லப்பட்ட "நலமந்தமில்லதோர் நாட்டுக்குள்ளே"*[3] சென்று;

§8 3. அரம்—ண்யம் என்னும் அமுதக் கடல்களையும் ஐரம்மதீயம் என்னும் அமுதப் பொய்கையையும் பார்த்தல்

அங்கே 'அரம்' என்றும் 'ண்யம்' என்றும் பேருடைய **अमृतमय-समुद्र**ங்களையும், **दिव्योद्यान-मणिपर्वत-सरित्-तटाकादि-विशेष**ங்கள் எல்லாவற்றையும் உபநிஷத்துக்களிலும் பகவச்சாஸ்த்ர - ஸம்ஹிதைகளிலும் **श्रीवैकुण्ठ - गद्यादि**களிலும் பண்டு பரக்க அநுஸந்தித்தபடியே (C—45) ஸப்ரகாரமாக[1] ஸாக்ஷாத்கரித்து, அந்தமில் பேரின்பத்தில் ஆநந்த வெள்ளம் சூழ்ந்தாற்போலே இருக்கிற '**ऐरंमदीयं**' என்கிற **अमृतसरस्**ஸைக்[2] கிட்டும்.

§8.4. ஸோமஸவநம் என்னும் அரசமரத்தை அணுகுதல்

**अनन्तरम्** **सर्वशरीरि**யினுடைய **स्थावरावतार**ம்[3] போலே **सुभग**மாய்[4] ஸூரிஸேவ்யமான 'ஸோமஸவநம்' என்கிற **अश्वत्थ**த்தை[5] அணுகும்.

§8.5. அப்ஸரஸ்ஸுக்களால் வரவேற்கப்பட்டு ப்ரம்மாலங்காரம் செய்விக்கப்படுதல்

இவனை **अपराजिते**யான[6] **दिव्यनगरि**யினின்றும் **श्रीवैकुण्ठनाथ**ன் எதிர்கொள்ள வரவிட்ட ஐநூறு **दिव्य**அப்ஸரஸ்ஸுக்கள் நூறு நூருக ஒரு திரளாய் **दिव्य**ங்களான **माला-अञ्जन-चूर्ण-वासः-प्रभृति**களை ஏந்திக் கொண்டு 'காளங்கள் வலம்புரி கலந்து எங்கும்

1—அந்த அந்த விசேஷங்களோடு கூட. 2— ஸரஸ்=குளம். 3—அசையாப் பொருளாகிற அவதாரம். 4—அழகாய். 5—அரசமரத்தை. 6 — ப்ரம்மவித்துக்களல்லாதவர்களால் தங்கள் வசம் ஆக்கிக்கொள்ளப்படாத:

*1. நாணும் நிறையும் கவர்ந்து என்னை நல் நெஞ்சம்
கூவிக்கொண்டு*
சேணுயர் வானத்திருக்கும் தேவபிரான் தன்னை*
ஆணை என்? தோழீ! உலகு தோறு அலர்தூற்றி* ஆம்
கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே.

திருவாய். (5—3—9): என் தோழியே! என்னுடைய வெட்கத்தையும் அடக்கத்தையும் அபஹரித்துக் கொண்டு, என்னுடைய நல்ல மனதை தன்னிடம் இழுத்துக்கொண்டு, மிகவும் உயர்ந்த வைகுந்தத்தில் இருக்கும் நித்யஸூரிகளின் தலைவனைக் குறித்து எல்லா உலகங்களிலும் பழிகளைச் சொல்லி என்றால் செய்யக்கூடிய கோணல்களைச் செய்து ஒருவருக்கும் அடங்காதவளாய் மடல் ஊர்வேன். உன்மேல் ஆணை (=இது நிச்சயம்). (குறிப்பு:— கோணல்=மடலூரப் புறப்பட்டபோது அவன் அநுகூலனாய்க் கிட்ட வந்தாலும் மடலூர்ந்து தீருவது.)

*2. தீவினை உள்ளத்தின் சார்வல்லவாகித்
தெளிவிசும் பேறலுற்றால் *
நாவினுள்ளும் உள்ளத்துள்ளும்
அமைந்த தொழிலினுள்ளும் நவின்று*
யாவரும் வந்து வணங்கும் பொழில்
திருவாறன்விளையதனை*
மேவி வலஞ்செய்து கைதொழக்கூடுங்கொல்?
என்னும் என் சிந்தனையே.

திருவாய். (7—10—9): கொடிய பாபங்கள் மனதில் சேராமல் ஸவாஸனமாகக் கழியப்பெற்று பரமபதத்தைப் பெறுகையை ஒருவன் அடைந்தாலும், சோலைகளால் சூழப்பட்ட திருவாறன்விளையைக் கண்டால் அவன் பரமபதத்திலிருந்து திரும்பிவந்து அவ்வூரை வணங்கி, உள்ளத்தாலும் நாக்காலும் அவைகளுக்குப் பொருந்தின உடலின் செயல்களாலும் அடிக்கடி அநுபவித்துக் கொண்டிருப்பன். அத்தகைய திருவாறன்விளையை என் மனமானது ப்ரீதியுடன் ப்ரதக்ஷிணம் செய்து அஞ்சலி பண்ணி அநுபவிக்கக் கூடுமோ? -என்று என் மனம் நினைத்துக் கொண்டிருக்கிறது.

*3. திருவாய். (2—8—4): ஆநந்தத்திற்கு முடிவு இல்லாத தான ஒப்பற்ற தேசத்திற்குள்ளே,

இசைக்க'*[1] வந்து†[1], 'ஆண்மின்கள்வானகம் ஆழியான் தமர்'*[1] என்று मङ्गलाशासनம் பண்ணி[1], सार्वभौम-குமாரனை ராஜமஹிஷீ பரிஜநங்கள் எதிர்கொண்டு உபசரிக்குமாப் போலே, ஸ்ரீவைகுண்டநாதனை ஸேவிப்பார்க்கு நிகராக "உடுத்துக் களைந்த"*[2] इत्यादिகளின்படியே बहुप्रकारமான वस्त्रालङ्कारத்தாலே[2] அலங்கரிப்பார்கள்.

§8.6 ஸ்ரீ வைகுண்டம் என்னும் திவ்யநகரத்தை அணுகுதல்

अनन्तरம் तिल्यवृक्ष-सालज्यसंस्थान-अपराजित-आयतनங்களை[3] அணுகினவளவிலே†[2] सर्वगन्धனாய் ஸர்வரஸனாய் 'சிறந்த வான்சுடரான'*[3] ஸ்ரீவைகுண்டநாதனுடைய दिव्य-गन्ध-रस-तेजस्ஸுக்கள் வந்து ப்ரவேசிக்க, பாரிஜாத பரிமளமும் அம்ருதமும் ஆதித்யனும் உருகி ஒன்றினாற் போலே उल्लसित-विग्रह-गुणனைக்கொண்டு[4](†[3]); आमोद-प्रमोद-संमोद-लोकங்களைக் காட்டில்[5] अतिशयित-वैभवமாய், "यायोध्येत्यपराजितेति विदिता" (349[12]) என்கிறபடியுள்ள ஸ்ரீவைகுண்ட நகரத்தை அணுகி,

§8.7 இந்திரன்-ப்ரஜாபதி என்னும் த்வாரபாலர்களால் வரவேற்கப்படுதல்

'குடியடியார் இவர் கோவிந்தன் தனக்கு என்று முடியுடைவானவர் முறைமுறை எதிர்கொள்ள கொடியணி நெடுமதிள் கோபுரம்'*[4] குறுகி, 'இந்திரன்'

1—வாழ்த்தி. 2—பரமனைப் போன்றே ஆடை ஆபரணம் ஆயுதங்களால் அழகூட்டுவது. 3—தில்யம் என்கிற மரம், ஸாலஜ்யம் என்கிற ஆஸ்தான மண்டபம், வைகுண்டத்தில் இருக்கும் திவ்ய ஸ்தானம் இவைகளை; 4—ப்ரகாசிக்கிற திவ்ய விக்ரஹத்தை உடையனைக்கொண்டு. 5—ஆமோதம், ப்ரமோதம், ஸம்மோதம் ஆகியவை ப்ரக்ருதிமண்டலத்தில் உள்ள விஷ்ணு லோகங்கள்.

†1—இசைக்க வந்தனர்[1]; எங்கும் இசைத்தனர்[4]. 2—அணுகினவளவே[1]. 3—उल्लसित-विग्रह-गुणமாய்க் கொண்டு[4].

*1. வேள்வியுள் மடுத்தலும் விரைகமழ் நறும்புகை
காளங்கள் வலம்புரி கலந்து எங்கும் இசைத்தனர்
ஆண்மின்கள் வானகம் ஆழியான தமர் என்று
வாளொண் கண் மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே.

திருவாய். (10-9-6) (ஆதிவாஹிகர்களின் ஸ்திரீகள் உபசாரம் செய்வதைக் கூறுகிறார்.) மஹான்கள் தாங்கள் செய்த யாகங்களின் பலன்களை மனப்பூர்வமாக ஸமர்ப்பிக்கும்போது வேறு சிலர் நல்ல வாசனையுள்ள தூபங்களை ஸமர்ப்பித்தார்கள். மற்றவர்கள் எல்லா இடங்களிலும் காஹளங்களையும் சங்கங்களையும் ஊதினார்கள். காநதியுள்ள அழகிய கண்களையுடைய ஸ்திரீகள் மகிழ்ந்து 'சக்ராயுதம் தரித்தவனுடைய பக்தர்களே! நீங்கள் வைகுந்தத்தை வீடுபோல் ஆளுங்கள்' என்று ஆசீர்வாதம் பண்ணினார்கள்.

*2. உடுத்துக்களைந்த நின் பீதகவாடையுடுத்துக் கலத்த துண்டு
தொடுத்த துழாய்மலர் சூடிக்களைந்தன சூடும் இத்
தொண்டர்களோம்
விடுத்த திசைக்கருமம் திருத்தித் திருவோணத் திருவிழவில்
படுத்த பைந்நாகணைப்பள்ளி கொண்டானுக்குப் பல்லாண்டு
கூறுதுமே.

திருப்பல்லாண்டு (9): எம்பெருமானே! உன் திருவரையில் உடுத்தியிருந்து களைந்த உன்னுடைய பீதாம்பரத்தை அணிந்து கொண்டும், நீ அமுது செய்தபின உண்கலத்தில் மிச்சமாயிருப்பதை உண்டும், நீ சாத்திக் கொண்டு களைந்தவைகளான திருத்துழாய் மாலைகளை அணிந்தும் (மகிழ்கின்ற) இப்படிப்பட்ட தாஸர்களான நாங்கள், நீ சயனிப்பதற்கு ஏற்றவாறு பரப்பிய படத்தையுடைய ஆதிசேஷனாகிய படுக்கையில் படுத்துக்கொண்டிருக்கிற உனக்குத் திருவோணத் திருநாளிலே மங்களாசாஸனம் பண்ணக் கடவோம்.

*3. திருவாய். (5-10-1): உயர்ந்ததான பரம பதத்தில் இருக்கிற தேஜஸ்ஸான.

*4. திருவாய். (10-9-8): இந்த பாகவதர் ஸ்ரீ கோவிந்தனுக்கு குலபரம்பரையாக தாஸர்கள் என்று சொல்லிக்கொண்டு கிரீடத்தை தரித்துக் கொண்டிருக்கிற நித்யஸூரிகள் வரிசை வரிசையாக எதிர் கொண்டு அழைக்க, த்வஜங்களினால் அலங்கரிக்கப்பட்டதும் மிகவும் உயர்ந்த மதிள்களை உடையதுமான கோபுரத்தைக் கிட்டி.

என்றும் ''பரஜாபதி'' என்றும பேருடைய ''வாசலில் வானவரைச்''*1 சென்று கிட்ட, அவர்களும் இடைய நின்று[1](†1),''வைகுந்தன் தமர் எமர் எமதிடம் புகுது''*2 என்ன ஆஶ்ரிதருக்கு नित्यापावृतமான[2] श्रीवैकुण्ठनगर-दिव्यद्वार-कवाटத்தைக்[3] கடநது புககு; இரண்டு சிறகும்†2 மணிபர்வதங்களை நிறைத்தாற் போலே இருக்கிற மாளிகைப் பெருந்திரு வீதியின் நடுவே செல்லும்.

§ 8.8 ஶ்ரீ - பூ - நீளா தேவிகள் வரவேற்றல்

அப்போது ''விதிவகை புகுந்தனர் என்று நல் வேதியர் பதியினில் பாங்கினில் பாதங்கள்''*3 கழுவ; ''நிதியும் நற்சுண்ணமும நிறைகுட விளக்கமும்†3 மதிமுக மடந்தையர் ஏந்தி''*4 எதிர் கொள்ள;

§ 8.9 திவ்ய விமாநத்தை அணுகி பரமாத்மாவின் குணங்களைப் பெற்று திருமாமணி மண்டபத்தைச் சென்று ஏறுதல்

ஹிரண்மயமான[4] திவ்யவிமாநத்தைக் கிட்டின வளவிலே ब्रह्मयशस्[5](†4) வந்து பிரவேசிக்க, 'நிகரில் புகழானுக்கு' நிகர் என்னலாம் படியாய் 'प्रजापतियி னுடைய ஸபை' என்ற வாக்யத்திலும் (C—46), सर्वात्मसाधारण என்கிற சுலோகத்திலும்*5, நிருக்யத் திலும் சொல்லுகிற आनन्दमयமான திருமாமணி மண்டபத்தைச் சேர்ந்து; அங்கே कुमुदादिகளான दिव्य-पार्षदेश्वरர்களும[6], चण्डादिகளான दिव्य-द्वारपालர் களும்[7] सस्नेह-बहुमान-अवलोकनம் பண்ண[8], अनीकेश्वर-नियुक्त

---

1—விலகி வழிவிட்டு 2—எப்போதும் திறந்து வைக்கப் பட்டிருக்கிற. 3—கவாடம் = கதவு. 4—பொன்னுலான 5—ப்ரம் மத்தின் புகழ். 6—குமுதன், குமுதாக்ஷன் புண்டரீகன், வாமனன், சங்குகர்ணன், ஸர்வ நேத்ரன், ஸுமுகன், ஸுப்ரதிஷ்டன் என்று எட்டு கணதிபதிகள். 7—சண்டன், ப்ரசண்டன்,

பத்ரன், ஸுபத்ரன், ஜயன், விஜயன், தாதா, விதாதா என்று ஒரு வாயிலுக்கு இருவராக எட்டு துவாரபாலர்கள். 8—அன்புடனும், பெருமதிப்புடனும் பார்க்க

†1 —''இடைய நின்று'' என்பது இல்லை[3]. 2—இரண்டருகும[3]. 3—விளக்கம[1] 4—ப்ரஹ்ம யசஸ்ஸுக்கள்[1].

*1. திருவாய். (10—9—9): கோபுரவாசலில் இருக்கும் த்வார பாலர்களான நித்யஸூரிகளை.

*2. திருவாய். (10—9—9): வைகுண்டனாகிய எம்பெருமானுடைய தாஸர்கள் எங்களுக்கு ஸ்வாமிகள்; (ஆதலால்) எங்களுடைய இடத்தில் ப்ரவேசிக்க வேண்டும்

*3. திருவாய். (10—9—10): நம் பாக்யத்தாய் (இந்த ஸ்ரீ வைஷ்ணவர்) இங்கே வந்து புகுந்தனர் என்று (ஸந்தோஷப்பட்டு) ஞானக்குறைவு ஒரு போதுமில்லாதவர்களும் வேதத்தினால் கொண்டாடப் பட்டவர்களுமான நித்யஸூரிகள் தங்களுடைய திருமாளிகைகளில் முறைப்படி அவருடைய திருவடிகளை.

*4. திருவாய். (10-9-10). சந்திரன் போன்ற முகங்களையுடையவர்களான பெரியபிராட்டியும், பூமிப்பிராட்டியும், நீளைப்பிராட்டியும் தங்கள் பரிசாரிகைகளுடன் கூட இவருக்கு எதிரே வந்துநிதியான ஸ்ரீ சடகோபத்தையும், நல்ல ஸ்ரீசூர்ணத்தையும், பூர்ணகும்பங்களோடு கூடின தீபங்களையும் ஏந்திக்கொண்டு.

*5. सर्वात्म-साधारण-नाथ-गोष्ठीपूरेऽपि दुष्पूर-महावकाशम् ।
आस्थानमानन्दमयं सहस्रस्थूणादिनाम्नातमवाप्नवानि ॥

ஸ்ரீரங்கராஜஸ்த. (1—38): எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவான ஸ்ரீரங்கநாதனுடைய கோஷ்டியாலே நிரப்பப் பார்த்தாலும் நிரப்ப முடியாத மிகுந்த அவகாசத்தையுடையதும், 'ஸஹஸ்ர ஸ்தூணே' என்கிற பதத்தை முதலிலே உடைய உபநிஷத்வாக்யத்தினால் ஓதப்பட்டதும், ஆநந்தமே வடிவெடுத்ததுமான திருமண்டபத்தை அடையக் கடவேன்.

ரான்[1] आस्थान-निर्वाहकர்[2] அருளப்பாட்ட[3], அடிக்கடியும் தொழுவதெழுவதாய்க் கொண்டு திருமாமணி மண்ட பத்தின் முகப்பிலே[4] சென்றேறி;

§ 8.10 பெரியதிருவடியை வணங்குதல்

அங்கே சிறகுடைய மஹாமேருவைப் போலே சிறந்த திருமேனியுடையனாய் त्रयीमयனாய்[5] திருமகள் சேர் மார்பனுக்குத் திருககண்ணாடி போலே अभिमुखனாய்[6] நிற்கிற 'காலார்ந்த கதிக் கருட'னைக்கண்டு*[1] கழல் பணிந்து;

§ 8.11 நித்யஸூரிகள் கோஷ்டியை அடைந்து அவர்களைப் போல் தொண்டு செய்ய விழைதல்

'பிணங்கி அமரர் பிதற்றும் குணம்'*[2] என் கிறபடியே ஓரொரு ஸ்வாமிகுணத்தைப் பற்றி वादि-प्रतिवादिகளைப் போலே வாசி வகுப்பதும்[7], अतिस्नेहத்தாலே अस्थाने भयशङ्कैயுடையாரைப் போலே संभ्रमம்பண்ணுவதுமாய்க்கொண்டு[8] ரஸிக்கிற நித்யஸூரிகள் நிரையாக இருக்கின்ற அழகோலக்கத் தின்[9] நடுவே சென்று; 'அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்று கொலோ' என்கிற†[1] ஆசை நிறைந்து, दिव्यपरिजन-परिच्छद-आयुध-आभरणஆழ்-வார்கள்[10] स्वासाधारण-लक्षण - विशिष्ट - विग्रहங்களோடே यथास्थानம் ஸேவித்து நிற்கிற நிலைகளைக்கண்டு, सर्वविध - कैंकर्य - मनोरथ - अधिरूढனாய்க்கொண்டு[11] கிட்டச் சென்று;

‡ 8.12 எம்பெருமானது திவ்ய ஸிம்ஹாஸநத்தின் அருகில் பூர்வாசார்யர்களைக் கண்டு வணங்குதல்

पर्यङ्क परिसरத்திலே[12] முன்பு தங்களைக் கொண்டு

எம்பெருமான் நடத்தின க்ருஷி फलित्तது[13] என்று पूर्णमनोरथரான पूर्वाचार्यர்களைக் கண்டு; 'அறியாதன அறிவித்து'*[3], 'என்னைத் தீமனம் கெடுத்த'*[4] 'நும்

---

1—விஷ்வக்ஸேனரால் (ஸேனை முதலியாரால்) ஏவப்பட்ட. 2—ஆஸ்தாநத்தை நடத்துபவர்கள். 3—பகவான் அவரவர் அந்தந்தக் கைங்கர்யத்தில் அந்வயிக்கும்படி க்ருபை செய்திருக்கும் நியமனத்தைத் தெரிவிக்க. 4—முன் பகுதியிலே. 5—வேத ஸ்வரூபனாய். 6—எதிரில். 7—உயர்வினை அழகுறப் பகுத்துப் பேசுவதும். 8—பரபரப்பை அடைந்து. 9—அழகிய ஸபா மண்டபத்தின். 10—பரிச்சத=குடை சாமரம் முதலியவை; ஆழ்வார்கள்—சக்கரமும், சங்கும். 11—எல்லாவித கைங்கர்யங்களும் செய்யவேண்டுமெனும் மனோரதத்தில் ஏறி. 12—படுக்கையின் (ஸிம்ஹாஸநத்தின்) பக்கத்திலே. 13—முயற்சி பயனடைந்தது.

†1—என்று[1].

*1. பெருமாள்திரு. (1—8): காற்றுப்போல் அதிவேகத்தை உடைய கருடனை.

*2. அணங்கென ஆடும் என்அங்கம்*
வணங்கி வழிபடும் ஈசன்*
பிணங்கி அமரர் பிதற்றும்*
குணங்கெழு கொள்கையினானே.

திருவாய். (1—6—4): (எம்பெருமானுடைய குணங்களைப் பற்றி) விவாதம் செய்து கொண்டு நித்யஸூரிகள் ஒன்றோடொன்று ஸம்பந்தமில்லாமல் (கூறியது கூறல் இல்லாமல்) சொல்லும் கல்யாண குணங்களுக்கு இருப்பிடமான எம்பெருமானை (நான் அநுபவித்து அதனாலுண்டாகும் ஸந்தோஷத்தால்) பேய்பிடித்தது போல் கூத்தாடுகிற என் உடம்பு அவனை வணங்கி கைங்கர்யம் செய்யும்.

*3. திருவாய். (2—3—2): தெரியாத அர்த்தங்களைத் தெரியப்படுத்தி.

*4. திருவாய். (2—7—8): க்ஷுத்ர விஷயங்களில் ஈடுபட்ட என் மனதை அவைகளினின்றும் திருப்பிய.

கால்கள் என் தலைமேல் கெழுமீர்'*1 என்று कृतज्ञतै தோற்றப் பணிந்து;

§8.13 எம்பெருமானது திவ்யஸிம்ஹாஸநத்தை அணுகுதல்

उभयविभूतियும் 'தனிக்கோல் செல்ல'*2 வானிளவரசு*3 மன்னி வீற்றிருக்கிற अमितौजस्ஸான[1] दिव्य-सिंहासनरूप-दिव्यपर्यङ्कத்தை அணுகி;

§8.14. பல்வேறு தத்துவங்களின் அபிமானி தேவதைகள் ஸிம்ஹாஸநத்தின் அவயவங்களாய் இருப்பதைக் காணல்

विभूतिद्वयानुबन्धिகளான आधार-तत्त्वங்களும் पर्यङ्क-विद्यயில் भूत-भविष्यत्-तत्त्वங்கள்*4(†1) என்றாற் போலவும்; भगवच्छास्त्रங்களில் धर्माधर्मादिகள்*5 என்றாற் போலவும்; பரக்கவும் சுருங்கவும் பல வகையாகச் சொல்லுகிற पादம் முதலான அவயவங்களுமெல்லாம் அவ்வவ் अभिमानि-देवताविशेषங்களாய் இருக்குமபடியைத் தெளியக் காணும்.

§ 8.15 ஸிம்ஹாஸநத்தின் தாமரைப்பூவில் பணிபுரியும் திவ்ய பணிப்பெண்களைக் கண்டு தானும் பணிசெய்ய விழைதல்

இப்படி सर्वतत्त्वங்களையும் भोगार्थமாக एकतन्त्रமாக்கினாற்போலே[2] अत्यद्भुतமான दिव्यसिंहासनத்தின் மேலே ஆயிரம் கோடி बालसूर्यர்கள் உதித்தாற்†2 போலே இருப்பதொரு दिव्यपद्मத்தில் எட்டுத் திக்கிலும் எட்டு தளங்களிலே அடைவே विमलादिகள் எண்மரும்*6, கர்ணிகையின்[3] பூர்வபாகத்திலே अनुग्रहैயும் சந்த்ரகலைகளே†3 வடிவு கொண்டு சந்த்ரிகையை வகுத்தெடுத்தாற்போலே சாமரஹஸ்தைகளாய்க் கொண்டு ஸேவித்திருக்கும்படியைக் கண்டு, "चामरव्यग्र-हस्तं मां एवं कुर्विति वक्ष्यति''*7 என்ற मनोरथ-सिद्धि கைபுகுரும்[4] என்று†4 காணும்.

---

1—அளவற்ற ஒளியுடைய 2—ஒன்றாக்கினாற் போல. 3—தாமரைப்பூவின் நடுவில் இருக்கும் காயின். 4—விரும்பியது கிடைக்கும்.

†1—சொன்ன பூத-பவிஷத் தத்வங்கள்[1]. 2—சேர்ந்தாற்[2]. 3—சந்த்ர கலைகள்[1]. 4—வகஷ்யதி என்றும் மநோரதஸித்தி கைபுகுமென்று[1]; கைபுகுந்தென்று[2].

*1. எங்கானலகங்கழிவாய் இரைதேர்ந்திங்கினிதமரும்*
சொல்காலமடநாராய் ! திருமூழிக்களத்துறையும்*
கொங்கார் பூந்துழாய்முடி எங்குடக் கூத்தர்க்கு என்தூதாய்*
நுங்கால்கள் என்தலைமேல் கெழுமீரோ நுமரோடே.

திருவாய் (9—7—1): என்னுடைய தோட்டத்துக்குள்ளே இருக்கும் கழியில் ஆஹாரத்தைத் தேடிக் கொண்டு அந்த இடத்திலேயே ஸுகமாக நித்யவாஸம் செய்கிற சிவந்த கால்களை யுடைய மடப்பமுள்ள நாரைகளே ! திருமூழிக்களம் என்னும் ஊரில் வஸிக்கிறவனும், தேன் நிறைந்த அழகான துளஸி மாலையைத் திருமுடியிலே உடையவனும், குடக்கூத்து ஆடியவனுமான என்கண்ணனுக்கு என்னுடைய தூதர்களாகச் செல்வதை ஒப்புக் கொண்டு உங்களைச் சேர்ந்தவர்களுடன் சேர்ந்து (உபகாரம் செய்யப் போகிற) உங்களுடைய திருவடிகளை என் தலைமீது பொருந்தியிருக்கும்படி செய்யுங்கள்.

*2. திருவாய். (4—1—5) : ஒப்பற்ற செங்கோல் (ஆக்ஞை) செல்லும்படி.

*3. பெரியாழ். திரு. (3-6-3) : பரமபதத்திற்கு இளவரசனாக.

*4. तस्य भूतञ्च भविष्यच्च पूर्वौ पादौ । श्रीः च इरा च अपरौ ।

கௌஷீதகி (1—48) : இறந்தகாலம், எதிர்காலம், ஐச்வரியம், அம்ருதம் (=இரா) இவற்றின் அபிமானி தேவதைகள் நான்கு பாதங்களாக இருக்கிறார்கள்.

*5 தர்மம், ஞானம், வைராக்யம், ஐச்வர்யம் என்ற நான்கும் கால்களாகவும், அதர்மம், அஜ்ஞானம், அவைராக்யம், அநைச்வர்யம் என்ற நான்கும் பலகைகளாகவும் கூறப்பட்டிருக்கின்றன.

*6—எட்டு இதழ்களில் விமலா, உத்கர்ஷிணீ, ஜ்ஞாநா, க்ரியா, யோகா, ப்ரஹ்வா, ஸத்யா, ஈசாநா ஆகிய எண்மரும், தாமரைக் காயின் முன்பக்கத்தில் அநுக்ரஹையும் சாமரக்கையுடன் இருக்கிறார்கள்.

§ 8.16 தாமரைக் காயின் மேல் ஆதிசேஷனை ஸேவித்தல்

அப் பத்மத்தின் நடுவிலே कनकगिरि-सहस्रங்களைச் சேர்த்தால் परमाण्वेकदेशத்திற்கும்[1] போராது என்னும்படி अतितुङ्ग-विपुलैயான[2] दिव्यकर्णिकैயின் மேலே ब्रह्माण्डங்கள் தோறுமுள்ள திருப்பாற்கடல்களையெல்லாம் அடுக்கி விரித்தாற் போலே निर्मल-विशाल-उन्नतமான दिव्य-योगपर्यङ्क-विशेषத்தினுடைய "निर्मोकम்" என்று शङ्किக்கலாம்படி नित्यशुद्धனாய், सर्वाधारभूतனையும் நித்யமாகத் தரிக்கும்படி प्रकृष्ट-विज्ञान-बलனாய்[3] (†[1]),

"சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்"*[1], निवासशय्यासन*[2] என்கிறபடியே अवसर-उचित-रूपங்களைக் கொண்டு अशेष-शेषवृत्तिகளைப் பண்ணுகையாலே 'शेषன்' என்றும், त्रिविध-परिच्छेद-रहितனையும் (B—58) தன்மடியில் एकदेशத்தில் வைக்கும்படியான वैभवத்தையுடையனாகையாலே 'अनन्तன்' என்றும் திருநாமத்தை உடையவனாய், सर्वगन्धवस्तुவுக்கும் வாஸனையுண்டாம் படியான दिव्य-परिमलத்தையுடையனாய், 'வேரிமாறாத பூமேலிருப்பா'ளுடனே*[3] पुष्पहास-सुकुमारனானவன் மூவுலகும் தொழவீற்றிருக்கும்படி सुकुमारतमனாய், अमृत-प्रवाहம் சுழியாறுபட்டாற் போலே[4] अवदात-शीतलமான[5] भोगवेष्टनத்தை[6]யுடையனாய், श्वेतच्छत्र-परंपरै போலவும் पूर्णेन्दुमण्डल-सहस्रங்களை நிறைத்தாற் போலவும் பரந்து உயர்ந்த फणाஸஹஸ்ரத்தின் मणि-किरण-मण्डल-बालातपத்தாலே "पुण्डरीकம்" என்னும் பேரையுடைத்தான परमपदமெல்லாம் उल्लसितமாம்படி[7] பண்ணக் கடவனான திருவநந்தாழ்வானைக் கண்டு;

---

*7. कदा गम्भीरया वाचा श्रिया युक्तो जगत्पतिः ।
चामरव्यग्रहस्तं मामेवं कुर्विति वक्ष्यति ॥

ஜிதந்தே. (2—27): பெரிய பிராட்டியாரோடு கூடிய லோகநாதன் (எம்பெருமான்), சாமரகைங்கர்யத்தில் ஈடுபட்டுள்ள கையையுடைய அடியேனை கம்பீரமான திருவாக்கினால் "இவ்வாறு செய்வாய்" என்று எப்பொழுது சொல்லப் போகிறான்?

□

1—பரமாணுவின் ஒரு பகுதிக்கும். 2—மிகவும் உயர்ந்தும் பரந்தும் இருக்கும். 3—ஞானம் பலம் என்ற குணங்களை மிகுதியாக உடைய. 4—சுழித்துக் கொண்டு ஆறாக ப்ரவஹிக்குமாப் போலே. 5—வெளுத்ததாயும் குளிர்ந்ததாயும் உள்ள. 6—(பாம்பின்) உடல் சுற்றியிருப்பதை. 7—ப்ரகாசிக்கும்படி.

†1—प्रकृष्टविज्ञानबलவானாய்[1].

*1. சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்*
நின்றால் மரவடியாம் நீள் கடலுள்* — என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம்* திருமாற்கு அரவு.

முதல் திருவந். (53): பிராட்டியுடன் கூடியிருக்கும் எம்பெருமானுக்கு திருவநந்தாழ்வான் எம்பெருமான் உலாவப்புக்கால் குடையாயிருப்பன்; எழுந்தருளியிருந்தால் ஸிம்ஹாஸனமாயிருப்பன்; நின்று கொண்டிருந்தால் திருப்பாதுகையாயிருப்பன்; திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளும்போதெல்லாம் திருப்பள்ளி மெத்தையாயிருப்பன்; (மங்களதீபம் வேண்டியிருக்கும் போது) மங்களதீபமாயிருப்பன்; (எம்பெருமான் சாத்திக் கொள்ள அழகிய திருப்பரியட்டமாயிருப்பன்; (சாய்ந்தருளும் போது) தழுவிக்கொள்ளும் தலையணையாயிருப்பன்.

*2. निवास-शय्यासन-पादुकांशुकोपधान-वर्षातप-वारणादिभिः ।
शरीरभेदैस्तव शेषतां गतैः यथोचितं शेष इतीरिते जनैः ॥

ஆள. ஸ்தோ. (40): திருக்கோயில், திருப்பள்ளி, சிங்காசனம் திருவடி நிலை, பீதாம்பரம், தலையணை, மழையையும் வெய்யிலையும் விலக்கும் குடை முதலியவைகளாக அந்தந்தக் காலத்துக்கும் கார்யத்திற்கும் தக்கவாறு திருவநந்தாழ்வான் தனது உருக்களாலே உனக்கு (எம்பெருமானுக்கு) ஸகங்கர்யங்களைச் செய்து வருவதால் எல்லோராலும் 'சேஷன்' என்றே வழங்கப்படுகிறான்.

*3. திருவாய். (4—5—11): வாஸனை மாறாத தாமரையில் நித்யவாஸம் பண்ணுகிற பெரியபிராட்டி.

§8:17 ஆதிசேஷனின் அருட்கடாக்ஷம் பெற்று ஆதிசேஷன் மீது எம்பெருமானைக் காணுதல்

அவனோடொக்க ஒருமிடறாய்[1] अनेकमुखமான भोग-साम्यத்தை ஆசைப்பட்டு, அவனுடைய அம்ருதவர்ஷிகளான இரண்டாயிரம் திருக்கண்களுக்கும் தான் एक-लक्ष्यமாய், அவன் மேலே அமர்ந்திருக்கிற "மேலாத் தேவர்கள் மேவித்தொழும் மாலாரை"க் கண்டு*[1], தானும் अनन्तदृष्टिயாய்[2] अत्यन्त-सामीप्यம் பெறும்.

பண்டையிருவினையாற்றில் படிந்து, பாரம்
காணாதே ஒழுகிய நாம் பாக்கியத்தால்*
வண்டமரும் மலர்மாது மின்னாய் மன்ன
வைசயந்தி மணிவில்லாய் விளங்கவான்சேர்*
கொண்டல் அருள் மழைபொழிய வந்ததொப்பாம்
குளிர்ந்து தெளிந் தமுதாய விரசையாற்றை*
கண்டணுகிக் கருத்தாலே கடந்து, மீளாக்
கரைகண்டோர் கதியெல்லாம் கதித்திட்டோமே. 17

॥ इति श्रीपरमपदसोपाने अष्टमं दिव्यदेशप्राप्तिपर्व ॥



॥ श्रीमते निगमान्त महादेशिकाय नमः ॥

# ॥ नवमं पराप्ति पर्व ॥

பூவளரும் திருமாது புணர்ந்த நம் புண்ணியனார்*
தாவளமான தனித்திவம் சேர்ந்து தமருடனே*
நாவளரும் பெருநான்மறையோதிய கீதமெல்லாம்*
பாவளரும் தமிழ்ப் பல்லாண்டிசையுடன் பாடுவமே. 18

1—ஸமமாய். 2—அளவில்லாத ஞானத்தை உடையவனும்.

*1. திருவாய். (5—1—8): ஸர்வ விதத்திலும் உயர்ந்தவர் களான நித்யஸூரிகள் பொருந்தி அடிமை செய்யும் ஸர்வாதி கனான ஸர்வேச்வரனை.

17: பண்டை இருவினை — அநாதியான (புண்ய பாபங் களென்னும்) இரண்டு கர்மங்களாகிய; ஆற்றில் படிந்து — ஆற் றில் ஆழ்ந்து; பாரம் காணாதே — கரையைக் காண முடியாமல்; ஒழுகிய நாம் — 'அதன் வழியே) சென்று கொண்டிருந்த நாம்; வண்டு அமரும் மலர் மாதர்—வண்டுகள் மொய்க்கும் தாமரை மலரிலுள்ள பிராட்டி; மின்னாய் மன்ன — மின்னலாக நிலைபெற; வைசயந்தி — வைஜயந்தீ என்னும் வநமாலை; மணி வில்லாய் விளங்க — அழகிய வான வில்லாக ப்ரகாசிக்க; வான் சேர் கொண்டல் — (பரமபதமாகிய) ஆகாயத்திலுள்ள எம்பெருமா னாகிய மேகம், அருள் மழை பொழிய — கருணையாகிய மழை நீரைச் சொரிய; வந்தது ஒப்பாம் — (அதனால்) வந்தது போன்ற; குளிர்ந்து தெளிந்து அமுதாய — குளிர்ந்து கலக்கமற்று அம்ருத மயமான; விரசை ஆற்றை — விரஜாநதியை; கண்டு அணுகி — கண்டு நெருங்கி; கருத்தாலே கடந்து — தம் ஸங்கல்பத்தாலே தாண்டி; மீளாக் கரை கண்டோர் — திரும்புதலில்லாத அக்கரை யாகிய ஸ்ரீ வைகுண்டத்தை அடைந்தவர்களுடைய; கதி எல்லாம் — ப்ரகாரங்களையெல்லாம்; பாக்கியத்தால் — (நம்முடைய) அத்ருஷ்ட விசேஷத்தால்; கதித்திட்டோம் — அநுஸந்தித்தோம்.

18. பூவளரும்—பூவில் வஸிப்பவளான; திருமாது—பிராட்டி யினால்; புணர்ந்த—அணைத்துக் கொள்ளப்பட்டவனும்; நம் புண்ணியனார்—நம் புண்ணிய ஸ்வரூபனுமான எம்பெருமானுக்கு; தாவளமான—வஸிக்குமிடமான; தனித்திவம் சேர்ந்து—ஒப்பற்ற பரமபதம் சேர்ந்து; தமருடனே—(நித்ய ஸூரிகளும் முக்தரு மாகிய) பாகவதர்களுடன்; நாவளரும்—நாவில் தங்குகின்ற; பெரு நான் மறை—பெரிய நான்கு வேதங்களில்; ஓதிய கீதம் எலாம்—அத்யயநம் செய்யப்படுகின்ற காநம் எல்லாவற்றையும்; பாவளரும்—பாக்கள் நிறைந்துள்ள; தமிழ்ப் பல்லாண்டு—தமிழில் திருப்பல்லாண்டு தொடங்கும் ஆழ்வார் திவ்யஸூக்திகளின்; இசையுடன் — கீதத்துடன்; பாடுவம் — பாடுவோம். (வேதம்-திவ்ய ப்ரபந்தம் இரண்டு கீதங்களையும் பாடுவோம்.)

### §9.1 ஆதி சேஷன் மீது எம்பெருமானையும் பிராட்டிமார்களையும் ஸேவித்தல்

இப்படி அதிமனோஹரமான अनन्त-भोग-पर्यङ्कத்திலே रजत-गिरियின்[1] மேலே मरतक-गिरि[2] இருந்தாற்போலே†[1] 'ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருந்து'*[1] 'விண்ணோர் தலைவனாய்'*[2] कुमार-युवावாய்[3](†[2]) "சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு"*[3] என்னும்படி आदित्य-शतसहस्र-समुदायம் போலே अनवधिकதேஜஸ்ஸை உடையனாய், "विश्वमाप्याययन् कान्त्या पूर्णेन्द्वयुत-तुल्यया"*[4] என்னும்படி अनवधिक-लावण्यத்தையுடையனாய்; ஸர்வ சேஷியான தன்னுடைய க்ருபையும் க்ஷமையும் வண்மையும்[4] வடிவு கொண்டாற்போலே இருக்கிற நாச்சிமார்களில் स्वाभिमत-नित्य-निरवद्य-अनुरूप-स्वरूपादिகளை*[5] உடையளாய், स्ववैश्वरूप्यத்தாலே*[6] सदानुभवं பண்ணா நின்றாலும் இன்று அநுபவிக்கத் தொடங்கினாற் போலே आश्चर्य-रसावहैயாய், "शान्तानन्त"*[7] इत्यादि

---

1—வெள்ளி மலையின். 2—பச்சை நிற ரத்னமலை. 3—கௌமாரம் யௌவனம் இரண்டுமில்லாமல், இரண்டுக்கும் நடுவே 'இளகிப் பதித்திருக்கும் நிலை'. 4—வள்ளல் தன்மையும்.

†1—சாய்ந்தாற் போலே[1]. 2—अकुमार-युवाவாய்[1].

*1. திருவாய். (4—5—1): ஏழு உலங்களிலும் ஒப்பற்ற ஆஜ்ஞை நடக்கும்படி தன்னுடைய மேன்மை தோன்றுபடி பரம பதத்தில் இருந்து. (உலகம் என்பது வடமொழியில் லோகம் என்கிற சொல். லோகம் என்றால் 'பார்க்கப்பட்டது' அதாவது 'ப்ரமாணங்களால் அறியப்பட்ட வஸ்துக்கள்' என்று பொருள். ஏழு உலகங்களாவன—பிரகிருதி, காலம், ஸுத்தஸத்துவம், ஆத்மாக்களுடைய தர்மபூதஜ்ஞாநம், பத்தர்-முக்தர்-நித்யஸூரிகள். இவற்றில் முதல் நான்கும் அசேதநங்கள்; மற்ற மூன்றும் சேதநங்கள்.)

*2. திருவாய். (5—1—6): நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாய்.

*3. கழியமிக்கதோர் காதலளிவளென்று அன்னை
காணகொடாள்*
வழுவில் கீர்த்தித் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின்*
குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதிவெள்ளத்
தினுள்ளே*
எழுவதோருரு என்னெஞ்சுள்ளெழும் ஆர்க்கும் அறிவரிதே.

திருவாய் (5—5—10): (ஒரு தலைவி தன் தாயாரைப் பார்த்துக் கூறுவது.) நாளாக நாளாக வளருகிற ஒப்பற்ற ஆசையை யுடையவள் இவள் என்று நினைத்து அவனை நினைக்கவுங்கூட அவளுடைய தாயார் இடங்கொடுக்கிறவளில்லை. குற்றமற்ற கீர்த்தியையுடைய திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்பு, நித்யஸூரிகளின் கூட்டங்கள் சேர்ந்து கைங்கர்யம் பண்ணும்படி காந்தியின் பிரவாஹத்தின் நடுவில் பிராசிக்கின்றதாய் இருக்கிற அவன் திருமேனி என் மனதில் விளங்குகிறது. மற்றவர்களுக்கு அதை அறிவது முடியாது.

*4. ஸாத்வதஸம். (2-70): ஆயிரக்கணக்கான பூர்ண சந்திரன்களுக்கு ஒப்பான காந்தியினால் ப்ரபஞ்சத்தை திருப்தி செய்வித்துக் கொண்டு.

*5. ச.கத்.— தனக்கு மிகவும் விருப்பமானதும், நித்யமான தும், ஒரு வித தோஷமற்றதும் தனக்கு ஏற்றதுமான ஸ்வரூபம் ரூபம், குணம், ஐச்வர்யம் முதலியவைகளை.

*6. ஆள. ஸ்தோ. (38): தான் உலகிற்கெல்லாம் அந்தர் யாமியாய் இருக்கும் ரூபத்தாலே.

*7. शान्तानन्दमहाविभूति परमं यद् ब्रह्म रूपं हरेः
मूर्तं ब्रह्म ततोऽपि तत्प्रियतरं रूपं यदत्यद्भुतं ।
यान्यन्यानि यथासुखं विहरतो रूपाणि सर्वाणि ता(नि)
आहुः स्वैरनुरूपरूपविभवैर्गाढोपगूढानि ते ।।

சதுச்லோகி (4): (i) பசி—தாகம்—சோகம்—மோகம்—மூப்பு—இறப்பு என்ற ஊர்மிகளற்றதும், தேசத்திலும்—காலத்திலும்—வஸ்துவிலும் அளவில்லாததும், பெரிய விபூதி களிரண்டையும் பரவியாள்வதும், தனக்கு மேலொன்றில்லாத தும் (பெரியதாயிருப்பதாலும் பிறரை பெரியதாகச் செய்வ தாலும்) ப்ரஹ்ம சப்தத்தால் சொல்லப்படுவதுமான ஹரியி

களின்படியே **सर्वप्रकार-संश्लेष**த்தை[1] உடையளாய், 'திருமார்வத்து மாலை நங்கை'யாய், 'அமுதில் வரும் பெண்ணமுதாய்'*[1], 'வேரி மாறாத பூமேலிருந்து வினை தீர்க்கு'மவளாய்*[2], தன் கடாக்ஷலேசத்தாலே **कमला-सनादि-वैभव**த்தையும் கொடுக்குமவளாய், "**देवदेव-दिव्य-महिषी**" *[3] என்னும்படியான மேன்மையும், **करुणार्द्र-आनत-मुखी***[4] என்னும்படியான நீர்மையும்[2] உடையளான பெரியபிராட்டியார் "**दाक्षिण्य-सीमा**"*[5] என்று தோற்றும்படி **दक्षिण-पार्श्व**த்திலே நீல மேகத்தை அணைந்த நிலைமின்[3] போலே ஸேவித்திருந்து, தன்னுடைய **शेषित्वभोग्यत्व - कैङ्कर्य - प्रतिसंबन्धित्व**ங்களைப் பூரித்துக் கொண்டு[4], **अखिल-परिजन**ங்களை **अवसरोचित-अशेष-शेषवृत्ति**களிலும் ஆஜ்ஞாபிக்க, '**एवंभूत-भूमिनीळानायक**''*[6] என்கிற படியே பெரிய பிராட்டியாருடைய '**रूपान्तर**ம்' என்னலாம்படி **अनवरत-बहुमान-विषयै**யாய்[5], "பச்சை மாமலை போல் மேனிக்''கும்*[7] படிமாவான[6] நிறத்தை உடையளான 'பார் என்னும் மடந்தை'யும்*[8]; 'அல்லிமலர் மகள் போகமயக்குகள்'*[9] அத்யல்பம் என்னும்படி **नित्य-व्यामोह**ம்[7] நின்றவிடம் தெரியாதே **नीळा-तुङ्ग-स्तन-गिरितटी-सुप्त**''*[10] என்னப் பண்ணுமவளாய், **नीलोत्पल-**

---

னுடைய யாதொரு திவ்யாத்மஸ்வரூபமுண்டோ, (ii) அந்த ஸ்வரூபத்தைக் காட்டிலும் அந்த பகவானுக்கு மிகவும் பிரிய மாயிருப்பதும், ஆச்சரியமான அவயவங்களோடு கூடியதும்; ப்ரஹ்மம் என்று சொல்லப்படுகிற எந்த (பரவாஸுதேவ) விக்ரஹமோ, (iii) இஷ்டப்படி லீலைகளைச் செய்கின்ற எம்பெருமானுக்கு வேறு எந்த (அவதாரத்) திருமேனிகளுண்டோ அந்த ரூபங்களெல்லாம் அதற்கு ஏற்ற சிறந்த உன் (பெரிய பிராட்டியின்) ரூபங்களாலே நெருக்கமாக பிரிக்க முடியாதபடி சேர்ந்திருக்கின்றன. (ஊர்மி = அலை). □

1—எப்பொழுதும் (= ஸ்வரூபத்திலும், விக்ரஹத்திலும், அவதாரங்களிலும்) சேர்ந்திருப்பவளாய். 2—எளிமையும்.

3—நிலையான மின்னல். 4—நிறைவு செய்து கொண்டு. 5—எப்பொழுதும் பஹுமானத்திற்கு (பாராட்டுக்கு) உரியவளாய். 6—ஒப்பானா? 7—நித்யமான ஜ்ஞாநம்.

*1. பெரியதிரு. (6-1-2): அம்ருதம் கோதாகும்படி அதின் ஸாராம்சமாய் ஆவிர்பவித்த பெண் அமுது (= பெரிய பிராட்டி).

*2. திருவாய். (4—5—11): வாஸனை மாருத புஷ்பத்தின் மேல் வாஸம் செய்யும் பெரிய பிராட்டி நம் பாபங்களையெல்லாம் போக்குமவளாய்.

*3. ச. கத். — தேவர்கட்கெல்லாம் தேவனான எம்பெருமானுடைய சீரிய மனைவியை.

*4. லக்ஷ்மீஸஹஸ்ரநாமம் ( ): தயையினால் உண்டான கண்ணீர் நிரம்பியதும், (ஆச்ரிதர் பக்கல் அன்பினால்) வணங்கியதுமான முகத்தை உடையவள்.

*5. தாக்ஷிண்யத்தின் எல்லை நிலை.

*6. ச. கத். — பெரிய பிராட்டியார் போலே இப்படி இருக்கிற பூமிப்பிராட்டி, நீளாதேவி இவர்களுக்கு நாயகனே!

*7. திருமாலை (‹). பச்சை நிறமான பெரிய பர்வதம் போன்ற திருமேனிக்கும்,

*8. திருவாய். (2—8—7): பூமிப் பிராட்டியும்.

*9. திருவாய்.(3—10—8): தாமரைப்புஷ்பத்தில் வஸிக்கும் பெரிய பிராட்டியாரோடு சேர்த்தியினால் பிறந்த ஆநந்தங்கள்.

*10. नीळा-तुङ्गस्तनगिरितटी-सुप्तमुद्बोध्य कृष्णं
पारार्थ्यं स्वं श्रुतिशतशिरस्सिद्धमध्यापयन्ती ।
स्वोच्छिष्टायां स्रजि निगळितं या बलात्कृत्य भुङ्क्ते
गोदा तस्यै नम इदमिदं भूय एवास्तु भूयः ॥

திருப்பாவைத் தனியன்: நப்பின்னைப் பிராட்டியின் உயர்ந்த திருமுலைத்தடங்களாகிற மலைச்சாரலில் திருக்கண் வளர்ந்தருளுமவனும், தன்னால் சூடிக் களையப்பட்ட மாலையினாலே விலங்கிடப்பட்டவனுமான கண்ணபிரானை திருப்பள்ளியுணர்த்தி, புல

श्यामளையான ஸ்ரீ நீளைப்பிராட்டியும், அடியார் இடத்திலே[1] ஸேவித்திருக்கும்படி தாங்களும் இடத்திலே[2] ஸேவித்திருக்க;

§ 9:2 எம்பெருமானுடைய திருமேனியின் ஸௌந்தர்ய லாவண்யங்களை அநுபவித்துத் துதித்தல்

"सेव्यः श्री-भूमि-नीळाभिः"*1, 'உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகள் ஆயர் மடமகள் என்றிவர் மூவர்'*2 இத்யாதிகளில் சொன்ன சேர்த்தியிலே அடிமை செய்யுமவர்களுக்கு 'ரஸம்' என்றும் 'ஆநந்தம்' என்றும் (C—47) சொல்லும்படியான **निरतिशय-भोग्य**தையுடையனை†1 **निरुपाधिक-शेषि**யை **निरुपाधिक-ज्ञान-विकास**த்தாலே "அவாவறச் சூழ்ந்தாய்"*3 என்னும்படி அநுபவித்து; **ततोऽपि तत् प्रियतरं रूपं यदत्यद्भुतं** (553*7) என்றும், "நால்தோளமுது"*4 என்றும் பேசப்பட்டு,

---

உபநிஷத்துக்களிலும் தேறின தன்னுடையதான பாரதந்த்ரியத்தை அறிவித்து வலியச்சென்று யாவளொரு ஆண்டாள் (அக்கண்ணபிரானை) அநுபவிக்கிறளோ அப்படிப்பட்ட பெருமையையுடையவளான ஆண்டாளின் பொருட்டு காலதத்துவமுள்ள வரையிலும் இந்த இந்த நமஸ்காரமானது ஆயிடுக. □

1—அடியார்கள் தங்களுக்கு ஏற்ற ஸ்தானத்திலே. 2—இடது பக்கத்திலே.

†1—நிரதிசய போக்யத்தையுடையனை[1].

*1- देवो वैकुण्ठनाथस्तु अनन्तासन-संस्थितः ।
सेव्यः श्री-भूमि-नीळाभिः प्रादुर्भावैस्तु चाखिलः ॥

பலபௌஷ்கரம் [கத்ய பாஷ்யம் (ரஹஸ்யரக்ஷை)] : ஸ்ரீ வைகுண்டநாதனை வாஸுதேவனை திருவநந்தாழ்வான் மேல் எழுந்தருளியிருப்பவனாகவும், ஸ்ரீ-பூமி-நீளை என்ற மூன்று பிராட்டிமார்களாலும் ஸேவிக்கப்படுகிறவனாகவும் தியானம் செய்யவேண்டும்.

*2. உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகள் ஆயர்
மடமகள்* என்றிவர் மூவர் ஆளும் உலகமும் மூன்றே*
உடனவையொக்க விழுங்கி ஆலிலைச் சேர்ந்தவன் எம்மான்*
கடல்மலி மாயப்பெருமான் கண்ணன் என் ஒக்கலையானே.

திருவாய். (1—9—4) : பெரிய பிராட்டி, பூமிப் பிராட்டி, கோபர்களுக்குள்ளே நப்பின்னைப் பிராட்டியாய் அவதாரம் செய்த நீளாதேவி என்கிற இந்த மூவரும் எம்பெருமானுடைய ஒரே ஸிம்ஹாஸத்தில் இருக்கிற மிகுந்த ஆசையையுடைய மஹிஷிகள். அந்த எம்பெருமான் கிருதகம், அகிருதகம், கிருதகாகிருதகம் என்னும் மூன்று உலகங்களை ஆளுகிறவன். (அவைகளில் கிருதகம் என்று சொல்லப்பட்ட) மூன்று உலகங்களை வித்யாஸமில்லாமல் ஒரே காலத்தில் (ப்ரளய காலத்தில்) விழுங்கி ஆலிலையில் படுத்துக் கொண்டிருக்கிறவனாயும், எனக்கு ஸ்வாமியானவனாயும், ஸமுத்திரத்தைக் காட்டிலும் மிகுந்த ஆச்சரியமான குணங்களையும் லீலைகளையும் உடையவனாயும், ஸர்வேச்வரனாயும் இருக்கிற கண்ணன். அவன் என் இடுப்பில் ஏறிக் கொண்டிருக்கிறான். [குறிப்பு: பூமி, புவர்லோகம், ஸுவர்லோகம் என்பன கிருதகங்கள். ஜநோலோகம், தபோலோகம், ஸத்யலோகம் என்பன அகிருதங்கள் (=உண்டு பண்ணப்படாதவைகள்] இந்த இரண்டு வகுப்பிற்கும் நடுவிலிருக்கிற மஹோலோகம் கிருதகா கிருதகம். பிரளய காலத்தில் மஹோலோகத்திற்கு அழிவில்லாவிட்டாலும், பிரளய காலாக்நியால் மஹோலோகத்தவர் அங்கிருக்கமுடியாமல் ஜநோலோகத்திற்குப் போய்விடுகிறார்கள்.)

*3. திருவாய். (10—10—10): (எல்லாவற்றைக் காட்டிலும் பெரியதான என்) ஆசையெல்லாம் தீரும்படி வந்து என்னுடன் கலந்தாய்.

*4. அரியேறே ! என்னம்பொற்சுடரே ! செங்கண் கருமுகிலே!*
எரியே! பவளக்குன்றே! நால்தோளெந்தாய்! உனதருளே*
பிரியா அடிமை என்னைக் கொண்டாய்! குடந்தைத்
திருமாலே*
தரியேன் இன் உன் சரணம் தந்து என் சன்மம் களையாயே.

திருவாய். (5-8-7) : ஸிம்மம் போலே ஒருவருக்கும் உட்படாதபடி ஸ்வதந்திரனாய் இருக்கிறவனே ! அழகான பொன்னைப் போல் பார்க்க ஆசைப்படும்படியிருக்கிற காந்தியையுடையவனே ! சிவந்த திருக்கண்களையும் நீலமேகம் போன்ற திருமேனியையு

"குன்றுடு கொழுமுகில் போல் குவளைகள் போல் குரைகடல் போல் நின்றுடு கணமயில் போல் நிறமுடைய"*[1] 'பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம்†[1] புரையும் திருமேனியில்'*[2] अवयव-शोभैயிலும் ஆபரணச் சேர்த்தியழகிலும் ஆழங்கால்பட்டு, भगवदनुभवरस-परवशரான முமுக்ஷுக்கள் பண்ணும் ரஞ்ஜகவ்யாபாரங்களைக்[1] கொண்டு 'विपन्यवः' என்கிற श्रुतியின்படியே (C—48) विविध-स्तोत्रங்களைப் பண்ணத் தொடங்கி;

§ 9-2-1 திருமுடியை அநுபவித்துத் துதித்தல்

द्विपालक-पङ्क्तियாகிற[2] ராத்ரியோடே अघटित-घटना-सामर्थ्यத்தாலே சேர்ந்தது என்னலாம்படி 'கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீள் முடியைப்' பார்த்து*[3], "முடிச் சோதியாய் உனது முகச் சோதி மலர்ந்ததுவோ"*[4] என்பது;

§ 9-2-2 திருக்குழலை அநுபவித்துத் துதித்தல்

वदनारविन्द-मकरन्द-रस-आस्वादத்திற்காக[3] வண்டொழுங்கு படிந்தாற்போலே அசைகிற திருக்குழல் கற்றைகளைப்[4] பார்த்து, "கொள்கிற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின் உள்கொண்ட நீல நன்னூல் தழைகொல்? அன்று, மாயன் குழல்"*[5] என்பது;

---

முடையவனே! நெருப்பைப் போலே காந்தியுள்ளவனே! பவளமலைபோல் இனியவனுயிருப்பவனே! நான்கு தோள்களின் அழகாலே என்னை அடிமையாக்கிக் கொண்ட என் ஸ்வாமியே! உன் கிருபையாலேயே உன்னை விட்டுப் பிரியாமல் அடிமையாயிருக்கும்படி என்னைச் செய்துகொண்டவனே! (எனக்காகவே) திருக்குடந்தையில் பிராட்டியுடன் எழுந்தருளியிருக்கிறவனே! இப்படி நான் தாஸனுன பின்பு உன்னைவிட்டுப் பிரிந்திருக்கப்

பொறுத்திருக்க மாட்டேன். ஆகையால் முதலில் உன் திருவடிகளை எனக்குக் கொடுத்து என் ஸம்ஸாரத்தைப் போக்கவேண்டும். □

1—மகிழ்வித்து ப்ரீதியை உண்டுபண்ணும் செயல்களை. 2—திவ்யமான (முன்நெற்றி) முன்னுச்சி மயிர்களின் வரிசையாகிற. 3—முகமாகிற தாமரைப் பூவின் தேனைப் பருகுவதற்காக. 4—அழகிய சுருண்ட தலைமயிர்த் தொகுதி.

†1 – 'மணியின் வண்ணம்' என்பது இல்லை[1].

*1. பெரியாழ்வார் திரு. (4—8—9): பர்வதத்தில் ஸஞ்சரிக்கிறதும் அதிக நீரை முகர்ந்து கொண்டு ப்ரகாசிக்கிறதுமான மேகம் போலவும், அப்போதலர்ந்த கரு நெய்தல் புஷ்பங்கள் போலவும், சப்திக்கின்ற ஸமுத்திரம் போலவும், ஸந்தோஷத்தாலே நின்றுகொண்டு நர்த்தனம் பண்ணுகிற அழகிய தோகை நிறைந்த மயில் போலவும் அழகையுடைய.

*2. பெரியதிரு. (4—9—8): ஸ்வர்ணத்தின் நிறத்திற்கும் நீலரத்நத்தின் நிறத்திற்கும் ஸத்ருசமான திருமேனியில்.

*3. பெரியாழ்வார் திரு. (4—1—1) ஆயிரம், கிரணங்களையுடைய அநேக ஸூர்யன்கள் சேர்ந்து ப்ரகாசித்தாற் போலே இருக்கும் (ஸர்வ ஜகதீச்வரனாயிருக்கும் பெருமையைக் காட்டும்படி) நீண்டகிரீடம்.

*4. முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?*
அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?*
படிச்சோதியாடையொடும் பல்கலனாய்* நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ? திருமாலே! கட்டுரையே.

திருவாய். (3—1—1), லக்ஷ்மீபதியே! உன்னுடைய திரு முகத்தின் காந்தியானது கிரீடத்தின் காந்தியாக (மேலே) மலர்ந்ததோ? உன் திருவடிகளின் காந்தி (கீழே பரவி) நீ நிற்கிற தாமரைப் பூவான பீடமாக மலர்ந்ததோ? உன்னுடைய அழகிய இடுப்பின் காந்தியானது இயற்கையான காந்தியோடு கூடிய பீதாம்பரமாகவும் பலவித திருவாபரணங்களாவும் ஆகி உன் திருமேனியில் சேர்ந்திருக்கின்றனவோ? (இதின் உண்மையை ஸர்வஜ்ஞனான) நீ விசாரித்து (சொல்லக் கூடுமானால்) சொல்லு.

*5. கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின்*
உள்கொண்ட நீல நன்னூல் தழைகொல்? அன்று மாயன் குழல்*
விள்கின்ற பூந்தண்துழாய் விரைநாறவந்து என்னுயிரை*
கள்கின்றவாறு அறியீர் அன்னைமீர்! கழறுநிற்றிரே.

§ 9-2-3 திருநெற்றியை அநுபவித்துத் துதித்தல்

அத் திருக்குழல் சேர்த்தியாலே ஒரு பாகம் இருளோடே சேர்ந்த அஷ்டமீ-சந்த்ரனை அநுகாரிக்கிற[1] திருநெற்றியை அநுபவித்து, "நாள் மன்னு வெண் திங்கள் கொல்? நயந்தார்கட்கு நச்சிலை கொல்?"*1 என்பது;

§ 9-2-4 திருப்புருவங்களை அநுபவித்துத் துதித்தல்

அத்திரு நெற்றியில் அழகுக்குக் கீற்றெறடுக்கலாம்படியிருக்கிற[2] திருப் புருவங்களை அநுபவித்து, "இன்னுயிர்க்கு ஏழையர் மேல் வளையும் இணை நீல விற்கொல்? மன்னிய சீர் மதனன் கருப்புச் சிலை கொல்?"*2 என்பது;

§ 9-2-5 திருக் கண்களை அநுபவித்துத் துதித்தல்

'ईश्वरोहं'*3 என்று இருப்பாரைத் தோற்பித்து, 'नमस्ते (381*1) என்று திருவடிகளிலே விழப்பண்ணும்

---

திருவாய். (7—7—9): (திருக்குழல் (= தலைமயிர்) நலிகிறபடியைச் சொல்லுகிறாள்.) உலகங்களெல்லாம் வியாபித்திருக்கிற பலமான (ப்ரளயகால) இருட்டைக் கடைந்து (அதிலிருந்து ஏற்பட்ட ஸாராம்சத்தால்) செய்யப்பட்ட கனமான சுருளின் மிகக் கருப்பான உட்பாகத்தினின்று நூற்றுக் கொள்ளப்பெற்ற மிக்க நீலநிறமான அழகிய நூற்களின் கூட்டமோ இது? அன்று; (அத்தகையதற்கும் இவ்வழகு இருக்கமாட்டாதாகையால்). மிகவும் ஆச்சரியமான கண்ணனின் திருக்குழல்கள் மலர்கின்ற அழகான குளிர்ந்த துளஸியின் மணம் வீசும்படி என்னிடம் வந்து என்னுடைய ஆத்மாவைக் கொள்ளை கொண்டு போகிறபடியை நீங்கள் அறிகிறீர்களில்லை. தாய்மார்களே! அதனால் என்னைக் கோபித்துக் கொண்டு வார்த்தை சொல்கிறீர்கள். □

1—ஒத்திருக்கிற. 2—கோடிட்டுக் காட்டலாம்படி இருக்கிற.

*1. காண்மின்கள் அன்னையர்காள்! என்று காட்டும்
வகையறியேன்*
நாள்மன்னு வெண்திங்கள் கொல்? நயந்தார்கட்கு
நச்சிலை கொல்?*
சேண்மன்னு நால்தடந்தோள் பெருமான்தன் திருநுதலே*
கோள்மன்னி ஆவியடும் கொடியேனுயிர் கோளிழைத்தே.

திருவாய். (7—7—7): (திருநெற்றியிலே ஈடுபட்டுப் பேசுகிறார்) நாளுக்கு நாள் நிலையாயிருக்கும் வெளுத்த (= களங்கமில்லாத) சந்திரனோ இது! (தன்னை) ஆசைப்பட்டவர்களுக்கு (ஆசைப் பட்டும் பெறமுடியாமல் இருப்பதால்) ஆசை இல்லாதபடி செய் கிறதோ? (முழந்தாள் வரை) நீண்டிருக்கிற பருத்த நான்கு தோள்களை உடைய ஸ்வாமியினுடைய அழகான நெற்றியே இது. கொடிய பாபியான எனது பிராணனை கொள்ளைகொள்ளத் துணிந்து அதில் நிலையாயிருந்து என் ஆத்மாவை துன்பப்படுத்து கிறது. தாய்மார்களே! (இப்படிப்) பாருங்கள் என்று கூறி உங்க ளுக்குக் காட்டும் விதத்தை நான் அறியவில்லை.

*2. இன்னுயிர்க்கு ஏழையர்மேல் வளையும் இணைநீலவிற்கொல்?*
மன்னியசீர் மதனன் கருப்புச்சிலைகொல்?* மதனன்
தன்னுயிர்த்தாதை கண்ணபெருமான் புருவமவையே*
என்னுயிர் மேலனவாய் அடுகின்றனவென்று நின்றே.

திருவாய். (7—7—4): (திருப்புருவங்கள் தன்னை நலிவதைப் பேசுகிறார்.) கண்ணனிடம் காமுற்ற பெண்களின் இனிய உயிரைப் பெற அம்பெரியும் நிலையில் எப்பொழுதும் வளைந்தனவும் இரட்டையாயுமுள்ள நீல நிறமான விற்களோ இவை? அல்லது, எப்பொழுதும் நிலைத்துள்ள ஸௌந்தர்யத்தையுடைய மன்மத னுடைய கரும்பாகிய வில்லோ?—அல்ல. மன்மதனுக்குங்கூட ஸ்வரூபத்தைக் கொடுத்து அது நிலைக்கும்படி செய்கிற அவன் தந்தையான கண்ணபிரானுடைய புருவங்கள்தான் இவை. என் பிராணனை நோக்கிக்கொண்டு துன்பப்படுத்துவதில் நிலையா யிருந்து எப்போதும் ஹிம்சையே செய்து கொண்டிருக்கின்றன.

*3. असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान् सुखी ॥

கீதை (16—14): இந்தப் பகைவன் என்னால் கொல்லப் பட்டான். மற்றப் பகைவர்களையும் கொல்லப்போகிறேன். (ஆகையால்) நான் ஸ்வதந்திரன். என் திறமையினாலேயே நான் ஸுகத்தை அநுபவிப்பவனாக இருக்கிறேன். என்பலத்தால் நானே எல்லாம்பெற்றேன். நானே பலமுள்ளவன். ஸுகிப்பவனும்நானே.

'கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்களைக்'*1 கண்டு, ''ஏழையர் ஆவியுண்ணும் இணைக் கூற்றங் கொலோ''*2 என்பது;

§ 9.2.6 திரு மூக்கை அநுபவித்துத் துதித்தல்

अति-सुरभि-निःश्वासமான*3 दिव्य नासावंशத்தைப்[1] பார்த்து, ''மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ?''*4 என்பது;

§ 9.2.7 திருக் கபோலங்களை அநுபவித்துத் துதித்தல்

நாச்சிமாருக்கு लीला-मणिदर्पणங்கள்[2] போலே இருக்கிற दिव्य-कपोलங்களைப்[3] பார்த்து, வர்ணிக்கைக்கு நிலமன்று[4] என்று ''கண்கள் சிவந்து பெரிய வாய், வாயும் சிவந்து கனிந்து, உள்ளே வெண் பல் இலகுசுடர் இலகு விலகுமகர குண்டலத்தன்''*5 என்று சுற்றடிக்கொள்வது[5];

---

1—மூங்கில் போன்ற மூக்கை. 2—விளையாட்டிற்கான ரத்னங்களால் ஆன கண்ணாடி. 3—கபோலம்=கன்னம். 4—முடியாதது. 5—நேரில் வர்ணிக்க முடியாமையால் சுற்றியிருக்குமவைகளை வர்ணிப்பது.

*1. அமலனாதிபிரான் (8): கருத்த நிறம் உடையவைகளாகி விசாலமாய், காந்தியை உடையவைகளாய், சிவந்த கோடுகள் ஓடி, காதளவும் நீண்ட அப்படிப்பட்ட பெரியனவான கண்களை.

*2. ஏழையராவியுண்ணும் இணைக்கூற்றங்கொலோ? அறியேன்*
ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள் கொலோ? அறியேன்*
சூழவும் தாமரை நாண்மலர் போல் வந்துதோன்றும் கண்டீர்*
தோழியர்காள்! அன்னைமீர்! என் செய்கேன்? துயராட்டியேனே.

திருவாய். (7—7—1): (எம்பெருமானுடைய அவயவங்களின் அழகாலே துன்பப்படுத்தப்பட்டவராய் தன்னுடைய இருப்பை ஒரு நாயகியின் பேச்சாகப் பேசுகிறார் இத்திருவாய்மொழியில.) முதலில் திருக்கண்கள் தன்னை நலிவதைக் கூறுகிறார். சபலைகளான ஸ்திரிகளுடைய உயிரைக் கொண்டு போவதற்காக வந்திருக்கிற இரட்டையான யமன்களோ இவை? அல்லது, பெரியதும் அழகியதுமான திருக்கண்களையுடைய பரமோபகாரகனுடைய திருக்கண்களோ இவை? —என்றால் அறிய முடியவில்லை. அப்போது அலர்ந்த தாமரைப் பூப்போல் என்னைச் சுற்றிலும் வந்து தோனறுகின்றனவே தோழியர்களே! தாய்மார்களே! இவைகளை நீங்கள் பார்க்கவில்லையோ? துக்கப்படவே பிறந்திருக்கிற நான என்ன செய்வேன்?

*3. यस्य निश्वसितं वदा: ।

எவனுடைய மூச்சுக் காற்று வேதங்களோ.

*4. ஆட்டியும் தூற்றியும் நின்று அன்னைமீர்! என்னைநீர் நலிந்து என்?*
மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ? கொழுந்தோ? அறியேன்*
ஈட்டிய வெண்ணெயுண்டான் திருமூக்கு, எனதாவியுள்ளே*
மாட்டிய வல்விளக்கின் சுடராய் நிற்கும் வாலியதே.

திருவாய். (7—7—2): (திருமூக்கு தன்னை நலிவதைக் கூறுகிறார்.) (முன் சொன்ன திருக்கண்களின்) பக்கத்திலே விலக்ஷணமாய் எழுந்த கற்பகக் கொடியோ? அல்லது, அதனுடைய கொழுந்தோ? —நான் அறியவில்லை. சேர்த்து வைக்கப்பட்ட வெண்ணெயைச் சாப்பிட்ட கண்ணனுடைய திருமூக்கு என் ஸ்வரூபத்திற்குள்ளே ஏற்றி வைத்திருக்கிற திடமான விளக்கினுடைய ஜ்வாலையாகத் திகழ்கின்றது. (ஜ்வாலையைப் போல்) அதிக உஷ்ணமாக இருக்கிறது. தாய்மார்களே! நீர் (என்னை) ஒரு இடத்திலும் இருக்கவொட்டாமல் அங்குமிங்கும் அலைத்தும், பலரிடம் பழிகளைச் சொல்லியும் என்னைத் துன்பப்படுத்தி என்ன பயன்?

*5. கண்கள் சிவந்து பெரியவாய் வாயும் சிவந்து கனிந்து* உள்ளே
வெண்பலிலகு சுடர் இலகு விலகு மகரகுண்டலத்தன்*
கொண்டல்வண்ணன் சுடர்முடியன் நான்கு தோளன் குனி சார்ங்கன்*
ஒண்சங்கதை வாளாழியான் ஒருவன் அடியேனுள்ளானே.

### § 9.2.8 திரு அதரங்களை அநுபவித்துத் துதித்தல்

செம்பவளத்திரள்*1 போலே இருக்கிற दिव्य-अधर-पल्लवத்தைப் பார்த்து, "வாலியதோர் கனிகொல்? கோலம் திரள் பவளக் கொழுந்துண்டம் கொலோ?"*2, "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ? திருப் பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?"*3 என்பது;

### § 9.2.9 புன்சிரிப்பை அநுபவித்துத் துதித்தல்

स्मयमान-मुखனைக் கொண்டு[1] தோற்றின "தூமுறுவல் தொண்டைவாய்ப் பிரானு"டைய*4 முறுவலைப் பார்த்து, "என்று நின்றே திகழும் செய்ய வீன் சுடர் வெண் மின்னுக்கொல்? அன்றி என்னுவி அடும் அணிமுத்தம் கொலோ?"*5 என்பது;

---

திருவாய் (8—8—1): (எம்பெருமான் ஆழ்வாரோடு கலந்த பூரிப்பினால் மிக அழகாக விளங்குவதைக் கண்டு ஆழ்வார் அநுபவிக்கின்றபடி.) (ஆழ்வாருடன் சேர்ந்ததால்) எம்பெருமானது திருக்கண்கள் சிவந்தும் பெரியவைகளாயும் (நன்கு மலர்ந்தும்), திருப்பவளமும் சிவந்தும் பழுத்தும், அதற்குள்ளே பற்கள் வெண் முத்துக்கள் போல் ஒளிவீசியும் விளங்குகின்றன. பிரகாசிக்கின்றதும் அசைந்து கொண்டிருக்கின்றதுமான மகரகுண்டலங்களை உடையவனும், மழைமேகம் போன்ற நிறமுடையவனும், பிரகாசமுள்ள கிரீடத்தையுடையவனும், நான்கு தோள்களை உடையவனும், வளைந்த சார்ங்கமென்னும் வில்லை உடையவனும், பிரகாசமுள்ள சங்கம், கதை, கத்தி, திருவாழி இவைகளை உடையவனுமான நிகரற்ற அழகுடைய எம்பெருமான் அடியேனுடைய மனத்தில் இருக்கிறான். □

1—புன்சிரிப்புள்ள முகத்தையுடையவனைக் கொண்டு.

*1. திருவாய் (3-5-4) : சிவந்த நிறமுள்ள பவளங்களுடைய கூட்டம்.

*2. வாலியது ஓர் கனிகொல் வினையாட்டியேன் வல்வினைகொல்*
கோலந்திரள் பவளக்கொழுந்துண்டங்கொலோ? அறியேன்*
நீல நெடுமுகில் போல் திருமேனி அம்மான்
தொண்டைவாய்*
ஏறும் திசையுளெல்லாம் வந்துதோன்றும் என்
இன்னுயிர்க்கே.

திருவாய். (7-7-3): (எம்பெருமானது திருப்பவளம் தன்னை நலி வதைக் கூறுகிறார்.) இது நன்றாய்ப் பழுத்த விலக்ஷணமான பழமோ? பாபம் செய்த என்னுடைய கொடிய பாபமோ? அழகினுடைய குவியல் போல் இருக்கிற பவளத்தினுடைய நன்றாய் வளர்ந்த துண்டமோ? அறியேன். நீலமான பெரிய மேகம் போன்ற திருமேனியையுடைய ஸ்வாமியினுடைய கோவைப்பழம் போன்ற திருப்பவளம் என்னுடைய இனியதான ஆத்மாவுக்கு (என் ஸ்வரூபத்தைக் கொல்லுகைக்காக) தப்பிப்பிழைக்க முடியாதபடி எல்லாத் திசைகளிலும் என் முன்னாலே வந்து தோன்றுகிறதே.

*3. கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?*
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?*
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்*
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே!

நாச்சியார்திரு (7—1); கம்பீரமாயும் வெண்மையாயும் உள்ள ஸ்ரீ பாஞ்சஜந்யாழ்வானே! குவலயாபீடம் என்ற யானையின் தந்தத்தை முறித்த கண்ணபிரானுடைய திருஅதரத்தினுடைய ரஸத்தையும் பரிமளத்தையும் ஆசையோடே (உன்னைக்) கேட்கின்றேன். (அப்பெருமானுடைய) அழகிய பவளம் போன்ற சிவந்த திரு அதரமானது பச்சைக் கற்பூரம் போல் வாசனை வீசுமோ? (அல்லது) தாமரைப்பூப் போல் வாசனை வீசுமோ? மதுரமான ரஸத்தை உடைத்தாயிருக்குமோ? (இன்னபடியிருக்குமென்று எனக்குச்) சொல்.

*4. திருவாய். (5—3—8): வெண்மையான தந்த பங்க்தியையும், கோவைப்பழம் போன்ற வாயையும் உடைய பரோபகாரகனை எம்பெருமானுடைய.

*5 என்று நின்றே திகழும் செய்யவீன் சுடர் வெண்மின்னுக்
கொல்?*
அன்றி என்னுவியடும் அணிமுத்தங்கொலோ? அறியேன் *
குன்றமெடுத்த பிரான் முறுவல் எனதாவியடும்*
ஒன்றும் அறிகின்றிலேன் அன்னைமீர்! எனக்கு உய்விடமே,

§ 9.2.10 திருச்செவிகளை அநுபவித்துத் துதித்தல்

**कान्ति**க்கு லீலா **डो**லைகள்[1] போலே இருக்கிற **दिव्य कर्णपाश**ங்களைப்[2] பார்த்து, "மகரந்தழைக்கும் தளிர் கொல்?"*1 என்பது;

§ 9.2.11 திருமுகத்தை அநுபவித்துத் துதித்தல்

"சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதிபரந்த"*2 ஸம்பூர்ணசந்த்ரனும் 'நேரொவ்வான்' என்னும்படியான திருமுகத்தில் அழகைத் திரள அநுபவித்து, "கோளிழைத் தாமரையும் கொடியும் பவளமும் வில்லும் கோளிழைத் தண்முத்தமும் தளிரும் குளிர் வான்பிறையும் கோளிழையாவுடைய கொழுஞ்சோதி வட்டம் கொல்?"*3 என்பது;

§ 9.2.12 திருக்கழுத்தை அநுபவித்துத் துதித்தல்

"**कुरुष्व मां अनुचरं**"*4 என்றிருப்பாரைக் கூவிக்

---

திருவாய். (7-7-5): (திருமுறுவல் தன்னை நலிவதைப் பேசுகிறார்.) எப்பொழுதும் நிலையாய் விளங்கும் சிவந்த ஒளியையுடைய வெண்மையான மின்னலோ இது! அல்லது, எனது ஆத்மாவைத் துன்பப்படுத்தும் தன்மையுள்ள வரிசையாக வைக்கப்பட்ட முத்துக்களோ? – அறியமாட்டிலேன். கோவர்த்தன மலையைத் தூக்கிப்பிடித்து உபகாரம் செய்த கண்ணனுடைய புன்சிரிப்பே என்னுடைய ஆத்மாவை ஹிம்சைசெய்கிறது. தாய்மார்களே! (இதைத் தப்பி எங்கேயாவது போய்ப்) பிழைக்க இடமொன்றையும் அறிய முடியவில்லை. அங்கேயும் வருகிறதே!) □

1—விளையாட்டுக்கான ஊஞ்சல். 2—கர்ணபாசம் = காது.

*1 இவ்விடம் ஏழையர்க்கும் அசுரர்க்கும் அரக்கர்கட்கும்*
எவ்விடம்? என்றிலங்கி மகரம் தழைக்கும் தளிர்கொல்?*
பைவிடப் பாம்பணையான் திருக்குண்டலக் காதுகளே*
கைவிடலொன்றுமின்றி அடுகின்றன காண்மின்களே.

திருவாய் (7—7—6): (திரு மகரகுண்டலம் அணிந்த திருக்காது

கள் தன்னை நலிவதைப் பேசுகிறார். சபலைகளான பெண்களுக்கும், அஸுரர்களுக்கும், ராக்ஷஸர்களுக்கும் (தப்பிப்போய்) பிழைக்கும் இடம் எந்த இடம்? (குறிப்பு: அசுரர்களும், ராக்ஷஸர்களும் இந்த அழகைக்கண்டு பொறுக்காமல் முடிவர்கள். பெண்கள் இந்த அழகைக் கண்டு இந்த அழகோடு கூடிய எம்பெருமானைப் பெறாமல் தரிக்கமாட்டாது முடிவர்). மீன் உருவத்தில் தழைத்த தளிர்களோ இவை? (அன்று). படங்களையும் விஷத்தையும் உடைய ஆதிசேஷனாகிய பாம்பைப் படுக்கையாக உடைய எம்பெருமானுடைய திருக்குண்டலங்கள் பொருந்திய காதுகள் தான் இவை. ஒரு க்ஷணமும் என்னைவிடாமல் ஹிம்ஸை செய்கின்றன இவை. இதைப் பாருங்கள்.

*2 பெரியாழ்வார் திரு. (1—4—3): நான்கு பக்கங்களிலும் காந்தியினுடைய ஸமூஹம் வ்யாபித்து ப்ரகாசம் விஸ்தாரமாய் இருக்கிற.

*3: கோளிழைத்தாமரையும் கொடியும் பவளமும் வில்லும்*
கோளிழைத் தண்முத்தமும் தளிரும் குளிர் வான்பிறையும்*
கோளிழையாவுடைய கொழுஞ்சோதி வட்டங்கொல்?* கண்ணன்
கோளிழை வாண்முகமாய்க் கொடியேனுயிர் கொள்கின்றதே..

திருவாய். (7-7-8): (எம்பெருமானது திருமுகத்தின் அவயவங்களின் சேர்க்கையின் அழகு தன்னை நலிவதைக் கூறுகிறார்) தங்களின் காந்திகளையே தங்களுக்கு ஆபரணமாகவுடைய இரண்டு தாமரைப்பூக்களும் (= திருக்கண்கள்), கொடியும் (= திருமூக்கு), பவளமும் (= உதடுகள்) வில்லும் (= திருப்புருவங்கள்), தன் அழகையே தனக்கு ஆபரணமாகவுடைய குளிர்ந்த முத்துக்களின் (= பற்கள்) வரிசைகளும், இரண்டு தளிர்களும் (= காதுகள்), குளிர்ந்த பெரிய அஷ்டமீ சந்திரனும் (= திருநெற்றி), (இவைகள் எல்லாம் சேர்ந்திருக்கிற) தன் அழகையே ஆபரணமாகவுடைய மிகுந்த காந்தியுள்ள ஜ்யோதிர் மண்டலமோ இது? கண்ணனுடைய அழகிய முகம் என்கிற பெயரை வைத்துக்கொண்டு கொடிய பாவம் பண்ணின என் பிராணனை அபஹரித்துக் கொண்டிருக்கிறது.

*4. कुरुष्व मामनुचरं वैधर्म्यं नेह विद्यते ।
कृतार्थोऽहं भविष्यामि तव चार्थः प्रकल्पते ।।

ராமா. (2-31-22): அடியேனைக் கைங்கர்யபரனாக தேவரீர்

கொள்ளும் போது, स्निग्ध-गम्भीर-मधुर-नादமாய்*1, நாச்சிமாருடைய வளைத்தழும்போடு வாசியில்லாத रेखात्रयத்தை[1] உடைத்தாய், திருமேனி ஒளியாலே பசுத்த[2] ஸ்ரீ பாஞ்சஜன்யம் போலே இருக்கிற திருக்கழுத்தைப் பார்த்து, "முற்றும் உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக்கொண்டது"*2 என்பது;

§ 9. 2. 13 திருத்தோள்களை அநுபவித்துத் துதித்தல்

चतुर्विध-पुरुषार्थங்களையும் வழங்குமளவன்றிக்கே, ஏதேனும் ஒரு किञ्चित्कारம் பண்ணிறுருக்கு सर्वस्वभूतமான*3 गाढ-परिष्वङ्गத்தைக் கொடுக்கக் கடவவான திருத்தோளகளைப் பார்த்து, "கற்பகக்காவன நற்பல தோள்"கள்*4 என்பது;

§ 9. 2. 14 திருமார்பை அநுபவித்துத் துதித்தல்

मरतक-शिलातल-मनोहरமாய், मौक्तिक-श्रीवत्स-कौस्तुभ-वन-माला-विराजितமாய், அலர்மேல் மங்கை இறையும் அகலகில்லேன் என்று உறையும்படி अत्यन्त-भोग्यமான திருமார்பை அநுபவித்து, "ஆரமார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டது"*5 என்பது;

---

நியமித்தருள்வீராக. இவ்விஷயத்தில் தர்மவிருத்தம் என்பது இல்லை. அடியேன் க்ருதார்த்தனாக ஆவேன். தேவரீரது கார்யமும் நன்றாகக் கைகூடும். (இளையபெருமாள் ஸ்ரீ ராமனிடம் தன்னை காட்டுக்கு அழைத்துச் செல்ல வேண்டுடிக் கூறுதல்.) ☐

1—மூன்று கோடுகளை. 2—பசுமை நிறமுடையதான.

*1. வை. கத்: மழமழப்பையுடையதாயும் பரிவுடன் கூடியதாயும் இனிமையாயும் இருக்கிற சப்தத்தை உடையதாய்.

*2 அமலனாதி. (6); (பாசுரம்: பக்கம் 372) ஒரு துண்டாயிருக்கிற வெளுத்த சந்திரனை முடியிலே உடையனான சிவனுடைய பிச்சையெடுத்துத் திரிந்த பாதகத்தைப் போக்கினவனும், அழகிய சிறகையுடைய வண்டுகள் வாழ்தற்கிடமான சோலைகளால் சூழப்பட்ட திருவரங்கப் பெருநகரிலே பொருந்தியிராநின்ற ஸ்வாமி

யான ஸ்ரீரங்கநாதனுடைய அண்டத்திற்குட்பட்ட தேவாதி வர்க்கங்களையும், அண்டங்களையும், அண்டாவரணங்களையும், ஒப்பற்ற மஹாப்ருதிவியையும், ஏழு குலபர்வதங்களையும், மற்றெல்லாவற்றையும் அமுது செய்த திருக்கழுத்துக் கண்டமே தாஸனான என்னை உஜ்ஜீவிப்பித்தது.

*3. एष सर्वस्वभूतो मे परिष्वङ्गो हनूमतः ।

ராமா. (6—1—13): (ஸீதாப் பிராட்டியைக் கண்டு வந்த அநுமனுக்கு ப்ரத்யுபகாரம் எதையும் காணதவராய் இராம பிரான் அநுமனை இறுகத் தழுவிக்கொண்டு கூறுவது). எனது இந்த ஆலிங்கனம் எல்லா சொத்துமாகும்.

*4. கற்பகக்காவன நற்பலதோளற்கு*
பொற்சுடர்க் குன்றன்ன பூந்தண்முடியற்கு*
நற்பலதாமரை நாள்மலர்க்கையற்கு* என்
விற்புருவக்கொடி தோற்றது மெய்யே.

திருவாய். (6-6-6): எம்பெருமானுடைய பாஹ்ய ஸம்ச்லேஷம் கிடைக்கப் பெறுமையால் தளர்ச்சியடைந்த தம்முடைய இருப்பை நாயகியின் தாயார் வார்த்தையால் எம்பெருமானுக்குத் தெரிவிக்கிறார் ஆழ்வார்) கற்பகச சோலை போலிருக்கிற நல்ல பல தோள்களையுடையவனுக்கு, காந்தியுள்ள பொன் மலை போல் அழகாய்த் திருமுடிக்கு மிருதுவாயிருக்கிற கிரீடத்தை உடையவனுக்கு, நல்ல பல தாமரைப்பூப் போலே இருக்கிற திருக்கைகளை உடைவனுக்கு, (சார்ஙகமென்னும்) வில்லைப் போல் புருவங்களையும் கொடி போன்ற உடலையுமுடைய என்னுடைய இந்தப் பெண் (அவனைப் பெறுமையால்) தன் உடலை இழந்தாள். (=உடல் அவள் வசமில்லாமல் போயிற்று.)

*5. அமலனுதிபிரான் (5) (பாசுரம்: பக்கம் 367): பெரும் சுமையான அநாதி காலமாய்க் குவிந்த கர்மங்களை வாஸனையுடன் ஒழித்து, (க்ஷுத்ர பலன்களில் பற்றுள்ள) என்னை அவனுக்கே தாஸனாக்கிக் கொண்டான். இப்படிச் செய்தது மல்லாமல் என் ஹ்ருதயத்திலும் நுழைந்துவிட்டான். இப்படிப்பட்ட பாக்யத்தைப் பெறுவதற்கு உறுப்பாக நான் உக்ரமான பெரியதொரு தபஸ்ஸை எந்த பிறவியிலாவது செய்திருப்பேனோ, என்னவோ? அறிகிறேனில்லை. பிராட்டியையும், முத்தாரத்தையும் உடைத்தான ஸ்ரீ ரங்கநாதனுடைய திருமார்பன்றோ தாஸனான என்னை அடிமைப்படுத்திக் கொண்டது.

§ 9. 2. 15 திருவயிற்றை அநுபவித்துத் துதித்தல்

ப்ரளயாபத்துக்கள் வந்தால் ப்ரபஞ்சத்தையெல்லாம் உள்ளே வைத்து ரக்ஷிக்கும்படியான திருவுதரத்தைப் பார்த்து, "காரேழ் கடலேழ் மலையேழ் உலகுண்டும் ஆராவயிற்றான்"*1 என்பது;

§ 9. 2. 16 பீதாம்பரத்தை அநுபவித்துத் துதித்தல்

மரதகக் குன்றமொத்த திருமேனியிலே மாணிக்கவொளி சூழ்ந்தாற் போலே பொருந்தின பொன்னொத்த ஆடையைப் பார்த்து, "படிச்சோதி ஆடையொடும் பல்கலனாய் நின் பைம்பொன் கடிச் சோதி கலந்ததுவோ?" (357*[1]) என்பது;

§ 9. 2. 17 கணைக்கால்களை அநுபவித்துத் துதித்தல்

ஜனன-பதவீ-ஜங்காலரை[1] முன் ஓடிவந்து விலக்கக் கடவனவான திவ்யஜங்காகாண்டங்களைக்[2] கண்டு, கந்தர்ப-காஹள-கலாசி தூணீர-மாத்ருகை[3] என்னலாம்படி "கணைக்காலிருந்தவா"*[2] என்பது;

§ 9. 2. 18 திருவடிகளை அநுபவித்துத் துதித்தல்

வேதங்களுக்கெல்லாம் மேல் சாத்தாய்[4], ஸர்வாத்மாக்களுக்கும் ஸாமாந்ய-தைவதமான "பொது நின்ற பொன்னங்கழல்களைப்"*[3] பார்த்து "ஒருகாலில் சக்கரம்"*[4], "பத்து விரலும் மணிவண்ணன்

---

1—ஸம்ஸார மார்க்கத்தில் வேகமாக நடக்கிறவர்களை. 2—திவ்யமான கணுக்கால்களை. 3—மன்மதனுடைய எக்காளம் என்னும் ஊதும் வாத்யம், காளாஞ்சி என்னும் அடி சிறுத்து வாயகன்றதான பாத்திரம், அம்புறுத்துணி மாதிரி. 4—தலைக்கு அலங்காரமாய்.

*1. பேரேயுறைகின்ற பிரான் இன்று வந்து*
பேரேனென்று என்னெஞ்சு நிறையப் புகுந்தான்*
காரேழ் கடலேழ் மலையேழுலகுண்டும்*
ஆராவயிற்றானை அடங்கப் பிடித்தேனே.

திருவாய். (10-8-2): திருப்பேர் (கோயிலடி) என்கிற ஊரில் நித்யவாஸம் செய்கிற பிரான் இப்பொழுது வந்து என் மனதில் நிறையப் புகுந்து (இதையே தனக்கு லாபமாகக் கொண்டு) 'இதை விட்டுப் பிரியேன்' என்று அதிலிருக்கிறான். ஏழு மேகங்களையும், ஏழு ஸமுத்திரங்களையும், ஏழு பெரிய மலைகளையும், எல்லா உலகங்களையும் சாப்பிட்டும் (=பிரளய காலத்தில் தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்தும்) நிரம்பாத வயிற்றை உடையவனை (=அதனால் திருப்தி அடையாதவனை) அவனுக்குத் திருப்தி உண்டாகும்படி பிடித்துக் கொண்டேன்.

*2. பணைத்தோளிளவாய்ச்சி பால்பாய்ந்த கொங்கை*
அணைத்தார உண்டு கிடந்த இப்பிள்ளை*
இணைக்காலில் வெள்ளித்தளை நின்றிலங்கும்*
கணைக்கால் இருந்தவாகாணீரே காரிகையீர்! வந்துகாணீரே.

பெரியாழ்வார் திரு. (1—2—3): மூங்கில் போன்ற தோள்களை உடையவளும், இளமைப்பருவம் உள்ளவளுமான இடைச்சியான யசோதையின் பாலை ப்ரவஹிக்கும் ஸ்தநத்தைத் திருக்கையால் தழுவிக்கொண்டு நிரம்பப் பருகி அசையாமல் படுத்துள்ள இந்தப் பிள்ளையின் ஒன்றோடொன்று இணைந்த திருக்கால்களில் வெள்ளியால் செய்த தண்டைகள் ப்ரகாசிக்கும் கணைக்கால்களின் அழகிருந்தபடியைப் பாருங்கள். அழகான பெண்கள்! வந்து காணுங்கள்.

*3. மூன்றாந்திருவந்தாதி (88): எல்லா ஆச்ரிதர்களுக்கும் பொதுவானதும் ஸ்திரமானதும் அழகியதுமான திருவடிகளை.

*4. ஒரு காலில் சங்கு ஒரு காலில் சக்கரம்
உள்ளடி பொறித்தமைந்த*
இருகாலும் கொண்டு அங்கங்கு
எழுதினாற்போல் இலச்சினை பட நடந்து *
பெருகாநின்ற இன்பவெள்ளத்தின் மேல்
பின்னையும் பெய்து பெய்து*
கருகார்க்கடல் வண்ணன்
காமர்தாதை தளர்நடை நடவானோ.

பெரியாழ்வார்திரு. (1—7—6): காளமேகம் போன்றும் கடல் போன்றும் இருக்கிற நிறத்தை உடையவனும், மன்மதனுக்குப் பிதாவுமான கண்ணன் உள்ளங்கால்களில் ஒரு திருவடியிலே ஸ்ரீ பாஞ்சஜந்யமும் மற்றொரு திருவடியில் திருவாழியாழ்வானுமாக

பாதங்கள் ஒத்திட்டிருந்தவா''*1 என்பது;

§ 9. 2. 19 திருவடிக்குக் கீழ் தாமரையை அநுபவித்துத் துதித்தல்

திருவடிகளுக்கும் **आधार-पद्म**த்திற்கும் உண்டான சேர்த்தியைப் பார்த்து, ''அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ'' (559*4) என்பது;

§ 9. 2. 20 அவயவங்களின் சேர்ந்த அழகை அநுபவித்துத் துதித்தல்

இப்படி **परस्पर-आभरण**ங்களான திவ்யாவயங்களைப் பேசத் தொடங்கி, ''கருமாணிக்க மலைமேல் மணித்தடம் தாமரைக் காடுகள் போல திருமார்பு வாய் கண் கை உந்தி கால் உடையாடைகள் செய்ய பிரான்''*2 என்பது;

§ 9. 2. 21 திருவாபரணங்களை அநுபவித்துத் துதித்தல்

**नीलमेघ-निभ**மான[1] திருமேனியிலே நிலைமின்கள்[2] போலே விளங்குகிற **जगदभिमानि-देवतात्मा**க்களாகிற[3] திவ்யாபரணங்களைப் பார்த்து, ''அந்தாமத்து அன்பு செய்து என்னாவிசேர் அம்மானுக்கு அந்தாம வாழ்முடி சங்கு ஆழி நூல் ஆரமுள''*3 என்பது.

---

ரேகாரூபமாகப் பொருந்தியுள்ள இரண்டு கால்களினாலும் அடியிட்ட அவ்வோ இடங்களிலெல்லாம் தூரிகை(= சித்ர சலாகை) கொண்டு எழுதினாப் போலே அடையாளம் படும்படி நடந்து இந்த நடையழகையும் வடிவழகையும் கண்டு பெருகும் ஆநந்தம் ஸமுத்திரத்தைக் காட்டிலும் அதிகமாக மேன்மேலும் பெருகும்படி தளர்நடை நடவாரோ. □

1—கருமேகம் போன்ற. 2—ஸ்திரமாய் இருக்கும் மின்னல்கள். 3—உலகிலுள்ள தத்துவங்களுக்கெல்லாம் அபிமானி தேவதைகளான ஆத்மாக்களாயிருக்கிற.

*1. முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும்*
தத்திப்பதித்துத் தலைப்பெய்தாற்போல்* எங்கும்
பத்துவிரலும் மணிவண்ணன் பாதங்கள் *
ஒத்திட்டிருந்தவா காணீரே ஒண்ணுதலீர்! வந்துகாணீரே.

பெரியாழ்வார்திரு. (1—2—2): ஒளிபொருந்திய நெற்றியை யுடைய பெண்மணிகளே! முத்து, ரத்தினம், நல்ல வைரம், பொன் இவையெல்லாம் மாறிமாறியிருக்கும்படி பதிவு செய்யப் பெற்று ஒன்றாய்க் கூட்டினாற் போல, நீலமணி போன்ற நிற முடைய கண்ணனின் பாதங்களின் பத்து விரல்களும் எல்லா இடங்களிலும் பொருந்தி அமைந்திருந்த வைலக்ஷண்யத்தைப் பாருங்கள்.

*2. கருமாணிக்கமலைமேல்மணித்தடம் தாமரைக்காடுகள்போல்*
திருமார்வு வாய் கண் கை உந்தி காலுடையாடைகள் செய்ய பிரான்*
திருமால் எம்மான் செழுநீர் வயல் குட்டநாட்டுத்திருப் புலியூர்*
அருமாயன் பேரன்றிப் பேச்சிலள் அன்னைமீர்! இதற்கென் செய்கேனோ?

திருவாய். (8—9—1): (எம்பெருமான் அவனுடைய அழகாலே தன்னை வசீகரித்துத் தன்னுடன் சேர்ந்ததால் தனக்கு உண்டான ஸுகத்தைத் தோழி வார்த்தையாலே அருளிச்செய்கிறாள்.) நீல ரத்நமாகிய ஒரு மலைமேல் அழகான ஒரு தடாகத்தில் தாமரைக் காடுகள் மலருவது போல் எம்பெருமானுடைய திருமார்பும், திருப்பவளமும், திருக்கண்களும், திருக்கைகளும், திருநாபியும், திருவடிகளும், திருப்பீதாம்பரமும் இருக்கின்றன. இப்படி பரமோபகாரகனாய், ச்ரிய:பதியாய் நமக்கு ஸ்வாமியாய் செழுமையுள்ள நீர்நிலங்களை உடைய குட்டநாட்டைச் சேர்ந்த திருப்புலியூர் என்ற ஊரில் அருமையாய் ஆச்சரியமாய் எழுந் தருளியிருப்பவனுடைய திருநாமங்களைத் தவிர வேறு ஒரு வார்த்தையும் இவள் பேசுகிறதில்லை. தாய்மார்களே! இதற்கு நான் என்ன செய்வேன?

*3. அந்தாமத்தன்பு செய்து என்னாவிசேர் அம்மானுக்கு*
அந்தாமவாழ்முடிசங்கு ஆழிநூல்ஆரமுள*
செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம்*
செந்தாமரையடிக்கள் செம்பொன்திருவுடம்பே.

திருவாய். (2—5—1): அழகிய பரமபதத்தில் பண்ணுகிற பிரீதியை என்னிடத்தில் பண்ணி, அழகான பூமாலையையுடைய பிரகாசிக்

§ 9. 2. 22 திருச்சங்கு சக்கரங்களை அநுபவித்துத் துதித்தல்

அஞ்ஜனகிரியை[1] அணைந்த चन्द्रादित्यர்கள் போலே परस्पर-परभागத்தையுடையரான[2] திருக்கையில் ஆழ்வார்களைப் பார்த்து, ''சங்கு சக்கரங்கள் என்று கை கூப்பு''வது*1(†1);

§9.3 எம்பெருமானது கல்யாண குணங்களை அநுபவித்துத் துதித்தல்

பரந்த திருப்பாற்கடலிலே गांभीर्य-माधुर्यादिகள் போலே दिव्य-आत्मस्वरूपத்திலே परत्व-सौलभ्यங்களுக்கு வகுத்த गुणवर्गங்களைப் பார்த்து, ''உயர்வற உயர்நல முடையவன்''*2, ''வல்வினையேனை ஈர்கின்ற குணங்களையுடை யா'ன்''*3(†2) என்பதாய்;

---

கிற கிரீடம், சங்கு, திருவாழி, யஜ்ஞோபவீதம், ஹாரம் இவற்றோடு வந்து என்னோடு சேர்ந்தான். அவன் திருக்கண்கள் சிவந்த தாமரைப்பூக்கள் நிறைந்த தடாகம் போல் இருக்கின்றன. சிவந்த கோவைப்பழம் போலிருக்கிற திருப்பவளம் செந்தாமரை போலிருக்கிறது. திருவடிகள் செந்தாமரை போலிருக்கின்றன. திருமேனி சிவந்த பொன் போலிருக்கிறது. □

1—மை (=கருத்த) மலையை. 2—ஒருவருக்கொருவரால் உண்டாகும் விசேஷ ப்ரகாசத்தை உடையரான.

†1. கைகூப்புவன் என்பது[1]. 2—குணங்களை யுடையாய்[4].

*1. கங்குலும் பகலும் கண் துயிலறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்*
சங்கு சக்கரங்களென்று கைகூப்பும்
தாமரைக்கண்ணென்றே தளரும்*
எங்ஙனே தரிக்கேன் உன்னை விட்டு? என்னும்
இருநிலம் கைதுழாவிருக்கும்*
செங்கல்பாய்நீர்த் திருவரங்கத்தாய்!
இவள் திறத்து என் செய்கின்றாயே.

திருவாய். (7—2—1): (பராங்குசநாயகி பெரிய பெருமாளிடத்து மோஹித்திருக்க 'இந்நாயகி விஷயமாக என் செய்ய நீர் எண்ணு

கின்றீர்?'' என்று திருத்தாயார் கேட்கும் பாசுரம்). இவளுக்குப் பகலிலும் இரவிலும் தூக்கமில்லை. கண்ணீரை கைகளால் இறைக்கிறாள். (சங்கு சக்கரங்களை ஏந்திக்கொண்டு வரவேண்டும்' என்று சொல்ல விரும்பி) 'சங்கு சக்கரங்கள்' என்று (மேலே சொல்ல முடியாமல் அந்த வேண்டுதலைக்) கைகளைக் கூப்பி அறிவிக்கிறாள். ('உன் தாமரைக் கண்களாலே குளிர கடாக்ஷிக்க வேண்டும்' என்று சொல்ல நினைத்து) 'தாமரைக்கண்' என்று மாத்திரம்' சொல்லி (மேலே சொல்ல முடியாமல்) தளர்ச்சியை அடைகிறாள். 'உன்னைவிட்டு எப்படி பிழைத்திருப்பேன்' என்று சொல்லுகிறாள். பெரிய பூமியைக் கைகளால் தடவிக்கொண்டிருக்கிறாள். சிவந்த கயல் மீன்கள் (ஸந்தோஷத்தால் இங்கு மங்கும்) ஓடிக்கொண்டிருக்கிற நீர் நிறைந்த ஸ்ரீரங்கத்தில் இருக்கிறவனே! இவள் விஷயத்தில் என்ன செய்ய நினைத்திருக்கிறாய்?

*2. உயர்வறவுயர்நலம் உடையவன் யவனவன்*
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்*
அயர்வறுமமரர்கள் அதிபதி யவனவன்*
துயரறு சுடரடி தொழுதெழு என் மனனே!

திருவாய். (1—1—1): வேறொன்றுக்கும் தன்னைக் காட்டிலும் உயர்த்தியில்லாதபடி உயர்ந்த கல்யாண குணங்களை உடையவனாய் எவன் இருக்கிறானோ, தன் விஷயத்தில் அறிவையும் பக்தியையும் எவன் தன் கருணையினால் கொடுத்தானோ, ஒரு போதும் மறதியில்லாத ஜ்ஞாநமுள்ளவர்களாகிற நித்யஸூரிகளுக்குத் தலைவன் எவனோ,' அந்த எம்பெருமானுடைய, தன்னை அடைந்தவர்களின் எல்லா துக்கங்களையும் போக்கும் ஸ்வபாவமுள்ளதும் அப்ராக்ருதமான ஒளி பொருந்தியதுமான திருவடிகளை ஸேவித்து (சேஷன் செய்ய வேண்டிய கைங்கர்யங்களைச் செய்து) உஜ்ஜீவி; என் மனமே!

*3. மணந்த பேராயா! மாயத்தால் முழுதும்
வல்வினையேனை யீர்கின்ற*
குணங்களையுடையாய்! அசுரர்வன்கையர்
கூற்றமே! கொடிய புள்ளுயர்த்தாய்*
பணங்களாயிரமுடைய பைந்நாகப்
பள்ளியாய்! பாற்கடற் சேர்ப்பா!*
வணங்குமாறு அறியேன் மனமும் வாசகமும்
செய்கையும் யானும் நீதானே.

திருவாய். (8—1—8): ஆச்சரியமான லீலைகளால் 'ஆச்ரிதர்களான

### §9.4 திருவடித் தாமரைகளை அருளும்படி எம்பெருமானிடம் பிரார்த்தித்தல்

அந்த†[1] शीलादिगुणங்களாலும் शीतलங்களான "தூது செய் கண்"களாலும்*[1] आकृष्टனாய்க் கொண்டு, श्रीशठ-कोपன் நிற்கிற पादपीठத்தளவும் சென்று, "வானுயரின் பம் மன்னி வீற்றிருந்தாய்! அருளு நின் தாள்களை எனக்கே"*[2] என்ன,

### §9.5 முக்தன் தலையில் எம்பெருமான் தன் திருவடித் தாமரைகளைச் சூட்டி கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை அருளுதல்

அவனும் இரங்கி, "வாசம்செய் பூங்குழலாளும்"*[3] गन्धवतिயுமான நாச்சிமார் கரதலங்களுக்கும் பரிமளம் கொடுக்கும் பொற்றாமரையடிகளாலே இவனைப் பூமுடி சூட்டி, "तेषामपि नमो नमः"*[4] என்று எல்லை உள்ளளவும் செல்ல அடிப்பட்ட[1](†[2]) கைங்கர்ய - ஸாம்ராஜ்யத்திற்கும் கடவனுக்க[2];

### §9.6 திவ்ய பர்யங்கத்தின் மீது ஏறி எம்பெருமானை அடைதல்

இவனும் தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து, நின்

---

கோபிகைகளுடன் பிரீதியோடு சேர்ந்து அவர்களுக்கு ஆநந்தத்தை உண்டு பண்ணுகிற கோபாலர்களின் தலைவனே! கொடிய பாபங்களைச் செய்த என்னைப் பிளக்கிற (=துன்புறுத்துகிற) குணங்களை உடையவனே! பலமுள்ள கைகளையுடைய அசுரர்களுக்கு யமனாயிருப்பவனே! பகைவர்களை மாய்க்கின்ற கருடனைக் கொடியில் உடையவனே! ஆயிரம் படங்களையுடையவனும் விசாலமானவனுமான ஆதிசேஷனைப் படுக்கையாக உடையவனே! திருப்பாற்கடலில் சயனித்திருப்பவனே! நானும், என் மனமும், வாக்கும், செய்கைக்கு இடமான உடலும் உனக்கு ஆதீனங்கள். ஆகையால் நான் உன்னை வணங்கும் வழியை நீயே செய்தருளவேணும். □

1—காரணத்துடன் கூடிய; கீழ் வரிசைகளில் இறங்கி வருகிற. 2—உரியவனுக்க.

†1—அநந்த[1]. 2—அப்படிப்பட்ட[1].

*1 திருவாய் (9—9—9); தூதன் வேலையைச் செய்கின்ற கண்

கள் (பேச்சாலே தன் அபிப்ராயத்தை ஸ்பஷ்டமாய்த் தெரிவிப்பதைக் கண்களாலேயே அப்படித் தெரிவித்தல்).

*2. யானும் நீதானே யாவதோ மெய்யே
அருநரகவையும் நீ; ஆனல்*
வானுயர் இன்பமெய்தில் என்? மற்றை
நரகமேயெய்தில் என்? எனிலும்*
யானும் நீதானய்த் தெளிதொறும் நன்றும்
அஞ்சுவன் நரகம் நான் அடைதல்*
வானுயரின்பம் மனனிவீற்றிருந்தாய்!
அருளு நின்தாள்களை எனக்கே.

திருவாய். (8—1—9): நானும் நீயேயாருப்பது உண்மையே. பொறுக்கமுடியாத நரகம் போல் இருக்கும் ஸம்ஸார மண்டலத்தில் இருக்கின்றவைகளும் நீயே. ஆனல், வைகுந்தத்தில் உயர்ந்த ஆநந்தத்தை அடைந்தாலும் (இப்போதில்லாத)என்ன அதிசயம் உண்டாகும்? அதற்கு எதிர்த்தட்டான நரகம் போலிருக்கும் ஸம்ஸார மண்டலத்தையே அடைந்தால் என்ன குறையிருக்கும்? இப்படி அறிந்தாலும், நானும் நரகம் போலிருக்கும் ஸம்ஸாரத்தை அடைந்திருப்பதை மிகவும் பயப்படுகிறேன். வைகுந்தத்தில் உயர்ந்ததும் அழிவில்லாததுமான ஆநந்தத்துடன் உன்பெருமை தோன்றும்படியாயிருக்கிறவனே! உன் திருவடிகளை எனக்குக் கிருபை பண்ணு

*3. திருவாய். (10—10—2): ஸர்வகந்தனை எம்பெருமானுடைய திருமேனிக்கும் பரிமளத்தைக் கொடுக்கிற அழகிய திருக்குழல்களையுடைய பெரிய பிராட்டி. கந்தவதீ—வாஸனையையே தனக்கு நிருபகமாக உடைய பூமிப்பிராட்டி

*4. विष्णोः देवाधिदेवस्य जगद्धातुः जगत्पतेः ।
प्रणामं येऽपि कुर्वन्ति तेषामपि नमो नमः ।। (i)

तस्य यज्ञवराहस्य विष्णोः अमिततेजसः ।
प्रणामं येऽपि कुर्वन्ति तेषामपि नमो नमः ।। (ii)

(i) வி. தர் (90-53)—(முத்கலோபாக்யாநம்): ஜகத்பதியாயும், ஜகத்ரக்ஷகனுயும், ஜகத்காரணனுயும் உள்ள விஷ்ணுவை எவர்கள் வணங்குகின்றனரோ அவர்களுக்கும் எனது ப்ரணமம் உரித்தாகுக. (ii) பார. (சாந்தி-46-130): எல்லையற்ற தேஜஸ்ஸை உடையவனும் எங்கும் பரவி நிற்பவனுமான யக்ஞவராஹனை நமஸ்கரிக்கும் பாகவதர்களுக்கும் எனது ப்ரணமங்கள் உரித்தாகுக.

தாளிணைக் கீழ் வாழ்ச்சி யான் சேரும் வகையருள்''*1 என்ற (†1) மநோரதம் தலைக்கட்டி, 'தன்னுருவாய் என் உருவில் நின்ற எந்தை தளிர்புரையும் திருவடி என் தலைமேலவே'*2, "கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை நான் கண்டேனே''*3, "திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாய்''*4

---

†1—என்ன[1].

*1. சூழ்ச்சி ஞானச்சுடரொளியாகி* என்றும்
ஏழ்ச்சி கேடின்றி எங்கணும் நிறைந்த எந்தாய்*
தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து நின்தாளிணைக்கீழ்
வாழ்ச்சி* யான் சேரும் வகை அருளாய் வந்தே.

திருவாய். (3-2-4): எல்லாரிடத்திலும் வியாபிக்கிற ஜ்ஞாந மாகிய பிரபையையுடையவனாய், ஸ்வயம் பிரகாசனாய், எப்பொழுதும் ஏற்றச் சுருக்கமின்றி எங்கும் நிறைந்திருக்கிற என் ஸ்வாமியே! உன்னைத் தவிர எல்லாவற்றிலும் மனது போய் விழுவது நீங்கி, உன் திருவடிகளின் கீழேயிருந்து அவைகளை அநுபவிப்பதை நான் அடையும்படி வந்து அருளவேண்டும்.

*2. மின்னுருவாய் முன்னுருவில் வேதம் நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய்*
பின்னுருவாய் முன்னுருவிற் பிணிமூப்பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாது * எண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதமைந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில் திகழும் சோதி*
தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடி என்தலை மேலவே.

திருநெடுந். (1): (எம்பெருமானை செய்த உபகாரபரம்பரைகளை நினைத்து ஆச்சர்யப்பட்டு திருமங்கையாழ்வார் கூறுவது). முன்னேயுள்ள (= கண்ணால் காணத்தக்க ப்ராக்ருத) வஸ்துக் களில் மின்னல் போல மிகவும் அஸ்திரமான ஸ்வபாவத்தைப் பிரகாசிப்பித்தவனாய், நான்கு வேதங்களை உஜ்ஜ்வலார்த்தமாகத் தந்தருளுமவனாய், அவற்றின் மூலமான உபதேசஜ்ஞாநமுமாய், ச்ரவணத்திலிருந்து மனனமாக முளைத்து தியானமாக எழுச்சி யுற்ற ஸமாதியென்ற ஜ்ஞாநத்திற்கு நிர்வாஹகனாய், அசேத

நத்திற்குப் பின்னுக (அதாவது, 25வதாக) அறியப்படும் சேதந தத்துவமுமாய், முன்சொன்ன அசேதநத்திலுள்ள நோய்-கிழத் தனம் இவை இல்லாததும், பிறவியுமில்லாததுமான சேதந வஸ்துவுக்கு நிர்வாஹகனுய், மரணமேயான (அதாவது தனக்கு ஸாக்ஷாத் ஆத்மபூதனுன பரமாத்மாவை விட்டு தன் ஆத்மாவை அநுபவித்தலால் மரணமென்னத்தகும்) கைவல்யத்தை ஆச்ரி தருக்குக் கொடுக்க எண்ணுதவனுய், எப்பொழுதும் மனனம் பண்ணுகைக்கு யோக்யமான ரமணீய பரமாத்ம ஸ்வரூபமாய், சிறந்த ரத்னம் போன்ற திருமேனியில் பஞ்சோபநிஷத்தான அப்ராக்ருத பூதங்கள் ஐந்துமாய், நீர்மை என்ற குணபூர்த்தி உடையவனுய், அக்நிபோல் ஒருவருக்கும் அணுகமுடியாத பரத்வ முடையவனுய், உலகில் பிரகாசிக்கும் ஜோதியெல்லாம் தன்னுல் ப்ரகாசிக்கும்படி ஜோதியாய் என் சரீரத்திலும் நின்றவனுய், எனக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய தளிர்போன்ற திரு வடிகள் எனக்கு அலங்காரமாகின்றனவே!

*3. கூட்டுதி நின் குறைகழல்கள் இமையோரும் தொழாவகை செய்து*
ஆட்டுதி நீ அரவணையாய்! அடியேனுமஃதறிவன்*
வேட்கையெல்லாம் விடுத்து என்னை உன் திருவடியே சுமந் [துழல*
கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை நான் கண்டேனே.

திருவாய். (4—9—9): ஆதிசேஷனைப் படுக்கையாக உடையவனே! பிரும்மா முதலான தேவர்களும் தங்கள் முயற்சியாலே உன்னை ஸேவிக்காதபடி பண்ணி அலையும்படி செய்கிருய். ஆனுல் உன் னுடைய திருவடிகளை ஆச்ரயித்தவன் எவ்வளவு தாழ்ந்தவனுய் இருந்தாலும் அவனை உன் திருவடிகளில் சேரும்படி செய்கிருய். இந்த விஷயத்தை அடியேனும் அறிந்து கொண்டேன். (எப்படி யென்றுல்) எல்லா ஆசைகளையும் என்னை விடும்படி செய்து, உன் திருவடிகளையே தலையால் வஹித்துத் திரியும்படி அடையமுடி யாத உன் திருவடிகளிலே என்னைச் சேர்த்தாய். இதை நான் கண்டேன்.

*4. பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதிபோல்*
திருப்பொலிந்த சேவடி என் சென்னியின்மேல் [பொறித்தாய்*
மருப்பொசித்தாய்! மலலடர்த்தாய்! என்றென்று உன் வாசகமே*
உருப்பொலிந்த நாவினேனை உனக்கு உரித்தாக்கினையே.

பெரியாழ்வார் திரு. (5—4—7): பாண்டிய வம்சத்து அரசன் ஒருவன் வேற்று நாட்டை வென்று அவ்வெற்றி விளங்கும்படி

என்று **अमृत-सागर**த்திலே அழுந்தினாற் போலே **आनन्द-निर्भर**ராய்[1] அநுபவரஸம் ப்ரேரிக்க[2], "பற்றிலார் பற்ற நின்ற"*1 திருவடிகளையே **अवलम्बन**மாகக் கொண்டு **पर्यङ्क**த்தின் மேலே ஏற;

§9.7 "நீ யார்?" என்ற எம்பெருமான் கேள்விக்கு முக்தன் கூறும் விடை

இவனை, தாயும் தந்தையுமாய் அளிக்கும்[3] "தண் தாமரைக் கண்ணன்"*2 **अङ्गार-कुमार न्याय**த்தாலே[4] **अनु-मोदि**த்து[5], இவனை **सहज-सौहार्द**த்தாலே[6] "தன்மை பெறுத்தித் தன் தாளிணைக் கீழ்" கொண்டு*3, ஸர்வ சேஷியான தான் பெற்ற பேற்றை இவனையிட்டுப் பேசுவிக்கத் திருவுள்ளமாய். 'நீர் ஆராய் இருக்கிறீர்?' என்று கேட்க;—

இவனும் தனக்கு "அவன் எவ்விடத்தான்? யான் ஆர்?"*4 என்ற நிலையைக் கழித்து, **नित्य** ஸம்ஸாரிகள் நிலையினின்றும் நித்யஸூரிகள் நிலையிலே சேர்த்த மஹோபகாரத்திற்கு உதவிக் கைம்மாறு அற்று, தான் தெளிந்தபடியே விண்ணப்பம் செய்யத் தொடங்கி;—

அநாதிகாலம் ஸம்ஸாரார்ணவத்திலே அழுந்தின அடியேன் தேவரீருடைய திவ்ய ஆத்மஸ்வரூபமாகிற "அளப்பரிய ஆரமுதக் கடலிலே"*5 "**अविभागेन दृष्ट-त्वात्**"*6 என்னும்படி **अपृथक्-सिद्ध-विशेषण**மாய்க்கொண்டு அழுந்தினேன்.

---

அங்கே பெரியமலையின மீது தன் சின்னமான மீனை அடையாள மாகச செதுக்கியது போல, பரமபதத்தினின்றும் வந்து என்னை வெற்றி கொணடு (= வசப்படுத்திக் கொண்டு) அதன் அடை யாளமாக ஐசவர்யசிஹ்நங்களையுடைய சிவநத உன் திருவடிகளை என் தலையின மேல் வைத்தருளினாய். 'குவலயா பீடத்தின்

தந்தத்தை ஒடித்தவனே! சாணூர முஷ்டிகாதி மல்லர்களை அழித்தவனே!' என்று உன் குணங்களுக்கு வாசகமான திருநாமங்களைக் கூறுவதால் தழும்பேறிய நாக்கையுடைய என்னை உனக்கு சேஷபூதனுகிக் கொண்டாயே. □

1—ஆநந்தத்தால் நிறைந்தவனுய். 2—தூண்ட. 3—க்ருபை பண்ணி அருளும். 4—மடியில் வந்தமர்ந்த புத்ரனைக் கொஞ்சும் முறையிலே. 5—ஸந்தோஷித்து. 6—இயல்பான ப்ரீதியாலே.

*1. திருவாய். (7—2—7). வேறொரு உபாயம் இல்லாதவர்கள் ஆச்ரயிக்கும்படி நிற்கிற.

*2. பெரியதிரு. (7—1—9): குளிர்ந்த தாமரை புஷ்பத்தைப் போன்ற திருக்கண்களை உடைய பகவான்.

*3. திருவாய். (3—7—7): இவ்வாத்மாவுக்கு ஸ்வபாவத்திலேயே உண்டான தன்மையை அடையும்படி செய்து(அதாவது ஸ்வரூப-ஆவிர்பாவத்தைச் செய்து) தன் திருவடிகளின் கீழே வைத்துக்கொண்டு.

*4. அம்மான் ஆழிப்பிரான் அவன் எவ்விடத்தான்? யான் ஆர்?*
எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்கும் கண்டீர்*
கைம்மாதுன்பொழித்தாய்! என்று கைதலை பூசலிட்டே*
மெய்ம்மாலாயொழிந்தேன் எம்பிரானும் எம்மேலானே.

திருவாய். (5—1—7): திருவாழியை உடைய உபகாரகனுன ஸ்வாமியான அவன் எங்கே? மிகவும் தாழ்ந்தவனுன நான் எங்கே? "கஜேந்திரனுடைய துன்பத்தைப் போக்கினவனே!" என்று கைகளைத் தலையில் வைத்துக்கொண்டு கூப்பிட்டேன். (வேறொன்றும் செய்யவில்லை. அப்படி இருந்தும் அவனுடைய அளவில்லாத கிருபையால் அவனிடத்தில்) உண்மையான பக்தி உடையவனுக ஆகிவிட்டேன். என் ஸ்வாமியும் என்னிடத்தில் ஆசை உள்ளவனுக ஆனுன். ஆகையால் எப்படிப்பட்ட பெரிய பாபிகளுக்கும் அவனுடைய கிருபையாகிய பாக்கியம் வரும் போது வந்தேவிடும்.

*5. திருநெடு. (14): அளப்பதற்கு அரிதான பரிபூர்ணமான அம்ருத ஸமுத்ரத்திலே.

*6. ப்ரஹ்மஸூ. (4—4—4): (உபாஸநத்தால் தன் ஆத்மா பரமாத்மாவை ஆத்மாவாக உடையது என்று) கண்டிருக்கிறபடியால், (முக்தன் பரமாத்மாவை 'நான் ப்ரஹ்மமாய் இருக்கிறேன்' என்று) பிரிவில்லாமலேயே (அநுபவிக்கிறுன).

'உலகங்களுக்கெல்லாம் ஒருயி'ரான*[1] தேவரீருடைய ஸ்வரூபத்தாலே ஸ்வரூபமும், ஸங்கல்பத்தாலே प्रवृत्ति-निवृत्तिகளும், भोगத்தாலே भोगமுமாம்படியான உண்மை தெளிந்தேன்.

தனித்து எனக்கொரு பேரிடவொண்ணுதபடி मकार-विवरणத்தில் சொன்ன "दासभूतன்'' என்கிற பெயரில் நிலை நின்று स्वरूप-प्राप्त-कैंकर्यத்திற்கு விலக்கில்லாத सूरितुल्य-स्वातन्त्र्यம் பெற்றேன்.

'வானுளார் பெருமா'னை*[2] தேவரீரோடே 'தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதும்†[1] ஒத்துக் கலந்து'*[3], ஒருபடிப்பட்ட ज्ञान-विकासத்தாலே "உள்ள உலகளவும் யானுமுள''னய்*[4] நின்று', பொன்னுலகும்*[5] புவனி முழுதும்*[5] कैंकर्योपकरणமாகக் கொள்ளப் பெற்றேன்.

லோகத்தில் ஸர்வாத்மாக்களுடைய ஐச்வர்ய கைவல்ய-ரஸங்களெல்லாம் என் அநுபவரஸத்தில் திவலை என்னும்படி தெவிட்டாத அநுபவம் பெற்று भोक्ताவுமாய் भोग्यனுமானேன்[1]. "வானக் கோனைக் கவி சொல்ல வல்லேற்கு இனி மாறு இல்லை'',*[6] என்னும்படி வேதங்கள் மீண்ட நிலமெல்லாம் மெய்யுணர்ந்து கவி பாடும் கருத்துடையேனுனேன். மேல் இனி "மீளா வடிமைப்பணி கொண்டருள வேண்டும்''*[7]—என்று விண்ணப்பம் செய்ய;

### §9.8 திவ்ய தம்பதிகளின் திருவருளைப் பெறுதல்

இப்பாசுரங்களைக் கேட்டருளின श्रियः पति முலை பிரியமாட்டாத[2] मुग्धனை[3] पुत्रனுடைய முதல் வார்த்தை

---

1—உபயவிபூதி விசிஷ்டனை பரமாத்மாவை முக்தன் அநுபவிப்பதால், இவன் போக்தாவாகிறுன். பரமாத்மா இவனை

அநுபவிப்பதால் இவன் போக்யமுமாகிறான். 2—தாய்ப்பாலால் வளருகிற. 3—அறியாத.

†1—அமுதமும்[1].

*1. திருவாய். (8-1-5); எல்லா உலகங்களுக்கும் ஒப்பற்ற அந்தராத்மாவான.

*2. திருவாய். (2-3-1) : நித்யர்களுக்கும் முக்தர்களுக்கும் தலைவனை.

*3. திருவாய். (2—3—1) : தேனும், பாலும், நெய்யும், சர்க்கரையும் அம்ருதமும் போல இவற்றினுடைய ரஸங்களெல்லாம் உண்டாம்படியாகக் கலந்து.

*4. பெ. அந். (76): இருக்கிற எல்லா உலகங்களிலும் நானும் தர்மபூதஜ்ஞாநத்தினால் வ்யாபித்திருப்பவனாய்.

*5. திருவாய். (6-8-1): ஸ்வர்ணம் போல் பிரகாசமான பரமபதத்தையும், இந்த லீலாவிபூதி முழுவதையும்.

*6. வானத்தும் வானத்துள்ளும்பரும் மண்ணுள்ளும் மண்ணின்கீழ்த்
தானத்தும்* எண்திசையும் தவிராது நின்றான் தன்னை*
கூனற்சங்கத்தடங்கையவனைக் குடமாடியை
வானக்கோனை* கவிசொல்லவல்லேற்கு இனிமாறுண்டே?

திருவாய். (4-5-9): ஸ்வர்க்கத்திலும், அதற்கு மேலுள்ள ஆகாசத்திலிருக்கிற உலகங்களிலும், பூமியிலும், பூமிக்குக் கீழே உள்ள இடங்களிலும் அவைகளிலுள்ள (தேவர், மனிதர், மிருகங்கள், தாவரங்கள் என்கிற நான்கு விதங்களும்; பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், வேளாளர் என்கிற நான்கு வர்ணங்களும் ஆகிய) எட்டு விதமான வஸ்துக்களிலும் ஒன்றும் விட்டுப் போகாமல் ஆத்மாவாய் வியாபித்திருக்கிற, விசாலமான திருக்கையில் வளைந்திருக்கிற சங்கத்தை உடையவனாய், கிருஷ்ணனாய் அவதரித்து குடக்கூத்து முதலிய ஆச்சர்யமான லீலைகளைச் செய்தவனாய், நித்ய ஸூரிகளுக்குத் தலைவனாயிருந்த எம்பெருமானை பாட்டுக்களாலே ஸ்தோத்திரம் பண்ண சக்தியுள்ள எனக்கு இனிமேல் ஸமமானவரும் உண்டோ? உள்ளபடியே ஸாக்ஷாத்கரித்துக் கவிபாடும் எண்ணத்தை உடையவனானேன்.

*7. திருவாய். (9-8-4): ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருதல் இல்லாத கைங்கர்யத்தைத் தந்தருள வேண்டும்.

யைக் கேட்டாற் போலே உகந்து, "**यदपाङ्ग-संश्रयं**"*1, "**यस्या वीक्ष्य मुखं** "*2, **यद्भ्रविभ्रम-भेदतः**"*3 என்னும்படி இருக்கிற "**अस्तु ते**"*4 என்னும்†1 **अखिल-जगन्माता**வின் திருமுகத்தைப் பார்க்க, இருவரும் **एक-हृदय**ராய்க் கொண்டு கடாக்ஷிக்க, பரமசேஷி 'திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்' பெற்று*5;

§9.9 முடிவற்ற பரிபூர்ண ப்ரஹ்மாநுபவத்தைப் பெறுதல்

**स्वतस्सर्वज्ञ**னுடைய **स्वरूपादि**களையெல்லாம் அவன் தன்னைப் போலே **असङ्कुचित**மாகக்[1] காட்டுகிற ஸாக்ஷாத்காரத்தினுடைய **अनुवृत्ति-अभिमतै**யானபடியாலே[2] **परभक्ति-युक्त**னாய்;

**साक्षात्कार-अनुवृत्ति**யாலே[3] **परज्ञान-युक्त**னாய், **उत्तरोत्तर-रस-अभिनिवेश**த்தாலே **परमभक्ति-युक्त**னாய்;

இப்படிப் பரிபூர்ணமாய் **उत्तरावधि-रहित**மாய்[4] **विशदतम**மாய்[5] **अनन्य-प्रयोजन**மாய் **अनवधिक-प्रिय**மான **भगवदनुभव**த்தாலே வந்த **निरतिशय-प्रीति**யாலே "ஒழிவில் காமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமையை',

---

1—சுருக்கமில்லாமல் குறைவற. 2—தொடர்ச்சி விரும்பப் படுவதால். 3—அநுவ்ருத்தி = தொடர்ச்சி. 4—மேல் எல்லை இல்லாததாய். 5—மிகத்தெளிவாய்.

†1—என்னும்படியாயிருக்கிற[3].

*1. चकर्थ यस्या भवनं भुजान्तरं तव प्रियं धाम यदीय जन्मभूः ।
जगत्समस्तं यदपाङ्गसंश्रयं यदर्थमम्भोधिरमन्थ्यबन्धि च ।।

ஆள. ஸ்தோ. (37): உன்னுடைய திருமார்பை எந்த பிராட்டிக்கு இருப்பிடமாகச் செய்தருளினாயோ, எந்தப் பிராட்டியின் பிறப்பிடமான திருப்பாற்கடல் உனக்கு இனிய இருப்பிட

மாயிற்றோ, உலகெல்லாம் எவளுடைய மந்தகடாக்ஷத்தைப் பற்றியிருக்கிறதோ, எவளைப் பெறுவதற்காக கடலானது கடைய வும் அணைகட்டவும் பெற்றதோ.

*2 स्वस्ति श्रीर्दिशतादशेष-जगतां सर्गोपसर्गस्थिती:
स्वर्गं दुर्गतिमापवर्गिकपदं सर्वं च कुर्वन् हरि: ।
यस्या वीक्ष्य मुखं तदिङ्गितपराधीनो विधत्तेऽखिलं
क्रीडेयं खलु नान्यथास्य-रसदा-स्यादैकरस्यात्तया ॥

ஸ்ரீஸ்தவம் (1) : எல்லா உலகங்களுடைய உற்பத்தி ஸம்ஹாரம் காப்பது என்கிறவைகளையும் ஸ்வர்க்கலோகத்தையும் நரகத்தையும் மோக்ஷஸ்தாநமாகிய பரமபதத்தையும் மற்றுமுள்ள ஸகலபோகங்களையும் செய்கின்றவரான ஸ்ரீமந்நாராயணன் எந்த பிராட்டியினுடைய திருமுகத்தைப் பார்த்து அந்தந்த ஜாடைகளுக்குப் பரதந்த்ரனாயிருந்து கொண்டு (கீழ்ச்சொல்லிய) எல்லாவற்றையும் செய்கிறானோ," இப்படி அவளுடைய ஜாடைகளுக்கு பராதீனனாயில்லாவிடில் அப்பெருமானுக்கு அந்த லக்ஷ்மீதேவியோடுகூட ஸமமான ஆநந்தத்தை உடையவனாயிருக்கும் தன்மையால் இந்த விளையாட்டானது ஸுகத்தை கொடுக்கக் கூடியதாய் ஆக மாட்டாதோ, அவ்வளவு பெருமை வாய்ந்த லக்ஷ்மீதேவி மங்களத்தைக் கொடுக்கக்கடவள்.

*3. नम: श्रीरङ्गनायक्यै यद्भ्रूविभ्रम-भेदत: ।
ईशेशितव्य-वैषम्य-निम्नोन्नतमिदं जगत ॥

ஸ்ரீரங்கராஜஸ்த. (1-7): எந்தப் பிராட்டியினது புருவங்களினுடைய அசைவுகளினால் இவ்வுலகமானது ஆள்பவன் ஆளப்படுபவர்கள் என்கிற பேதத்தால் உயர்ந்ததாயும் தாழ்ந்ததாயும் இருக்கிறதோ, அப்படிப்பட்ட ஸ்ரீ ரங்கநாச்சியாருக்கு நமஸ்காரம்.

*4. ச.கத்.: நீ பிரார்த்தித்தபடியே உனக்கு எல்லாம் உண்டாகட்டும்.

*5. திருவாய். (9-2-1): எல்லாருக்கும் சேஷியான பகவானுடைய க்ருபையையும், தாமரைப் பூவில் வஸிக்கும் பெரிய பிராட்டியினுடைய க்ருபையையும்.

*6. திருவாய். (3-3-1): முடிவில்லாத காலமெல்லாம் பக்கத்திலேயே ஸ்திரமாக இருந்து ஒன்றும் விட்டுப் போகாதே கைங்கர்யங்களையும் (அதாவது, ஸர்வதேச-ஸர்வகால-ஸர்வாவஸ்த ஸர்வவித-கைங்கர்யங்களையும்).

உகந்து, "एकधा" (C—49) என்று தொடங்கி ஓதுகிற अनियत-अपरिमित-शुद्धसत्त्वमयविग्रहங்களைப்[1] பரிக்ரஹித்து[2], "மொய்ம்மாம் பூம்பொழி"லிற்படியே (B—34) संभ्रम-क्रीडादिகளைப்[3] பண்ணிக் காட்டியும், "पर्येति"[4] (C—50) என்னும்படி "வலம் செய்து நாளும்" மருவியும்*1, सङ्कल्पमात्र-प्रभवரான[5] संबन्धि-बान्धवादि-विशेषங்களைக்[6] கொண்டு†1 குடியடிமை செய்துகாட்டியும், அன்று ஈன்ற धेनु वत्सத்தைப்[7] போலவும், அத் धेनुவை वत्सம் போலவும், ஸத்வத்தை[8] நிழல் போலவும், शेषि போம் வழியெல்லாம் अनुधावनம்[9] பண்ணி, "இருள் தரு மா ஞாலத்துள்"*2 ईश्वरன் அவதரிக்கும் போது ज्ञान-संकोचादिகள் பிறவாதபடி அவன் தன்னைப் போலே வந்து பேயும், श्रुति-सुभग-सामगानादिகளைப் பண்ணி[10] சூழ்ந்திருந்து பல்லாண்டேத்தியும்;

இப்படி ஸ்வாமி உகந்த सर्वविधकैङ्कर्य-ஸம்பத்தை सर्वदेश-सर्वकालादिகளிலும் உசிதமாக உகந்து, प्रहर्षयिष्यामि (29*3) என்கிற மநோரத பூர்த்தியாலே அநாதி காலம்

---

1—எப்பொழுதும் இருக்க வேண்டும் என்ற கட்டாயமில்லாத எண்ணற்ற ஶுத்தஸத்வமயமான சரீரங்களை. 2—கைக் கொண்டு. 3—பரபரப்பில் உண்டான விளையாட்டுக்களை. 4—சுற்றிவருகிறான் 5—ஸங்கல்பம் ஒன்றிலேயே உண்டான. 6—உறவினர்களை. 7—தேநு = பசு; வத்ஸம் = கன்று. 8—ப்ராணியை. 9—பின் தொடர்ந்து. 10—கேட்பதற்கு இனிமையான ஸாமகானங்களைப் பண்ணி.

†1—ஸம்பந்த பாந்தவாதி விசேஷங்களைக் கொண்டு[1].

*1. திருவாய். (2-10-8): ப்ரதக்ஷிணம் முதலான எல்லா அநுகூல காரியங்களையும் செய்து எப்பொழுதும் கூடியும்.

*2. திருவாய். (10-6-1): இருக்க இருக்க அஜ்ஞாநத்தைத் தருவதான பெரிய உலகத்தில்.

இழந்ததெல்லாம் படியெடுத்தது[1] என்னலாம்படி अनवधिक-आनन्द-महार्णव - निमग्नனாய்[2], प्रकृति-गुणங்களைக் கழித்து भगवत्-गुणங்களிலே 'பிணைகொடுக்கிலும் போகவொண்ணாதபடி'*1 துவக்குண்டும்[3]; மேலாத் தேவருடனே[4] கூடிமேவி, மீட்சியில்லா வாழ்ச்சியை அநுபவிக்கும்.

அடலுரகம் உண்டுமிழ்ந்த அருக்கன் போல
அழுக்கடைந்து கழுவிய நல்தரளம் போல*
கடலொழுகிக் கரைசேர்ந்த கலமே போலக்
காட்டுத்தீ கலந்தொழிந்த†1 களிறே போல*
மடல் கவரும் மயல் கழிந்த மாதர் போல
வன்சிறைபோய் மன்னர்பதம் பெற்றார் போல*
உடல் முதலா உயிர் மறைக்கும் மாயை நீங்கி
உயர்ந்த பதம் ஏறி உணர்ந்தொன்றினோமே. 19

---

1—சேர்ந்து வந்தது. 2—அளவில்லாத ஆநந்தக் கடலில் மூழ்கினவனாய். 3—ஸம்பந்தத்தை அடைந்து. 4—நித்யஸூரிகளுடன்.

†1—காட்டுத்தீ கவர்ந்தொழிந்த[1].

*1. பெரியாழ்வார் திரு. (4-5-2); ப்ரதிநிதியாக (ஜாமீனாக) நித்யஸூரிகளைக் கொடுத்தாலும் போகமுடியாதபடி ஸம்பந்தத்தை அடைந்து.

19: அடல் உரகம்—வலிமையுள்ள (ராகு என்னும்) ஸர்ப்பத்தால்; உண்டு உமிழ்ந்த—விழுங்கி (பிறகு) உமிழப்பட்ட; அருக்கன் போல — ஸூர்யன் போலவும்; அழுக்கு அடைந்து கழுவிய—அழுக்கு நிரம்பியிருந்து பின் கழுவப்பெற்ற; நல் தரளம் போல—சிறந்த முத்துப் போலவும்; கடல் ஒழுகிக் கரை சேர்ந்த—கடலில் திசை தெரியாதோடிப் பின் (தெய்வ வசத்தால்) கரையைச் சேர்ந்துவிட்ட; கலமே போல—ஓடம்போலவும்; காட்டுத்தீக்கு கலந்து—காட்டுத்தீயால் (சூழப்பட்டு) வருந்தி; ஒழிந்த—(பிறகு

மண்ணுலகில் மயல் தீர்ந்து மனம் தளும்பி
மன்னுத பயனிகந்து†[1] மாலேயன்றி*
கண்ணிலதென்றஞ்சியவன் கழலேபூண்டு
கடும் சிறை போய்க் கரையேறும் கதியேசென்று*
விண்ணுலகில் வியப் பெல்லாம் விளங்கக்கண்டு
விண்ணவர் தம் குழாங்களுடன் வேதம்பாடி*
பண்ணுலகில் படியாத இசையில்†[2] பாடும்
பல்லாண்டே பல்லாண்டும் பாடுவோமே. 20

மாளாத வினையனைத்தும் மாள நாம் போய்
வானேறி மலர்மகளார் அன்பு பூணும்†[3]*
தோளாத மாமணிக்குத் தொண்டு பூண்டு
தொழுதுகந்து தோத்திரங்கள் பாடி ஆடி*
கேளாத பழமறையின் கீதம் கேட்டுக்
கிடையாத பேரின்பம் பெருக நாளும்*
மீளாத பேரடிமைக்(கு) அன்பு பெற்றேம்
மேதினியில் இருக்கின்றேம் விதியினுலே 21

---

அத்துன்பம்) நீங்கிய; களிறே போல—யானை போலவும், மடல் கவரும் மயல் கழிந்த—மடலூரும்படியான காமவிச்சை நீங்கிய; மாதா போல—பெண்கள் போலவும்; வன் சிறைபோய்— (சிறையிலிருந்து, பின்) வலிய அந்தச் சிறை நீங்கி வெளியேறி; மன்னர் பதம் பெற்றார் போல—ராஜபதவியைப் பெற்றவர் போலவும்; உடல்முதலா—கர்ம சரீரத்திற்குக் காரணமாய்; உயிர்மறைக்கும்—ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை (நாம் அறிய முடியாதபடி) மறைப்பதாயுள்ள; மாயை நீங்கி — ப்ரக்ருதியின் ஸம்பந்தம் நீங்கி; உயர்ந்த பதம் ஏறி—உயர்ந்த ஸ்தானமாகிய பரமபதத்தில் ஏறி; உணர்ந்து — (ஸ்ரீ வைகுண்டநாதனை) அநுபவித்து; ஒன்றினேம் — (அவனுடன்) கலந்து ஈடுபட்டோம். □

1—பயன் இகழ்ந்து[1]. 2—இசையால்[3]; இசையால்[4]. 3— அன்பு பூண்டு[3].

20. மண்ணுலகில் மயல் தீர்ந்து—இக்கர்ம பூமியில் அஞ்ஞானம் தீர்ந்து (1. விவேகபர்வம்); மனம் ததும்பி — (வீணே கழிந்த காலத்தை நினைந்து) மனம் தத்தளித்து (2. நிர்வேதபர்வம்); மன்னாத பயன் இகந்து—ஸ்திரமில்லாத ஸம்ஸார ஸுகங்களில் ஆசையிழந்து (3. விரக்தி பர்வம்);மாலே அன்றி-எம்பெருமானைத் தவிர; கண் இலது என்று — (வரப்போகும் நரகத்தைத் தடுக்க வேறு) கதி இல்லை என்று; அஞ்சி—பயந்து (4. பீதிபர்வம்); அவன் கழலே பூண்டு—(பக்தி அல்லது ப்ரபத்தியால்)அவனுடைய திருவடிகளையே பற்றி (5. ப்ரஸாதந பர்வம்); கடும் சிறை போய் —சரீரமாகிய கொடிய சிறையிலிருந்து புறப்பட்டு (6. உத்க்ரமண பர்வம்); கரை ஏறும் கதியே சென்று—(ஸம்ஸார ஸமுத்ரத்தின்) அக்கரைக்குச் செல்லும் அர்ச்சிராதி கதியால் சென்று (7. அர்ச்சிராதி பர்வம்); விண்ணுலகில் -பரமபதத்தில் உள்ள; வியப்பு எல்லாம்—ஆச்சர்யங்களை எல்லாம்; விளங்கக் கண்டு—தெளிவாய்க் கண்டு (8. திவ்ய தேச ப்ராப்தி பர்வம்); விண்ணவர் தம் குழாங்களுடன்— நித்யஸூரிகள், முக்தர்கள் ஆகியவர்களின் கோஷ்டிகளுடன்; வேதம் பாடி—வேதத்தைப் பாடி; பண் உலகில படியாத இசையால்—ஸங்கீத உலகில் அமையாத தெய்வ கானத்தால்; பாடும்—பாடப்படுகிற; பல்லாண்டே—பல்லாண்டு என்று தொடங்கும் திவ்யப்ரபந்தத்தையே; பல் ஆண்டும் பாடுவோம் - பலகாலமும் (நித்ய—முக்தர்களுடன்) பாடி எம்பெருமானை அநுபவிப்போம் (9. பராப்தி பர்வம்).

21 மாளாத வினை அனைத்தும் –(லகுவாய்) ஒழியாத கர்மங்கள் முழுதும்; மாள—(நாம் அநுஷ்டித்த உபாயத்தால்) ஒழிய, நாம்போய்—நாம் (அர்ச்சிராதி கதியால்) சென்று; வான் ஏறி - பரமபதத்தை அடைந்து; மலர் மகளார்—தாமரையில் வாழும் பிராட்டியுடைய; அன்பு பூணும் — அன்பைப்பெற்றவனும்; தோளாத மாமணிக்கு—துளைக்கப்படாத பெரிய (இந்த்ர நீல) ரத்நம் போன்றவனுமான எம்பெருமானுக்கு; தொண்டு பூண்டு —கைங்கர்யத்தை ஏற்று; தொழுது — வணங்கி; உகந்து—மகிழ்ந்து; தோத்திரங்கள் பாடி—ஸ்தோத்ரங்களைப் பாடி; ஆடி — நர்த்தநம் செய்து; கேளாத பழ மறையின் — (இதுவரை) கேட்டிராத பழமையான வேதத்தின்; கீதம் கேட்டு — திவ்ய கானத்தைக் கேட்டு; கிடையாத பேரின்பம் — (மற்றவர்க்குக்) கிடையாத பெரிய (மோக்ஷ) ஆநந்தம்; நாளும் பெருக—எந்நாளும் பெருகும்படி; மீளாத பேரடிமைக்கு —திரும்புதலில்லாத பெரிய கைங்கர்யத்திற்குக் காரணமான; அன்பு பெற்றோம்— (எம்பெருமானுடைய) ப்ரீதியைப் பெற்றோம். விதியினால்—

बलादाकर्षद्भिर्बहुभिरपराधैर्विहितया
परावृत्त्या नित्यं भव-जलधि-पङ्के निपतताम् ।
प्रथिम्ना संपन्ना भगवदनुकम्पैक-वपुषा
प्रतीचो दृष्टेयं परमपद-सोपान-पदवी ।।

श्रीमद्वेङ्कटनाथस्त्रय्यन्तगुरुः स्वभाव-चित्रमिदम् ।
व्यतनुत नवपर्वयुतं सुस्थं परमपद-हर्म्य-सोपानम् ।।

इति श्री परमपदसोपाने नवमं प्राप्ति पर्व ।।

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
कृतिषु श्री परमपदसोपानं संपूर्णम् ।।

कवितार्किक सिंहाय कल्याणगुणशालिने ।
श्रीमते वेंकटेशाय वेदान्तगुरवे नमः ।।

*(நம்மைக் கொண்டு சேதநரை உஜ்ஜீவிப்பிக்கத் திருவுள்ளங் கொண்ட எம்பெருமானுடைய) நியமனத்தால் (அல்லது—அர்ச்சாவதாரத்தில் ஈடுபடவும் ஸ்ரீ ஸூக்திகளை அநுபவிக்கவும் காரணமான) பாக்ய விசேஷத்தால்; மேதினியில் இருக்கின்றோம்—இக்கர்மபூமியில் இன்றும் உயிர் தரித்திருக்கின்றோம்.* □

बलात्—பலத்தினால்; आकर्षद्भिः—இழுக்கிற; बहुभिः—அநேகங்களான; अपराधैः—குற்றங்களினால்; विहितया—செய்யப்பட்ட; परावृत्त्या—திரும்புவதினால் (=பகவானை விட்டுத் திரும்பிப் போவதனால்); नित्यं—எப்பொழுதும் भव-जलधि-पङ्के—ஸம்ஸாரமாகிற கடலின் சேற்றில்; निपततां—விழுந்து கொண்டிக்கிற நமக்கு; भगवदनुकम्पैक-वपुषा—பகவானுடைய க்ருபை ஒன்றையே ஸ்வரூபமாக

உடைய; प्रथिम्ना—மஹிமையினால்; संपन्ना—நிறைந்திருக்கிற (அதாவது, பகவானுடைய க்ருபையே இதற்கு வலிமையை அளிப்பதினால் இது ஒருநாளும் அழியாதது என்றபடி); इयं—இந்த; प्रतीची—(மேற்கு முகமாய்ப் போகிற) ஸம்ஸாரமார்க்கத்திற்கு விரோதமான வழியில் போகிற; परमपद-सोपान-पदवी — ஸ்ரீ பரமபத ஸோபாநத்தின் மார்க்கம்; दृष्टा—பார்க்கப்பட்டது (=ப்ரமாணங்களினால் அறியப்பட்டது).

त्रय्यन्त-गुरुः—ஸ்ரீமத் வேதாந்தாசார்யர் என்கிற விருது பெற்ற; श्रीमद्वेङ्कटनाथः—ஸ்ரீமானான வேங்கடநாதன் என்னும் (இந்த) ஆசார்யன்; इदं—இந்த; स्वभाव-चित्रं—இயற்கையிலேயே விசித்ரமான (அல்லது, தம்முடைய திருவுள்ளத்தில் எழுதப்பட்ட சித்ரமாகிய); सुस्थं—உறுதியாய் இருக்கிற; नव-पर्वयुतं—ஒன்பது படிகளை உடையதான; परमपद-हर्म्य-सोपानं—பரமபதமாகிற மெத்தைக்கு (=மாடிக்கு)ப் படியை; व्यतनुत—செய்தருளினார்.

இப்படி ஸ்ரீ பரமபத ஸோபாநத்தின் கீழ்க்குறிப்புக்கள முற்றும்.



# பிற்சேர்க்கை—A

## (A—1)—336 : திருப்பாணாழ்வார் வைபவம்

கார்த்திகை மாதத்தில் ரோஹிணி நக்ஷத்திரத்தில் சோழ நாட்டில் உறையூர் என்னும் திவ்ய தேசத்தில்,ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவின் அம்சமாய் செந்நெற்பயிர்க் கதிரில் அயோநிஜராய் அவதரித்தவர் திருப்பாணாழ்வார். பஞ்சம ஜாதியில் பாணர் குலத்தைச் சார்ந்த ஒருவரால் எடுத்து வளர்க்கப்பட்டவர். வளரும் குலத்திற்கு ஏற்ப பாண் எனப்படும் யாழில் பாடல்களைப் பாடவல்லமை பெற்ருர். திருவரங்கப் பெருமானிடம் ஈடுபட்ட இவர் ''தாழ்ந்த ஜாதியில் பிறந்த நம் காலால் பூலோக வைகுண்டத்தை தீண்டலாகாது'' எனக் கருதி, காவிரியின் தென் கரையிலேயே கோயிலுக்கு எதிராக நின்று தினந்தோறும் பெரியபெருமாளைப் பாடி உகப்பித்து வந்தார்.

கண்களை மூடிக் கொண்டு மெய்மறந்து பெரிய பெருமாளை இவர் ஒரு நாள் பாடிக் கொண்டிருக்கையில், பெருமாளுக்குத் திருமஞ்சன தீர்த்தம் எடுத்துச் செல்ல அங்கு வந்த லோக ஸாரங்க முனிவர் இவரைக் கண்டு விலகச் சொல்ல, கானத்தில் ஆழ்ந்திருந்த ஆழ்வாருக்கு அச்சொல் காதில் படாதிருக்க, முனிவரும் ஒரு கல்லை எடுத்து வீசி எறிய, அக்கல் ஆழ்வார் முகத்தில் பட்டு இரத்தம் வர, ஆழ்வாரும் கண்களை விழித்துப் பார்த்து ''பாகவதாபசாரப் பட்டோமே'' என்று கலங்கி விலகிச் செல்ல, முனிவரும் திருமஞ்சனம் எடுத்துக் கொண்டு ஸந்நிதிக்குச் சென்ருர். பெரிய பெருமாளின் முகத்தில் இரத்தம் கசிவதைக் கண்ட முனிவர் மிகவும் கலங்கி, 'ஆழ்வாரிடம் அபசாரப்பட்டதின் விளைவே இது' என்று நினைத்து எம்பெருமான் திருவடிகளில் விழுந்து மன்னிப்புக் கோரினுர். அன்று இரவு பெரிய பெருமாள் முனிவர் கனவில் தோன்றி ''ஆழ்வாரிடம் அபராதக்ஷமாபணம் செய்து கொண்டு அவரை விடியற்காலையில் என்னிடம் கொண்டு வந்து சேரும்'' என்று நியமித்தருளினுர். அவ்வாறே முனிவரும் ஆழ்வாரிடம் எம்பெருமான் நியமனத்தை விண்ணப்பிக்க, ''திருவரங்கப் பெருநகரை அடியேன் எப்படி மிதிப்பேன்?'' என்று ஆழ்வார் தயங்க, முனிவரும் ''அப்படியாளுல் அடியேனுடைய தோளின் மேலே எழுந்தருளும்'' என்று கூற, ஆழ்வாரும் பகவத் பாகவத நியமனத்தைத் தட்டமாட்டாமல் அத்யந்த பரதந்த்ர

ராய் இசைந்து நிற்க, முனிவரும் ஆழ்வாரைத் தம் தோளின் மீது எழுந்தருளிப் பண்ணிக் கொண்டு திருக்கோயிலில் புகுந்து பெரிய பெருமாளுக்கு எதிரில் நிற்க ஆழ்வாரும் அவ்வெம்பெருமானைத் திருவடி முதல் திருமுடிவரை ஸேவித்து அநுபவிப்பவராய், அவ்வநுபவ பரீவாஹமாக 'அமலனாதி பிரான்' என்று தொடங்கித் தமது அநுபவநிலைகளைப் பத்துப் பாட்டுக்களால் வெளியிட்டு, ''அண்டர் கோன் அணியரங்கன் என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே'' என்று முடித்தருள இவர் திருவுள்ளப் படி எம்பெருமானும் இவரைத் தன்னிடம் லயிக்க வைத்தார்.

## (A—2)—344 : குறும்பறுத்த நம்பி வரலாறு

இவர் குயவர் வகுப்பில் பிறந்த ஒரு பக்தர். குலம், கல்வி, ஐச்வர்யம் என்றவற்றால் வரும் கர்வங்களையும் (முக்குறும்புகளை) நீக்கினவராதலின் குறும்பறுத்தநம்பி என்று வழங்கப்பட்டார். மண்ணாலே திருவேங்கடமுடையானுக்குத் திருமேனி ஏற்படுத்தி, அவருக்கு அடிமை செய்துகொண்டிருந்தார் இவர். தினமும் தன் தொழிலான மண்பாண்டங்கள் செய்வது முடியுமளவில், கையில் ஒட்டிய மண்ணைத் திரட்டி, ஒரு புஷ்பமாகச் செய்து, அப்பெருமாள் திருமுடியில் அதைப் பரமபக்தியுடன் சாத்தி வந்தார். அக்காலத்தில் ஒரு அரசகுமாரன் ஸ்வர்ண புஷ்பங்களால் மாலை செய்து திருவேங்கடமுடையானுக்குச் சாத்துவித்தான். அவன் முக்குறும்பு உடையவனாகையால், அது திருமுடியில் தங்கவில்லை. ஆவேச முகத்தாலே ''குறும்பறுத்தநம்பி இடும் பூ நமக்கு உண்டு'' என்று நியமனமாயிற்று. குறும்பறுத்தநம்பி தன் ஜாதி-வ்ருத்த-நிகர்ஷத்தைப் பாராதே திருமுடிக்குப் பூ இட்டார் என்னும் வரலாறு இங்கு குறிப்பிடப்பட்டது. (காமம், வெகுளி, மயக்கம் என்பவைகளையும் முக்குறும்பு என்பர்.)

# பிற்சேர்க்கை – B

## (B—1)—24 : நாற்பது ஸம்ஸ்காரங்கள்

ஒன்றை மேம்படுத்துவதற்காகச் செய்வது ஸம்ஸ்காரம் எனப்படும். வெகு நாட்களாகப் பயன்படுத்தாமல் களிம்பு முதலியவற்றுடன் இருக்கும் பாத்திரத்தை புளி, மண் இவைகளைக்கொண்டு சுத்திசெய்து பளபளப்பாகச் செய்வதும் ஒருவித ஸம்ஸ்காரமே. பிறவி எடுத்த ஒருவனை இருபிறப்பாளனாக ஆக்குவது ஸம்ஸ்காரங்களே. 'ஸம்ஸ்காராத் உச்யதே த்விஜ:' என்பர்.

ஸூத்ரகாரர்கள் ஸம்ஸ்காரங்கள் நாற்பது எனக் கணக்கிட்டிருக்கிறார்கள். அவையாவன—கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம், ஜாதகர்ம, நாமகரணம், அன்னப்ராசனம், சௌளம், உபநயனம், நான்கு வேத வ்ரதங்கள், ஸமாவர்த்தனம், விவாஹம், பஞ்ச மஹாயஜ்ஞங்கள், ஏழு பாகயஜ்ஞங்கள், ஏழு ஹவிர் யஜ்ஞங்கள், ஏழு ஸோம ஸம்ஸ்தைகள்.

இவற்றில் முதல் மூன்றும் பிறக்கப்போகும் குழந்தைக்காக தகப்பனார் செய்ய வேண்டியவை. குழந்தை பிறந்த பின்பு அவரே ஜாதகர்ம-நாமகரண-அன்ன ப்ராசன-சௌள-உபநயனங்களைச் செய்து வைப்பர். உபநயனமானவன் ப்ரஹ்மசாரி எனப்படுகிறான். இவன் நான்கு வேத வ்ரதங்களையும் ஸமாவர்த்தனத்தையும் செய்து முடித்து, விவாஹம் செய்து கொள்ள வேண்டும். அப்போது அவன் க்ருஹஸ்தன் ஆகிறான். இவன பத்நியுடன் சேர்ந்து பஞ்ச மஹாயஜ்ஞங்களையும், பாக-ஹவிர்-யஜ்ஞங்களையும், ஸோமஸம்ஸ்தைகளையும் செய்யவேண்டும். (பிதா செய்ய வேண்டியவை 8. ப்ரஹ்மசாரி செய்ய வேண்டியவை 6. க்ருஹஸ்தன் செய்யவேண்டியவை 26.) இந்த 40 ஸம்ஸ்காரங்களைப் பற்றி சுருக்கமாகக் கூறுவோம்.

1. **கர்ப்பாதானம்:** ஸ்த்ரீகள் ருதுவான தினம் முதல் 16 நாட்கள் ருதுகாலம் எனப்படும். இக்காலத்தில் தோஷமில்லாத நாட்களில் குற்றமற்ற வேளையில் மகிழ்ச்சியுடன் மனைவியோடு சேருவது கர்ப்பாதானம் எனப்படும். இதனால் ஆயுள், பலம், தேஜஸ் முதலியவைகளுடன் கூடிய ஸந்தானம் உண்டாகும்.

2. **பும்ஸவனம்:** கர்ப்பம் தரித்தபின் ஆண் குழந்தையாகப் பிறக்கவேண்டும் என்று ப்ரார்த்தித்துச் செய்வது. கர்ப்பம் அசைவதற்கு முன் செய்ய வேண்டிய இதனை ஸீமந்தத்துடனும் செய்யலாம் என்று விதி இருப்பதால் தற்காலத்தில் ஸீமந்தத்தோடு சேர்த்து செய்யப்படுகிறது; இது தாய்க்கு என்றும், குழந்தைக்கு என்றும், இருவருக்கும் என்றும் ரிஷிகள் பலவிதமாக அபிப்ராயப்பட்டிருக்கிறார்கள். ஹோமங்களைச் செய்த பின் காய்களுடன் கூடிய ஆலங்கொழுந்தை பசும்பால் விட்டு அரைத்து அதன் ரஸத்தைப் புது வஸ்த்ரத்தால் மனைவியின் வலது மூக்கில் கணவன் பிழிய வேண்டும் பத்நீ மேற்கு முகமாக உட்கார்ந்து இருக்க பர்த்தா கிழக்கு முகமாக நின்று கொண்டு, ‘புத்ரனுக்காக மூக்கில் பிழியப் பட்டாய்’ என்ற மந்திரத்தைச் சொல்லிப் பிழியவேண்டும்.

3. ஸீமந்தோந்நயனம்: கர்ப்பிணிப் பெண்ணின் தலை மயிரை வகுடாகப் பிரிப்பதால் இப்பெயர் வந்தது. முள்ளம் பன்றி முள், தர்ப்பம், பேத்தி இலைக்கொத்து இவைகளால் வகுடு எடுக்க வேண்டும். பிறகு கர்ப்பிணியை வீணுகானம் கேட்கும் படிசெய்யவேண்டும்.

4. ஜாத கர்ம: குழந்தை பிறந்தஉடன் இரவானுலும் பகலானுலும் செய்ய வேண்டியது. குழந்தையின் தகப்பன் குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்து தானம் முதலியவைகளைச் செய்ய வேண்டும். மந்த்ர பூர்வமாக குழந்தையைத் தொட்டு தன் மடியில்இருத்தி, தடவிக்கொடுத்து, தாய்ப்பாலுண்ணச் செய்ய வேண்டும். பூமியில் விடவேண்டும். குழந்தையின் ரக்ஷணத்திற்காக வெண் கடுகும் அரிசித்தவிடும் கலந்து ஹோமம் செய்யவேண்டும். குழந்தை பிறந்த 11வது நாள் புண்யாஹவாசனத்தன்று நாமகரணத்திற்கு முன்பாவது செய்யலாம்.

5. நாமகரணம்: ப்ராம்ஹணர்களுக்கு 11வது நாளிலும், க்ஷத்திரியர்களுக்கு 12வது நாளிலும், வைச்யர்களுக்கு 16வது நாளிலும் செய்யவேண்டியது. பகவான் அல்லது தன் முன்னோர்களின் அழகான பெயரை வைக்கவேண்டும். புருஷர்களுக்கு படையான எழுத்துள்ள பெயர்களையும், பெண்களுக்கு நெடிலில் இரட்டைப் முடியும் (லக்ஷ்மீ, ஸீதா) போன்ற பெயர்களையும் இடவேண்டும். பிறகு செய்யும் எல்லா ஸம்ஸ்காரங்களிலும் அந்தக் குழந்தைக்கு இப்பெயரையே உபயோகிக்கவேண்டும். ப்ராஹ்மணர்கள் சர்மா என்பதையும், க்ஷத்ரியர்கள் வர்மா என்பதையும், வைச்யர்கள் குப்தா என்பதையும் பெயருடன் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

6. அன்னப்ராசனம்: குழந்தை பிறந்த ஆருவது மாதத்தில் மந்த்ர பூர்வகமாக குழந்தைக்கு அன்னம் ஊட்டுவது.

7. சௌளம்: இது சூடாகரணம் என்றும் சொல்லப்படுவது; குழந்தைக்கு சிகை வைப்பது. வைதிக கர்மாக்களுக்கு சிகை முக்கிய அங்கம். சிகை இல்லாமல் செய்யும் கர்மாக்கள் பயனற்றவை என்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. (சூடா=சிகை)

8. உபநயனம்: ஒருவனை இருபிறப்பாளனுகச் செய்வது. கர்ப்ப காலத்தையும் சேர்த்துக் கணக்கிட்டு எட்டாவது வயதில் ப்ராஹ்மணனுக்கும், பதினேராவது வயதில் க்ஷத்ரியனுக்கும், பனிரெண்டாவது வயதில் வைச்யனுக்கும் செய்யவேண்டியது.

உபநயே (அழைத்துச் செல்லுகிறேன்) என்று வேதம் கூறுகிறது. அதாவது, வேதம் ஓதுவிக்கும் குருவிடமோ, காயத்ரீயாகிற ப்ரஹ்மத்திடமோ மாணவனை அழைத்துச் செல்லும் இந்த ஸம்ஸ்காரம் உபநயநம் எனப்படுகிறது. உபநயநமானவன் மூன்று காலங்களிலும் ஸந்த்யாவந்தனமும், காலை மாலைகளில் 'ஸமிதாதானமும்' செய்து வரவேண்டும். ஒற்றை யஜ்ஞோப வீதம், மான்தோல், முஞ்சம் புல்லாலான மேகலை, தண்டம் இவைகளைத் தரிக்கவேண்டும். பிக்ஷை எடுத்து சாப்பிடவேண்டும். குரு குலத்தில் ஆசாரியருக்குப் பணிவிடைகள் செய்து வேதமோத வேண்டும்.

9—12. வேதவ்ரதங்கள் நான்கு : க்ருஷ்ண யஜுர் வேதிகளுக்கு ஆபஸ்தம்பர் கூறியபடி இங்கு சொல்லப்படுகிறது. ப்ரஜாபதி, ஸோமன், அக்நி, விச்வேதேவர்கள் என்ற நால்வர் காண்டரிஷிகள். அவரவர் காண்டத்தை அத்யயனம் செய்வதற்கு முன்னும் பின்னும் இவர்களை ஆராதிப்பது வேத வ்ரதம் எனப்படுகிறது. நான்கு ரிஷிகளைக் குறித்து ஆரம்பத்திலும் முடிவிலும் செய்யப்படுவதால் இதை அஷ்டவ்ரதம் என்றும் சொல்லுகிறார்கள். தற்சமயம் ஸமாவர்த்தனத்திற்கு முன்னால் செய்வது என்பது வழக்கத்திலிருக்கிறது.

13. ஸமாவர்த்தனம் : வேதவ்ரதங்கள் முடிந்த பிறகு குரு தக்ஷிணை கொடுத்து விட்டு அவர் அநுமதி பெற்று விவாஹம் செய்து கொள்ளவேண்டும். விவாஹத்திற்கு முன் தினமோ, அன்றோ செய்யவேண்டியது ஸமாவர்த்தனம் என்பது. குருகுலத்திலிருந்து திரும்பி வருதல் என்று இதன் பொருள். ஸமாவர்த்தனம் செய்து கொண்டவன் ப்ரஹ்மசர்யாச்ரமத்தைத் துறந்துவிடுகிறான். விவாஹமாகாமல் அவன் க்ருஹஸ்தனாக ஆவதில்லை. நான்கு ஆச்ரமங்களில் ஏதாவது ஒன்றில் இருப்பது கட்டாயமாதலால் ஸமாவர்த்தனம் ஆன உடனேயே விவாஹத்தைச் செய்து கொள்ளவேண்டும். இதில் ஸ்நானம் முக்யமானதால் இதை ஸ்நானம் என்றும், இதைச் செய்தவனை ஸ்நாதகன் என்றும் கூறுவர். "தூஷ்ணீம் வா" (மந்த்ரமில்லாமலும்) செய்யலாம் என்று ஆபஸ்தம்பர் கூறியிருப்பதால் தற்காலத்தில் பெரும்பாலும் அமந்த்ரகமாகவே நடக்கிறது.

14. விவாஹம் : ஒருவன் பிறக்கும்போதே ரிஷிகளுக்கும், தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் கடன் பட்டிருக்கிறான் என்று சாஸ்த்ரம் கூறுகிறது. அத்யயனம் செய்வதன் மூலம் ரிஷி

களுக்குப் பட்டிருக்கும் கடன் அடைந்துவிடுகிறது. யஜ்ஞங்களால் தேவர்கள் கடனும், நல்ல ஸந்ததியைப் பெறுவதால் பித்ருக்கள் கடனும் அடைகின்றன யஜ்ஞங்களைச் செய்யவும், நன்மக்களைப் பெறவும் விவாஹம் அவசியமாகிறது. அதனால்தான் "தர்ம ப்ரஜார்த்தம் வ்ருணீமஹே" (யஜ்ஞம் முதலிய தர்மங்களைச் செய்யவும், தர்மமாக ஸந்ததி உண்டாகவும் கன்னிகையை வரிக்கிறோம்) என்று விவாஹத்தில் முதலில் கூறுகிறார்கள்.

சாஸ்த்ரங்களில் எட்டுவிதமான விவாஹங்கள் கூறப்பட்டுள்ளன. அவை ப்ராஹ்மம், தைவம், ஆர்ஷம், ப்ராஜாபத்யம், ஆஸுரம், காந்தர்வம், ராக்ஷஸம், பைசாசம் என்பன. முதல் நான்கும் ச்லாக்யமானவை; மற்றவை நீசமானவை. பைசாசம் அருவருக்கத் தக்கது. காந்தர்வமும் ராக்ஷஸமும் க்ஷத்ரியர்களுக்கே உரியவை. இவைகளைப் பற்றி சுருக்கமாகக் கூறுவோம்.

(i) ப்ராஹ்மம் : விவாஹங்களுள் சிறந்தது. வேதங்களை நன்கு கற்று, நல்ல குணங்களையுடைய வரனைப் பூஜித்து, அலங்கரித்த கந்யகையை தானம் செய்வது ப்ராஹ்ம விவாஹமாகும். இவ்வாறு கந்யாதானம் செய்பவனும், அவனுக்கு முன்னும் பின்னும் பத்து தலைமுறையினரும் ஆக 21 தலைமுறையினர் நற்கதியடைவர் என சாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

(ii) தைவம் : தான் செய்யும் யஜ்ஞத்தில் ரித்விக்காக உள்ள ஒருவருக்கு அலங்கரித்து கந்யகையை தக்ஷிணையாகக் கொடுத்து விவாஹம் செய்து வைப்பது தைவம் எனப்படும். இவ்விவாஹத்தால் பிறக்கும் புத்திரன் 15 தலைமுறையினரை நற்கதியடையச் செய்வான்.

(iii) ஆர்ஷம் : வரனிடமிருந்து ஒன்று அல்லது இரண்டு பசுக்களையும் காளையையும் பெற்றுக் கொண்டு விதிப்படி விவாஹம் செய்து கொடுப்பது ஆர்ஷம் என்று அழைக்கப்படுகிறது. இவ்விவாஹத்தால் பிறக்கும் புத்திரன் 7 தலைமுறையினரை பாபத்திலிருந்து விடுவிப்பான்.

(iv) ப்ராஜாபத்யம் : 'நீங்கள் இருவரும் சேர்ந்து தர்மத்தைச் செய்யுங்கள்' எனக் கூறி விவாஹம் செய்து கொடுப்பது ப்ராஜாபத்யம் எனப்படும். இவ்விவாஹத்தால் பிறக்கும் புத்திரன் 13 தலைமுறையினரை பாபத்திலிருந்து விடுவிப்பான்,

மேற்கூறிய நான்கு வகை விவாஹங்களால் பிறக்கும் புத்திரர்கள் ப்ரஹ்மவர்சஸ்ஸுடனும், நீண்ட-ஆயுள்-ஆரோக்யம் செல்வம் இவற்றை உடையவர்களாயும் இருப்பர்.

(v) ஆஸுரம்: கந்யகைக்கோ, அவளைச் சார்ந்தவர்களுக்கோ மிகுதியாகப் பணத்தைத் தந்து விவாஹம் செய்து கொள்வது ஆஸுரம் எனப்படும். இதனால் பிறக்கும் புத்திரன் க்ரூர குணமுள்ளவனாகவும், பொய்யனாகவும், மற்றவர் தூற்றும் படியும் இருப்பன்.

(vi) காந்தர்வம்; பெற்றோர் அறியாமல், தம் விருப்பத்தால் ஆணும் பெண்ணும் ஒன்று கூடி பிறகு விவாஹம் செய்து கொள்ளுதல் காந்தர்வம் எனப்படும். இதில் காமமே விஞ்சியிருப்பதால் இது காந்தர்வம் எனப்பட்டது. க்ஷத்திரியர் முதலானோரே இதற்கு உரியர்.

(vii) ராக்ஷஸம் : ஒரு பெண்ணை அடித்தும் உதைத்தும் துன்புறுத்தி பலாத்காரமாக அவளைத் தூக்கி வந்து செய்து கொள்ளும் விவாஹம் ராக்ஷஸம் எனப்படும்.

(viii) பைசாசம்: ஒரு பெண் ஏமாந்த போதோ, தூங்கும் போதோ, புத்திஸ்வாதீனம் இல்லாத போதோ அவளைக் கூடி பிறகு விவாஹம் செய்து கொள்வது பைசாசம் எனப்படும். இது மிகவும் கீழ்த் தரமானது.

க்ருஹஸ்தாச்ரமத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் காலை மாலை இருவேளைகளிலும் ஔபாஸனம் செய்யவேண்டும். ஔபாஸனம் முதலில் ஆரம்பிக்கும் பொழுது செய்துகொண்ட ஸங்கல்பத்தின் படி அரிசியினாலோ, யவம் என்ற தான்யத்தாலோ இதைச்செய்ய வேண்டும். காலையில் சூர்யனுக்கும் மாலையில் அக்நிக்கும் ஒவ்வொரு ஆஹுதி, தவிர இருவேளைகளிலும் ஸ்விஷ்டக்ருத் என்ற அக்நிக்கு ஒரு ஆஹுதி செய்ய வேண்டும். ஏதாவது காரணத்தால் ஔபாஸனம் விட்டுப்போனால் மறுபடி ஆரம்பிக்கும் போது அக்நி-ஸந்தானம் செய்து கொள்ளவேண்டும். தொடர்ந்து ஔபாஸனம் செய்பவர்கள் பௌர்ணமிக்கும் அமாவாசைக்கும் அடுத்த தினமான ப்ரதமையில் ஸ்தாலீபாகம் செய்ய வேண்டும். ஸ்தாலீபாகம் என்பது ஔபாஸனம் பண்ணின அக்நியிலேயே கொஞ்சம் அன்னத்தைப் பண்ணி அதனால் ஆஹுதி செய்வது, ப்ரஹ்மசாரிக்கு ஸமிதாதானம் போல் க்ருஹஸ்தன் அவசியம் செய்யவேண்டியது இது.

**15-19. பஞ்ச மஹாயஜ்ஞங்கள்:** தேவ, பித்ரு, மநுஷ்ய, பூத, ப்ரஹ்மயஜ்ஞங்கள் பஞ்சமஹாயஜ்ஞங்கள் எனப்படுகின்றன. இதையே வைச்வதேவம் என்பர். இதை அன்னத்தினுல் செய்ய வேண்டும். வைச்வதேவம் செய்வதால் அன்னத்திற்கு சுத்தி உண்டாகிறது. வைச்வதேவம் பண்ணுத க்ருஹங்களில் ஸந்யாஸிகள் பிக்ஷை ஏற்கமாட்டார்கள்; பெரியோர்கள் போஜனம் செய்ய மாட்டார்கள். அன்னத்தை வைக்கும் முறை இரண்டு வகையாக வழக்கிலிருக்கிறது; ஒன்று வ்யஜனாகாரம் (விசிறி போன்ற வடிவம்); மற்ருென்று சக்ராகாரம் (சக்கரம் போன்ற வடிவம்). தங்களுக்கு எப்படி உபதேசமோ அதை மாற்ருமல் அனுஷ்டிக்க வேண்டும். பஞ்ச மஹாயஜ்ஞங்களில் ஒன்ருன ப்ரஹ்மயஜ்ஞம் ப்ரஹ்மசாரிக்கும் உண்டு. தான் ஓதின வேதபாகங்களை தினமும் ஒரு ப்ரச்னமோ, அநுவாகமோ சொல்லுவதே ப்ரஹ்மயஜ்ஞம். அத்யயனம் பண்ணுதவர்கள் புருஷஸூக்தத்தையாவது சொல்ல வேண்டும். அதுவும் தெரியாதவர் 10 தடவை காயத்ரியை யாவது சொல்ல வேண்டும். வைச்வதேவம் க்ருஹஸ்தனுக்கே ஏற்பட்டது. ப்ரஹ்மசாரிகளுக்கு தேவ, பித்ரு, மநுஷ்ய, பூதயஜ்ஞங்கள் கிடையாது. ஸந்யாஸிகளுக்கும் விதுரர் (மனைவியில்லாதவர்) களுக்கும் வைச்வதேவம் கிடையாது. அன்னத்தினுல் வைச்வதேவம் செய்ய முடியாதவர் ஜலத்தினுலும் செய்யலாம்.

இதுவரை சொன்ன 19 ஸம்ஸ்காரங்களில் கர்ப்பாதனம், பும்ஸவனம், ஸீமந்தம், ஜாதகர்ம, நாமகரண, அன்னப்ராசன, சௌள, உபநயனங்கள் ஆகிய எட்டும் பெற்ருேர் செய்வன. ப்ராஜாபத்ய, ஸௌம்ய, ஆக்நேய, வைச்வதேவ வ்ரதங்கள், ஸ்நானம், விவாஹம், பஞ்ச மஹாயஜ்ஞங்கள் ஆகிய 11-ம் தானே செய்யத்தக்கன. இவை தவிர ஏழு பாகயஜ்ஞங்கள், ஏழு ஹவிர் யஜ்ஞங்கள், ஏழு ஸோமயஜ்ஞங்கள் ஆகியவை க்ருஹஸ்தன் செய்யத் தக்கன.

**ஏழு பாகயஜ்ஞங்கள் (20)-(26):** அஷ்டகா, ஸ்தாலீபாகம், பார்வணம், ச்ராவணீ, ஆக்ரஹாயணீ, சைத்ரீ, ஆச்வயுஜீ என்பவை பாகயஜ்ஞங்கள் எனப்படுகின்றன. இவைப் பற்றி சுருக்கமாகக் கூறுவோம்.

**20. அஷ்டகா:** மாக மாஸத்தில் (தை அமாவாசைக்குப் பிறகு மாசி அமாவாசை வரை உள்ள காலம் மாகமாஸம் எனப்படும்.) க்ருஷ்ணபக்ஷ அஷ்டமியில் செய்யவேண்டியது. எட்டு ப்ராஹ்மணர்களை வரித்து பார்வண ச்ரார்த்தம் போல் செய்ய வேண்டும். ஆனுல் பெரும்பாலானவர்கள் அஷ்டகா

ச்ராரத்த ப்ரதிநிதியாக தர்ப்பணம் செய்துவருகிறார்கள். அஷ்டகைக்கு மறுநாள் நவமியன்று செய்யவேண்டியது அந்வஷ்டகா சிரார்த்தம். இதையும் தற்காலத்தில் தர்ப்பண மாகவே பெரும்பாலனோர் செய்து வருகின்றனர். அந்வஷ்ட கைக்கு பதிலாக தத்யஞ்சலி ஹோமம் செய்வதும் உண்டு. இரு கைகளாலும் தயிரை எடுத்து அஷ்டகா தேவதைக்கும் ஸ்விஷ்டக்ருத்துக்கும் ஹோமம் செய்வது தத்யஞ்ஜலி ஹோமம் எனப்படுகிறது.

21. ஸ்தாலீபாகம்: ஔபாஸனம் பற்றிக் கூறுகையில் ஸ்தாலீபாகம் பற்றி ஏற்கனவே கூறப்பட்டுள்ளது.

22. பார்வணம்—இதற்கு மாஸி ச்ராரத்தம் என்றும் பெயர். க்ருஷ்ண பக்ஷத்தில் ஒவ்வொரு மாதமும் செய்ய வேண்டியது. பெரும்பாலானவர்கள் இதனை அன்ன ச்ராரத்தமாகச் செய்யா மல் தர்ப்பணமாகச் செய்து வருகின்றனர்.

23. ச்ராவணீ: ஆவணி மாதத்துப் பௌர்ணமியில் செய்ய வேண்டியது. இதனை ஸர்ப்பபலி என்றும் சொல்வார்கள். ஆவணி பௌர்ணமி ராத்ரியில் சரு (அன்னம்)வாலும் நெய்யா லும் ஹோமம் பண்ணி, பிறகு இருகைகளாலும் பலாச புஷ்பங் களை ஹோமம் செய்ய வேண்டும். பாம்புப் புற்றின் அருகிலோ அல்லது வேறு சுத்தமான இடத்திலோ அரிசிமாவினால் கோலம் போல் போட்டு ஸர்ப்ப மந்த்ரங்களால் உபஸ்தானம் செய்ய வேண்டும். இவ்வாறு மார்கழி மாதப் பௌர்ணமி வரையில் ப்ரதிதினமும் ராத்ரியில் செய்து வரவேண்டும்.

24. ஆக்ரஹாயணீ: ச்ராவண பௌர்ணமியில் ஆரம்பித்த ஸர்ப்பபலியை மார்கழி பௌர்ணமியில் முடிப்பது ஆக்ரஹாயணீ ஆகும். ஆவணி பௌர்ணமியில் செய்தது போலவே ஹோமங் களைச் செய்து பூர்த்தி செய்ய வேண்டும்.

25. சைத்ரீ: சித்திரை மாதத்தில் செய்ய வேண்டியது. இதற்கு ஈசானபலி என்றும் பெயர். நான்கு தெருக்கள் கூடு மிடத்தில் ஈசானன் என்ற தேவதையை ஆராதிப்பதால் இதற்கு இப்பெயர் வந்தது.

26. ஆச்வயுஜீ: கார்த்திகை மாதத்துப் பௌர்ணமியில் செய்ய வேண்டியது. இதனை ஆக்ரயண ஸ்தாலீபாகம் என்றும் சொல்லுவார்கள். புதிதாக விளைந்த கார் நெல்லைக்குத்தி அந்த

அரிசியைக் கொண்டு சரு செய்து ஹோமம் செய்கிறார்கள். ச்யாமாகம் (தினை) என்ற தான்யத்தைக் கொண்டு இதை செய்யச் சொல்லி இருக்கிறது.

மேற் சொன்ன ஏழு யஜ்ஞங்களிலும் பாகம் (தளிகை) செய்த ஹவிஸ்ஸைப் பயன்படுத்துவதால் இவை பாகயஜ்ஞங்கள் எனப்பட்டன.

**ஏழு ஹவிர்யஜ்ஞங்கள் (27)-(33):**

இனி கூறப்போகும் ஹவிர்யஜ்ஞங்களும் ஸோமயஜ்ஞங்களும் வெகு சிலராலேயே அநுஷ்டிக்கப்படுகின்றன. இவற்றைச் செய்ய ரித்விக்குகளும் அதிக த்ரவ்யமும் தேவை. ஹவிர்யஜ்ஞங்களாவன—அக்ந்யாதானம், அக்நிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், நிரூட பசு பந்தம், ஸௌத்ராமணி என்பன.

27. **அக்ந்யாதானம்:** அரணி மந்தனம் பண்ணி அக்நியை உண்டாக்கி, அவ்வக்நிக்கு உரிய ஸம்ஸ்காரங்களைச் செய்து, கார்ஹபத்யம், ஆஹவனீயம், தக்ஷிணாக்நி என்ற மூன்று அக்நிகளை உண்டாக்கிக் கொள்வது அக்ந்யாதானம் எனப்படுகிறது.

28. **அக்நிஹோத்ரம்:** ஆதானம் பண்ணி ஸுரக்ஷிதமாக வைத்துள்ள அக்நிகளில் காலை மாலை இருவேளைகளிலும் அரிசி அல்லது யவத்தால் ஹோமம் செய்வது. ஔபாஸனம் போன்றது இது. இவ்வாறு அக்நி ஹோத்ரம் செய்பவரை அக்நி ஹோத்ரி என்றழைப்பர். அக்நிஹோத்ரம் செய்யும் இடத்தில் யஜமானனுடைய பத்நீ அவசியம் இருக்கவேண்டும். யஜமானன் வெளியூர் சென்றாலும் பத்நீ அங்கிருந்தால் யஜமானனுடைய புத்ரனோ, சிஷ்யனோ அவனுக்காக அக்நிஹோத்ரத்தைச் செய்யலாம். பத்நீ வெளியூர் சென்றுவிட்டாலோ, இறந்துபோனாலோ அக்நிஹோத்ரம் செய்யமுடியாது.

29. **தர்சபூர்ணமாசம்:** இரண்டு பக்ஷங்களிலும் ப்ரதமையில் செய்யப்படும் இஷ்டிகள். இரண்டு இஷ்டிகளும் சேர்ந்து தர்சபூர்ணமாஸம் என்ற ஒரே கர்மாவாகிறது. ஔபாஸனத்துக்கு ஸ்தாலீபாகம் போன்றது இது.

30. **ஆக்ரயணம்** இதுவும் ஒரு இஷ்டியே. சாமை என்ற தானியத்தைக் கொண்டு செய்ய வேண்டியது.

31. **சாதுர்மாஸ்யம்:** இது பல இஷ்டிகள் சேர்ந்த ஒரு கர்மா.

**32—33.** நிரூட பசுபந்தம்—ஸௌத்ராமணி: இவை இரண்டும் வருடத்தில் ஒருமுறை செய்ய வேண்டியவை. ஆதானம் பண்ணின அக்நிஹோத்ரிகளே மேற்கூறிய ஹவிர் யஜ்ஞங்களை செய்ய முடியும். வேதத்தில் கூறிய முறைப்படி செய்யப்படுவதால் ஹவிர் யஜ்ஞங்களும், ஸோமயஜ்ஞங்களும் ச்ரௌத கர்மாக்கள் எனப்படுகின்றன. கர்ப்பாதானம் முதல் பாகயஜ்ஞங்கள் அளவாகக் கூறப்பட்டவை க்ருஹ்ய ஸூத்ரங்களில் சொன்னபடி அநுஷ்டிக்கப்படுவதால் அவை க்ருஹ்ய அல்லது ஸ்மார்த்த கர்மாக்கள் எனப்படுகின்றன.

**33.** ஏழு ஸோமஸம்ஸ்தைகள் (34)-(40):

முறையாக ஆதானம் செய்தவன் செய்யக் கடவதான ஸோமயஜ்ஞங்கள் ஏழு. இவற்றில் ஸோமன் எனப்படும் கொடியைப் பிழிந்து அந்த சாற்றை (ரஸத்தை) ஹோமம் செய்வதால் இவை ஸோம யாகங்கள் எனப்பட்டன. இவற்றில் யஜமானனுக்கு உதவியாக ரித்விக்குகள் இருப்பர். அவர்கள் ப்ரஹ்ம கணம், அத்வர்யு கணம், ஹோத்ரு கணம், உத்காத்ரு கணம் என நான்கு வகைப்படுவர். ஹோதாவும் அவர் கணத்தைச் சேர்ந்தவர்களும் ரிக்வேத மந்த்ரங்களைக்கொண்டு தேவதைகளைத் துதிப்பர். உத்காத்ரு கணத்தைச் சேர்ந்தவர் ஸாமகானம் பண்ணி தேவதைகளைத் துதிப்பர். அத்வர்யுவும் அவரைச் சேர்ந்தவர்களும் ஹோமங்களைச் செய்வர். ப்ரஹ்மாவும் அவரைச் சேர்ந்தவர்களும் மேற்பார்வையிடுவர்.

ஸோம யாகங்கள் ஏழு. அவையாவன: அக்நிஷ்டோமம், அத்யக்நிஷ்டோமம், உக்த்யம், ஷோடசீ, வாஜபேயம், அதிராத்ரம், அப்தோர்யாமம் என்பன. இவை ஐந்து நாட்கள் செய்ய வேண்டியவை.

## (B—2)—30 : பகவத் க்ஷேத்ரங்களின் வகைகள்

அர்ச்சாரூபியாக எம்பெருமான் எழுந்தருளியுள்ள கோவில்கள் ஸ்வயம் - வ்யக்த்தம், ஸைத்தம் (=திவ்யம்), ஆர்ஷம், மாநுஷம், வைஷ்ணவம் என்று ஐந்து வகைப்படும். ஸ்ரீரங்கம், திருவேங்கடம், நைமிசாரணியம், வானமாமலை, சாளக்ராமம் ஸ்ரீ முஷ்ணம், புஷ்கரம், ஜகந்நாதபுரி என்பன ஸ்வயம் வ்யக்த்த க்ஷேத்ரங்கள் (=தானாகவே எம்பெருமான் விரும்பித் தோன்றிய இடங்கள்). தேவர்களின் தவத்திற்கு இரங்கி அருள்புரிய எம்பெருமான் தோன்றிய இடங்கள் ஸைத்தம் அல்லது திவ்யம் எனப்படும் (உ-ம், காஞ்சி). ரிஷிகளுடைய தவத்திற்கு இரங்கி

அவர்களுக்கு ப்ரத்யக்ஷமான தலங்கள் ஆர்ஷம் எனப்படும் [உ-ம் திருவிண்ணகர் (=உப்பிலி அப்பன் கோவில்), திருஅல்லிக்கேணி, திருநறையூர் முதலியன] பக்தர்களான அரசர்கள், பிரபுக்கள் கட்டும் கோயில்கள் மாநுஷம் எனப்படும். பரமைகாந்திகள் தங்களுடைய வழிபாட்டிற்கு ஏற்படுத்திய கோவில்கள் வைஷ்ணவம் எனப்படும்.

## (B—3)—33 : வ்ரத விசேஷம்

'ராகவம் சரணம் கத:' என்று விபீஷணாழ்வான் நால்வரோடு வந்து சக்ரவர்த்தித் திருமகனைச் சரணடைந்தான். சத்ரு தரப்பிலிருந்து வந்தவனை சேர்த்துக் கொள்ளக்கூடாது என ஸுக்ரீவாதிகள் வாதிட்ட பொழுது, "உன்னைச் சேர்ந்தவன்" என்று கூறி தன்னைச் சரணடைந்தவன் யாராயினும் அவனுக்கு அடைக்கலம் அளித்து துன்பத்தைப் போக்கி அபயம் அளிப்பதே தனது வ்ரதம் (கொள்கை) எனக்கூறி, 'வந்தவன் ராவணனேயினும் உடனே அழைத்து வா' என மஹாராஜருக்குக் கட்டளையிட்டார் இராமபிரான். (சரணமடைந்தவனைக் காப்பதே எம்பெருமானுடைய வ்ரதமாகும்).

## (B—4)—34 : குரு-ஆசார்யன் விளக்கம்

गुशब्दस्तु अन्धकारः स्यात् रुशब्दःतन्निरोधकः ।
अन्धकार - निरोधित्वात् गुरुरित्यभिधीयते ॥

என்றபடி அறியாமையாகிற இருளைப் போக்குகிறவர் குரு எனப்படுவர்.

आचिनोति हि शास्त्रार्थान् आचारे स्थापयत्यपि ।
स्वयमाचरते यस्मात् तस्मादाचार्य उच्यते ॥

என்பதற்கிணங்க வேதாதி சாஸ்த்ரங்களைத் தான் முதலில் கசடறக் கற்று, அதன்படி ஒழுகி, பிறரையும் அறிவுறுத்தித் திருத்துபவர் ஆசார்யன்.

## (B—5)—47 : அஸமஞ்ஜன் சரிதம்

[ராமா : பால. ஸர்-38; பாகவதம்: (9—8)] அயோத்தியை ஆண்ட ஸகரன் என்னும் அரசனுக்கு கேசினி, ஸுமதி என்னும் இரண்டு மனைவிகள் இருந்தனர். வெகு காலம் புத்திரனில்லாமல்

வருந்திய அவன் மனைவிகளுடன் இமயமலைச் சாரலில் ப்ருகுப் பிரஸ்ரவணம் எனனும் இடத்தில் புத்திரனுக்காகத் தவம் புரிந்தான. பிருகு முனிவர் அவன் தவத்தை மெச்சி அவன் மனைவிகளுள் ஒருத்திக்கு வம்சத்தை விருத்தி செய்யும் ஒரு புத்திரனும், மற்றொருத்திக்கு அறுபதாயிரம் புத்திரர்களும் அவர்கள் இஷ்டப்படி பிறப்பார்கள் என ஆசி வழங்கினார். கேசினிக்கு அவள் இஷ்டப்படி அஸமஞ்ஜன் என்ற ஒரு புத்திரன் பிறநதான். அறுபதாயிரம் புத்திரர்களை விரும்பிய ஸுமதிக்கு வட்டமான ஒரு மாமிசப் பிண்டம் பிறக்க, அதைப் பிளந்து பார்க்கையில் அறுபதாயிரம் புத்திரர்கள் வெளியில் வந்தார்கள். தாதிகள் அவர்களை நெய்க்குடங்களில் வைத்து வளர்க்க அவர்கள் யௌவனமடைந்து பல - பராக்கிரமங்களில் நிகரற்று விளங்கினர். அஸமஞ்சன் நகரத்திலுள்ள குழந்தைகளைப் பிடித்து ஸரயூஜலத்தில் போட்டு அவர்கள் முழுகும் பொழுது படும் துன்பங்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தான். இப்படி ஜனங்களுக்குக் கெடுதி செய்து ஸாதுக்களைத் துன்புறுத்தும் அந்தப் பாபியை ஸகரன் ராஜ்யத்திலிருந்து துரத்திவிட்டான்.

## (B—6)—48: ப்ரளயம்

[வி. பு. அம்சம் 6 - அத். 3, 4, 5; பாகவதம்: (12—4)] நித்ய ப்ரளயம், நைமித்திக ப்ரளயம், ப்ராக்ருத ப்ரளயம், ஆத்யந்திக ப்ரளயம் என்பவை ப்ரளயத்தின் வகைகள்.

(i) நித்யப்ரளயம் : தோன்றிய பொருள்களுக்கு அழிவுண்டு என்ற நியதியின்படி க்ஷணந்தோறும் உண்டாகும் அழிவுகள் நித்ய ப்ரளயம் ஆகும்.

(ii) நைமித்திக ப்ரளயம் : மனிதர்களின் ஒரு வருடம் தேவர்களுக்கு ஒரு நாள்; உத்தராயணம் தேவர்களுக்குப் பகல்; தக்ஷிணாயனம் இரவு. மனிதருடைய 360 வருடங்கள் தேவர்களுக்கு ஒரு வருடம். 12000 தேவமான வருடங்கள் ஒரு சதுர்யுகமாகும். இந்த 12000 வருடத்தில் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் முறையே 4000, 3000, 2000, 1000 வருடங்கள் அளவுள்ளன. இந்த யுகங்களின் ஸந்தி (இடைப்பகுதி) 2000 வருடங்களுள்ளது. இப்படி 1000 சதுர்யுகம் கொண்டது ப்ரஹ்மாவிற்குப் பகல்; அப்படியே இரவும். 1000 சதுர்யுகங்களை கல்பம் என்பர். ப்ரஹ்மாவின் பகல் உதய கல்பம் என்றும், இரவு க்ஷயகல்பம் என்றும் வழங்கப்படுகிறது. ப்ரஹ்

மாவின் ஒரு பகலில் 14 மநுக்களும், 14 இந்திரர்களும், 14 ஸப்த ரிஷிகளும் ஏற்படுகிறார்கள். ஒவ்வொரு மநுவின் காலமான மந்வந்த்ரம 71 சதுர்யுகம் கொண்டது. ப்ரஹ்மாவிற்கு ஏற்பட்ட அளவுப்படி அவன் ஆயுட்காலம் 100 வருடங்கள். இதற்குப் பரம் என்று பெயர். பிரமனின் பகலான ஒவ்வொரு கல்பத்தின் முடிவி லும் பாதாளம், பூமி, புவர்லோகம், ஸுவர்லோகம் ஆகிய உலகங்கள் ருத்ரரூபம் தரித்த எப்பெருமானால் அழிக்கப்பட்டு ஓயாமல் பெய்யும்மழையால் ஜலமயமாகி ஏகார்ணவம் ஆகிவிடும். எம்பெருமான் ஏகார்ணவத்தில் ஸ்ரீ வாஸுதேவன் என்னும் திரு நாமத்துடன் தம்மையே சிந்தித்த வண்ணம் ஒரு கல்பகாலம் திருக்கண் வளர்ந்தருள்வார். இவ்வுலகங்களில் உள்ள ஜீவர்கள் எம்பெருமானிடம் ஒன்றிவிடுவர்: மஹர்லோகத்திற்கு அழி வில்லையாலும் அங்குள்ளவர்கள் ஜநோ லோகத்திற்குப் போகிறார்கள். ஜநோலோகம், தபோலோகம், ஸத்யலோகம் ஆகியவை அழிவதில்லை. ப்ரஹ்மா துயில் கொள்ளும் காலத்தை நிமித்தமாக உடையதால் இது நைமித்திக பிரளயம் எனப்படு கிறது. க்ஷயகல்பத்தின் முடிவில் ப்ரஹ்மா துயில் நீங்கி மீண்டும் சிருஷ்டியைச் செய்கிறார்.

(iii) **ப்ராக்ருத ப்ரளயம்:** ப்ரஹ்மாவின் ஆயுட்கால முடிவில் பாதாளம் முதலிய 7 கீழுலகங்கள், பூமி முதல் ஸத்யலோகம் வரை உள்ள 7 மேலுலகங்கள் ஆகிய எல்லா உலகங்களும் அழிந்து எங்கும் நீர்மயமாகிவிடும். நீரானது நிலத்தின் குணமான கந்தத்தை கிரஹிக்கிறது; அதனால் நிலம் லயப்படத் தக்கதாகி கந்ததந்மாத்திரை நசித்து நீராகி விடுகிறது தண்ணீரின் குண மான ரஸத்தை ஜோதியானது கிரஹிக்கிறது; அதனால் தண்ணீர் ரஸதன்மாத்திரையற்று ஜோதியாகிறது. இவ்வாறு நீரானது நெருப்பாகி எங்கும் வியாபிக்கிறது. இந்த அனலின் குணமான ரூபத்தைக் காற்று க்ரஹிக்கவே, ரூபதன்மாத்திரை நசித்து அனலற்று எங்கும் பெருங்காற்று பேரிரைச்சலுடன் வானத்தைப் பற்றி வீசுகின்றது. பிறகு வாயுவின் குணமான ஸ்பர்சத்தை வானம் க்ரஹிக்கவே, வாயு அழிந்து ஆகாயம் ஒன்றே இருக்கும். பிறகு ஆகாயம் அஹங்காரத்திலும், அஹங்காரம் மஹத்திலும், மஹான் ப்ரக்ருதியிலும் முறையே லயம் அடைகின்றன. ப்ரக்ருதி யில் முக்குணங்களும் ஸமமாக உள்ளன. ப்ரக்ருதியும், ஜீவர்களும் பரமாத்மாவிடம் லயப்படுகின்றன (ஒடுங்குகின்றன). இப்படி ஒடுங்குமிடமான பரமாத்மாவிற்கு இரண்டு பரார்த்தங்கள் (= பிரமனின் ஆயுட்காலம்) இரவு; இரண்டு பரார்த்தங்கள் பகல், பகற்பொழுதில் மறுபடியும் சிருஷ்டிகளைச் செய்கிறான்.

(நித்யனான பரமாத்மாவுக்கு சிருஷ்டி முதலிய காரியங்களைக் கொண்டு உபசார வழக்கால் இரவு-பகல்கள் சொல்லப்படுகின்றன. உண்மையில் அவனுக்கு பகல் என்பதுமில்லை; இரவு என்பதுமில்லை.)

ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்னும் மூன்றுவித தாபங்களையும் அறிந்தவன் ஞானமும் வைராக்யமும் உண்டாகப் பெற்று, தக்க உபாயத்தைக் கைக்கொண்டு, மோக்ஷத்தை (=எம்பெருமானுடன் ஸாயுஜ்யத்தை) அடைதலை ஆத்யந்திகப்பிரளயத்தை (=ஆத்யந்திகலயத்தை) அடைதல் என்பர். எனவே ஆத்யந்திகலயம் என்பது மோக்ஷம்.

## (B—7)—56: பல்வேறு மதங்களின் விவரங்கள்

### (i) சார்வாக மதம் (=லோகாயத மதம்)

பரமநாஸ்திகனான சார்வாகன் என்பவனால் தோற்றுவிக்கப்பட்டது சார்வாக மதம். இதில் ப்ரத்யக்ஷம் ஒன்றுதான் பிரமாணம். அநுமானம், சப்தம் ஆகியவை பிரமாணங்கள் அல்ல. கண், காது, மூக்கு, தோல், நாக்கு ஆகிய புலன்களால் அறியப்படுபவையே உண்மையானவை. அர்த்தம் (பொருள்), காமம் (இன்பம்) ஆகிய இரண்டே புருஷார்த்தங்கள். மேலுலகம் கிடையாது. அர்த்தகாமங்களைப் பகரும் நீதிசாஸ்த்ரமும் காமசாஸ்த்ரமுமே சாஸ்த்ரங்கள். வேதம் பிரமாணம் அன்று. எனவே வேதங்கள் கூறும் தர்மம், புண்ணியம், பாபம், இறைவன் எதுவும் உண்மையன்று; இவைகள் வயிற்றுப் பிழைப்புக்காகக் கற்பிக்கப்பட்டவை. நாட்டின் அரசனே இறைவன். அவரவர் சரீரமே (உடலே) ஜீவாத்மா. நிலம்-நீர்-தீ-காற்று ஆகிய நான்கு பூதங்களால் ஆகியது உடல். பல்வகை மரப்பட்டைகளையும் வேர்களையும் இடித்துநீரில் போட்டு அடுப்பிலேற்றிக் காய்ச்சுவதால் அதற்கு (சாராயத்திற்கு) போதை (மயக்கம்) தரும் சக்தி உண்டாவது போல், நான்கு பூதங்களின் சேர்க்கையால் உடலில் சைதன்யம் (அறிவு) உண்டாகிறது. ஐம்புலன்களால் நுகரப்படும் இன்பமே புருஷார்த்தம் (சுவர்க்கம்). முள் குத்துவது, விழுந்து அடிபடுவது, பட்டினி நேர்வது போன்ற துன்பமே நரகம். இறப்பே மோக்ஷம். அவரவர் தன் வாழ்நாளில் துன்பம் தருபவற்றைப் போராடி அகற்றி இன்பத்தையே பெற முயலவேண்டும். கடன்பட்டோ வேறு வழியிலோ வேண்டியவற்றைப் பெற்று, கண்டு-கேட்டு-உற்று (ஸ்பர்சித்து)-மோந்து-உண்டு ஐம்புலன்களால் பெறும் இன்பமே வாழ்க்கையில் அவரவர் பெறவேண்டிய அளவில்லாப் பேரின்பமாகும்.

(ii) பௌத்தமதம்

ஆதிபுத்தரால் தோற்றுவிக்கப்பட்ட மதம் புத்த மதம். ஸர்வம் சூன்யம் என்பது இவர் கொள்கை. நிர்வாணம் மோக்ஷம். இவருடைய சிஷ்யர்கள் மாத்யமிகன், யோகாசாரன், ஸௌத்ராந்திகன், வைபாஷிகன் என்ற நால்வர். இவர்கட்கு புத்தருடைய வாக்யமே ப்ரமாணம்; ஆயினும் சிறிது மாறுபட்ட கருத்துடையர்.

(a) மாத்யமிகன் : சார்வாகன் 'ப்ரத்யக்ஷம் (கண்ணால் காண்பது) ப்ரமாணம்; காணப்படாமையால் ஆத்மாகிடையாது' என்றான். இவனோ "கண்ணால காண்பது ப்ரமாணமில்லை. கனவில் காண்பது எப்படிப் பொய்யோ, அதேபோன்று விழிப்பு நிலையில் காணப்படுவதும் பொய்யே. வெளிப்பொருள்கள் க்ஷணிகங்கள்; க்ஷணந்தோறும் மாற்றமுடையவை. உலகம் ஸத்தும் அன்று; அஸத்தும் அன்று; ஸதஸத் என்றோ, ஸதஸத் அன்று என்றோ சொல்லமுடியாதது. எனவே சூன்யம் என்று அறிந்தவன் மோக்ஷத்திற்காக முயலவேண்டாம். எல்லாம் உண்டு என்கிற விபரீத எண்ணங்கள் அகன்றால இயற்கையான சூன்யநிலை வந்துவிடும்" என்கிறான். "அகப்பொருளான ஞானம் உண்டு. புறப்பொருள்களே பொய் (சூன்யம்)" என்று குருவிடமிருந்து சிறிது மாறிய கொள்கையை உடையவன் மாத்யமிகன்.

(b) யோகாசாரன் : மாத்யமிகன் "அகப்பொருளான ஞானம் உண்டு. புறப்பொருள் எல்லாம் பொய்" என்றான். இவனோ "புறப்பெருளும் உண்டு; எல்லாம் சூன்யம் என்பது தவறு. ஞானம் ஸுகதுக்கத்திற்குக் காரணமானது. ஞானத்தின் அலைகளில் பொருட்கள் விஷயமாகத் தோன்றுகின்றன. ஆனால் அறியப்படும் பொருட்களும், அறிகின்ற ஜ்ஞாதாவும் தனியாகக் கிடையாது; அவைகள் அறிவின் அம்சமே. எனவே ஞானத்தை விட்டுத் தனித்துப் புறப்பொருள் இன்மையால் அவை சூன்யமே" என்கிறான்.

(c) ஸௌத்ராந்திகன்: புறப்பொருள் உண்டு; ஆனால் அது ப்ரத்யக்ஷமாகக் காண்பதற்கு அரிது. ஞானத்தில் விஷயமாகும் பொருள்களின் வடிவைக்கொண்டு அவற்றை அநுமானத்தினால் அறியலாம். கண்ணாடியில் காணும் நிழலைக் கண்டு அதன் எதிரே உள்ள பொருட்களை ஊஹித்து அறிவது போல அறியப்படுகின்றன. உண்மையில் பொருட்கள் அணுக்களின் ஸமுதாயமே. எனவே பொருட்களை ஏற்காமல் அவை நிரம்சங்களான

பரமாணுக்கள் என்றும், அவையே உண்மையானவை என்றும் ஸௌத்ராந்திகன் கூறுகிறான்.

(d) வைபாஷிகன்: இவனும் ஆத்மாவை ஒப்புக்கொள்ளவில்லை. காட்சியும், காட்சியில் தோன்றும் பொருள்களும் உண்டு. அப்பொருள்கள் அணுக்குவியல்களே; அவைகள் க்ஷணிகங்கள். தீபஜ்வாலை போன்றும், ஆற்றுப் ப்ரவாஹம் போன்றும் ஒன்று போல் தோன்றுகின்றன. எனவே இவனுக்கு புறப்பொருள்கள் ப்ரத்யக்ஷமானவை.

## (iii) ஆர்ஹதமதம் (ஜைனமதம்)

இதற்கு அர்ஹன் என்ற ஸர்வஜ்ஞன் மூலபுருஷன். பௌத்த மதத்தைப் போன்றே இம்மதத்திலும் வேதம் ப்ரமாணமில்லை. பொருள் க்ஷணிகங்கள் என்பதை இவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஈச்வரன் இல்லை.

1) ஜீவர்கள்—பத்தர்கள், யோகஸித்தர்கள், முக்தர்கள் என மூவகைப்படுவர்.

2) தர்மம்—மேலே செல்கின்றவர்கட்குத் உறுதுணையாக இருப்பது.

3) அதர்மம்—இங்கு இருப்பதற்கு உதவுவது.

4. புத்கலம்—அணுக்கள், மலைகள், ஸமுத்ரங்கள்

5) காலம்—முக்காலத்தைக் குறிக்க உதவுவது.

6) ஆகாசம்.

இந்த ஆறு வகை த்ரவ்யங்களைக் கொண்டதே உலகம். இவற்றை அஸ்திகாயம் என்பர். அதாவது, எல்லா இடங்களிலும் இருப்பவை. உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் அனேகாந்தங்கள். அதாவது, வெயிலும் நிழலும் ஒன்று சேர்ந்தால் எப்படியோ அதுபோல விருத்தமான பல தன்மைகளை உடையவை. அதாவது, தர்மம் அதர்மமாகவும், அதர்மம் தர்மமாகவும் இருக்கும். ஜீவர்கள் உடலுக்கேற்ற அளவுடையவர்கள்; அணு அல்ல. அதாவது, யானை ஜீவன் யானையைப் போன்று பெரியதாக இருக்கும். பூனை ஜீவன் பூனை அளவுடையதாக இருக்கும். ஞானம் ஆசாரம் - தபஸ்-வைராக்யம்-அஹிம்ஸை ஆகியவை மோக்ஷோபாயங்கள். தவமாவது கொதிக்கும் பாறையில் ஏறி நிற்பது, தலை மயிரை நாவிதன் மூலம் மழித்தல் செய்யாது ஒன்று ஒன்றாகத் தானே பிடுங்கிக் கொள்வது.

ஸ்வாபாவிக ஆத்ம ஸ்வரூபாவிர்பாவமே மோக்ஷம். அதாவது, அலோகாகாசத்தில் ப்ரதிஷ்டை பெறுவது தான் மோக்ஷம் என்று சிலரும், மேலேமேலே சென்று கொண்டே இருப்பதுதான் மோக்ஷம் என்று சிலரும் சொல்கின்றனர். இவர்கள் எல்லாப் பொருட்களின் தன்மைக்கு ஏழு முறிவுகளைச் சொல்லுகிறார்கள். அதை ஸப்த பங்கீநயம் என்பர். அவையாவன*:—

1. ஸ்யாதஸ்தி — பொருட்களுக்குரிய தன்மை கொஞ்சமாக இருக்கும்.

2. ஸ்யாந்நாஸ்தி—அதே பொருளில் அதன் தன்மை கொஞ்சம் இல்லாமலும் இருக்கும்.

3. ஸ்யாதஸ்தி-ச-நாஸ்தி-ச—பொருளின் தன்மை சிறிது இருந்தும், சிறிது இல்லாமலும் கூட்டாக இருக்கும்.

4. ஸ்யாதவக்தவ்யம்—சிறிது இருப்பும் இல்லாமையும் சொல்ல முடியாமல் விலக்ஷணமாயிருக்கும்.

5. ஸ்யாதஸ்திசாவக்தவ்யம்—1ல் சொன்ன தன்மையும் 3ல் சொன்ன தன்மையும் கூடி இருக்கும்.

6. ஸ்யாந்நாஸ்திசாவக்தவ்யம்—2ல் சொன்னதும், 4ல் சொன்னதும் கூடியிருக்கும்.

7. ஸ்யாதஸ்தி-ச-நாஸ்திசாவக்தவ்யம் — மூன்றாவதிலும் நான்காவதிலும் சொன்னவை கூடியிருக்கும்.

புரிந்துகொள்ள முடியாத தத்வநிலை அவர்களுடையது.

## (vi) கணாதருடைய வைசேஷிகமதம்

இந்த மதத்தில் பதார்த்தங்களை த்ரவ்யம், குணம், கர்மம் ஸாமாந்யம், விசேஷம், ஸமவாயம், அபாவம் என்று ஏழு வகையாகச் சொல்லுவார்கள்.

(i) த்ரவ்யம்—நிலம்-நீர்-தீ-காற்று-வானம்-காலம்-திசைகள்-ஆத்மா-மனஸ் ஆகிய ஒன்பதும் த்ரவ்யங்கள்.

---

*सप्तभंगीनयम्—१. स्यादस्ति, २. स्यान्नास्ति, ३ स्यादस्ति च नास्ति च, ४. स्यादवक्तव्यम्, ५. स्यादस्ति चावक्तव्यम्, ६. स्यान्नास्ति चावक्तव्यम्, ७. स्यादस्ति च नास्ति चावक्तव्यम्।

(ii) குணங்கள்—நிறம்-ரஸம்-வாசனை-ஸ்பர்சம்-எண்-அளவு-தனித்தன்மை-சேர்க்கை-பிரிவு-உயர்வு - தாழ்வு - கனம்-திரவம்-ஸ்நேஹம் (எண்ணெய் வகையிலுள்ளது)-சப்தம்-அறிவு-இன்பம்-துன்பம் - ஆசை - வெறுப்பு - முயற்சி- புண்ணியம்-பாபம்-ஸம்ஸ்காரம் ஆகிய 24ம் குணங்கள்.

(iii) கர்மம்—(செயல்) உயர எறிதல்-கீழ்நோக்கி எறிதல்-மடக்குதல் (ஒன்று சேர்த்தல்) - விரித்தல்-செல்லுதல் என்ற ஐந்து வகைப்பட்டது.

(iv) ஸாமான்யம்—ஒன்றைப்போல் மற்றொன்று இருப்பது. இது மிக நெருங்கிய ஒற்றுமையைக் குறிக்கும். இரு குடங்களில் இருப்பது ஸாமான்யம்; பரஸாமான்யம் அதிக இடங்களில் இருப்பது; அபரஸாமான்யம் குறைந்த இடங்களில் இருப்பது.

(v) விசேஷம்—நீலம், நீர் முதலிய நித்யமான பொருள்களில் இருப்பது. இது எல்லையற்றது.

(vi) ஸமவாயம்— நித்யமான தொடர்பை உடையது. பொருளுக்கும் குணங்களுக்கும் உள்ள ஸம்பந்தம் நித்யமானது; பிரிக்கமுடியாதது.

(vii) அபாவம்—இது ப்ராகபாவம், ப்ரத்வம்ஸாபாவம், அத்யந்தாபாவம், அன்யோன்யாபாவம் என்று நான்கு வகைப்பட்டது. ஒரு பொருள் தோன்றுவதற்கு முன் இருப்பது ப்ராகபாவம். ஒரு பொருள் அழிந்ததும் உள்ளது ப்ரத்வம்ஸாபாவம். ஒரு பொருள் முயற்கொம்பு போன்று எப்பொழுதும் இல்லாமலிருப்பது அத்யந்தாபாவம். ஒரு பொருளுக்கும் மற்றொரு பொருளுக்கும் இருப்பது (இது அதுவல்ல, அது இதுவல்ல) அன்யோன்யாபாவம். ஸாமன்ய-விசேஷ-ஸமவாய-அபாவங்களை விசிஷ்டாத்வைத ஸித்தாந்திகள் ஒப்புகொள்வதில்லை.

வேதம் இறைவனால் செய்யப்பட்டது; எனவே பௌருஷேயம். ஜீவன் விபு. அவயவியை தனிப்பொருள் என்கிறார்கள்.

ஸாமான்யம் - விசேஷம் - ஸமவாயம் - அபாவம் இவற்றை அவயவிப் பொருளின் குணங்கள் என்றும், ஸத்துவம்-ரஜஸ்-தமஸ் என்பவை குணங்கள் அல்ல என்றும் கூறுவர். ஜீவனுடைய அத்ருஷ்டத்திற்கேற்ப ஈச்வரனுடைய அறிவு-விருப்பம்-முயற்சி

கள் செயல்படும் எனக்கூறி இறைவனைப் பரதந்த்ரனாக ஆக்கினர். கல்லைப்போன்று உணர்ச்சியற்ற நிலையே மோக்ஷம்.

## (v) ஸாங்க்யமதம்

இது ஸேச்வர ஸாங்க்யமதம்-நிரீச்வரஸாங்க்யமதம் என இருவகைப்படும். கபிலரால் நிரீச்வரஸாங்க்யமதம் தோற்றுவிக்கப்பட்டது. இதில் ப்ரத்யக்ஷம்-அநுமானம்-சப்தம் ஆகிய மூன்றும் ப்ரமாணங்கள். நிரீச்வரவாதி ஜீவனைப் புருஷன் என்றும், ஈச்வரன் என்கிற 26வது தத்துவம் கிடையாது என்றும் கூறுவர். ஜீவன் 25வது தத்துவம், ப்ரக்ருதி 23 தத்துவங்களுக்கு மூலமாகிய 24வது தத்துவம். ப்ரக்ருதியை ப்ரதானம் என்றும் பகர்வர். ப்ரக்ருதி - புருஷ ஸம்பந்தமே ஸம்ஸாரத்திற்குக் காரணம். ப்ரக்ருதியின் தொடர்பை விலக்கித் தன் ஸ்வரூபத்தோடு தனித்து இருப்பதே புருஷனுக்கு மோக்ஷம். ப்ரக்ருதி வேறு, நான் (புருஷன) வேறு என்னும் ஞானத்தினால் மோக்ஷம் கிடைக்கும். இந்த பேத ஞானத்திற்குக் காரணம் தத்துவ ஞானம். 24 தத்வங்களாவன—ப்ரக்ருதி, மஹாந், அஹங்காரம், ஐந்து தன் மாத்ரங்கள், 11 இந்த்ரியங்கள், ஐந்து பூதங்கள் என்பன.

ப்ரக்ருதி: வேறொரு பொருளின்றும் இது தோன்றாமையாலும், பின்வரும் தததுவங்களின் தோற்றத்திற்குக் காரணமாயிருப்பதாலும் மூலப்ரக்ருதி என்றும், அவிக்ருதி என்றும் இதை வழங்குவர். இதில் ஸத்துவம்-ரஜஸ்-தமஸ் என்னும் முக்குணங்களும் சமநிலையில் இருக்கும்.

ப்ரக்ருதியிலிருந்து மஹத்தத்வமும், இதிலிருந்து அஹங்காரமும் (அபிமானம்) தோன்றியது. அஹங்காரம் ஸாத்விகாஹங்காரம், ராஜஸாஹங்காரம், தாமஸாஹங்காரம் என மூவகைப்படும்.

தாமஸாஹங்காரத்தினின்றும் சப்த தன்மாத்ரம், ஸ்பர்சதந்மாத்ரம், ரூபதன்மாத்ரம், ரஸதந்மாத்ரம், கந்ததன்மாத்ரம் என்ற ஐந்து தந்மாத்ரங்கள் தோன்றின. இவை முறையே சப்த-ஸ்பர்ச-ரூப-ரஸ-கந்தங்களாகிய ஐந்து குணங்களோடுகூடியவை.

[இவ்வேழு தத்வங்களும் ஒன்றிலிருந்து தோன்றியதால் விக்ருதியாகவும், பிறதோன்றுவதற்குக் காரணமாக இருப்பதால் ப்ரக்ருதியாகவும் ஆவதால் இவற்றை ப்ரக்ருதி-விக்ருதிகள் என்பர்.]

ஸாத்விகாஹஸ்காரத்தினின்றும் கண், செவி, மூக்கு, நாக்கு, தோல் என்னும் ஐந்து அறிவுப் புலன்களும், வாய் - கை - கால் - பாயு (மலத்தை வெளியேற்றுவது) - உபஸ்த்தம் (சிறு நீரை வெளியேற்றுவது) ஆகிய ஐந்து செயற்புலன்களும், மனம் (அந்தரிந்த்ரியம்) ஆகிய பதினொரு இந்த்ரியங்களும் உண்டாகின்றன.

ஸாத்விக - தாமஸாஹங்காரங்களின் செயலுக்கு ராஜஸாஹங்காரம் உதவுகிறது. தாமஸாஹங்காரத்தினின்று தோன்றிய ஐந்து தன்மாத்ரங்களினின்றும் ஆகாசம் - வாயு - அக்னி-அப்பு (நீர்) - ப்ருதிவீ (நிலம்) ஆகிய ஐந்து பூதங்கள் தோன்றின. (11 இந்த்ரியங்களும், 5 பூதங்களுமான பதினாறு தத்துவங்கள் விக்ருதியாகும். இவற்றினின்றும் வேறுதத்துவங்கள் தோன்றாமையால் இவை ப்ரக்ருதியாகமாட்டா.)

இந்த 24 தத்துவங்களினின்றும் வேறுபட்டது 25வதான புருஷ தத்துவம். இது ஒன்றினின்றும் தோன்றாததாலும், இதிலிருந்து வேறு பொருள்தோன்றாததாலும் ப்ரக்ருதியாகவோ, விக்ருதியாகவோ ஆகமாட்டாது. 26வது தத்துவமான ஈச்வரனை இவர்கள் ஏற்கவில்லை.

ஸாங்யர்கள் ஸத்கார்யவாதிகள். அதாவது: காரணப் பொருளில் அவ்யக்தமாக (புலப்படாமல்) உள்ளதே நம் செயலால் கார்யப் பொருளாக வ்யக்தமாக (நன்கு புலப்படும்படி) உண்டாகிறது. இல்லாதது எதுவும் உண்டாகாது. எள்ளில் எண்ணெய் உள்ளது. எள்ளை செக்கிலிட்டு ஆட்டினால் வ்யக்தமாக எண்ணெய் உண்டாகிறது. பசுவின் மடியில் புலனாகாது உள்ள பொருளே கறக்கும் செயலால் பாலாக உண்டாகிறது. இல்லாதது உண்டாகாது; உள்ளது அழியாது என்பது அவர்கள் மதம். எனவே மூலப்ரக்ருதி (ப்ரதானம்) புருஷனின் சேர்க்கையினால் செயல்பட்டு மஹத் முதலிய தத்துவங்களைத் தோற்றுவிக்கிறது. புருஷனோ நிர்விகாரன்; செயலற்றவன். காந்தத்தின் ஸம்பந்தத்தினால் அருகிலுள்ள இரும்புப் பொருள்கள் செயல்படுவது போல் புருஷஸம்பந்தத்தினால் மூலப்ரக்ருதி செயல்படுகிறது. தன்னோடு நெருங்கித் தொடர்பு கொள்ளும் ப்ரக்ருதி வேறு, தான் வேறு என்ற உணர்வே புருஷனுக்கு மோக்ஷமாம்.

## (vi) பாசுபத மதம்

பசு-பதி-பாசம் மூன்றும் ப்ரளயகாலத்திலும் அழியாதவை,

1. பாசம்: ப்ரக்ருதியைப் பாசம் என்றும், மாயை என்றும் கூறுவர். இதை அவ்யக்தம், த்ரிகுணம் எனப்பிரிப்பர். ஸத்வ-ரஜஸ்-தமஸ்ஸுக்களின் ஸூக்ஷ்மாவஸ்தையை அவ்யக்தம் என்றும், இவற்றின் ஸ்தூலாவஸ்தையை த்ரிகுணம் என்றும் சொல்வர்.

இம்மாயையிலிருந்து நியதி, காலம், ராகம், வித்யை, கலை ஆகிய ஐந்தும் புருஷனைப் பற்றிக் கொண்டு பிறக்கின்றன.

i) நியதி: புருஷனுடைய கர்ம - பலன்களை குறிப்பிட்ட தேச காலங்களில் உண்டாக்கவும், இவை ஒன்றோடொன்று கலவாமலிருக்கவும் உதவுகிறது.

ii) காலம்: நொடி, நிமிஷம் முதலிய வ்யவஹாரத்திற்கு உதவுகிறது இது.

iii) ராகம்: இது துன்பமில்லாமையையே இன்பமாக நினைத்து மயங்கிச் செயல்படும் சக்தியைக் கொடுக்கிறது.

iv) வித்யா: ஒரு பொருளைப் பற்றிய அறிவை உண்டாக்கப் பொருளிடம் ஞானம் செல்ல உதவுகிறது இது.

v) கலை: மலங்களால் ஞானம் மறைக்கப்படுகிறது. அப்பொழுது மலத்தை ஒதுக்கி ஞானசக்தியை பிரகாசிக்கச் செய்கிறது கலை.

ஞானம்: இது உண்மையான விஷயத்தை அறிவிக்கும், இன்ப துன்ப உணர்ச்சிகளை உண்டாக்கும்.

ஸத்வ-ரஜஸ்-தமஸ்ஸுக்கள் புத்தியை மேன்மேலும் இட்டு நிரப்பி உதவும். கால-நியதிகள் மனிதனின் சுய முயற்சியைத் தூண்டும்.

பசு: பசு என்றால் ஜீவன். இவனை க்ஷேத்ரஜ்ஞன் என்றும் சொல்லலாம். ஜீவன் அணுபரிமாணம் உடையவன்; ஸர்வவல்லமை பெற்றவன். இவன் மலம்-மாயை-கர்மம் எனும் பந்தபாசங்களால் ஸம்ஸாரத்தில் உழல்கிறான்; பந்தபாசங்கள் விலகியதும் ஸர்வஜ்ஞனாய், விபுவாய், ஸர்வசக்தனாய் மோக்ஷதசையில் சிவனுக்கு ஸமமாகிறான். இதற்கு தத்துவஞானம் உபாயம்.

பதி: பசுபதியே ஸர்வேச்வரன்; எல்லா கார்யங்களிலும் நிமித்தகாரணமாக ஆகிறான்; பசுக்களின் கர்மாவிற்கு ஏற்ப

மோக்ஷமளிக்கிறான். எனினும் எல்லையற்ற ஸ்வாதந்த்ர்யம் உடையவன்; வேதத்திற்கு ப்ராமாண்யம் உண்டு. ஆயினும் அனுமானத்தினால் ஈச்வரனை ஒப்புக்கொள்கிறார்கள். சிவன் அனாதி முக்தன், இவன் பஞ்சசக்தி மயமான சரீரத்தை உடையவன். ஜ்ஞாந-க்ரியா சக்திகளைக்கொண்டு ஸ்ருஷ்டிக்கும்போது இவனை சிவன் என்றும், ஜ்ஞாந-க்ரியா சக்திகள் ஸமநிலையில் இருக்கும் போது ஸதாசிவன் என்றும், ஜ்ஞானசக்தி குறைந்து க்ரியாசக்தி தலைதூக்கும் போது ஈச்வரன் என்றும், இதற்கு மாறான நிலை ஏற்படும்போது வித்யா என்றும் சொல்லுவார்கள்.

## (vii) குதிருஷ்டி மதங்கள்

(a) அத்வைத மதம்- ஏக ஜீவவாதம் (மாயாவாதி மதம்) ப்ரஹ்மம் ஸத்யமானது; ஜ்ஞாந ஸ்வரூபமாயுள்ளது. அதில் தர்மங்களோ, குணங்களோ கிடையாது. எனவே நிர்விசேஷ சின்மாத்ரமாயுள்ளது. நாம் காணும் உலகம் பொய்; ப்ரஹ்மமே ஜீவனாகக் காட்சியளிக்கிறது. இதற்குக் காரணமான அவித்யையும் பொய். ஆயினும் அது ப்ரஹ்மத்தை மறைத்து பல்வகை ப்ரமங்களை உண்டுபண்ணி ப்ரஹ்மத்தையே ஜீவனாகவும், பல்வகை ஜடப்பொருள்களாகவும் காட்டுகிறது. அவித்யை அனாதியானபடியால் ஜீவனும் ஜடப்பொருளும் கலந்த உலகமும் அனாதியானது. ப்ரஹ்மத்தைத் தவிர மேற்படி உலகத்தைக் காண்பவன் பிறப்பு, இறப்பு, கிழத்தனம் முதலிய பல துன்பங்களை அநுபவிக்கிறான்.

அத்வைதிகள் வேதத்தில் அபேதத்தைச் சொல்லும் வாக்யங்கள் உண்மையை உரைப்பன என்றும், பேதத்தைச் சொல்லும் வாக்யங்கள் பொய்யை உரைப்பன என்றும் அப்ரமாணம் என்றும் கூறுகின்றனர், "தத்வமஸி" முதலிய சில அபேதத்தை கூறும் வாக்யங்களின் பொருளை உணர்ந்தவன் முக்தனாகிறான்.

ப்ரஹ்மம் அவித்யையினால் மறைக்கப்பட்டு ஒரு ஜீவத் தன்மையை அடைந்து கனவு காண்கிறது. அக்கனவில் பிற ஜீவராசிகளும் ஜடப்பொருள்களும் காணப்படுகின்றன. நாம் கனவில் பலவற்றைக் காண்கிறோம். அவை விழித்தபின் காணப் படாததால் பொய் என்கிறோம். அதே போல் ஜீவத்தன்மையை அடைந்த ப்ரஹ்மத்தின் கனவில் தோன்றும் சேதநா சேதன ரூபமான உலகும் பொய்யே. இந்த ஜீவனுக்குத் தத்துவஞானம் வந்தால் ப்ரஹ்மம் முக்தியை அடைகிறது.

இம்மதத்தில் ப்ரஹ்மத்தைத் தவிர்த்த அனைத்தும் பொய். அதாவது, அவித்யையும் பொய்; அவித்யா ஸம்பந்தமும் பொய்; சாஸ்த்ரமும் பொய்; சாஸ்த்ரத்தினால் உண்டாகும் அறிவும் பொய்; பொய்யான அறிவினால் உணரப்படும் உலகமும் பொய். ப்ரஹ்மம் ஸ்வயம் ப்ரகாசமானபடியால் அதில் அவித்யையும் அதன் தொடர்பினால் உண்டாகும் தோஷங்களும் ஒட்டாது.

(b) பாஸ்கரமதம் — (பேதாபேத வாதம்) பாஸ்கரரை த்வைதாத்வைதவாதீ என்றோ, பேதாபேதவாதீ என்றோ கூறுவர். இம்மதத்தில் ஜ்ஞாந ஸ்வரூபனான ப்ரஹ்மம் நிர்குணம் அல்ல; எல்லையற்ற பல்வகை கல்யாண குணங்களோடு கூடியது. ஜீவர்கள் பலர் என்றும், ஜீவர்சட்கும் ப்ரஹ்மத்திற்கு பேதம் (வேற்றுமை) உண்டு என்றும் உபாதியால் (காரணத்தினால்) தோன்றுகிறது. ப்ரஹ்மத்திற்கும் ஜீவர்கட்கும் அபேதமே உண்மையானது. உதாஹரணம்—ஆகாசம் ஒன்றே எங்கும் பரவியது. இதை மஹாகாசம் என்பர். இதுவே குடத்திலோ, மடத்திலோ, வீட்டிலோ இருக்கும்போது கடாகாசம், மடாகாசம், க்ருஹாகாசம் எனப்படுகிறது. குடத்தை உடைத்தாலோ, மடத்தையோ - வீட்டையோ இடித்துவிட்டாலோ கடாகாசம், மடாகாசம், க்ருஹாகாசம் என்ற பெயர் போய் மஹாகாச மாயாகிவிடுகிறது. இதே போன்று ப்ரஹ்மம் அந்த:கரணம்-சரீரம் ஆகியவற்றோடு சேரும்போது ஜீவன் என வழங்கப்படுகிறான்; உபாதி போனால் இயற்கையான ப்ரஹ்மமாகி விடுகிறது. பல உபாதிகளின் தொடர்பால் ப்ரஹ்மமே பல ஜீவர்களாகத் - தோற்றமளிக்கிறது. தனியாக ஜீவதத்துவமே கிடையாது. ஜீவ ப்ரஹ்ம அபேதமே உண்மையானது; பேதம் ஔபாதிகமானது.

(c) யாதவப்ரகாசமதம்: இதுவும் பேதாபேதவாதி மதமே. ஆயினும் பாஸ்கர மதத்தினின்றும் சில வேறுபாடுகள் உண்டு. ப்ரஹ்மம் உலகிலுள்ள சேதனாசேதன வஸ்துக்களினின்றும் பின்னா பின்னமாய் (அதாவது, வேறுபட்டதாயும் வேறுபடாததாயும்) இருக்கிறது. இங்கு பேதம், அபேதம் இரண்டும் இயற்கையானது. ப்ரஹ்மம் நிர்குணமல்ல; ஸகுணமானது. அனந்த கல்யாண குணங்களோடு கூடியது. ப்ரஹ்மமே தேவனாகவும், மனிதனாகவும், விலங்காகவும், தாவரமாகவும், நரகத்திலுள்ள ஜீவனாகவும், ஸ்வர்க்கத்திலுள்ள ஜீவனாகவும், முக்த ஜீவனாகவும் ஆகிறது. ஆனால் ப்ரஹ்மம் விசித்ர சக்தி உடையவனாகையால் விலக்ஷண மாகவும் இருக்கிறது. இதேபோன்று அசித்தோடு அபின்னமாய் (வேறுபடாததாய்) இருந்து, நிலம் - நீர் - தீ - காற்று - ஆகாசம்

முதலிய பல்வகை ஜடப்பொருளாக மாறியும், இதனின்றும் வேறுபட்டு விலக்ஷணமாயும் இருக்கிறது. ஜகத் ஸத்தியமானது.

## (viii) ந்யாய—பூஷணாதி மதங்கள்

கௌதமர் ந்யாயசாஸ்த்ர ப்ரவர்த்தகர். அவர் ந்யாய ஸூத்ரத்திற்கு ஆசிரியர். இதற்கு வாத்ஸ்யாயன முனிவரால் இயற்றப்பட்ட உரைக்கு ந்யாயபாஷ்யம் (அல்லது ந்யாய தர்சனம்) என்று பெயர். ந்யாயபாஷ்யத்திற்குப் பல உரைகள் உண்டு; அவற்றுள் ந்யாயபூஷணம் என்பது ஒன்று. அதில் 'ஜீவனுக்கு ஜ்ஞாநம் நித்யமானது. எனவே மோக்ஷத்தில் ஜீவன் ஜ்ஞாநம் உடையவனாகவும், ஜ்ஞாந விசேஷமான ஸுகத்தை (இன்பத்தை) உடையவனாகவும் இருப்பான்' எனக் கூறப்பட்டிருக்கிறது. முக்தியில் நித்யமாக சுகம் தோன்றும் (ஸுகாபிவ்யக்தி) என்பது பூஷணகாரரின் கொள்கை. இவர் அநாதி ஸர்வஜ்ஞர்களான நித்யஸூரிகளை ஒப்பவில்லை.

## (B—8)—70 : அசோகவநத்தில் ஸீதையின் நிலை

ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, ரூபத்திலும் யௌவனத்திலும் நிகரற்ற ராவணன் தன்னிடத்தில் ஆசைகொண்டு தன்னைப் பார்க்க வருவதைக் கண்ட ஸீதை பெருங்காற்றில் அடிபட்ட இளம் வாழையைப் போல் நடுங்கினாள். உடனே துடைகளால் வயிற்றையும், கைகளால் மார்பையும் மறைத்துக் கொண்டு, என்ன நேருமோ என்று கண்ணீர் சொரிய, ஸீதை ராக்ஷஸிக்களுக்கு நடுவில் வெறுந்தரையில் ஆஸனமில்லாமல் துக்கத்தால் பீடிக்கப்பட்டு உட்கார்ந்திருந்தாள். ஸ்ரீராமபிரானை ஸ்தூல தேகத்தால் அடையாமல், எண்ணங்களாகிய குதிரைகளை மனம் என்ற ரதத்தில் பூட்டி, அதிவேகமாய் அவருடைய ஸமீபத்தை அடைய முயல்பவள் போல் அவள் காணப்பட்டாள். ஸ்ரீராமபிரானே கதி என்று நம்பியவளாய், உபவாஸத்தாலும் - கவலையாலும் - பயத்தாலும் மிகவும் இளைத்திருந்தாள். ராமன் ராவணனைச் சீக்கிரம் வதம் செய்யவேண்டும் என்று தன் இஷ்ட தேவதையைக் கைகூப்பி மனத்தால் பிரார்த்திப்பவள் போல் இருந்தாள். (குறிப்பு : ப்ரபந்நன் இவ்வுலகில் இருக்கும் வரை பின்பற்ற வேண்டிய நெறியை நடத்திக் காட்டினாள் ஸீதை எனக்கொள்க.)

## (B—9)—78 : சூழ்விசும்பணிமுகில்—திருவாய் மொழியின் சுருக்கம்

*திருவாய். (10ம்பத்து-9ம் திருவாய்மொழி): அர்ச்சிராதிமார்க்கத் தாலே வைகுண்டத்திற்கு போகும் போது முக்தனுக்கு நடக்கும் உபசாரங்களை இந்தத் திருவாய்மொழி விளக்குகிறது.*

முக்தன் வைகுண்டத்திற்குப் புறப்படும் போது ஆகாயத்தில் மேகங்கள் மங்களவாத்யத்தை முழங்குகின்றன. முக்தனை வரவேற்பதற்காக பொன்னாலான பூர்ணகும்பங்களை அவை நீரால் நிறப்புகின்றன. ஆழமான ஸமுத்திரங்கள் மேலே கிளம்பி அலைகளாகிய கைகளை மேலே தூக்கிக் கொண்டு கோஷித்து நர்த்தனம் பண்ணுகின்றன. ஏழு தீவுகளில் இருக்கிறவர்களும் நல்ல வஸ்துக்களைக் காணிக்கையாகக் கையில் ஏந்திக்கொண்டு, "இப்படி ஒருவன் வைகுண்டத்திற்குப் போகும்படி நேர்ந்ததே" என்று நினைத்து மகிழ்ச்சியோடு நிற்கிறார்கள்.

தோரணங்களை வரிசைவரிசையாகக் கட்டி தேவர்கள் முக்தனை வணங்குகின்றனர். ஆதிவாஹிகர்களின் உலகத்தில் உள்ளவர்கள் இவனை வணங்குகின்றனர். தியானம் பண்ணிக் கொண்டிருக்கும் ரிஷிகள் இரண்டு பக்கங்களிலும் நின்றுகொண்டு தூபம் ஸமர்ப்பித்து, நல்ல புஷ்பங்களை மழை போல் வர்ஷித்து, மதுரமாகப் பாடுகின்றனர். முக்தன் செல்லும் வழியில் அவன் தங்க இருப்பிடங்களை ஆதிவாஹிகர்கள் அமைக்கிறார்கள். அக்நி-சூரியன்-சந்திரன்-மின்னல் முதலான ஆதிவாஹிகர்கள் "இவ்வழி வரவேண்டும்" என்று வரவேற்கிறார்கள். வருணன் - இந்திரன் - ப்ரஜாபதி என்கிற ஆதிவாஹிகர்கள் "இவன் எம்பெருமானுக்கு அடியவன்" என்று ப்ரீதியுடன் தங்கள் இடங்களையும் ஐச்வர்யங்களையும் ஸமர்ப்பிக்கின்றனர். வேதாத்யயனத்தாலே பரிசுத்தமான வாயையுடைய ஸ்வர்க்கவாஸிகள் தாங்கள் பலனுக்காகச் செய்த யாகங்களால் பெறப்போகும் ஐச்வர்யத்தை ஸமர்ப்பிக்கின்றனர். அப்பொழுது கின்னரர்களும் கருடர்களும் கானம் செய்கின்றனர். நல்ல வாஸனையுள்ள தூபங்களைச் சிலர் ஸமர்ப்பிக்கின்றனர்; சிலர் காஹளங்களையும் சங்கங்களையும் ஊதுகின்றனர். ஆதிவாஹிகர்களின் மனைவிமார்கள் "திருவாழியான் தமர்களே! வைகுந்தத்தை வீடுபோல் ஆளுங்கள்" என்று ஆசீர்வாதம் செய்கின்றனர். ஏழு மருத்துக்களும், எட்டு வஸுக்களும் தங்கள் இருப்பிடத்திலிருந்து ஸ்தோத்திரம் பண்ணியதால் திருப்தி அடையாமல் தங்களுடைய எல்லைகளை விட்டு அவனோடு கூடச்

சென்று துதிக்கின்றனர்; அவர்களுடைய மனைவிமார்களும் இவனுக்கு மங்களா சாஸனம் செய்கின்றார்கள்.

நித்யஸூரிகள் "இவன் கோவிந்தனுக்கே குடிகுடியாக தாஸன்" என்று மகிழ்ந்து, வரிசை வரிசையாக வந்து எதிர் கொண்டு உபசாரம் செய்கின்றனர்; இவன் வரவை எதிர்பார்த்து வைகுந்தத்திலுள்ள கோபுரங்களை த்வஜங்களால் அலங்கரிக்கின்றனர். வைகுந்த நகரத்தைப் புகுந்தவுடன் நகரத்துத்துவார பாலகர்கள்" வைகுந்தனைச் சேர்ந்தவர்கள் எங்களுக்கு ஸ்வாமிகள்" என்று சொல்லி, "உள்ளே வரவேண்டும்" என்று கூறி இவனை வரவேற்று ஆச்சர்யப்படுகிறார்கள். எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யும் நித்யஸூரிகளும் "பூமியிலுள்ள இவன் வைகுந்தத்திற்கு வரும்படி நாங்கள் என்ன பாக்யம் செய்தோம்" என்று வியப்படைகின்றனர். நித்யஸூரிகள் தங்கள் திரு மாளிகைகள் வழியாகப் போகும் இவனை ஸிம்ஹாஸநத்தில் உட்காரவைத்து இவனுடைய திருவடிகளை விளக்குகின்றனர். பூர்ண சந்திரனைப் போன்ற முகங்களையுடைய ஸ்ரீ-பூமி-நீளாப் பிராட்டிகள் தங்கள் பரிஜநங்களுடன் வந்து, வெகுகாலம் தேசாந்தரம் போயிருந்து திரும்பிவந்த பிள்ளையைக் கண்ட தாயைப் போல உகந்து, தமக்கு நிதியான ஸ்ரீ சடகோபத்தையும், எம்பெருமானுடைய திருமேனியின் ஸ்பர்சத்தாலே உயர்ந்த தான ஸ்ரீ சூர்ணத்தையும், பூர்ண கும்பங்களையும், தீபங்களையும் ஏத்திக்கொண்டு எதிர்கொள்கின்றனர். மிகவும் விசாலமான திருமாமணி மண்டபத்திற்குப் போய் எம்பெருமானை அடைந்த இவன் "அடியார்கள் குழாங்களுடன் கூடுவது என்றுகொலோ?" என்று தான் ஆசைப்பட்டபடி நித்யஸூரிகளுடன் கூட முடியில்லாத ஆநந்தத்தை அநுபவிக்கிறான்.

## (B—10)—88: அர்த்த பஞ்சகம்

முமுக்ஷு முக்கியமாய் அறிய வேண்டிய ஐந்து பொருள்கள் அர்த்த பஞ்சகம் எனப்படும். அவையாவன—i) அடைய வேண்டிய ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம்; ii) ப்ரஹ்மத்தை அடைகின்ற ஜீவனுடைய ஸ்வரூபம்; iii) அடைவதற்கு உபாயம்; iv) உபாயத்தால் ஏற்படும் பலன், v) அடைவதற்கு விரோதியாய் இருப்பவை—என்பன.

i) ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவம். அவன் பிராட்டியைப் பிரியாதவன்; ஜ்ஞாநம் - பலம் - ஐச்வர்யம் - வீர்யம் - சக்தி - தேஜஸ் என்னும் குணங்களை உடையவன்; மேலும் வாத்ஸல்யம்

ஸௌசீல்யம் முதலிய எல்லையற்ற கல்யாண குணங்களை இயற்கையாக உடையவன்; இழிகுணங்களற்றவன்; திவ்யமங்கள விக்ரஹமுடையவன்; எல்லையற்ற விபூதிகளை உடையவன்; உலகைப் படைத்து - காத்து - அழித்து விளையாடுபவன். ii) ஜீவன் அணு ஸ்வரூபன்; ஜ்ஞாநம் - ஆநந்தம் முதலிய குணங்களை உடையவன் எம்பெருமானுக்கு எப்பொழுதும் வசப்பட்டவன்; எம்பெருமானுக்குச் சேஷபூதன். பத்தர்-முக்தர் - நித்யர் என ஜீவர்கள் மூவகைப்படுவர். iii) எம்பெருமானை அடைவதற்கு உபாயம் பக்தி - ப்ரபத்திகள். iv) ஒழிவில் காலமெல்லாம் எம்பெருமானுக்குக் குற்றமற்ற தொண்டு செய்வது பலன். v) அவித்யை - கர்மம் - வாஸனை - ருசி - ப்ரக்ருதிஸம்பந்தம் இவைகள் மோக்ஷமடைவதற்குத் தடையாய் உள்ளவைகள். அவித்யை—சரீரத்தை ஆத்மாவாக நினைத்தல், ஆத்மாவை ஸ்வதந்த்ரனாக நினைத்தல்; கர்மம்—ஜீவன் செய்யும் புண்ணிய - பாபங்கள்; வாஸனை—அவித்யை கர்மம் இவற்றால் ஏற்படும் ஸம்ஸ்காரம். ருசி—வாஸனைக்கு ஏற்ப உண்டாகும் விருப்பம். ப்ரக்ருதிஸம்பந்தம்—சரீர ஸம்பந்தம்.

## (B—11)—89 : புருஷோத்தம வித்யை

[கீதை - அத். 15-சுலோகம் 16 - 20] கண்ணன் கூறுவது;

அசேதநம், ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள "க்ஷரர்" எனப்படும் பத்த ஜீவர்கள், ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற !"அக்ஷரர்" எனப்படும் ஜீவர்கள் (=முக்தர், நித்யர்) ஆகிய இவர்களைக் காட்டிலும் வேறுப்பட்டவன் ஸ்ரீமந்நாராயணன். அசேதநம், க்ஷரர் - அக்ஷரர் ஆகிய இவர்களை வியாபித்திருப்பதாலும், தாங்குகையாலும், ஸ்வாமியாயிருந்து நியமிப்பதாலும் ஸ்ரீமந்நாராயணனாகிய நான் (=கண்ணன்)வேதத்திலும் அதன் பொருளை அறியப் பயன்படும் ஸ்ம்ருதி - இதிஹாஸ - புராணங்களிலும் புருஷோத்தமன் (மிகமிக உயர்ந்த புருஷன்) என்று பிரஸித்தனாக விளங்குகின்றேன். இப்படி மயக்கமின்றி அறிபவன் என்னை பஜனம் செய்யும் வழியெல்லாம் அறிந்தவனாய் எல்லாவிதத்திலும் என்னிடம் பக்தி செய்கிறான்; இந்த புருஷோத்தம தத்துவ ஜ்ஞாநத்தின் மூலம் உபாயாநுஷ்டான ஜ்ஞாநமும் உண்டாகி உபாயத்தை அநுஷ்டித்து மோக்ஷத்தை அடைகிறான்.

## (B—12)—96 :அம்பரீஷாதிகளைப் போல—விளக்கம்

மோக்ஷம் தவிர்ந்த மற்ற புருஷார்த்தங்களை விரும்புபவர்களும் மற்ற தெய்வங்களிடம்]அவற்றை யாசிக்காமல் எம்பெருமா

ணிடமே கேட்டுப் பெறலாம். அவ்வாறு பெறுபவர்களையும் உதாரர்கள் என்று கீதையிலே கண்ணன் கொண்டாடினான். அம்பரீஷன் முதலியவர்கள் இப்படிப்பட்டவர்கள். தேவதாந்தரங்களிடமிருந்து மற்ற புருஷார்த்தங்களைப் பெறுபவர்களைக் காட்டிலும் எம்பெருமானிடமிருந்து அவற்றை பெறுபவர் உயர்ந்தவர். (ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம் பிற்சேர்க்கை பக்கம் 31ல் அம்பரீஷ சரித்திரத்தைப் பார்க்கவும்.)

## (B—13)—106 : ஐயஞ்சு (=25) தத்த்வங்களிற் காட்டில் அதிகமான தத்த்வம்

(அதாவது, 26வதுதத்த்வமான ஈச்வரன்).ப்ரக்ருதி,மஹான், அஹங்காரம், மனஸ், சப்த-ஸ்பர்ச-ரூப-ரஸ-கந்த தந்மாத்ரங்கள் 5, ஆகாசம்-வாயு-அக்நி-ஜலம்-ப்ருத்வீ என்ற 5 பூதங்கள், செவி-மெய்-கண்-நாக்கு-மூக்கு என்ற 5 ஜ்ஞாநேந்த்ரியங்கள், வாக்கு-பாணி-பாதம்-பாயு-உபஸ்தம் என்ற 5 கர்மேந்த்ரியங்கள் ஆகிய இவைகள் 24 அசேதந தத்துவங்களாகும். ஜீவன் 25-வது தத்துவம். இந்த 25 தத்துவங்களைக் காட்டிலும் உயர்ந்த தத்துவம் ஈசுவரன்.

## (B—14)—108: அகஸ்த்யர் கடலைக்குடித்த வ்ருத்தாந்தம்

[மஹாபாரதம் - வநபர்வம்—அத். 102—108] இந்திரன் வஜ்ராயுதத்தினால் வ்ருத்ராஸுரனைக் கொன்ற பிறகு மகிழ்ந்த தேவர்கள் காலேயர்கள் எனப்படும் அஸுரர்களைக் கொன்று குவித்தனர். உடனே அஸுரர்கள் ஸமுத்ரத்திற்குள் ஒளிந்து கொண்டனர். பின்னர் நாள்தோறும் இரவில் வெளியே வந்து, வஸிஷ்டர்-ச்யவனர்-பரத்வாஜர் முதலிய மஹர்ஷிகளின் ஆச்ரமங்களில் நீர்-காற்று ஆகியவற்றை உணவாகக் கொண்டு தவம் புரிந்து வந்த முனிவர்களை ஆயிரக்கணக்கில் கொன்று குவித்தனர். இதனால் பயந்த அந்தணர்கள் ஓடி ஒளிந்துக் கொண்டு வேள்விகளைச் செய்ய முடியாது யாகாநுஷ்டானத்தை விட்டனர். இதனால் ஹவிஸ்ஸையே உணவாகக் கொண்ட தேவர்கள் பட்டினியாக இருந்தனர். பின்னர் இந்திரனோடு தேவர்கள் ஸ்ரீமந் நாராயணனிடம் சென்று முறையிட்டனர். மஹாவிஷ்ணுவும் கருணை கொண்டு "தேவர்களே! வ்ருத்ரவதத்தினால் பயந்த அஸுரர்கள் பகலில் கடலினுள் ஒளிந்திருந்து இரவில் உங்களை மாய்க்கின்றனர். எனவே கடலைவற்றச் செய்ய வேண்டும். அதற்கு உபாயம் அகஸ்த்யரை வேண்டுவதுதான்" எனக் கூறினார்.

உடனே அகஸ்த்யரிடம் வந்து தேவர்கள் பிரார்த்தித்தனர். "மாமுனிவரே! அஸுரர்கள் கடலினுள் ஒளிந்திருந்து வாழ்ந்து முனிவர்களையும் மற்றோர்களையும் இரவில் கொல்வதால் யாகங்களைச் செய்வோர் இல்லாமையால் ஹவிஸ் (உணவு) இன்றி வாடுகிறோம். தேவரீர் முன்பு இந்திர பதவிக்கு வந்த நஹுஷனைப் பதவியினின்றும் கீழே தள்ளியும், விந்தியமலையை வளர விடாமல் செய்தும் எங்களைக் காப்பாற்றியுள்ளீர். அதே போன்று கடலை வற்றச்செய்து இப்பொழுது காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டினர். உடனே தேவர்களும் ரிஷிகளும் புடைசூழ கடற் கரைக்குச் சென்றார் அகஸ்த்யர். அகத்தியரின் அத்புதத்தைக் காண எல்லோரும் திரண்டுவந்தனர். "உலகினரின் நன்மையின் பொருட்டு நான் கடல் நீர் முழுவதையும் பருகுகிறேன். அடுத்துத் தேவையான ஏற்பாடுகளைச் செய்து கொள்ளுங்கள்" எனக் கூறி கடல்நீர் முழுவதையும் பருகி விட்டார். இச் செயலைக் கண்டு அனைவரும் வியப்புற்றனர். அகஸ்த்தியரை வாழ்த்தித் துதித்தனர். பின்னர் தேவர்கள் ஆயுதங்களை ஏந்தி அஸுரர்களைக் கொன்றொழித்தனர். மீதமுள்ள காலேயர்கள் பூமியைப் பிளந்துகொண்டு பாதாளத்திற்குச் சென்றனர். இனி மீண்டும் கடலில் ஜலத்தை விடுங்கள் என தேவர்கள் வேண்டினர். "அது என் வயிற்றில் ஜீரணமாகிவிட்டது. கடல் கால க்ரமத்தில் நிரம்பும். பின்னொரு சமயம் பகீரதன் வந்து நிரப்புவான்" என்று கூறி ஆச்ரமம் சென்றார் அகத்தியர்.

## (B—15)—128: துல்ய ந்யாயம்

ஒன்றைவிட்டுப் பிரியாது இணைந்திருப்பவைகளுள் ஒன்று இருப்பின் மற்றொன்றும் இருப்பது இயல்பு. இதுவே துல்யந்யாயம். ஜீவனிடம் பரமனைக் குறித்து சேஷத்வம், பாரதந்த்ரியம், நியாம்யத்வம் முதலியவை இயல்பாக உள்ளவை. இவைற்றுள் ஒன்று இருந்தாலும் மற்றவைகளும் இருக்கும்.

## (B—16)—134: அயோகவ்யச்சேதம்-அந்யயோகவ்யவச்சேதம்

அயோகவ்யவச்சேதம் — "ஏவ" என்னும் தேற்றத்தின் (=ஏகாரத்தின்) பொருளாகும். 'யோகம்' என்றால் சம்பந்தம் அல்லது தொடர்பு. அயோக: = தொடர்பற்றுஇருத்தல். வ்யவச்சேதமாவது விலக்குதல். ஸம்பந்தமற்று இருப்பதை விலக்குதல். அதாவது, எப்பொழுதும் தொடர்புடையதாகவே இருத்தலாம். உதாஹரணம்—சங்க: பாண்டர ஏவ=சங்கு

வெளுப்பாகவே இருக்கிறது: இங்கு தேற்றத்தினால் சங்கு எப்பொழுதும் வெண்மையாகவே இருக்கும்; சங்குக்கு வெண்மையின் ஸம்பந்தம் இல்லாதிருத்தலாகிற அயோகத்தை விலக்குகிறது ஏவகாரம்.

அந்யயோகவ்யவச்சேதம் — மற்றொன்றோடு ஸம்பந்தத்தை விலக்குதல். பார்த்த ஏவ தநுர்தர: பார்த்தனே வில்லாளி. பார்த்தனைத் தவிர மற்றொருவன் (உண்மையில்) வில்லாளி அல்ல. இங்கு தேற்றம் பார்த்தனைத் தவிர்த்த மற்றவனுக்கு வில்லாளித் தன்மையை விலக்குகிறது. எனவே ப்ரணவத்திலுள்ள ஏவகாரம் அயோகவ்யவச்சேதம் என்று கொண்டு சேஷத்வ ஸம்பந்தம் இல்லாமையை விலக்குமே ஒழிய சரீரத்வத்தை விலக்காது. எனவே சேஷத்வம் போன்று சரீரத்வமும் உண்டு.

## (B—17)—140 : ஸௌபரி வ்ருத்தாந்தம்

(வி. பு. அம்சம் 4-அத்-2) : ஸூர்ய வம்சத்தில் யுவனாச்வ மஹாராஜாவின் பிள்ளை மாந்தாதா. இவர் மனைவியின் பெயர் பிந்துமதீ. இத்தம்பதிகட்கு மூன்று புதல்வர்களும் 50 பெண்களும் உண்டு. மாந்தாதா பூமண்டலம் முழுவதும் ஆண்டு வந்தார். இவர் காலத்தில் ஸௌபரி எனும் முனிவர் காட்டில் ஒரு குளத்தினுள் 12 வருடகாலம் தவம் புரிந்து வந்தார். அக்குளத்தில் சம்மதன் எனும் ஒரு மீன் அரசனும் தன் புத்ர-பௌத்ர தௌஹித்ர மீன்களுடன் வாழ்ந்து வந்தான். இம்மத்ஸ்ய ராஜன் தன் மனைவிகளுடனும் பிள்ளை பேரன்களுடனும் ஓடியாடித் திரிந்து இன்பமாக வாழ்ந்து வந்தான். இதைக் கண்ணுற்ற தவ முனிவரான ஸௌபரியின் மனமும் கலங்கியது. 'நாமும் மணம் புரிந்து கொண்டு மனைவி மக்களுடனும் ஏன் ஸுக போகமாக வாழக்கூடாது?' என நினைத்தார். உடனே அக்குளத்தினுள்ளேயிருந்து வெளியே வந்து சற்றே யோசித்தார். மீன் இனத்தைச் சேர்ந்தவன் மனைவி, பிள்ளை குட்டிகளோடு சுகபோக வாழ்வு வாழ்ந்து மகிழும்போது ஆறறிவு படைத்து, வாழும்வகையறிந்த நாம் ஏன் அவ்வின்பத்தைத் துறக்கவேண்டும் என எண்ணியவராய் பெண்ணை விரும்பி அரசனை அணுகினார். அரசனும் முனிவருக்குரிய மரியாதைகளைச் செய்து ஆஸனம் அளித்தார்.

முனிவர்: "அரசே! உம்மிடம் வந்தவர் வெறும் கையோடு திரும்புவதில்லை. உமக்கு 50 பெண்கள் இருப்பதாக அறிகிறேன். அவர்களுள் ஒரு பெண்ணை எனக்குத் திருமணம் செய்து கொடுப்பீராக" என்றார். ஒரு பருவ மங்கையை கிழத்

தனத்தினால் தோல் சுருங்கி, மடிந்து அழகொழிந்த முனிவருக்கு எங்ஙனம் அளிப்பது ? அளிக்காவிடில் சபிப்பாரே என அஞ்சிய அரசர் பேசலுற்றார். "முனிவரே ! எங்கள் வம்சத்தில் நாங்களே கன்னிகையை தானம் செய்வது மரபல்ல. ஸ்வயம்வரத்தில் பெண் யாரை வரிக்கிறாளோ, அவருக்கே அவளைக் கொடுப்போம்" என்றார். முனிவர்:— "அப்படியாகில் என்னை அந்தப்புரத்திற்கு அழைத்துச் செல்லுங்கள், என்னை விரும்பும் பெண்ணை நான் மணக்கிறேன்" என்றார். அரசன் கட்டளைப்படி அந்தப்புரக் காவலன் முனிவரை அழைத்துச்சென்று "ராஜகுமாரிகளே! இந்த ப்ரஹ்மர்ஷியை யார் மணக்க விரும்புகிறீரோ அவளை அவருக்கு மணம் முடிப்பதாக அரசர் கட்டளை" என்றான். முனிவர் உள்ளே நுழையும்போது தேவ கந்தர்வர்களை நிகர்த்த மிக அழகிய,உருவத்துடன் சென்றார். காட்டில் யூதபதியான கஜராஜனை பெண் யானைகள் சூழ்வதுபோல அரசகுமாரிகளும் "நானே இவரை மணப்பேன்" என ஒவ்வொருவரும் முனிவரின் கையைப்பிடிக்கப் போட்டியிட்டனர். இதை அந்தப்புரக்காவலர் அரசரிடம் விண்ணப்பித்தார்.

மாந்தாதா வேறு வழியின்றி தனது ஐம்பது பெண்களையும் ஸௌபரிக்கு முறைப்படி திருமணம் செய்துகொடுத்தார். மனைவிகள் அனைவரையும் அழைத்துக்கொண்டு காட்டிற்குச் சென்றார் ஸௌபரி. பிரமனைப்போல் தானும் விச்வகர்மாவை அழைத்து ஐம்பது பேருக்கும் தனித்தனியாக 'அரண்மனைகளைக் கட்டிக் கொடும் என்றார். ஒவ்வொன்றிலும் அழகிய தடாகங்களும், அவற்றில் மலர்ந்த தாமரைகளும், இனிது கூவும் அன்னப் பறவைகளும், மற்ற நீர்ப்பறவைகளும் இருக்கவேண்டும். திறந்த வெளிகளும், உபவனங்களும், உயர்ந்த படுக்கை அறைகளும் இருக்கவேண்டும். உமது சிற்பக்கலைத்திறன் அவற்றில் மிளிரவேண்டும் என்றார். உயர்ந்த போஜனவகைகள் எப்பொழுதும் தயாராக இருக்கட்டும் என்றார். இவ்வாறு நிர்மாணிக்கப் பட்ட அரண்மனைகளில் மிக இன்பமாக இல்லற வாழ்க்கையை நடத்திவந்தார் ஸௌபரி.

ஒரு நாள் பெண்களைப் பார்க்கவந்த அரசர் பெண்களின் உல்லாஸ வாழ்க்கையைக் கண்டு மகிழ்ந்தும் பிரமித்தும் போனார். ஒரு பெண்ணிடம் சென்று ஸுகமாக வாழ்கின்றாயா? எனக்கேட்டதற்கு "ஸ்வர்க்கஸுகத்தை அனுபவிக்கிறேன்; ஆயினும் ஒரே ஒரு துக்கம் என்னை வாட்டுகிறது. அதாவது; உமது மருமகன் என்னோடேயே வாழ்ந்து வருகிறார். என் சகோதரிகள் புருஷனைக் காணாது படும் துயரை எங்ஙனம்

தாங்குவார்கள்?'' என்றால் இவ்வாறே ஒவ்வொரு பெண்ணும் சொன்னார்கள். இதை அறிந்து வியப்பில் ஆழ்ந்தார் அரசர். மேலும் முனிவரின் தபோபலத்தை நினைத்துப் பரவசராய் அவரை வணங்கி தன்யரானார்.

நாளடைவில் முனிவருக்கு 250 பிள்ளைகள் பிறந்தார்கள். பின்னர் பேரன், பேத்திகள் இவர்களோடு பேசி, சிரித்து, விளையாடி மகிழ்ந்து வந்தார். ஆனால் ஒரு ஆசை நிறைவேறியதும் வேறு ஆசைகள் தோன்றுகின்றன. அவை நிறைவேறியதும் வேறு வகையான ஆசைகள். இதற்கு முடிவே இல்லையே! மீனரசனைப் பார்த்து ஏமாந்தேன்; தவத்தை இழந்தேன் என வருந்தி, மனைவிகளுடன் காடு சென்று, வானப்ரஸ்தராய் சிறிது காலம் வாழ்ந்து, பிறகு ஸந்யாஸியாகி, பரமனையே த்யானித்துப் பரமபதத்தை அடைந்தார். (வி-பு. 4-2-69 to 113)

## (B—18)—146: ஏகஜீவவாதம்

(B—7)ல் அத்வைதமதம் என்ற தலைப்பில் பார்க்கவும்.

## (B—19)—150: ப்ரதர்தந – வித்யா-ந்யாயம்

ப்ரதர்தநன் இந்திரனுக்குப் போரில் உதவி புரிந்தான். அதற்குக் கைம்மாறாக இந்திரன் அவனுக்கு ப்ரஹ்மவித்யையை உபதேசித்தான. அதில் ப்ராணன், இந்திரன் (தான்) ஆகியவற்றை சரீரமாக உடைய பரமாத்மாவை ஆநந்தம் முதலிய குணங்களுடன் உபாஸிக்கச் சொன்னான். இது ப்ரதர்தந வித்யை எனப்படுகிறது. சேதநா சேதநங்களை சரீரமாக உடைய பகவானை ப்ரதர்தந வித்யையில் உபாஸிப்பது போல், ஒரு ஜீவாத்மாவை ஆவேசித்திருக்கும் பரமாத்மாவுக்கே ப்ரதிஷ்டை, அர்ச்சனை முதலியவைகள் ஆவேசாவதாரங்களில் (உதாஹரணம் —பரசுராமாவதாரம்) கூடும்.

## (B—20)—188 : வைநதேயர் தன் தாயை அடிமைத் தளையிலிருந்து மீட்ட விருத்தாந்தத்

[பார. (அநு-அத்யாயம் 21 to 29)] தக்ஷப்ரஜாபதிக்குக் கத்ரு-விநதை என்ற இரண்டு மனைவியர் உண்டு. கத்ருவும் விநதையும் தத்தம் மேனியழகைப் பற்றி வழக்காடுவது உண்டு. கத்ருவுக்குப் பாம்புகள் புதல்வர்கள். விநதைக்குக் கருடன் புதல்வராகப் பிறந்தார். இந்திரனுடைய குதிரையான உச்சைச்சிரவஸ் வெண்மை நிறமுள்ளது. அதன் நிறத்தைப் பற்றி அவ்விருவருக்

கும் விவாதம் மூண்டது. கத்ரு அக்குதிரையின் வால் கறுப்பு என்றாள். விநதை வெண்மையான உடலின் ஒரு கூறுன வாலும் வெண்மையே என்றாள். மறுநாள் குதிரையை நேரில் கண்டு இருவரும் உண்மையைக் காணவேண்டுமென்று முடிவு செய்தனர். மேலும் தோற்றவர் வென்றவருக்கு அடிமையாக வேண்டுமென்று பணயமும் வைத்தனர். வஞ்சக நெஞ்சினளான கத்ரு இரகசியமாய்த் தன் புதல்வரிடம் தங்கள் ஒப்பந்தத்தைக் கூறி அக்குதிரையின் வாலை சுற்றிக்கொண்டு கருமை நிறம் காட்டுமாறு கூறினாள். கார்க்கோடகன் என்னும் பாம்பு அக்குதிரையின் வாலைச் சுற்றிக் கொண்டு கருமையாகக் காட்டியது. அவ்விருவரும் நேரில் வந்து கண்டனர். நடந்த சூதினை அறியாத விநதை தன தோல்வியை ஏற்றுக் கத்ருவுக்கு அடிமையானாள். பின்பு ஒருகால் நாரத பகவானிடமிருந்து நடந்த விஷயங்களைத் தெரிநது கொண்ட கருடபகவான், கத்ருவை அணுகித் தன் தாய்க்கு விடுதலை அளிக்குமாறு பணிவுடன் வேண்ட, அவளும் தேவர்களிடமுள்ள அமுதத்தைக் கொண்டுவந்து கொடுத்தால் விநதையை அடிமைத்தளையினின்றும் விடுவிப்பதாகக் கூறினாள். பின் தேவலோகம் சென்று அங்கு மூண்ட போரில் தேவர்களை வென்று அமுதத்தை எடுத்துவந்து கத்ருவிடம் கொடுத்துத் தன் தாயின் அடிமைத்தளையை அகற்றினார் கருடபகவான். தன் தாயை வஞ்சனையால் கத்ரு வென்றதால் அமுதத்தை அவளிடம் விட்டுவைக்காமல் அதை எடுத்துக் கொண்டு போய் மீண்டும் இந்திரனிடமே கொடுத்து விட்டார்.

## (B—22)—270 ஸாலோக்யம்-ஸாமீப்யம் - ஸாரூப்யம்-ஸாயுஜ்யம்

*விளக்கத்திற்கு ரஹஸ்யார்த்த விவரணம்—பக்கம் 139ஐப் பார்க்கவும்.*

## (B—23)—276 : பாவாந்தரம் அபாவமான பக்ஷம்

*விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின்படி ஒரு வஸ்து இல்லை (அபாவம்) என்றால், அது மற்றொரு வஸ்து உள்ளதைக் குறிக்கிறது. அதாவது "வஸ்து இல்லை" என்பது தனி வஸ்துவாக மாட்டாது. உதாஹரணம்: 'தரையில் குடமில்லை' என்றால் 'தரை உள்ளது' என்பது விளங்குகிறது. 'குடமில்லை' என்பது ஒரு தனி வஸ்துவன்று. ஆனால் தார்க்கிகர்கள் "ஒரு வஸ்துவின் அபாவம்" (இல்லாமை) என்பதைத் தனி வஸ்துவாக ஒப்புக் கொள்கின்றனர்.*

பாவம் போல் அபாவமும் தனி பதார்த்தம் என்பது தார்க்கிகபக்ஷம். எல்லா அபாவமும் ஏதேனும் பாவமேயாகும் என்று தனி அபாவத்தை ஏற்காதவர் வேதாந்திகளும், மீமாம்ஸகர்களும்.

தார்க்கிகர்கள் துக்க நிவ்ருத்தியே மோக்ஷம் என்பர்; ஆனால் இஷ்டப்ராப்தியை இசையவில்லை. எனவே மோக்ஷம் என்பது ஜடப்பொருளுக்குச் சமமான நிலையாகும். ஸாங்க்யர்கள் 'ஆத்மா ஞான ஸ்வரூபமானது. மேலும் ஸ்வயம் ப்ரகாசமானது' என்கிறார்கள். ஆனால் ஆத்மாநுபவமாகிற இஷ்டப்ராப்தியை ஒப்புக்கொள்ளவில்லை. விசிஷ்டாத்வைத மதத்தில் அநிஷ்ட நிவ்ருத்தியே இஷ்டப்ராப்தியானாலும், தார்க்கிக, ஸாங்க்ய மதங்கள் தவறானவை என்பதை உணர்த்தத் தனியாக இஷ்ட ப்ராப்தியைப் பிரார்திக்கவேண்டும் என தனித்துச் சொல்லப் படுகிறது. மேலும் ஸ்வர்க்க ப்ராப்தி இஷ்டப்ராப்தியேயானாலும், அங்கு துக்க ஸம்பந்தமும் உண்டு. அதேபோன்று மோக்ஷமும் ஆகலாம் எனும் ஐயத்தைப் போக்க ஸர்வாநிஷ்ட நிவ்ருத்தியை யும் பிரார்த்திக்கவேண்டும். எனவே மேற்கூறியவற்றினின்றும் வேற்றுமையைத் தெளிவுபடுத்தவே இரண்டையும் கூறிய தெனக் கொள்க.

## (B—24)—278 : प्रध्वंसाभावம்

இல்லை என்பது அபாவம். குடம் நஷ்டமாயிற்று; குடம் உடைந்தது என்கிற ப்ரதீதிகளில் விஷயமாவது ப்ரத்வம்ஸ மாகும்; அதாவது, பொருளின் அழிவைக் குறிக்கும். ஒரு பொருள் உண்டாகப் போகிறது என்றால் அப்பொழுது அப்பொருள் இல்லை இதை ப்ராகபாவம் என்று சொல்லுவர். ஒருபொழுதும் ஒருபொருள் இல்லை (உதாஹரணம்—முயற் கொம்பு இல்லை) என்பதை அத்யந்தாபாவம் என்பர். குடம் ஆடை இல்லை; ராமன் கிருஷ்ணன் அல்ல என்பவை அந்யோந் யாபாவமாகும்.

## (B—25)—290 : த்ருஷ்டி விதி

உண்மையில் இல்லாததை இருப்பதாக ஏறிட்டு உபாஸிப் பதை த்ருஷ்டி உபாஸநம் என்பர். விஷம் தீண்டியவன் தன்னை கருடனாக ஏறிட்டு உபாஸித்துக் கொள்ளவேண்டும் என்பது போல, சாஸ்த்ரங்கள் ஒரு பலனுக்காக ஒரு த்ருஷ்டியை விதிக்கும். ப்ரஹ்மமல்லாத வஸ்துவை ப்ரஹ்மமாக ஏறிட்டு உபாஸிப்பதை ப்ரஹ்ம த்ருஷ்டி என்பர்.

## (B—26)—301 : அநுவாதமும் விதியும்

அநுவாதம்—முன்பே நிகழ்ந்திருப்பதைக் கூறுதல்; விதி—கட்டளையிடுதல். உதாஹரணம்: (1) ''புக்த்வா சாந்த்ராயணம் சரேத்''(சாப்பிட்டு சாந்த்ராயண வரதத்தைச் செய்யவேண்டும்) என்கிற இடத்தில் 'புக்த்வா' என்பது நிஷித்த போஜனத்தை அநுவதிக்கிறது (விதிக்கவில்லை). அதாவது, ''நிஷித்த போஜனத்தைச் செய்தால் சாந்த்ராயண வ்ரதத்தைச் செய்'' என்று ப்ராயச்சித்தத்தை விதிக்கிறது. இதற்கு ''நிஷித்த போஜனத்தைச் செய்துவிட்டு சாந்த்ராயண வ்ரதத்தைச்செய்'' என்று பொருளல்ல. எனவே 'புக்த்வா' என்பது நிஷித்த போஜனத்தை அநுவதிக்கிறது; விதிக்கவில்லை. ஆனால் 'ஸ்நாத்வா புஞ்ஜீத' (குளித்துச் சாப்பிடு) என்கிற இடத்தில் 'ஸ்நாத்வா' என்பதற்கு ''ஸ்நாநம் செய்துவிட்டு'' என்று பொருள். இவ்விடத்தில் க்த்வா ப்ரத்யயத்திற்கு விதிரூபமான பொருளே கொள்ளத்தக்கது. 'ஸர்வ தர்மான் பரித்யஜ்ய' என்பதில் பரித்யஜ்ய என்பதற்கு எல்லாத் தருமங்களை (அசக்தியால்) விட்டிருக்கிற நீ' என்ற அநுவாதரூபமான பொருளே கொள்ளத்தக்கது. ''எல்லாத் தர்மங்களையும் விட்டுவிட்டு'' என்ற பொருள் கொள்ளத்தக்கதன்று. 'எல்லாத் தர்மங்களையும் விட்டிருக்கிற' என்று கூறுவதை அநுவாத பக்ஷம் என்றும், ''எல்லாத் தர்மங்களையும் விட்டு விட்டு'' என்று கூறுவதை விதிபக்ஷம் என்றும் கூறுவர்.

## (B—28)—348 : உத்ப்ரேக்ஷை

உத்ப்ரேக்ஷை—என்றால் ஸம்பாவநா, அதாவது ஊஹிப்பது. தாமரை தண்ணீரில் வளர்ந்து மலர்கிறது. இது இயற்கை. இங்கு தாமரை ஆழமான தண்ணீரில் நின்றுகொண்டு தவம்புரிகிறதோ என்று கவிஞன் இல்லாத ஒன்றை இருப்பதாக ஊஹிக்கிறான். அது ஏன் தவம் புரியவேண்டும்?—எனில், எம்பெருமானுடைய திருவடியின் அழகைப் பெறவேண்டும் என்பதற்காக. எனவே பரமனின் திருவடியழகைப் பெற தாமரை தண்ணீரில் தவம் புரிகின்றது போலும் என ஊஹிப்பது உத்ப்ரேக்ஷையாகும்.

## (B—29)—359 : வ்யஷ்டிஸ்ருஷ்டி—வ்யஷ்டிஸம்ஹாரம்

எம்பெருமான் ப்ரக்ருதியிலிருந்து மஹத்-அஹங்காராதி க்ரமத்தில் பஞ்ச பூதங்களை ஸ்ருஷ்டித்து அவற்றைப் பஞ்சீகரணம் செய்து பிறகு ப்ரஹ்மாண்டத்தையும், தனது நாபீகமலத்தில் சதுர்முகப்ரஹ்மாவையும் ஸ்ருஷ்டிக்கிறான். இது வரை உள்ள ஸ்ருஷ்டிக்கு ஸமஷ்டி ஸ்ருஷ்டி என்று பெயர்.

இதற்குப் பிறகு எம்பெருமான் நான்முகனை அண்டாதிபதியாக்கி, அவனிடம் அனுப்ரவேசம் செய்து, அவனை வ்யாஜமாகக் கொண்டு, உலகங்களையும்-கர்மானுகுணமாக ஜீவராசிகளையும்-மற்றப் பொருட்களையும் ஸ்ருஷ்டிக்கிறான். இதற்கு வ்யஷ்டி ஸ்ருஷ்டி என்று பெயர். எனவே ப்ரஹ்மா வ்யஷ்டி ஸ்ருஷ்டி அதிகாரி என்று வழங்கப்படுகிறார்.

[ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யத்தில் ஈக்ஷதி கர்மாதிகரணத்தில் சதுர்முகனை ஜீவ ஸ்ருஷ்டி ரூபன் என்றும், ஸம்ஞாமூர்த்தி க்லுப்தி அதிகரணத்தில் ஜீவஸமஷ்டிபூத ஹிரண்யகர்ப சரீரகனாய் எம்பெருமானே நாமரூபவ்யாகரணம் பண்ணுகிறான் என்றும் ஸாதிப்பதால், ஜீவ ஸமஷ்டிரூபனான சதுர்முகன் ஸமஷ்டி ஸ்ருஷ்டியில் அடங்கியவன்].

பாதாளம் முதலிய கீழுலங்கள், பூமி, புவர் லோகம், ஸுவர் லோகம் ஆகியவற்றை 'நைமித்திக' ப்ரளயத்தின் போது ருத்ரரூபியாக இருந்து கொண்டு எம்பெருமான் ஸம்ஹாரம் செய்கிறான். இது வ்யஷ்டி ஸம்ஹாரம் எனப்படும். எனவே ருத்ரன் வ்யஷ்டி ஸம்ஹார அதிகாரி என வழங்கப்படுகிறான். ப்ராக்ருத ப்ரளயத்தின் போது எல்லா உலகங்களையும் அழித்து ப்ரக்ருதியையும் ஜீவர்களையும் தன்னிடம் லயமடையச் செய்கிறான் எம்பெருமான். இது ஸமஷ்டி ஸம்ஹாரம் எனப்படும்.

## (B—30)—359 : கைமுதிக ந்யாயம்

(கிம் உத=கேட்கவும் வேண்டுமோ?) ருத்ரன் முதலான எல்லோரையும் பிரமன், படைத்தான்; அந்த பிரமனை நாராணயன் படைத்தான் என்கிறது வேதம். பிறரைப் படைத்த பிரமனே படைக்கப்பட்டவன் என்று தெரியும் போது, சிவன் முதலிய மற்றவர்கள் படைக்கப்பட்டவர் என்று சொல்லவும் வேண்டுமோ ?

## (B—31)—402 : ப்ரஹ்மாண்டபர்யந்தமாக ஸ்ருஷ்டித்து

விளக்கத்திற்கு (B—29)ஐப் பாக்கவும்.

## (B—32)—418: ஸரஸ்வதியின் ப்ரணய கலஹத்தின் காரணம்

ஒரு காலத்தில் ப்ரஹ்மாவின் ஸபையில் தேவர்களும் முனிவர்களும் நிறைந்திருக்கும் போது 'லக்ஷ்மீ-ஸரஸ்வதீ ஆகிய இரு

வருள் சிறந்தவர் யார்?' என்று விவாதம் வந்தது. அப்பொழுது ப்ரஹ்மா எம்பெருமானுடைய திருமார்பில் வஸிக்கும் பெருமை வாய்ந்த லக்ஷ்மியே சிறந்தவளெனக் கூறினன். அதைக் கேட்டு மிக வருந்திய ஸரஸ்வதீ தன் அம்சமாக பூமியில் பெருகுகின்ற ஸரஸ்வதீ நதியையேனும் நதிகளில் சிறந்ததாகக் கொள்ள வேண்டுமென்றாள். அதற்கு ப்ரஹ்மா எம்பெருமானது திருவடியினின்று அவதரித்த கங்காநதியைக் காட்டிலும் சிறந்த நதி இல்லையென்றான். இதைக் கேட்டுத் தன் கணவன் மீது கோபம் கொண்ட ஸரஸ்வதீதேவி ஸரஸ்வதீ நதிக்கரையில் தவம் புரிந்தாள்.

## (B—33)—425: கச்சிதனில் கண்கொடுத்த வரலாறு

பூவிருந்தவல்லியை அடுத்துள்ள தாசரதிப்பேட்டை எனப் படும் ஸ்ரீ முதலியாண்டான் ஸந்நிதியில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்கு ஹரிதவாரணர் எனத் திருநாமம் திருக்கச்சி நம்பிகளின் பிதாமஹர் ஒரு பாகவதோத்தமர். ஹரிதவாரணப் பெருமாளுக்குத் தொண்டு புரிந்து வந்தபடியால், சேஷத்துவமே நிருபகமாக இவருக்கு ஹரித வாரண ப்ருத்யர் (பச்சை வாரணப் பெருமாள் தாஸன்) என்ற திருநாமம் வழங்கிற்று. பிறவிக் குருடரான இவர் ஒரு முறையேனும் காஞ்சி ஸ்ரீதேவாதிராஜனின் திவ்ய ஸௌந்தர்யத்தை அநுபவிக்க விரும்பியபடியால், நம்பிகள் மூலம் இவரை காஞ்சிக்கு வரச்செய்து, இவருக்குக் கண் பார்வையை அருளினர் பேரருளாளன்.

[கை, கால் இல்லாத சங்கர் என்பவரும், குருடரான அவரது ஸஹோதரர் லிகிதர் என்பவரும் காஞ்சி பேரருளாளனை உபாஸித்து அவனருளால் கைகால்களையும் கண்பார்வையையும் முறையே பெற்ற வரலாறும், பிறவிச் செவிடர் காது கேட்டு மகிழ்ந்த வரலாறும், மகப்பேறு அற்ற ஒரு அந்தண தம்பதியர் மகப்பேறு பெற்ற வரலாறும் காஞ்சீ மாஹாத்ம்யத்தில் கூறப் பட்டுள்ளன.]

## (B—34)—434 : மொய்ம்மாம் பூம்பொழில்

'மொய்ம்மாம் பூம்பொழில்' என்று தொடங்கும் நம்மாழ்வார் அருளிச் செய்த இப்பதிகம் திருவாய்மொழியில் 3வது பத்தில் 6வது பதிகம். எம்பெருமானையும் அவனது ஆச்ரிதவாத்ஸல்யம் முதலான குணங்களையும் அநுபவித்து மகிழ்ந்த ஆழ்வார் அவ்வநுபவத்தைப் பெற்றவர்களைக் கொண்டாடியும் இழந்தவர்களை நிந்தித்தும் பேசுகிறார் இதில்.

1—பொய்கையில் முதலைவாயில் சிக்கித் தவித்த யானையைக் காத்து அருள்புரிந்தவன் எம்பெருமான். யானையைக் காத்தது போலவே வாத்ஸல்யத்தினால் அடியார்களைக் காக்கும் இயல்பினன் என் கண்ணன். அவனைத் துதித்துப் பாடி அந்த மகிழ்ச்சி உள்ளடங்காமல் எழுந்தும்-பறந்தும், துள்ளாமலும் இருப்பவரால் தனக்கும் மற்றவருக்கும் என்ன பயன்? (2)—மக்களைத் துன்புறுத்தி அவர்களை உணவாகக் கொள்ளுபவர் அசுரர்கள். அவர்களுக்குத் தீங்கு இழைப்பவன் திருமால். திருமாலின் அநுபவத்தால் மகிழ்ந்து அம்மகிழ்ச்சிக்குப் போக்குவீடாகப் பாடியும், பறந்தும், கூத்தாடியும் திரியாதவர்கள் தங்கள் பாவத்தின் மிகுதியால் இவ்வுலகில் மறுபடியும் பிறப்பார்கள். (3)—இந்திரன் கல்மாரிப் பொழிந்த போது கோவர்த்தனமலையை எடுத்து பசுக்களைக் காத்தான் கண்ணன். இத்தகைய உபகாரகனை அன்போடும் ஆர்வத்தோடும் அடிக்கடி சொல்லித் துள்ளாதவர்கள் கொடிய நரகங்களில் அழுந்தி மேலும் மேலும் துன்பங்களை அநுபவிப்பர். (4)—ஏழு எருதுகளை அடக்கி நப்பின்னையை மணந்தான் கண்ணன். அந்த மகிழ்ச்சியில் அவன் உதடுகள் பவளம் போல் சிவந்தன. அவனுடைய திருக்கல்யாண குணங்களைப் பாடாமலும், கைகளைக் கூப்பி நர்த்தனம் பண்ணாமலும், ஆரவாரம் பண்ணித்திரியாமலும் இருப்பவர் சாது சனங்களிடையில் பிறந்திருந்தாலும் பிறவிப் பயனைப் பெறமாட்டார்கள். (5)—கம்ஸன் சாதுக்களை துன்புறுத்தி வந்தான். அவனைத் தொலைக்க எம்பெருமான் கண்ணனாக அவதரித்தான். பூவுலகில் தோன்றிய போதிலும் பரமபதத்தில் போலே அப்ராக்ருத திருமேனியோடு அவதரித்தான். இவனை வேதங்கள் முழுமுதற்காரணம் என்று ஓதுகின்றன. வேதமோதி அதன் பொருளையுணர்ந்தவர் அவனையே எப்போதும் சிந்தித்திருப்பர். வாசுதேவனைப் பாடி வீதிகள் தோறும் துள்ளித்திரியாதவர் சான்றோர் முன்னிலையில் எதை ஜபிப்பார்கள்? (அவர்களுக்கு ஜபிக்க எதுவும் இல்லை.) மனித வுருவம் படைத்தும் அவர்கள் மனிதர்களோ? (6)—தனித் தன்மையுடையவனாய், கருமத்தின் பயனாய் பிறக்காதவனாய், பாற்கடலில் பையத்துயில்பவனாய், அடியார்களைக் காக்க பல்வகைப் பிறவிகளை தன் ஸங்கல்பத்தினாலேயே எடுப்பவனாய், பழம், கருப்பஞ்சாறு, வெல்லம், தேன் போன்று அடியார்க்கு இனியனாயிருப்பவன் எம்பெருமான். பொறாமையின்றி இவனைக் கொண்டாடிக் கூத்தாடுபவர் அறியவேண்டியவை அனைத்தும் அறிந்தவர் ஆவர். (7)—துர்யோதனன் முதலான கௌரவர் நூறு பேரும் பாண்டவர்களிடம் விரோதம் கொண்டு அவர்களைப் பலவகையிலும் துன்புறுத்தினர். தன்னைச் சரணமடைந்த

பாண்டவர் ஐவர்க்கும் அருள் செய்தான் எம்பெருமான். பாரதப் போர் நடத்தி நூற்றுவரையும், நாடு முழுதும் நிறைந்த அவர்கள் படைகளையும் அடியோடு அழித்தான். இதனுல் அவன் புகழ் பரவியது. கண்ணனை நினைக்கும்போது அடியார்களுக்கு கண்களில் நீர் பெருகும்; மனம் கரையும்; உடல் தளரும். சான்ஹேர் வாழும் நாட்டில் எம்பெருமானை எப்போதுமே நினையாமல் மாமிசமலை போல் உடல் பருத்திருப்பவர் என்ன செய்வார்கள்? (8)—குளிர்ந்த நீரோடு கூடிய அருவிகள் பலவுடையது திருவேங்கடம். அங்கு கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானின் பற்பல திருநாமங்களை முறைகெடச் சொல்லி மற்றவர்கள் பித்தரென்று கூறும்படி எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் பலவூர்களுக்குச் சென்றும், செல்லாமலும், உலகத்தார் எள்ளி நகையாடும்படி பகவத் ப்ரேமையால் கூத்தாடுவர் சிலர். இவர்களை நித்யஸூரிகளும் கொண்டாடுவர். (9)—சிலர் கைவல்யம் என்ற புருஷார்த்தத்தை விரும்புவர். இவர்கள் யோகம் செய்து கர்மஸம்பந்தத்தை ஒழிப்பர். இதனுல் இவர்களுக்கு இவருடைய ஜீவாத்ம ஸ்வரூபம் பிரகாசிக்கும். இந்த கைவல்யாநுபவத்தைப் பெறவும் இவர்கள் எம்பெருமானை ஆச்ரயிப்பர். நித்யஸூரிகளுக்குத் தலைவனுய், எல்லா உலகங்களுக்கும் உபகாரகனுய் இருக்கும் எம்பெருமானை உபாஸித்து அற்பமான கைவல்யாநுபவத்தை விரும்பும் இவர்களைத் தவிர மற்றவரெல்லாம் செய்ய வேண்டியது எது எனில், வேறு பயனை நாடாமல், எம்பெருமானை நினைத்து ஆடிப்பாடித் துதிப்பதே. (10)—எம்பெருமான் கருமங்களை செய்விக்கிறுன்; அவற்றின் பலன்களையும் தருகிறுன்; உலகங்களைப் படைக்கிறுன். அழகிய நீலரத்நம் போன்ற நிறத்தையும், அடியார் பால் அன்பால் சிவந்த கண்களையும் உடையவன்; நித்யஸூரிகளால் வணங்கப்படுபவன். இவ்வெம்பெருமானே உபாயமும் உபேயமும் (சாதனமும் நற்பயனும்) என்று திடமாக மனதிலே எண்ணுங்கள். அவன் நினைவால் மனது உருகும்; தான் உயர்ந்தவன் என்றஅஹங்காரம் போகும்; வெட்கத்தையும் விஷயசங்கத்தையும் (உலகத்திலுள்ளவற்றில் பற்று) விட்டு எம்பெருமானைத் துதியுங்கள். இதுவே நாம் செய்யவேண்டியது. (11)—எம்பெருமானே உபாயமும் உபேயமும் என்றிருப்பர் அடியவர். இவர்களுடைய குற்றங்களைப் போக்கி தன் கைங்கர்யத்தைச் செய்வித்துக் கொள்ளுகிறுன் எம்பெருமான். அடியார்களை என்றும் கைவிடாதவன் என்ற புகழுடையவன். நித்யஸூரிகளுக்கு உபகாரகன் ஆழ்வார் அருளிய 1000 பாட்டுக்களில் இந்த பத்துப் பாடல்களும் பகவத்

பக்தி உண்டாவதற்கு விரோதியான கடுமையான பாபங்களை முற்றும் போக்கிவிடும்.

## (B—35)—443: ஆதியுகத்தயன் கண்டிட—பாசுரத்தில் வரும் சரித்திரங்கள்

முதலடியால் பேரருளாளன் யாகவேதியில் அவதரித்து ப்ரஹ்மாவுக்கு அநுக்ரஹம் செய்த காலம் கிருதயுகமெனத் தீர்ந்தது.

1. திரேதா யுகத்தில் பேரருளாளன் யானைக்கு அருள் புரிந்த வரலாறு: மஹா சாந்தன் என்ற அந்தணன் த்ரிகூடமலையின்சிகரத்தில் கொடிய தவம் புரிந்தான். இதையறிந்து தன் பதவிக்குத் தீங்கு வருமோவென அஞ்சிய இந்திரன் அவன் தவத்தைக் கெடுக்க தேவமாதரை அனுப்பினான். அந்தணன் மனம் மாறவில்லை. பின் இந்திரன் தானே யானை வடிவங் கொண்டு பல பெண் யானைகளுடன் அவ்வந்தணனுக்கு எதிரில் விளையாடினான். அதைக் கண்ட அந்தணன் மனவுறுதி குலைந்தான். யானைவடிவத்தையே தானும் பெற்று பல பெண் யானைகளுடன் பலவிடங்களில் திரிந்து விளையாடித் தவநிலையை மறந்தான். பின் ஸாளக்ராமமென்னும் க்ஷேத்ரத்தில் சக்ர தீர்த்தத்தில் மூழ்க நேரிட அப்பொழுது பழைய நினைவு வரப்பெற்று, விஷ்ணு க்ஷேத்ரங்களில் வஸிக்க விருப்பிச் சுற்றி வருங்கால், கோதாவரி நதிக்கரையில் மிருகண்டு முனிவர் யானையாகிய இவனைக் கண்டு பூஜித்துப் புண்ணிய க்ஷேத்ரங்களின் பெருமையைச் சொல்லி வந்தார். அப்பொழுது காஞ்சியே மிகச் சிறந்ததென்று கூறி அங்குள்ள அநந்த ஸரஸ்ஸில் நீராடிப் பேரருளாளனைத் தொழுதால் ஸகல பாபங்களும் ஒழியுமென்றார். அதைக் கேட்ட யானையும் அவ்வாறே செய்தது. தினந்தோறும் 1000 தாமரைப் புஷ்பங்களைப் பறித்துப் பேரருளாளனைப் பூஜித்தது. திரேதாயுகத்தின் கடைசியில் மழையின்றிப் பெரிய பஞ்சம் வந்தது. குளங்கள் வரண்டன. தாமரைப்பூ கிடைக்கவில்லை. பகவானைப் பூஜிக்க இயலாது யானை மிகத் தவித்தது. அப்பொழுது சித்ரகூட மலையிலிருந்து தாமரை மணத்துடன் காற்று வீசியது. அவ்வழிச் சென்று புஷ்பங்கள் நிறைந்த மிகப் பெரியதொரு குளத்தைக் கண்டது. மிக மகிழ்ந்து நீரில் இறங்கிப் புஷ்பங்களைப் பறித்துக் கரையேறும் போது அங்கிருந்த ஒரு பெரிய முதலை யானையின் காலைப் பற்றிக் கொண்டு நீரில் இழுத்துச் சென்றது. உடனே பேரருளாளனைத் தியானித்துச் சரணடைய, அவ்வெம்பெருமானும் கருடன் மீது

ஏறிகொண்டு வந்து முதலையைச் சக்ராயுதத்தால் கொன்று, யானையைக் காத்தான். யானை தன் கையிலுள்ள புஷ்பங்களை அவன் திருவடிகளில் ஸமர்ப்பித்தது. முதலையும் கந்தர்வ சரீரம் பெற்று புண்ய லோகம் சேர்ந்தது. யானை மனித வடிவம் பெற்று நிற்க, எம்பெருமான் அவனையும் கருடன் மீது ஏற்றிக் கொண்டு பாகவதர்களின் பெருமையை வெளிப்படுத்தி, தன்னிடம் சேர்ந்தான்.

2. துவாபரயுகத்தில் பேரருளாளன் ப்ருஹஸ்பதிக்கு அருள்புரிந்த வரலாறு: முன்னொரு நாள் தேவசபைக்குப் பல முனிவர்கள் வந்தனர். அவர்களை இந்த்ரன் உபசரித்து, 'அதிதி பூஜை முதலியவற்றைச் செய்து கொண்டு வீட்டில் இருத்தல் - தீர்த்த யாத்திரை செய்தல் ஆகிய இவ்விரண்டில் எது சிறந்தது' எனக் கேட்டான். முனிவர்கள் முதலாமதே சிறந்ததென்றனர். தேவ குருவான ப்ருஹஸ்பதி முனிவர்களை அவமதித்துப் பேசி இரண்டாமதே சிறந்ததாமென்றார். ப்ருஹஸ்பதி செருக்குடன் கூறிய இம்முடிவைச் சாஸ்த்ர விருத்தமெனக் கண்ட அம்முனிவர் சினந்து ப்ருஹஸ்பதியை பூமியில் பிறந்து துன்புறுமாறு சபித்தனர். அவரும் அவ்வாறே நர்மதா நதிக்கரையிலுள்ள ஓர் ஏழையந்தணன் வீட்டில் பிறந்தார். இளம் வயதிலேயே பெற்றோரை இழந்து வேறோரந்தணனால் சிறிது காலம் வளர்க்கப்பட்டார். பின் உடைக்கும் உணவுக்கும் வருந்திப் பல நோய்களால் அல்லல் பட்டுத் தவம் புரியக் கருதிக் கங்கைக் கரையிலுள்ள பரத்வாஜ முனிவரை நெருங்கிச் சரணமடைந்தார். முனிவரும் தம் ஜ்ஞாந த்ருஷ்டியால் அவருடைய முந்திய வரலாற்றை அறிந்து ஹஸ்திகிரிக்குச் சென்று பேரருளாளனைக் குறித்துத் தவம் புரிந்தால் சாபம் நீங்குமென்றார். அந்தணரும் உடனே காஞ்சிக்குச் சென்று அவ்வாறே செய்ய, பேரருளாளன் ப்ரத்யக்ஷமாகி த்வாபரயுகத்தில் தன்னை ஆராதிக்குமாறு கட்டளையிட்டான். அவர் அங்ஙனே ஆராதித்து, சாபம் நீங்கி, உயர் பதத்தைப் பெற்றார்.

3. கலியுகத்தில் பேரருளாளன் ஆதிசேஷனுக்கு அருள்புரிந்த வரலாறு: முன்னொருகால் எம்பெருமான் வராஹாவதாரம் செய்து பாதாளத்தில் இருந்த அசுரர்களைக் கொன்று பூமியைக் கை தூக்கிவிட்டான். அப்பொழுது எல்லா லோகங்களையும் தன் தலையால் தாங்கி நிற்கும் ஆதிசேஷன் வராஹ வடிவங் கொண்ட எம்பெருமானை ஸேவிக்க விரும்பிப் பூமியைப் பிளந்து கொண்டு பாதாளத்திலிருந்து கிளம்பிவந்தான். வந்த இடத்திலுள்ள நீர்நிலை 'அநந்த ஸரஸ்' எனப் பெயர் பெற்றது. பேரருளாளன் தன்னைக் கலியுகத்தில் ஆராதிக்கும்படி ஆதிசேஷனுக்குக் கட்டளை

யிட்டதால் அவன் அந்த குளத்திற்குச் சமீபத்திலுள்ள ஒரு புற்றில் வஸித்துக் கொண்டு பேரருளாளனை இன்றும் ஆராதித்து வருகின்றான்.

## (B—36)—454 : அஜ்ஞாத-யாத்ருச்சிக-ஆநுஷங்கிக-ஸாமாந்யபுத்திமூல-ஸுக்ருதவிசேஷங்கள்

(i) அஜ்ஞாத ஸுக்ருதம் : (ஸுக்ருதம் = நல்ல செயல்). தானே இது ஸுக்ருதம் என்று அறியாமல் நேருவது. உதாரணம்-"நீ எந்த ஊருக்குப் போகிறாய்?" என்று கேட்டவர்களுக்கு "திருவரங்கம் போகிறேன்" என்று சொல்வது. பகவான் எழுந்தருளியிருக்கும் திவ்யதேசமாகையால் அதன் பெயரைச் சொன்னதும் ஸுக்ருதமாக ஆயிற்று.

(ii) யாத்ருச்சிக ஸுக்ருதம் : எதிர்ராபாமல் நேர்ந்த ஸுக்ருதம். உதாரணம்—மாடுகளை ஒட்டிச் செல்லும்போது நேரும் ஆலய ப்ரதக்ஷிணம்.

(iii) ஆநுஷங்கிக ஸுக்ருதம் : வேறொரு காரியத்தின் பொருட்டு ப்ரவர்த்திக்கும் போது, அப்பிரதானமாகக் கருதிச் செய்யுமது உதாரணம்—ஊருக்குப்போகும் வழியில் சந்தித்த பாகவதரை வலமாகச் செல்வது.

(iv) ப்ராஸங்கிக ஸுக்ருதம் : வேறொரு காரியத்தைச் செய்யும் போது இதுவும் கூட இருக்கட்டும் என்று செய்வது. உதாரணம்—திருமணத்திற்குப் புடவை வாங்கப்போகும் போது, அங்குள்ள கோயிலுக்குப்போய்ப் பெருமாளைச் ஸேவித்தல்.

(v) ஸாமாந்ய புத்திமூல ஸுக்ருதம் : 'நல்ல கார்யம்' என்று நினைத்துச் செய்தபோதும் அது விசேஷ ஸுக்ருதமாக ஏற்படுவது. உதாரணம்—பிறருக்கு உதவி செய்யும் போது அந்த உதவியைப் பெறுபவர் பாகவதராய் இருத்தல்.

## (B—37)—454 : குலிங்க சகுனி வ்ருத்தாந்தம்

சகுனி = பறவை. குலிங்கம் என்னும் பறவை "ஸாஹஸத் தொழில் செய்யலாகாது" என்று சப்தித்துக் கொண்டு, சிங்கம் வாய் திறந்து கொட்டாவி விடும்பொழுது அதின் பற்களின் இடையில் இருக்கும் மாம்ஸத் துண்டத்தைக் கொண்டு வந்து தின்னும். (தன்னுடைய உபதேசத்திற்கு விரோதமான ஆசாரம் இல்லாதவர்கள் ஆசார்யர்கள்.)

## (B—38)—468 : வாடினேன் வாடி, வாணிலா முறுவல், தாயேதந்தை—பதிகங்களில் ஆழ்வார் அருளிச்செய்தது

1. ‘வாடினேன் வாடி’ பதிகத்தில் ஆழ்வார் அருளிச் செய்தது (பெரியதிருமொழி 1ம் பத்து — 1ம் திருமொழி); 1—முதல் பாசுரத்தின் கருத்து பக்கம் 467ல் கொடுக்கப்பட்டுள்ளது. 2—யுவதிகள் விஷயமாக “என் ப்ராணனே! எனக்கு அம்ருதம் போன்று போக்யமானவளே!” என்று இப்படி பலவற்றைச் சொல்லி, அவர்கள் தரும் சிற்றின்பத்தை நினைத்து நீர்ப்பண்டம் போலே கரைந்து, யுவதிகளின் பெருத்த ஸ்தநங்களையே ரக்ஷகமாகக் கொண்டு, பாவியாக நான் இருந்தேன். “ஸர்வேச்வரனே நமக்கு ரக்ஷகன்” என்று அறியாமல் காலமெல்லாம் வீணாயிற்று. திருக்குடந்தையில் ஆராவமுதாழ்வாரை ஸேவித்து நான் உய்யும்படி நாராயணா என்னும் திருநாமத்தை என் நாவினால் காணப்பெற்றேன். 3—க்ஷேமத்தையே விரும்பி அதற்கு வேண்டும் ஸத்கர்மங்களைச் செய்யாமல், பாபங்களையே மேன்மேலும் செய்து, ஸ்த்ரீகளுடைய வடிவழகையே நினைத்து வீணேயொழிந்த அந்தக் காலமெல்லாம் ஊமைகள் கண்ட கனவைக் காட்டிலும் வீணாகப்போயின. ஆதலால் மன்மதனுக்குத் தந்தையாய், நமக்கெல்லாம் ஸ்வாமியாய், தம்மையே சரணாகப் பற்றினவர்களுடைய நெஞ்சில் நீங்காதிருப்பவரான ஸர்வேச்வரனுக்கு வாசகமான நாராயணா என்னும் திருநாமத்தை விஷயசபலனாய்த் திரிந்த நான் உய்யும்படி காணப்பெற்றேன். 4—வெற்றியையே விரும்பி, ரசிக்கும் தன்மையுள்ள ஐச்வர்ய விஷயமாகக் கவலைப்பட்டு, வேல் போன்ற கண்களையுடைய ஸ்த்ரீகளின் புணர்ச்சியையே நினைத்து, ஒன்றிலும் நிலை பெற்றிராத நெஞ்சை உடைய நான், இதற்குப் பரிஹாரம் என்ன செய்வேன்? விஷய ப்ராவண்யனாய்ப் போந்த நான் ஸ்ரீ வராஹப் பெருமானின் அருளாலே செவ்வையாக உஜ்ஜீவிக்கும்படி நாராயணா என்ற திருநாமத்தை அறியப்பெற்றேன். 5—இதற்கு முன் ஆத்மாபஹாரம் என்ற பெருங்களவைச் செய்தேன். மிக்க தீம்பை எப்போதும் செய்து கொண்டிருப்பேன். கண்ட விஷயங்கள் தோறும் அழுந்தியிருந்தேன். ஆயினும் எம்பெருமானது கடாக்ஷத்தை த்ருடமாகப் பெற்றேன். நெஞ்சுமுழுதும் உருகப்பெற்று, குரல் தழுதழுக்கும்படியானேன். உடல் முழுவதும் ஆநந்தபாஷ்யம் பெருகும்படியாக இரவுபகலாக நாராயணா என்னும் திருநாமத்தை அடியேன் அழைத்தவண்ணம் இருக்கிறேன். 6—பரிமளம் வீசுகின்ற சோலைகளாலும் பெரிய மதிள்களாலும் சூழப்பட்ட தஞ்சைமாமணிக்கோயிலை வணங்கி நான் உய்யும்படி நாராயண நாமத்தைக் கண்டு கொண்டேன். அங்குள்ள எம்

பெருமான் எனக்கு ஸ்வாமி; தந்தை; எல்லாவித பந்து; என்னை ஆள்பவன்; என்னுடைய ஆயுள். அவன் அரக்கர் பயப்படும்படி அம்பினால் நெருக்கி அவர் உயிரைப் போக்கின என் ஸ்வாமி. 7—சொல்லும் பொருளும் கைவந்தவர்களே! உங்களுக்குச் சொல்லுகிறேன்; வாருங்கள். இந்நாள்வரையில் ஒருவனுடைய வம்சத்தையும், பிறப்பையும் அறியாத போதும், அவனுடைய முன் நிலைமை—ஸ்வபாவம் இவற்றை அறியாத போதும், அவனைக் கற்பகம் என்றும், புலவர்களை ரக்ஷிப்பவனென்றும் புகழ்ந்து பாடினீர்கள். இனி திருக்குடந்தையை ஆச்ரயிங்கள். நாராயண நாமத்தின் சிறந்த பொருள்களை அறிந்து, அவற்றைப்பாடி உய்வீர்களாக. 8—முன்பு சாஸ்த்ரங்களை நான் கற்கவில்லை. அதனால் ஐம்புலன்கள் ஈடுபட்ட விஷயங்களிலே மனதைச் செலுத்தினேன். இவ்வாறு செய்ததால் அறிவிலியான நான் எந்த நன்மையையும் பெறவில்லை. பெரிதான பூமியிலுள்ள உயிர்களுக்கெல்லாம் துன்பம் தரும் உபாயங்களையே எண்ணித் திரிந்தேன். இப்பொழுது அவற்றை விட்டுச் செல்லவேண்டிய அர்ச்சிராதி மார்க்கத்திற்கு உபாயமாக எண்ணி நாராயண நாமத்தை நல்ல துணையாகப் பற்றினேன். 9—நாராயண நாமம் சொல்பவனை கொண்டாடத் தக்கவனுக்கும்; ஐச்வர்யத்தைத் தரும்; அவர் படுகின்ற துயரங்களையெல்லாம் தரைமட்டமாக்கும்; மோக்ஷத்தைத் தரும்; கிருபையோடு கைங்கர்யத்தைத்தரும்; பகவதநுபவத்திற்கு வேண்டிய சக்தியைத் தரும்; மற்ற எல்லாவற்றையும் தரும்; பெற்ற தாயைக்காட்டிலும் மிகுந்த நன்மைகளைச் செய்யும். (பெற்றதாய்உடலை மட்டும் தந்து போஷிப்பள்; திருமந்திரம் ஆத்மஸ்வரூபத்தை உணர்த்துவதோடு ஆத்மாவையும் உய்விக்கும்.) நன்மைகளைத் தரும் நாராயணா என்னும் சொல்லை நான் கண்டு கொண்டேன். 10—மேகங்கள் ஸஞ்சரிக்கும் சோலைகளையும், வண்டுகள் மொய்க்கும் பெரிய நீர் நிலைகளையுமுடைய மங்கை நாட்டவருக்கு ரக்ஷகமான வாளை உடைய ஆழ்வார் சிறந்த சொற்களால் தொகுத்த தெய்வீகமான இப்பாசுரங்களைக் கொண்டு மரணம் அடையும் போது எம்பெருமானை அழையுங்கள்; துன்பம் வரும்போது அவனை நினையுங்கள்; துன்பமில்லாதபோது சொன்னாலும் இது நன்மையைப் பயக்கும். நம்முடைய பாபங்களுக்கு விஷம் போன்றது நாராயண நாமம்.

2. வாணிலா முறுவல் - திருமொழி (பெரிய திருமொழி: 1ம் பத்து: 6ம் திருமொழி): தம்முடைய நிகர்ஷத்தை அநுஸந்தித்து, தம்முடைய அநந்யகதித்வத்தை விண்ணப்பித்து திரு நைமி

சாரண்யத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் திருவடிகளிலே பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஆழ்வார் சரணமடைவதை இந்தத் திருமொழி விளக்குகிறது. இந்தத் திருமொழியில் கூறப்பட்ட பாபங்களை மாஹாத்மாக்களான ஆழ்வார்கள் செய்யாவிடினும், நம் போன்றோரின் நன்மைக்காக இவ்வாறு திருவாய் மலர்ந்தருளும்படி எம்பெருமான் ஸங்கல்பிக்கப் பிறந்த பாசுரங்கள் இவை. இந்தத் திருமொழியின் கருத்து வருமாறு:

1—நைமிசாரண்யத்தில் எழுந்தருளியிருக்கிற என் ஸ்வாமீ! ஒளியுள்ள நிலவு போன்ற புன்சிரிப்பையும், சிறிய நெற்றியையும், பெருத்த தோள்களையும் உடையவரான ஸ்த்ரீகளின் அழகிய ஸ்தநங்களையே பரமப்ரயோஜநமாக ஆதரித்திருந்தேன். இதனைப் பயனற்றது என்று முடிவு செய்தும் ஸம்ஸாரமாகிற வியாதியைப் போக்கிக் கொள்ள எண்ணமிலிருந்தேன் அறிவற்ற நான். திருவஷ்டாக்ஷரத்தை ஜபித்து ஆராய்ந்தேன். சிற்றின்பத்திலுள்ள தோஷங்களை எண்ணி, யுவதிகளின் போகத்தில் வெட்கமுற்றேன். உன் திருவடிகளைக் கிட்டி வினைகளெல்லாம் விலகி நன்மைபெறச் சரணமடைந்தேன். 2 நைமிசாரணியத்துள் எந்தாய்! சிலம்பை அணிந்து அழகாயிருந்துள்ள பாதங்களையும், கறுத்து நீண்ட கண்களையும் உடைய ஸ்த்ரீகள் விஷயத்தில் பற்றுடையவனாய், தர்மஸ்வரூபியான உன்னை சிறிதும் நினையாமல், இந்திரியங்கள் பொருந்தி அநுபவிக்கிற போகத்தையே மேன் மேலும் பெருகச் செய்து காலத்தை வீணாகக் கழித்து விட்டேன். ஆச்சர்யசெய்கையுடையவனே! உன் திருவடிகளை அடைக்கலமாய்க் கிட்டினேன். 3—நைமிசாரணியத்துள் எந்தாய்! சூதாட்டத்தை மேன் மேலும் செய்து, அந்தப் பணம் போதாதென்று இரவில் துணிவுடன் பலர் வீட்டில் களவைச் செய்தும், சுருண்ட கூந்தலையுடைய ஸ்த்ரீகள் விஷயமான மிகுந்த ஆசையுடையவனாய், கண்ணுக்குத் தோற்றின விஷயங்களில் இஷ்டப்படி நடந்து அவர்களுக்குப் பணிவிடை பண்ணிப் போந்த நான், யமபடர்கள் பண்ணுகிற ஹிம்ஸையை நினைத்து நிலைகுலைந்து நடுங்கினவனாய், தேவரீர் திருவடிகளை வந்து சரணம் புகுந்தேன். 4—நைமிசாரணியத்துள் எந்தாய்! பரிமளம் வீசுகின்ற குழலை உடையளான தன் மனைவியை விட்டு, பிறர் பொருள் - பிறர் மனைவி ஆகிய இவைகளை விரும்பினவர்கள் இறந்தவுடன் யமபடர்கள் பாசம் போட்டுப் பிடித்து ஹிம்ஸித்து ஓரிடத்தில் இருக்கச் செய்து செம்பாலே செய்யப்பட்டதும் நெருப்பு ஜ்வாலை வீசுகின்றதுமான ஒரு பெண் பதுமையை முன்னே நிறுத்தி, "பாவீ! இதை ஆலிங்கனம் செய்யக்கட

வாய்'' என்று சொல்லுகிற சொற்களுக்குப் பயந்து உன் திருவடி அடைந்தேன்.

5—ஏழ்மையினால் துன்புற்று "ஒரு கவளம் சோறாகிலும் இடுங்கோள்'' எனத் தங்கள் வறுமை தோற்றக் கூப்பிட்டு யாசித்தவர்களுக்கு, "உங்களுக்குக் கொடுக்க ஒரு பொருளும் இல்லையே'' என்று கடுஞ்சொல்லாலே தடுத்துச் சொன்னேன் நீசனான அடியேன். ஐயோ! கீழ்ச் செய்த பாபத்தின் பயனின் கொடுமையை அப்போது நினைத்துப் பார்க்கவில்லை. கடுஞ் சொற்களையும், கொடுஞ் செயலையும் உடையவரான யமபட ரால் படப்போகிற மிகக் கொடிய ஹிம்ஸையை நினைத்து, பயந்து நடுக்கமுற்று உன் திருவடியை வந்தடைந்தேன் 6—நல்ல விஷயங்களில் ஈடுபடாத மனதை உடையவனாய், பிறருக்குக் கோபம் உண்டாக்கத் தக்க செயல்களைச் செய்தவனாய், நாய் முதலானவற்றோடு கூட வேட்டையாடிக் களித்தவனாய், பிறரை ஹிம்ஸிக்க நெடுந்தூரம் ஓடி ப்ரயாசப்பட்டும் ப்ராணிகளைக் கொன்றேன். இப்படி ஜ்ஞானமில்லாதவனாய் இருந்தேன் அடியேன். நீ யமனுக்கும் நியாமகனாய் இருப்பதையும், அமுத மளிக்கத் திருப்பாற்கடலைக் கடைந்து உதவியதையும் ஆராய்ந்து உன் திருவடியைக் கிட்டி அடைந்தேன். ஆதலால் யமலோகத் தின் நிலையைப் பெரிதும் அழித்துவிட்டேன்.

7—சாஸ்த்திரங்களால் விலக்கப்பட்டவைகளை மனத்தினால் நினைத்தும், வாயால் சொல்லியும், சரீரத்தால் செய்தும், பிறகு மரணமடைந்தவர்கள் போக வேண்டிய பழைமையான நரக மார்க்கத்தைக் கேட்ட மாத்ரத்திலே நடுங்கி உன் திருவடியைக் கிட்டி அடைந்தேன். 8—"இவனை வருத்துங்கள்'' என்று கலி புருஷன் என்மீது ஐந்து இந்த்ரியங்களையும் ஏவி இனி வாழ முடி யாது; ஏனெனில், பாபத்தில் ப்ரவ்ருத்திக்கச் செய்கிற ஐந்து இந்த் ரியங்கள் என் விஷயத்தில் செய்யவிருக்கும் தீம்புகளை விட்டு, என் நாவினால் இனிய விருத்தங்கள் சேர்ந்ததும் இனிய சொற்களாலா னதுமான பல பாசுரங்களாலே உன் திருவடிகளைத் துதித்து வணங்கி உன் திருவடிகளை அடைந்தேன். 9—மாம்ஸத்தை நடுநடுவே சுவ ராக வைத்து, எலும்பைத் தூணாக நட்டு, மயிராலே மூடப்பட்ட தாய், ஒன்பது துவாரங்களையுடைய குடிசையாகிற இந்த சரீரத்தை விட்டுப் பிரியுங்காலத்தில் உன் திருவடிகளே மறுபிறவியறுத்து உன்னை அடைவிக்கும் உபாயம் என்று எண்ணியிருந்தேன். இப் போது நான் பெற்ற பாக்கியத்தால் உன் திருவடிகளை கிட்டப்

பெற்றேன். 10—இப்படி நைமிசாரணியத்து எம்பெருமானை மனத்தில் நினைத்து பக்தியால் ஆழ்வார் அருளிச்செய்த பாசுரங்களை அர்த்தத்துடன் அநுஸந்திப்பவர்கள் இம்மையில் போகங்களைப் பெற்று, மறுமையில் நித்யஸூரிகளோடு கூடிய வாழ்ச்சி பெறுவர்.

3. தாயே தந்தை—பெரிய திருமொழிப் பதிகத்தில் ஆழ்வார் அருளிச் செய்தது: பெரிய திருமொழி (1—9—1, 11): 1—முதற் பாட்டின் பொருள் பக்கம் 469ல் கொடுக்கப்பட்டுள்ளது. 2—திருவேங்கடமாமலையை வாஸஸ்தானமாக உடையவனாய் என் குற்றங்களை பொறுப்பவனே! மான் போன்ற கண்களையும், மடப்பத்தையும் உடைய ஸ்த்ரீகளது கண் மயக்கிலே அகப்பட்டு, இப்பிரகிருதி மண்டலத்தில் பலவிதமான நரகங்களை அடைவிக்கும் பாபத்தை அடியேன் ஒருவனுமே செய்தேன். தேவரீரைக் கிட்டி தேவரீர் திருவடிகளைச் சரணமாகப் பற்றினேன். அடியேனை அடிமை கொண்டருளவேண்டும். 3—ஸ்ரீ வேங்கடாசலத்தை நிருபகமாக உடையவனே! தேஹாத்மவிவேகம் முதலான ஜ்ஞாநம் ஒன்றும் இல்லாமையால் அநேகப் பிராணிகளைக் கொன்றேன். யாசித்தவர்களுக்கு இனிய சொற்களைச் சொல்லி அறியாதவனான அடியேன் அப்போதே வந்தடைந்தேன். அடியேனை ஆட்கொண்டருள். 4—ஸ்ரீதிருவேங்கடத்திற்கு நிர்வாஹகனே! எல்லாக் குலங்களிலும் பிறந்தும் இறந்தும் இளைத்துப் போனவனாய், ஒரு நன்மையும் இல்லாதவனாய், நல்லதொரு ஸாதநாநுஷ்டானமும் செய்யாதவனாய், பலபிறவிகளையெடுத்துத் துன்புற்றேன். இப்போது உன்னை வந்து அடைந்தேன். அடியேனை ஆட்கொண்டு அருள். 5—திருமலையை வாஸஸ்த்தானமாகக் கொண்டு ஆச்ரிதனான என் போல்வாருக்கு உபகாரனானவனே! வல்லமைபடைத்தவனே! அடியேனை ஆட்கொண்டருள். பற்பல பாபங்களைச் செய்து அவற்றுக்கு வரக்கடவ பலன்களைக் கேட்டு வருந்தினவனாய், தேவரீர் திருவடிகளைப் பின் தொடர்ந்து பக்தி பூர்வகமாக ஆச்ரயிக்கவும சக்தி அற்றவனாய், உன்னை வந்து அடைந்தேன். அடியேனை ஆட்கொண்டருள். 6—திருவேங்கடவா! எல்லா உறவுமுறையும் ஆனவனே! பூமி-நீர்-நெருப்பு-வாயு-ஆகாசம் ஆகிய பஞ்ச பூதங்களால் ஆனதும், புண்ணையொத்த உடலில் அகப்பட்டுப் புலம்பி, மிகவும் இளைத்தவனான அடியேன் உன்னை வந்தடைந்தேன். அடியேனை ஆட்கொண்டருள். 7—வேங்கடவா! பாலகனாய் ஜ்ஞாநமில்லாமல் அநேக கொடிய செயல்களைச் செய்தும், யௌவன பருவத்தை அடைந்த பிறகு பிறருக்கே உழைத்தும் சதிர் கெட்டுப்போன அடியேன் இப்பொழுது உன்னை வந்தடைந்தேன். அடியேனை ஆட்கொண்

டருள். (8)—வேங்கடவா! எம்பெருமானே! அநேக ஜந்மங்கள் உண்டாகும்படி ஸாதநாநுஷ்டானம் பண்ணிப் போந்த அடியேன் தேவரீர் கடாக்ஷத்துக்கு யோக்யனானேன். அத்தாலே தேவரீரைக் காணவேண்டுமென்கிற ஒரு ஆசையால் இந்த பிறவியிலேயே ஜந்மம் த்யாஜ்யம் என்று வருந்தினேன். மாறிமாறி வரும் பல பிறவிகளை ஸஹிக்கமாட்டாதவனாய் உன்னை வந்தடைந்தேன். அடியேனை ஆட்கொண்டருள். (9)—மாயனே! எங்கள் மாதவனே! வேங்கடவா! ஒரு விதமான ஸுக்ருதாதி ஆதாரமும் இல்லாதவனாய் பாபத்தையே பண்ணி அத்தாலே பாபிஷ்டனாய், வேறொரு உபாயத்தையும் அறியாதவனான அடியேன், தேவரீருக்கே அற்றுத் தீர்ந்தவனாய் வந்து அடைந்தேன். அடியேனை ஆட்கொண்டருள். (10)—நித்யஸூரிகளுங்கூட ஸ்துதிக்கும் திருமலையை இருப்பிடமாக உடையவனாய், வேதத்தால் சொல்லப்படுபவனான ஸர்வேச்வரன் விஷயமாக ஆழ்வார் அருளிய இப்பத்துப் பாட்டுக்களை அப்யஸிப்பவர்களின் பாவங்கள் நசித்துப் போகும்.

## (B—39)—476: ஒரு நாயகம், நண்ணுதார் முறுவலிப்ப, கொண்டபெண்டிர்—திருவாய்மொழிகளில் ஆழ்வார் அருளிச் செய்தது

1. 'ஒரு நாயகமாய்' திருவாய்மொழியில் அருளியது: முதல் பாசுரத்தின் கருத்து பக்கம் 476ல் கொடுக்கப்பட்டுள்ளது. 2—பகை அரசர்களைப் பார்த்து "உங்களுடைய தநத்தைக் கப்பமாகக் கொண்டு வந்து கொடுத்துப் பிழையுங்கள்" என்று சொல்லி, உலகத்தை ஆண்ட அரசர்கள் தம் ராஜ்யத்தை இழந்து தங்களுக்கு இனியவர்களாய் போகரஸத்தைக் கொடுத்த ஸ்த்ரீகளை சத்ருக்கள் கைக்கொள்ளும்படி விட்டுவிட்டு, காட்டுக்குப் போய் அதில் கடும் வெயிலில் திரிந்து கஷ்டப்படுவர்கள். ஆகையால் நிலையற்ற இந்த ஐசுவர்யத்தை விரும்பாமல் ச்ரிய:பதியினுடைய திருவடிகளைச் சீக்கிரமாய்ச் சேருங்கள். (3)—சிற்றரசர்கள் தங்கள் காலில் விழுந்து வணங்கும்படியும், முற்றத்தில் முரசங்கள் இடிபோல் சப்திக்கவும் இருந்து அரசண்டவர்கள் இருந்த இடம் தெரியாமல் போவர். ஆகையால் கண்ணன் திருவடிகளைச் சீக்கிரம் ப்ராப்யமாக நினையுங்கள். (4)—இதுவரையில் உலகை ஆண்ட அரசர்கள் எண்ணில் அடங்கார். கடல் அலைகளாலே உண்டுபண்ணப்பட்ட மணல் மேட்டிலிருக்கும் பொடி மணல்களைக் காட்டிலும் பலராய் இருக்கிறார்கள். மேலும் அவர்கள் வம்சத்திலும் ஒருவரும் மீதி இல்லை. ஆதலால் குவலயாபீடத்தைக் கொன்றது போல் ஆச்ரிதர்களின் விரோதி

களை நாசம் செய்கிற கண்ணனுடைய திருவடிகளை வணங்குங்கள். (5)—முன்பு அரசர்களாய் இருந்த போது, "உங்களுடைய கைங்கர்யத்தை நாங்கள் செய்யும்படி திருவுள்ளத்தை அருளிச் செய்யவேண்டும்" என்று ப்ரீதியுடனும் வணக்கத்துடனும் சொன்னவர்களும், அலங்காரத்தையும் மிருதுவான கூந்தலையும் உடைய ஸ்த்ரீகளின் இன்பமான சேர்க்கையாகிய அம்ருதத்தை அழகானதும் - குளிர்ந்ததும் - விசாலமானதும் - புஷ்பங்களால் செய்யப்பட்டதுமான படுக்கையில் அநுபவித்தார்கள் ராஜ்யத்தை இழந்த பிறகு, அதே ஸ்த்ரீகள் மற்றவர்களை அடைந்து இவர்களைக் கண்ணால் பார்க்காமல் அலக்ஷியம் செய்த போதிலும், அந்த அரசர்கள் இடுப்புக்குத் துணி இல்லாமல் ஆசை மிகுதியால் அவர்களிடம் போவர்கள். ஆகையால் ஸ்த்ரீகளின் அநுபவமும் நிலையற்றது. எனவே ஆச்சர்ய சேஷ்டிதங்களைச் செய்யும் எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லி ஆநந்தம் அடையுங்கள். (6)—ஐசுவர்யத்தை அடைந்து வாழ்ந்த வர்களின் வாழ்வு பெரிய மழையில் உண்டாகும் நீர்க்குமிழி போல் சிறிது காலத்திலேயே அழிநதுவிட்டது. மேலும் அவர்கள் இருந்த காலத்தில் செய்த பாபத்தால் தாழ்ந்த கதியை அடைந்தார்கள். இப்படியில்லாமல் ஐசுவர்யம் உண்டானது முதல் இது வரையில் ஐசுவர்யம் ஒரு போதும் நீங்காமல் வாழ்ந்த வர்கள் இல்லை. எனவே நிலையான ஐசுவர்யத்தை அடைய நீங்கள் விரும்பினால் ஆச்ரிதர்களிடத்தில் ஆசையினால் திருப்பாற் கடலில் பள்ளி கொண்டுள்ள ஸ்வாமிக்கு தாஸனாக ஆகுங்கள். 7—சம்பத்து இருந்த காலத்தில் இனிய அறுசுவை உண்டியைச் சாப்பிட்டுப் பசி அடங்கிய பிறகும், தன்னிடத்தில் அன்புள்ளவர் களும் மிருதுவான வார்த்தையுடையவர்களுமான எந்த ஸ்த்ரீ களின் வேண்டுதலாலே மறுபடியும் சிறிது சாப்பிட்டானோ அவன், ஏழையான பிறகு பசித்து, 'எனக்கு ஒரு கவளம் அன்னம் கொடுங்கள்' என்று அந்த ஸ்த்ரீகளின் வாயிற்கதவுகளைத் தட்டிக்கொண்டு திரிவான். ஆகையால் அன்னமும் பானமும் நிலையில்லாதவைகள். எனவே ஜகத்காரணனும் அழகிய காந்தி யுள்ள திருமேனியையுடையவனுமான எம்பெருமானுடைய குணங்களையே அநுபவியுங்கள். 8—ஒருவன் தானத்தைக் கடன்பட்டது போல் செய்து கொண்டு உலகத்தாருக்கு அநுகூல மாயிருந்து, அவர்கள் தன்னைவிட்டுப் பிரியாமல் தன்னைப் பின் தொடரும்படி செய்து, ராஜ்யத்தின் அநுபவத்தை அடைய முயற்சி செய்தாலும், எமபெருமானை அதற்கு உபாயமாக அடையாவிட்டால் அந்த அநுபவம் கிடைக்காது. அது கிடைத் தாலும் வெகுகாலம் அநுபவித்த பிறகு அதில் அலுப்பு உண்டாகி

அதை விட்டுவிடுவர்கள். எனவே எம்பெருமானுடைய திரு நாமங்களை ஓயாமல் சொன்னால் நிலையான பகவதநுபவம் கிட்டும். அதைவிட்டுத் திரும்புகிறதில்லை. 9—வீடு-வாசல்கள்-ஆபரணங்கள் இவைகளில் ஆசையை அடியோடுவிட்டு, புலன்களை வென்று, உடம்பில் செடி வளர்ந்து கெடும்படி அதைக் கவனிக்காமலிருந்து ஸ்வர்க்கத்தை அடைய கடுந்தவம் புரிந்தாலும், எம்பெருமானை உபாயமாகப் பற்ருவிடில் அந்த ஸ்வர்க்கம் கிடைக்காது. அப்படி ஸ்வர்க்கத்தை அடைந்து இனிமையான ஸுகத்தை அநுபவித்தாலும், புண்ணியம் முடிந்தவுடன் அதைவிட்டுத் திரும்புவார்கள். ஆகையால் ஸ்வர்க்கம் முதலிய ஐசுவர்யத்தை விட்டு, எம்பெருமானை ஆச்ரயித்தால், அவைகளை விட்டுத் திரும்புவதில்லை. 10—ஆத்மாவைக் காட்டிலும் வேருன விஷயங்களையெல்லாம் விட்டு, ஆத்மாநுபவத்தையே மோக்ஷம் என்று எண்ணி, மனதை அடக்கி, ஆத்மஸ்வரூபத்தையே தியானிக்க முயன்ருலும், எம்பெருமானை உபாஸிக்காவிடில் விஷயப்பற்று ஆத்மஸ்வரூபத்தைத் தெளிவாகப் பார்க்கமுடியாமல் செய்யும். ஆத்மாவைப் பார்ப்பது உண்டானாலும், மரணகாலத்தில் ஆத்ம ஸ்வரூபத்தை நினைத்து உடம்பை விடாவிடில் ஆத்மாவின் அநுபவம் கிடைக்காது. எம்பெருமானுடைய கைங்கர்யமே உண்மையான மோக்ஷமாதலால் அறிவுள்ளவன் எம்பெருமானையே உபாஸிக்க வேண்டும். 11—ஆழ்வார் தாம் உய்வதற்கு உபாயமாகக் கண்ணன் திருவடிகளின் மேல் சொன்ன ஆயிரம் பாட்டுகளுக்குள் இந்தப் பத்துப் பாட்டுக்களைத் தப்பாமல் படிக்கிறவர்கள், ஆழமான துன்பங்கள் போய், எம்பெருமானுடைய கைங்கர்யமாகிய பெரிய ஸம்பத்தைப் பெறுவர்கள்.

ii. **நண்ணுதார் முறுவலிப்ப என்னும் திருவாய்மொழியில் ஆழ்வார் அருளிச்செய்தது** (திருவாய். 4—9—1, 11): இவ்வுலகிலுள்ளவர்கள் விஷயங்களில் மனதைச் செலுத்தி, அவைகள் கிடைத்தால் மகிழ்ந்தும், கிடைக்காவிடில் வருந்தியும் இருப்பதைப் பார்த்து, அவர்களுடன் கூட இருக்காமல் தம்மை அழைத்துக் கொள்ள வேண்டும் என எம்பெருமானை வேண்டுகிருர் இத் திருவாய்மொழியில். (1)முதல் பாசுரத்தின் கருத்து பக்கம் 477ல் கொடுக்கப்பட்டுள்ளது. (2)—சிலர் அதிக காலம் இருக்க வேண்டும் என்று விரும்பியும் அது முடியாமல் நடுவில் இறப்பதும், இஷ்டமான வஸ்துக்கள் கெட்டுப்போவதும், இவைகளைப்பற்றி உறவினர்கள் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து பூமியில் கிடந்து கதறுகிறதும் ஆகிய இவை உலகியற்கை. அவர்களைப் போல் நானும் இருப்பேனு, அல்லது அப்படியாகாமல் இருப்பேனு என்று நான்

அறியவில்லை. எம்பெருமானே! அடியேனை உன்னுடைய திருவுள்ளத்தில் வைத்து என்னை உன்னிடம் அழைத்துக்கொள். (3)—ஒருவன் மரணம் அடையும் போது உன்னை (= எம்பெருமானை) நினைக்காமல், எல்லாரும் தன்னைக் கொண்டாடியதையும், தன் குலத்தையும், உறவினர்களையும், தனத்தையும், மனைவியையும், வீட்டையும் விட்டுப் போகிறேனே என்று அழுகிறான. இந்த உலக வியாபாரத்தை என்னால் பார்க்க முடியவில்லை. எம்பெருமானே! எனவே உன் திருவடிக்கீழ் வைத்துக் கொண்டு நான் செய்யும் கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்ளவேண்டும். (4)—பொருள்கள், இருக்கும் போது விரோதிகளை உண்டுபண்ணியும், அழியும்போதும் துக்கத்தை விளைவிக்கின்றன. ஆயினும் தமோகுணத்தால் மூடப்பட்ட ஜநங்கள் இன்னும் பொருள் வேண்டும் என்று பாடுபடுகிறார்கள். இஃதென்ன ஸ்வபாவம்! வள்ளலே! மணிவண்ணா! உன்னுடைய ஔதார்யத்தாலும் கிருபையாலும் உன் திருவடிகளின் கீழ் வந்து சேரும்படி இவர்கள் நடுவிலிருந்து என்னை எடுத்து அருளவேண்டும். (5)— அநித்யமான இவ்வுலகில் ஸ்தாவரமாயும் ஜங்கமமாயும் இருக்கிற பிராணிகள் உன்னை விட்டுப் பிரிந்திருக்கிறோமே என்று வருந்த வேண்டியிருக்க, பிறப்பு-மூப்பு-பிணி-இறப்பு இவைகளால் துன்பப்படுகிறார்கள். இறந்தபின் நரகத்தில் துக்கானுபவமும் வருகிறது. இவைகளைப் பொறுத்துக் கொண்டிருக்கிற உலகத்தின் ஸ்வபாவம் என்ன? மணிவண்ணா! அடியேனை மோஹத்தை அடையும்படி செய்யாதே. வைகுந்தத்திற்கு நான் வந்து சேரும்படி என்னை எடுத்து அருளவேண்டும். (6)—உலகத்தில் தீயவர்கள் ஸாதுக்களுக்கு பயத்தை உண்டுபண்ணி, அந்தப் பாபத்தைத் தாங்களே போக்கவல்லர் என அவர்கள் நம்பும்படி செய்து, அவர்களை வசப்படுத்திக் கொண்டு, அவர்கள் தங்கள் பொருளைத் தாங்களே கொடுக்கும்படி துன்புறுத்தியும், அவர்களைக் கொன்று தங்களுடைய வயிற்றை நிரப்பிக் கொள்கின்றனர். எப்பொழுதும் இருக்கிற உபாயமாகச் சொல்லப்பட்ட உன்னுடைய உண்மையை அறிந்து உன்னை அடைவதே பிழைக்கும் வழி என்று நிரூபணம் செய்கிறதில்லை. எம்பெருமானே! பாபியான என்னை வேறொருவனுக்காக இருக்கத் தகாதபடி உன் கைங்கர்யத்திலேயே விருப்பமுள்ளவனாக என்னை பண்ணியிருக்கிறாய். இப்படி ஸம்ஸாரத்தில் வெறுப்பு உண்டான பின்பு என்னை உன்னிடம் அழைத்துக் கொள்ளவேண்டும். (7) — இவ்வுலகிள்ள ஸ்தாவரஜங்கமப் பொருள்களெல்லாம் உன் பொருட்டே உள்ளன. இதை அறிந்து உனக்குக் கைங்கர்யம் செய்து கொண்டிருக்காமல், உன்னை விட்டுப் பிரிந்திருக்கிறோமே என்று வருந்தாமல், பிறப்பு-பிணி-மூப்பு-இறப்பு-மனவருத்தம்

இவற்றால் துன்பப்பட்டுக் கொண்டிருக்கின்றனர். ஆகையால் இவ்வுலகம் கொடுமையானது. இதை நான் பார்த்துக் கொண்டிருக்காமல் என்னை உன்னிடம் அழைத்துக் கொள்ளவேண்டும். (8)—உன்னுடைய லீலைக்கு ஸாதநமான பஞ்ச பூதங்களில் சில பாகத்தைச் சேர்த்து, மற்ற பாகத்தை ஆவரணங்களாகச் செய்து, அவைகளின் நடுவில் நீ ஸ்ருஷ்டித்த அண்டமாகிய கோட்டையை நான் தாண்டும்படி செய்து, அதிக தேஜோரூபமாயும் - ஶுத்த ஸத்துவத்தால் ஆனதும் - பிரகிருதி மண்டலத்திற்கு மேலே இருப்பதுமான வைகுந்தத்தில் உன் திருவடிகளில் என்னை எப்போது சேர்ப்பாய்?

(9)—பிரம்மா முதலிய தேவர்களும் தங்கள் முயற்சியால் உன்னை ஸேவிக்காதபடி செய்து அலையும்படி செய்கிறாய். ஆனால், உன்னை ஆச்ரயித்தவர்கள் எவ்வளவு தாழ்ந்தவர்களாய் இருந்தாலும் அவர்களை உன் திருவடிகளில் சேர்க்கிறாய். இந்த விஷயத்தை நான் அறிந்து கொண்டேன். எப்படியென்றால், மிகத் தாழ்ந்த என்னையும் பிரகிருதியிலிருந்து உண்டான பொருள்களைப் பற்றின ஆசைகளையெல்லாம் விடும்படி செய்து, உனக்குக் கைங்கர்யம் செய்துகொண்டு திரிய உன் திருவடிகளின் அநுபவத்தில் ஆசையுள்ளவனாய்ச் செய்திருக்கிறாய். இவ்வுலகத்தினரையும் இப்படியே செய்தருள வேண்டும். (10)— இப்பாசுரத்தின் கருத்து பக்கம் 393ல் கூறப்பட்டுள்ளது.

(11)—ஸ்ரீய: பதியாய், ஸ்வாமியாய், வாத்ஸல்யாதி கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாய், ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம் செய்கின்றவனாய் இருக்கிற கண்ணன் கழலினை அடைவதை விரும்பி, அவன் திருவடிகளின் மேல் ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரம் பாட்டுக்களுக்குள் இந்தப் பத்துப் பாட்டுக்களும் அவைகளை படிப்பவர்களை அவன் திருவடிகளைச் சேரும்படி செய்யும். எனவே அவன் திருவடிகளைக் கிட்டி அவற்றுடன் ஒன்றி வாழ இவைகளைப் படியுங்கள்.

iii. 'கொண்டபெண்டிர்' திருவாய் மொழியில் ஆழ்வார் அருளிச் செய்தது [திருவாய். (9—1—1, 11)]: உலகில் உள்ளவர்களைப் பார்த்து, ஒவ்வொருவருக்கும் எம்பெருமான் ஒருவனே பந்து; மற்றவர்கள் அல்ல என்பதை இத்திருவாய்மொழியில் ஆழ்வார் சொல்லுகிறார். (1)—உலகத்தில் இருப்பவர்களே! உங்களுக்கு பந்துக்களாக நீங்கள் கருதும் மனைவி-மக்கள்-ஸம்பந்திகள்-ஜ்ஞாதிகள் முதலியவர்கள் உங்களுக்கு உண்மையில் பந்துக்கள் அல்ல.

உங்களிடம் இருக்கும் பொருளோடு ஸம்பந்தம் தவிர, அவர்களுக்கு உங்களிடம் வேறு ஸ்நேகம் சிறிதும் கிடையாது. ஆகையால் ப்ரளயகாலத்தில் எல்லா உலகங்களையும் தன் வயிற்றில் வைத்துக் காத்த எம்பெருமானுக்கு தாஸர்களாய் உஜ்ஜீவிப்பது அல்லாமல் வேறொரு துணை நிச்சயமாக இல்லை. (2)—உங்களுடைய உறவினர்களும், ஆபத்துக் காலத்தில் ஆபத்தைப் போக்கி உங்களைத் தாங்குகின்றவர்கள் போல் தங்களைக் காட்டிக் கொண்டு, உங்களுடைய செல்வத்தை அட்டைகள் உறிஞ்சுவது போல் அநுபவிப்பர். ஆகையால் இவர்கள் பந்துக்கள் என்ற எண்ணத்தை விட்டு விட்டு, சக்ரவர்த்தித் திருமகனை ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்குத் தெப்பமாகப் 'பற்றி உஜ்ஜீவியுங்கள். வேறொருவரை ஆச்ரயித்துப்பயன் இல்லை. (3)—உங்களிடம் பொருளிருக்கும் போது பந்துக்கள் உங்களை ஸ்தோத்திரம் செய்து நீங்கள் கொடுக்கும் பொருளைப் பெற்றுச் செல்வார்கள். உங்களுக்கு ஏழ்மைத்தனம் வந்தால், உங்களால் உபகாரம் செய்யப்பட்ட அவர்களே ''நீ என்ன செய்கிறாய்?'' என்ற வார்த்தையையும் சொல்லமாட்டார்கள். ஆகையால் அவர்களை விட்டுவிட்டு, அஸுரர்களை அழித்த கண்ணனுக்கு தாஸர்களாகிப் பிழைப்பதைத் தவிர உங்களுக்கு வேறு உபாயமில்லை. (4)—ஆபத்துக் காலத்தில் நமக்கு இவர்கள் உதவுவார்கள் என்று பலதடவை எண்ணி அவர்களுக்கு பொருள் கொடுத்து வைத்தாலும், உங்களுக்கு ஆபத்து வந்த காலத்தில் அவர்கள் உங்களுக்கு உதவி செய்ய மாட்டார்கள். ஆதலால் ஒருவரையும் ஆபத்துக்குத் துணையாக நினைக்கவேண்டாம். கண்ணனுடைய கல்யாண குணங்களை ரக்ஷகமாகப் பற்றி பிழைப்பதைத் தவிர வேறு உபாயம் இல்லை. (5)—யௌவனம் இருக்கும் போது எந்த ஸ்த்ரீகள் இனிய பேச்சுக்களைப் பேசி போகத்தைக் கொடுத்தார்களோ அவர்களே யௌவனம் போன பிறகு கடுமையான பேச்சுக்களைப்பேசி அவமதிப்பார்கள்; அவர்களால் இன்பமுண்டாகாது. ஆகையால் தன்னை ஆச்ரயித்தவர்களுக்குத் தன்னையே கொடுக்க விரும்பி வடமதுரையில் பிறந்த கண்ணனை அண்டி கைங்கர்யம் செய்து பிழைப்பதைத் தவிர இன்பம் தருவது வேறில்லை. (6)—எம்பெருமானைத் தவிர வேறு புருஷார்த்தமில்லை என்பதை அறியாமல் எத்தனையோ பேர்கள் இதுவரை பிறந்து இறந்துவிட்டனர். அந்தோ! இவர்கள் காலம் வீணாய்ப் போய்விட்டது, கண்ணனுடைய உயர்ந்த குணங்களைச் சொல்வதைத் தவிர பிழைப்பதற்கு வேறு உபாயமில்லை என்பதே ஸாரமான பொருள். (7)—கண்ணனுடைய கல்யாண குணங்களைச் சொல்ல தேசம், காலம், அதிகாரி ஆகிய நியமமில்லை. இதை மனத்தாலேயே செய்யலாம். அந்தோ

இந்த எளிய உபாயத்தை ஜனங்கள் செய்கிறதில்லையே! (8)—வேறுபயனை நாடாமல், கல்யாண குணங்களையும் ஆச்சர்யமான லீலைகளையும் உடைய எம்பெருமானுடைய திருவடிகளை ப்ரீதியுடன் ஸ்தோத்திரம் பண்ணிக் காலத்தைப் போக்க விரும்பும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவர்கள் விரும்பியது ஈடேறுவதற்காக வடமதுரையில் அவதரித்த கண்ணனுடைய குணங்களையே புருஷார்த்தத்துக்கு துணையாக எண்ணியிருங்கள். இதைக் காட்டிலும் புருஷார்த்தத்துக்கு உயர்ந்த உபாயமில்லை. (9)—கைவல்யத்தைக் காட்டிலும் மேலான புருஷார்த்தமில்லை என எண்ணி அதைப்பெற சிலர் முயல்கின்றனர். கைவல்யம் எம்பெருமானது அநுபவத்தைக் காட்டிலும் மிகமிகத் தாழ்ந்தது. பகவதநுபவம் ஒரு கடல் என்றால், கைவல்யம் அதில் ஒரு துளி போல. ஆகையால் கண்ணனையே ப்ராப்யமாக எண்ணுங்கள். இதைத் தவிர வேறு ப்ராப்யமில்லை. (10) கண்ணனைத் தவிர வேறு ரக்ஷகனில்லை. இப்படி அவன் ரக்ஷகன் என்பது உலகில் நிலையாயிருப்பதற்காகவே அவன் வடமதுரையில் அவதரித்து, பூமியின் பாரத்தை நீக்கி, உலகத்தை ரக்ஷித்தான். உங்களுடையதாக நீங்கள் எண்ணியிருக்கும் வஸ்துக்கள் இருந்தால் அவைகளையும் உங்களையும் அவன் திருவடிகளில் சேஷம் என்று ஸமர்ப்பியுங்கள். இப்படிச் செய்தால் பிழைக்கலாம். உங்களுடையது என்று எண்ணுவதெல்லாம் அவனுக்கே சேஷம். இதில் ஒரு ஸம்சயமும் வேண்டாம். (11) கண்ணனைத் தவிர வேறு ஒன்றுமில்லை. ஆத்மாவும் அதைச் சேர்ந்தவைகளும் எல்லாம் அவனுக்கே சேஷம் என்று நிச்சயித்து கண்ணனைப் பற்றி ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களைப் படிக்க சக்தியுள்ளவர் எம்மை அடிமையாக உடையவர்கள்.

## B—40)—482 நளன் – ந்ருகன் – நகுஷன் இவர்கள் பட்டபாடு

(i) நளன் பைத்தியம் பிடித்து (உன் மாத்தாவஸ்தையில்) காட்டில் திரிந்தது: நளன் நிஷத நாட்டு அரசன். விதர்பநாட்டு அரசன் பீமனுடைய பெண் தமயந்தி. இவள் அழகைக்கண்டு இவளையே மணக்கவிரும்பினான் நாளன். ஸ்வயம்வரம் நடந்தது. இந்திரன் முதலிய தேவர்கள் நால்வர் நளனைப் போன்ற உருவத்துடன் ஸ்வயம்வரத்தில் பங்கு கொண்டனர். ஆனால் தமயந்தியோ நளனுக்கே மாலை இட்டாள். வந்த தேவர்கள் திரும்பும் பொழுது த்வாபர புருஷனைத் துணையாகக் கொண்டு தமயந்தியை மணக்க வந்தான் கலிபுருஷன். அவள் நளனை மணந்ததை இந்திராதிகள்மூலம் கேட்டுச்சீற்றம் கொண்டு, நளனுக்குத் தீங்குசெய்ய

எண்ணி அவன் அரண்மனையில் 12-ஆண்டு காலம் மறைந்து காத்திருந்தான் கலிபுருஷன். ஒருநாள் நளன் மூத்ரவிஸர்ஜனம் செய்து சுத்திசெய்து கொள்ளாமல் கவனக்குறைவால் ஸந்த்யோபாஸநம் செய்தான். இந்தத் தவறை வியாஜமாகக் கொண்டு கலிபுருஷன் நளனைப் பற்றினான். அன்று முதல் நளனைக் கேடு சூழ்ந்தது. நளனின் ஸஹோதரன் வலர்க்ஷன் பொழுது போக்கிற்காக நளனை சூதாட அழைத்தான். அதில் பாண்டவர்கள் போன்று அனைத்தையும் இழந்து தமயந்தியுடன் காட்டு வழியே சென்றான். இருவரும் தாங்க முடியாத பசிதாகங்களினால் துன்புற்று 'களைத்துப் போயினர். எங்கும் உணவு கிடைக்கவில்லை. அப்பொழுது பொற்சிறகு உடைய சில பறவைகள் அருகில் மேய்ந்து கொண்டிருந்தன. அவற்றைப் பிடித்தால் வயிற்றுப்பசியும் தீரும், தங்கமும் கிடைக்கும் என ஆசைப்பட்டு, உடுத்தியிருந்த வஸ்திரத்தை எடுத்து பறவைகள் மீது வீசிப்பிடிக்க முயன்றான். பறவைகளோ இவனைத் துன்புறுத்த வந்ததேவர்கள். இவன் அரைவேஷ்டியையும் எடுத்து வானத்தில் பறந்தனர்; பின்னர் நிர்வாணமாகவே காட்டில் திரிந்தான். தமயந்திக்குச் சேதி நாட்டிற்கும் விதர்ப நாட்டிற்கும் போகும் வழிகளைக் காட்டி அங்கே போய் இரு எனக் கூறி, பசியின் கொடுமையினால் தூங்கினான். தமயந்தி தூங்கும் போது அவளைத் தனியே விட்டுத் துறந்து பித்துப் பிடித்தவனாய் திரிந்தான் நளன். ருதுபர்ணனிடம் சொக்கட்டான் ஆடும் திறனை அறிந்து வலர்க்ஷனோடு மீண்டும் சூது ஆடி ராஜ்யத்தைப் பெற்றான்.

ii நிருகன் விருத்தாந்தம்: (ராமா. உத்தர. 53,54; பாக. 10-64): நிருகன் வைவஸ்வத மனுவின் புதல்வன். இவன் தன் வாழ்நாளில் அந்தணர்கட்கு கோடிக்கணக்கான பசுக்களை தானம் செய்து வந்தான். ஒரு சமயம் ஒருவருக்கு தானம் செய்த பசு திரும்ப அரண்மனைக்கு வந்து விட்டது. அதை நிருகன் அறியவில்லை. பின் ஒரு நாள் கோதானம் செய்யும் போது மற்ற பசுக்களோடு வந்த பசுவையும் தானம் செய்து விட்டான். முன்பு தானம் வாங்கியவரும், பின்பு தானம் வாங்கியவருமான இரு அந்தணர்களும் பரஸ்பரம் உரிமை கொண்டாடி சண்டையிட்டனர். பின்னர் அரசனிடம் முறையிடச் சென்றனர். அந்தச் சண்டையைத் தீர்த்து வைக்க அந்த அரசன் வராமையால் அவனை 'நீ ஓணானாகக் குழியில் வாழ்வாயாக' என இரு அந்தணர்களும் சபித்துவிட்டார்கள். ஓணானாகப் பல்லாண்டுகள் இருந்து மிகவும் துன்புற்றான்; பிறகு கிருஷ்ணனால் அவனுக்குச் சாப விமோசனம் ஏற்பட்டது.

(iii) **நஹுஷன் பாம்பாக ஆனது:** நஹுஷன் ஆயுஸ் என்னும் அரசனின் மகன்; யயாதியின் தகப்பன். சந்த்ர வம்சத்தைச் சேர்ந்தவன். ஒரு சமயம் இந்திரன் ப்ரம்மஹத்தி தோஷத்தினால் இந்திர பதவியை இழந்து மறைந்து வாழ்ந்தான். நஹுஷன் நூறு யாகங்களைச் செய்திருந்தபடியால் இந்திரனாக நியமிக்கப் பட்டான். அப்பொழுது இந்திராணியும் தன்னை ஏற்கவேண்டும் எனச் சொல்லி அனுப்பினான். அவளோ இணங்கவில்லை. ஸப்தரிஷி களை பல்லக்கைச் சுமக்கச் செய்து இந்திராணியின் அரண்மனைக்குச் சென்றான். இவனுக்கு இருந்த காமத்தின் மிகுதியினால் ஸர்ப்ப ஸர்ப்ப (விரைந்து செல்வீராக) என்று ஸப்த ரிஷிகளுக்கு உத்திர விட்டான். அவர்களுள் ஒருவரான அகஸ்த்ய முனிவர் கோபம் கொண்டு 'ஸர்போ பவ', (பாம்பாகக் கடவாய்) என சபித்தார். உடனே ஸ்வர்க்கத்திலிருந்து கீழே மலைப்பாம்பாக விழுந்தான் நஹுஷன். அந்த நிலையில் நீண்ட காலம் கஷ்டப்பட்டான். ஒரு ஸமயம் தர்மபுத்திரரின் அருளால் அவன் சாபம் நீங்கியது.

(vi) **ஸோமகர் விருத்தாந்தம்:** (பார. ஆரண்ய. 128, 129) (பாண்டவர்களின் தீர்த்தயாத்திரை ஸமயம் தர்மபுத்திரருக்கு லோமசர் கூறியது.) ஒரு காலத்தில் ஸோமகர் என்ற அரசர் இருந்தார். அவருக்கு 100 மனைவிகள் இருந்தனர். பல்லாண்டு கள் ஆகியும் இவர்களுக்கு ஸந்ததி இல்லை. அரசனின் கிழப் பருவத்தில் ஒரு ஜந்து மூத்தவளிடம் பிள்ளையாகப் பிறந்தது. மனைவியர் அனைவரும் அதையேதன் குழந்தையாக நேசித்து வந்தனர். ஜந்துவின் இடுப்பில் ஒரு நாள் எறும்பு கடிக்க, ஜந்து அழ, அதைக் கண்டு எல்லோரும் மிக வருந்தினர். அப்பொழுது ஸோமகன் "ஏக புத்திரனாக இருப்பது துன்பத்தை விளைவிக்கிறது. இதைவிட புத்திரன் இல்லாமல் இருப்பதே மேலானது" என்று கூற, அப்பொழுது அங்கிருந்த அந்தணர் ஒரு யாகம் செய்தால் உமக்கு நூறு பிள்ளைகள் நிச்சயம் பிறப்பார்கள் என்றார். அதற்கு ஜந்துவையே பசுவாகக் கொள்ள வேண்டும் என்றார்; அதோடு ஜந்துவும் மூத்தவளிடம் புத்ரனாகப் பிறப்பான் என்றும் கூறினார். ஸோமகரும் அதற்கு ஸம்மதிக்க அந்தணர் வேள்வியைத் தொடங்கினார் மனைவியர் அனைவரும் தடுத்தும் கூட பிடிவாதமாக அந்தணர் ஜந்துவின் வபையை எடுத்து வேள்வித்தீயில் ஹோமம் செய்தார். ஹோமத்தின் புகைபட்ட மனைவியர் நூறுபேரும் கருவுற்று மக்களைப் பெற்றனர். ஜந்துவும் அந்தணர் கூறிய அடையாளப்படி மீண்டும் மூத்த வளிடத்தில் மூத்தவனாகப் பிறந்தான். எண்ணியபடி மக்கள் பேற்றைப்பெற்ற ஸோமகன் பல்லாண்டு இருந்து வாழ்ந்தான்.

சில நாட்களுக்குப் பிறகு அந்தணர் இறக்க அதைத்தொடர்ந்து ஸோமகனும் காலகதியை அடைந்தான். ஸோமகன் மேலே செல்லும் பொழுது நரகத்தை எட்டிப் பார்க்க, அங்கு அந்த அந்தணர் தீயில் உயிரோடு எரிக்கப்பட்டவராய் அலறினார். அந்தக் குரலைக் கேட்டு அவரை விசாரிக்க, 'ஜந்துவைக் கொன்றதினால் நான் நரகவேதனைக்கு ஆளானேன்' என்றார். உடனே ஸோமகன் யமனிடம் சென்று 'அத்துன்பத்தை நான் ஏற்கிறேன். அந்தணரை விடுவியுங்கள்' என வற்புறுத்த, 'தீமை செய்தவரை விடுவிப்பது இயலாது. எனவே நீரும் அதில் பங்குகொண்டால் குறுகிய காலத்தில் இருவரையும் விடுவிப்பேன்' என்று சொல்ல, ஸோமகரும் நரகவேதனையை அனுபவித்தார். பின்னர் பாபம் தீர்ந்த பிறகு இருவரும் சுவர்க்கம் சென்று இன்புற்றனர்.

## (B – 41) – 482: எருது பரதேசம் போன கணக்கு

தீனியைப் போட்டு வேலை வாங்கும் யஜமானனை வெறுத்து, ஸுகமாக இருக்கவேண்டும் என்று நினைத்து ஒரு எருது வேறு ஒரு இடத்திற்குச் சென்றால், அங்கொருவன் அதைப் பிடித்துக் கட்டி வேலை வாங்குவானேயொழிய, அதன் சொந்தக்காரனைப் போலத் தீனி போடமாட்டான். அதுபோல ஜீவர்கள் ஸ்வர்க்கம் சென்றால் அங்கும் உழைக்க வேண்டியதே.

## (B—42)—484: கருப்பையின் ஜீவன் படும்பாடு

(B—25)—ஐப் பார்க்கவும்.

## (B—43)—486: ராவணன்-ஹிரண்யன்-வ்ருத்ராஸுரன் இவர்களிடம் இந்திரன் பட்டபாடு

(i) ராவணனிடம் பட்ட பாடு [ராமா. (உத்தர—ஸர்க்கம் 28 முதல் 30 வரை)]: ஒரு சமயம் ராவணனைத் தலைவனாகக் கொண்ட ராக்ஷஸர்களுக்கும், இந்திரனைத் தலைவனாகக் கொண்ட தேவர்களுக்கும் யுத்தம் நடந்தது. அப்பொழுது ராவணனின் புத்ரன் மேகநாதன் மாயாயுத்தம் செய்து, இந்திரனை சிறைப் பிடித்து, இலங்கைக்குக் கொண்டுபோய், தன் அரண்மனையில் அடைத்து வைத்தான். இதை அறிந்த தேவர்கள் பிரம்மாவிடம் முறையிட, அவரும் இலங்கைக்குச் சென்று, மேகநாதனுக்கு 'இந்ரஜித்' என்ற பெயரைச் சூட்டி, "நான் விரும்பி ஆஹுதிகளால் அக்நியை பூஜித்தால் அக்நிகுண்டத்திலிருந்து ஒரு திவ்ய ரதம் வெளிப்படவேண்டும். அதில் நான் இருக்கும்வரை எனக்கு மரணம் நேரக்கூடாது" என்ற அவன் விரும்பிய வரத்தை

அளித்து இந்திரனை விடுவிக்கும்படி சொல்ல, இந்திரஜித் இந்திரனை விடுவித்தான்.

(ii) ஹிரண்யனிடம் பட்ட பாடு: வி.பு. (அம் 1 — அத். 17): ஹிரண்யகசிபு கோரமான தவம் செய்து பிரம்மாவை மகிழ்வித்து தனக்குப் பலவகைகளிலும் மரணம் ஏற்படாதபடி வரம் பெற்றான் அதனால் கர்வம் மிகுந்து, இந்திரன் வருணன் முதலிய தேவர்களை வென்று, அவர்களது அதிகாரங்களைத் தன் கைவசப் படுத்திக் கொண்டு, மூன்று உலகங்களையும் இஷ்டப்படி ஆண்டு வந்தான். வேள்விகளில் தேவர்களுக்கு உரிய ஹவிர் பாகங்களை யும் தானே கைக் கொண்டான். அப்போது இந்திரன் முதலிய தேவர்கள் அவனுக்கு பயந்து ஸ்வர்க்கலோகத்தை விட்டு,மானிட வேடம் பூண்டு பூவுலகில் ஸஞ்சரித்தனர்.

(iii) விருத்ராஸுரனிடம் பட்ட பாடு [பாகவதம் (ஸ்கந்தம். 9—அத் 7முதல் 13 வரை)] : ஒரு சமயம் இந்திரன் தன் ஸபை யில் வீற்றிருக்கும் போது தேவகுருவான ப்ரஹஸ்பதி அங்கு வர, இந்திரன் கர்வத்தால் அவரை கௌரவிக்காமல் தன் ஆஸநத் தில் வீற்றிருக்க, ப்ரஹஸ்பதி பேசாமல் ஸபையை விட்டு வெளி யேறினார். தன் தவறை உணர்ந்த இந்திரன் மன்னிப்புக் கோர ப்ரஹஸ்பதியின் வீட்டிற்குச் சென்றான். தன் மாயசக்தியால் ப்ரஹஸ்பதி மறைந்துவிட, இதை அறிந்த அஸுரர்கள் சுக்ராச் சாரியாரின் துணைகொண்டு தேவர்களோடு போர்புரிந்து அவர் களைத் தோற்கடித்தனர். இந்திரன் பிரம்மாவைச் சரணடைய, அவரும் த்வஷ்டாவின் புத்ரனாகிய விச்வரூபன் என்னும் ப்ராம் மணனை புரோஹிதராக வரித்துக் கொள்ளும்படி சொல்ல இந்திரனும் அவ்வாறே செய்ய, விச்வரூபனும் புரோஹிதராக இருக்க இசைந்து நாராயண கவசம் என்னும் மந்திரத்தையும் உபதேசித்தார். யக்ஞத்தில் ஹவிர்பாகத்தை தேவர்களுக்கு வெளிப்படையாகவும், அஸுரர்களுக்கு மறைமுகமாகவும் விச்வ ரூபன் கொடுப்பதை அறிந்த இந்திரன் அவருடைய மூன்று தலை களையும் வெட்டினான். இதனால் ஏற்பட்ட ப்ரம்மஹத்யா தோஷத்தை ஸ்த்ரீ, பூமி, தண்ணீர், மரங்கள் இவற்றுக்குப் பிரித்துக் கொடுத்தான் இந்திரன். தன் புத்ரனை இந்திரன் கொன்றதை அறிந்த த்வஷ்டா இந்திரனைக் கொல்லும் சத்ரு உண்டாவதற்கு ஹோமம் செய்தார். உடனே யக்ஞகுண்டத்தி லிருந்து மிக பயங்கரமான வ்ருத்ராஸுரன் தோன்றி தேவர்களை எதிர்த்து, அவர்கள் எய்த அஸ்திரங்களையெல்லாம் விழுங்கினான். இந்திராதி தேவர்கள் ஸ்ரீமந் நாராயணனைச் சரணமடைய, அவரும் "நாராயண கவசத்தை ததீசி முனிவர் த்வஷ்டாவிற்கு

உபதேசித்தார்; த்வஷ்டா விச்வரூபனுக்கும், விச்வரூபன் உனக்கும் உபதேசித்தார். அந்த ததீசி முனிவரின் முதுகு எலும்பை அவரிடமிருந்து பெற்று விச்வகர்மா என்னும் தேவத்தச்சன் மூலம் வஜ்ராயுதம் என்னும் ஆயுதத்தைச் செய். என் சக்தியால் உதவப்பட்டு அந்த ஆயுதத்தால் விருத்ராஸுரனின் தலையை அறுத்துக் கொள்வாயாக'' என்று இந்திரனிடம் திருவாய் மலர்ந்து அருளினார். தேவர்கள் ததீசி முனிவரைத் துதித்து வேண்ட, அம்முனிவரும் யோகத்தால் தன் உயிரை எம்பெருமானிடம் சேர்த்துத் தன் ஸ்தூல சரீரத்தைவிட்டார். பிறகு இந்திரன் அம்முனிவரின் முதுகெலும்பைக் கொண்டு வஜ்ராயுதத்தைச் செய்து, அதை எடுத்துக் கொண்டு விருத்ராஸுரனுடன் போர் செய்யப் புறப்பட்டான். தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் கடும் போர் நடந்தது. இந்திரன் தன் வாஹனமாகிய ஐராவதத்தின் மீது ஏறிக்கொண்டு போரிட்டான். கதையால் யானையின் தலையை வ்ருத்ரன் அடிக்க யானை ஓடிவிட்டது. மிகவும் வெறுத்து வருந்தியிருந்த இந்திரனைப் பார்த்து வ்ருத்ராஸுரன், ''இந்தப் போரில் நீயாவது நானாவது இறக்க வேண்டும். நான் ஸ்ரீமந் நாராயணனை அடைய விரும்புகிறேன். எனவே பகவான் கூறியபடி வஜ்ராயுதத்தால் என்னைக் கொல்வாயாக'' என்று கூறி, இந்திரன் மீது தன் சூலாயுதத்தை எறிந்தான். இந்திரன் வஜ்ராயுதத்தால் வ்ருத்ரனின் வலது கையை வெட்டினான். கோபங் கொண்ட வ்ருத்ரன் தன் இடது கையால் இந்திரனின் கன்னத்தில் அரைந்தான்; ஐராவதத்தையும் அடித்தான். வஜ்ராயுதம் இந்திரனின் கையிலிருந்து கீழே விழுந்தது. வெட்கமடைந்த இந்திரனைப் பார்த்து ''ஓ இந்திரனே ! வஜ்ராயுதத்தை எடுத்துக் கொண்டு உன் விரோதியைக் கொல்வாயாக. இது வருந்தும் ஸமயமல்ல'' என்றான் வ்ருத்ரன். பரிகாயுதத்தை இந்திரன் மீது வீச, இந்திரன் வஜ்ராயுதத்தால் வ்ருத்ரனின் இடது கையையும் துண்டித்தான். பிறகு வ்ருத்ரன் இந்திரனை ஐராவதத்துடன் கூட விழுங்கினான். நாராயண கவசத்தால் காக்கப்பட்ட இந்திரனின் உயிர் போகவில்லை. இந்திரன் தன் வஜ்ராயுதத்தால் வ்ருத்ரனின் வயிற்றைப் பிளந்து வெளியில் வந்து, வ்ருத்ரனின் தலையைத் துண்டித்தான். எல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கும் போது வ்ருத்ரனின் ஆத்மா ஸ்ரீமந் நாராயணனைச் சென்று அடைந்தது.

வ்ருத்ரனைக் கொன்றதால் ப்ரம்மஹத்யா தோஷம் இந்திரனைப் பீடித்தது. மிகுந்த துக்கத்துடன் வடகிழக்கு திசையை அடைந்து மானஸ ஸரஸில் புகுந்து இந்திரன் 1000 வருடங்கள்

தாமரைத் தண்டின் நூலுக்குள் மறைந்து வசித்தான். ஜலத்துக்குள் இருந்ததால் அக்நியில் செய்யப்பட்ட ஹவிர்பாகத்தையும் பெற முடியாமல் வருந்தினன். ப்ரம்மாவின் தூண்டுதலால் இந்திரன் மறுபடியும் ஸ்வர்க்கத்திற்கு வந்து அச்வமேதயாகத்தைச் செய்து ஸ்ரீமந் நாராயணனை ஆராதிக்க, அவனுடைய ப்ரம்ம ஹத்யா தோஷம் நீங்கியது.

## (B—44)—486: ராவணன் கார்த்தவீர்யனிடம் பட்டபாடு

[ராமா. (உத்தர காண்டம்—ஸர்க்கம் 77, 78)]: மாஹிஷ்மதிக்கு அரசனான கார்த்தவீர்யார்ஜுனன் தவத்தால் ஆயிரம் கைகளையும் அளவற்ற பலத்தையும் பெற்றான். ஒருநாள் தன் ஆயிரம் கைகளால் நதியின் ஜலத்தைத் தேக்கி, தன் மனைவிகளுடன் ஜலக்ரீடை செய்து கொண்டிருந்தான். அப்பொழுது அந்த இடத்திற்கு மேற்கே ராவணன் ஆற்று மணலில் பூஜை செய்து கொண்டிருக்க, தேக்கப்பட்ட ஜலம் அந்தப் பூஜையை வெள்ளமிட்டது. ராவணன் கோபங் கொண்டு கார்த்தவீர்யார்ஜுனனோடு சண்டைக்கு வர, அவன் ராவணனை நாண் கயிற்றால் கட்டித் தன் நகரத்துக்குக் கொண்டுசென்றான். பிறகு புலஸ்தியரின் வேண்டுகோளுக்கு இணங்கி ராவணனை விடுவித்தான். வாலியால் ராவணன் கட்டுண்டதும் இங்கே நினைக்கத்தக்கது.

## (B—45)—486 : திரிபுரம் எரித்த கதை

பூமி, ஆகாசம், அந்தரிக்ஷம் என்ற மூன்று இடங்களிலும் பொன், வெள்ளி, இரும்பு என்ற உலோகங்களால் அசுரர்களுக்காக மயனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட நகருக்கு திரிபுரம் என்று பெயர். அந்த அசுரர்களின் ஹிம்சையைப் பொறுக்காத தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி அந்தப் பட்டணங்களையும் அந்த அசுரர்களையும் சிவன் எரித்தார்.

## (B—46)—486 : வ்யஷ்டி ஸம்ஹார அதிகாரி

(B—29)ஐப் பார்க்கவும்.

## (B—47)—486 : வ்ருகன் அந்தகன் இவர்களின் வ்ருத்தாந்தங்கள்

(i) வருகன் (பஸ்மாசுரன்) : இவன் தனது கொடிய தவத்தினால் பரமசிவனை மகிழ்வித்து 'நான் எவன் தலையில் கை வைக்

கிறேனே அவன் இறக்கவேண்டும்' என வரம் பெற்ருன். அதை பரீக்ஷை செய்ய சிவன் தலையிலேயே கையை வைக்கும் பொருட்டு அவரைத் தொடர்ந்தான். அதனால் பயந்து சிவன் ஓட, அச்சமயம் விஷ்ணு ஓர் அழகிய சிறுவனாய் அவன் முன் தோன்றி இனிய வார்த்தைகளால் அவன் ஓடும் காரணத்தை விசாரித்தார். அவன் நடந்ததைச் சொல்ல, 'தக்ஷனுடைய சாபத்தால் பிசாசத் தன்மையை அடைந்த சிவனுக்கு இவ்வளவு சக்தி ஏது ? நான் நம்பவில்லை. உன தலையிலேயே சற்று கைவைத்துப்பார்' என்று அச்சிறுவன் சொன்னான். மந்த புத்தியான அவன் அவ்விதமே செய்ய, உடனே இறந்தான். (இது சிவனுக்குத் தான் கொடுத்த சக்தியை பரீக்ஷிக்க பரமன் செய்தது.) பாகவதம் (ஸ்கந்தம் 10—அத். 88)

(ii) அந்தகாசுரன் : ஒரு சமயம் பரமசிவனுக்கும் அந்தகனுக்கும் போர் நேரிட, சிவனுடைய ஆயுதங்களினால் அடியுண்ட அந்தகனுடைய உடலிலிருந்து பெருகின ரத்தத்தின் திவலைகள் ஒவ்வொன்றும் அவன் அடைந்த வர பலத்தால் ஒரொரு அந்தகனைக் கிளம்பி அவர்கள் பரமசிவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அப்போது சிவன் க்ருஷ்ணனைச் சரணமடைய, அந்த பகவானை வீஷ்ணு சுஷ்கரேவதியை (அட்டை எனும் ஜந்துவை) ஸ்ருஷ்டித்தார். அவை அந்த அஸுரனின் ரத்தங்களை எல்லாம் பருகி விட்டன. இது மத்ஸ்ய புராணத்திலுள்ளது. இக்கதையை ஆளவந்தாருடைய ஸ்தோத்திரத்தின் 13வது ச்லோக வ்யாக்யானத்தில் ஸ்வாமி தேசிகன் எடுத்து உதாஹரித்து இருக்கிறார்.)

## (B—48)—490: மூவேழுநரகங்களும் ஈரேழுஉலகங்களும்

வி.பு. (அம்சம் 2, அத். 6): பூமியின் கீழே அதலம், விதலம், ஸுதலம், தலாதலம், மஹாதலம், ரஸாதலம், பாதாளம் என்ற ஏழு உலகங்கள இருக்கின்றன. இவைகளின கீழே பாபிகள் வதைக்கப்படும் பல நரகங்கள் உள்ளன. அவைகளில் முக்கியமான 21 நரகங்களாவன: 1—ரௌரவம், 2—ஸுகரம், 3—ரோதம், 4—தாலம், 5—விசஸநம், 6—மஹாஜ்வாலம், 7—தப்தகும்பம், 8—லவணம், 9 — விலோகிதம், 10—ருதிராம்பம், 11—வைதரணி, 12—கிருமிசம், 13—கிருமிபோஜநம், 14—அஸிபத்ரவநம், 15—கிருஷ்ணம், 16—லாலாபக்ஷம், 17—பூயவஹம், 18—அக்நிஜ்வாலம், 19—அதச்சிரம், 20—ஸம்தம்ஸம், 21—காலஸுத்ரம் முதலியவை. இன்னும் பல கொடிய நரகங்களும் எமனுடைய அதிகாரத்தில் உள்ளன. இந்த நரகங்களுக்குக் கீழே தமஸ்ஸும், அதற்குக் கீழேஅண்ட

கடாஹமும் (= அண்ட கோளத்தின் ஓடு) உள்ளன. பூமிக்கு மேலே புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம் ஜனோ லோகம், தபோலோகம், ஸத்யலோகம் ஆகிய உலகங்கள் உள்ளன. அதற்கும் மேலே தமஸ்ஸு, கர்த்தோதகம், அண்ட கடாஹம் ஆகியவை உள்ளன.

இந்த அண்டம் 7 ஆவரணங்களால் சூழப்பட்டுள்ளது [(B-57a) ஐப் பார்க்கவும்]. இவ்விதமான அண்டங்கள் கணக்கில்லாமல் இருக்கின்றன. ஜலத்தில் குமிழிகள் போலே ஒரே காலத்தில் அவை ஈசுவரனாலே உண்டு பண்ணப்படுகின்றன.

## (B—49)—496: உயர ஏறித் தகரவிழவிடுவார்-விளக்கம்

பாரதம் ஆதிபர்வம் 82ம் அத்தியாத்தில் இந்திரனைப் பற்றிய வ்ருத்தாந்தம் இது. சந்திரவம்சத்து அரசனான யயாதி என்பவன் தவம் செய்து ஸ்வர்க்கம் சென்று அங்கு இந்திரனைப் போலவே எல்லா ஸுகங்களையும் அநுபவிக்கத் தொடங்கினான். இதைக் கண்டு இந்திரன் "தவத்தால் உனக்கு ஸமமானவர் இருக்கிறாரா?" என்று கேட்க, யயாதியும் "உலகில் எவரும் என்னைப் போல தவம் புரிந்ததில்லை" என்று தான் செய்த தவத்தைப் புகழ்ந்து கூறினான். தான் செய்த தவத்தைக் கண்டு ஆச்சர்யப் பட்டால் தவம் குறைந்துவிடும் என்பதைச் சொல்லி இந்திரன் யயாதியைக் கீழே தள்ளி விட்டான்.

## (B—50)—496: ஸ்வ-விஷய-வ்ருத்திகளை......கதாகதம் பண்ணி வைப்பார் — விளக்கம்

(=தன் தேசத்தில் இருப்பவர்களை மனுஷ்ய மாம்ஸத்தைத் தின்னும் பொருட்டு பூலோகத்திற்குப் போய் வரும்படி செய்பவர்). ராமாயணம் உத்தரகாண்டம் 77, 78 ஸர்க்கங்களில் ப்ரஹ்மாவைப் பற்றிய வ்ருத்தாந்தம் இது. விதர்ப்ப தேசாதிபதியான ச்வேதன் என்பவன் ஆகாராதிகளைத் தள்ளி, கடுந்தவம புரிந்து, ப்ரஹ்மலோகம் சென்றான். அங்கு அவனுக்குக் கடும்பசியும் தாகமும் உண்டாயிற்று. இதன் காரணத்தை ப்ரஹ்மாவிடம் கேட்க," அதிதி பூஜை செய்யாமலும் சரீர சுகமொன்றையே கருதியும் நீ தவம்புரிந்ததால், பசிதாகம் இல்லாத என் உலகிலும் உனக்குப் பசி உண்டாகியிருக்கிறது. அது நீங்குவதற்கு நீ தவம் புரிந்த குளத்தில் தினமும் காலையில் புஷ்டியான உன் பிணம் மிதக்கும். அதை நீ தினமும் தின்று வருவாயாக" என்று ப்ரஹ்மா சொன்னார். பிறகு அவனுக்கு அகஸ்த்யரால் விமோசநம் ஏற்பட்டது.

## (B—51)—496: ப்ருத்யவர்க்கமானுரை அவிநீதராக்கிக் கொண்டு ஆள்வாரான தேவதாந்தரங்களினுடைய ப்ராப்தியில் தோஷங்கள்

(= வேலேக்காரன் போல் தனக்கு பூஜை முதலான வேலைகளைச் செய்துகொண்டிருக்க வேண்டியவர்களே, தான் கொடுத்த வரத் தாலேகர்வம் அடையும்படி செய்து, அவனுக்குத் துன்பம் விளைவிப் பார். இது ருத்ரனைப்பற்றிய உபாக்யானம் [பாகவதம் (ஸ்கந்தம்—10, அத்யாயம்—63) ] பலிச் சக்ரவர்த்தியின் புத்திரனுன பாணு ஸுரன் பரமசிவனிடத்தில் மிகுந்த பக்தியோடு இருந்தான். சிவனைக் குறித்துக் கடுந்தவம் செய்து, அவரிடமிருந்து 1000 கை களையும் அதிக பலத்தையும் பெற்று, சிவனையே தன் பட்டணக் காவலாளியாகவும் இருக்கச் செய்தான். பிறகு ஒரு சமயம் சிவனை அணுகி, "நீர் கொடுத்த 1000 கைகளும் சுமையாகவே இருக்கின்றன. இம்மூவுலகிலும் உம்மைத்தவிர என்னுடன் ஸம மாகப் போர்புரிபவரே இல்லை" என்முன். சிவனும் கோப மடைந்து தனக்கு ஸமமானவனுல் பாணனின் கர்வம் அடக்கப் படும் என்று கூறினுர். பிறகு ஒரு நாள் பாணுஸுரனின் பெண் உஷை கிருஷ்ணனின் பேரனுன அநிருத்தனை கனவில் கண்டு அவனை மணக்க விரும்பினுள். அவளது தோழி சித்ரலேகை தன் யோக மஹிமையால் அநிருத்தனை உஷையின் இருப்பிடத்திற்குக் கொண்டுவர, இருவரும் சுகமாக வாழ்ந்து வந்தனர். இதைக் கண்ட பாணுஸுரன் அநிருத்தனைக் கொல்ல முற்பட்டான். இவ் விஷயங்களை நாரதர் மூலம் அறிந்த கிருஷ்ணன் யாதவப் படை யுடன் வந்து பாணுஸுரனுடன் போர் தொடுத்தார். பாணு ஸுரனுக்குத் துணைபுரிய சிவனும் ஸ்கந்தனும் வந்தார்கள். கடும் போரில் நிற்கமாட்டாது ஸ்கந்தன் போர்க்களத்தை விட்டு ஓடி விட்டார். சிவனை ஜ்ரும்பணுஸ்த்ரத்தால் மோஹமடையச் செய்தார் கிருஷ்ணன். தன்னை எதிர்த்து வந்த பாணுஸுரனின் கைகளை சக்ராயுதத்தால் கிருஷ்ணன் வெட்டினுர். சிவனும் தன் பக்தனுன பாணுஸுரனைக் காக்க விரும்பி கிருஷ்ணனைத் துதித்து பாணுஸுரனைக் கொல்லாமல் ரக்ஷிக்கும்படி வேண்டினுர். பிரஹ்லாத வம்சத்தவனுன பாணுஸுரனின் 996 கைகளை அறுத்ததோடு அவனைக் கொல்லாமல் விட்டுவிட்டார். உஷையையும், அநிருத்தனையும் அழைத்துக் கொண்டு கிருஷ்ணன் துவாரகை திரும்பினுர்.

## (B—52)—496: தாபத்ரயாத்யாயம்

விஷ்ணுபுராணத்தில் 6-வது அம்சத்தில் 5-வது அத்யாயம் ஒரு ஜீவனுக்கு வரும் ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதி

விகம் என்கிற மூன்றுவிதமான தாபங்களை விரிவாய் விளக்கு கிறது; எனவே அது தாபத்ரயாத்யாயம் என வழங்கப்படுகிறது. இதன் சுருக்கம் வருமாறு:

ஆத்யாத்மிகதாபமாவது சரீரத்தையொட்டி வரும் தலைவலி, ஜ்வரம், குஷ்டம் முதலிய பல்வகை நோய்களால் ஏற்படும் துக்கமும், மனதையொட்டிவரும் காமம்-குரோதம் - பயம் - துவேஷம் - லோபம் - மோஹம் - சோகம் - பொறாமை - பகை பாராட்டுதல் - அவமானம் முதலியவற்றால் ஏற்படும் துக்கமும் ஆகும். ஆதிபௌதிகதாபமாவது மனிதன், பசு, பக்ஷி முதலிய மற்ற ஜீவர்களால் ஒருவனுக்கு நேரும் துக்கமாகும். ஆதிதைவிக தாபமாவது தைவத்தினால் உண்டாவது. இது வெயில், மழை, இடி, குளிர், காற்று, வெள்ளம் முதலியவற்றால் ஏற்படும் கஷ்டங் கள். இம்மூன்று வித தாபங்களும் கர்ப்பவாஸம், பிறப்பு, மூப்பு என்ற நிலைகளிலும் நரகத்திலும் உண்டாக்கப்பட்டு பல்லாயிரம் வகைகளாகின்றன.

(1) கருவிலும் பிறப்பிலும் ஏற்படும் தாபங்கள்; ஜந்துவானது மிகவும் மென்மையான உடலையுடையதாய், அநேக மலங்கள் நிறைந்த கர்பபத்திலே ஒரு வகைத் தோலால் மூடப்பட்டு மிக வளைந்த முதுகு-கழுத்து எலும்புகளை உடையதாயிருக்கின்றது. தாய் உண்ணும் புளிப்பு, கசப்பு, உப்பு, காரம் முதலியவை தன் மீது படும்போது மிக்க வேதனை அடைகிறது. தன்னுடம்பை நீட்டவும் மடக்கவும் மாட்டாமல் மலமூத்ராதிகளாகிய சேற் றிலே கிடந்து துன்புறுகிறது. அறிவு மாத்திரமே உள்ளதாய் கடந்த காலப் பிறவிகளை நினைத்து மிக வருந்துகிறது. இப்படி தன் கருமத்தால் தானே கட்டுண்டு கிடக்கிறது.

பிறகு பிறக்கும் போது பிரம்மதேவனால் ஏவப்பட்ட ஒரு வகைக் காற்றினால் எலும்புகள் யாவும் நொறுங்கிப் போகும்படி பீடிக்கப்பட்டு, மலமூத்ரங்களாலும், சுக்ல ச்ரோணிதங்களாலும் பூசப்பட்ட முகத்துடன் மிகவும் பலமான பிரசவ வாயுக்களால் தலைகீழாகத் திருப்பப்பட்டு தாய் வயிற்றிலிருந்து மிகவும் சிரமத் துடன் வெளியே வருகிறது. வெளியே விழும்போது முட் களால் குத்தப்பட்டதைப் போன்றும் வாளால் அறுக்கப்பட்டது போன்றும் துர்கந்தமான இரணத்திற்கு ஒப்பான யோனித் துவாரத்திலிருந்து புழுவைப் போல தரையில் விழுகிறது.

42

வெளிப்புறக்காற்று பட்டவுடன் பெருமூர்ச்சையுற்று முன்பிருந்த ஞானத்தை இழக்கிறது.

(ii) பிறந்தபின் மரணம் வரை ஏற்படும் தாபங்கள்! சொறிந்துகொள்ளவும் திரும்புவதற்கும் சக்தியற்றதாய், ஸ்நானம்-பானம்-ஆகாரம் முதலியவற்றைப் பிறரது விருப்பத்திற்கு ஏற்பவே பெறுகின்றது. மூத்ராதிகளால் அசுத்தமான படுக்கையில் படுத்துக் கிடந்து, எறும்பு கொசு முதலியவை கடித்தாலும் அவற்றைத் தடுக்கமுடியாமல் தவிக்கிறது. பிறகு வளர்ந்து பருவம் அடையும்போது, அஞ்ஞானமாகிய இருளால் மூடப்பட்டு, மூடனாகவே "நான்யார்? எங்கிருந்து வந்தேன்? இனி எங்கே போவேன்? எதற்குக் கட்டுப்பட்டவன்? எது தர்மம்? எது அதர்மம்? இனி செய்ய வேண்டியது எது? எது குற்றம்? எது குணமுடையது?" என்று ஒன்றையும் அறிய மாட்டாதவனாக இருக்கிறான். மிருகங்களைப் போல உண்பதையும்- புணர்வதையுமே முக்கியமாகக் கொண்டு, அஞ்ஞானத்தால் உண்டான பல துக்கங்களை அநுபவிக்கிறான். அஞ்ஞானத்தின் மாறுதலான தமோ குணத்தால் கெட்ட காரியங்களைச் செய்து, வைதிக கர்மங்களைச் செய்யாது இம்மையிலும் மறுமையிலும் துன்பத்தை அதிகரித்துக் கொள்கிறான்.

பிறகு முதுமைப் பருவத்தில் உடல் மெலிந்து, கட்டுத் தளர்ந்து, பற்கள் உதிர்ந்து, திரையும் நரையும் அதிகமாகி, கண் பார்வை மங்கி, கருவிழிகள் உள்ளே ஆழ்ந்து, உடல் நடுங்கி, எலும்புகளெல்லாம் வெளிப்பட்டுத்தெரிய, முதுகெலும்பு வளைய, ஜீரணசக்தி மந்தமாவதால் உணவு நன்றாகச் செல்லாமலும் ஜெரிக்காமலும் செயல்கள் குறுக, நடப்பதும் எழுவதும் படுப்பதும்கூட கஷ்டமாகி காது கேளாமல போக, வாயினின்று சாளைவாய்நீர் வடியத் தவிக்கிறான். இப்படி இந்த்ரியங்கள் அஸ்வாதீனப்பட்டு மரணம் கிட்டும்போது முன்பு தான் அநுபவித்ததை நினைத்து உருகுகிறான. சுவாசகாசம் உண்டாவதால் மிகுந்த களைப்பும், தூக்கமின்மையும் ஏற்படுகிறது. எழுந்திருக்கவும் நடக்கவும் உட்காரவும் பிறருடைய உதவி அவசியப் படுவதாலேயே மனைவி, பிள்ளைகள் முதலியோரும் அவமதிக்க, ஒரு சக்தியுமின்றி உண்ணவும் உலாவவும் ஆசையுள்ளவனாய், ஊழியரும் பரிஹஸிக்க பந்துக்களும் வெறுப்படைய தன்னுடைய இளமைப பருவ அநுபவத்தை நினைத்து மனம் வெதும்பி பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிறான். இப்படிப் பல துக்கங்களை அநுபவித்து மரணத்தை அடைகிறான்.

(iii) மரணத்தின் போது நேரும் துன்பங்கள்: கை கால்கள் கழுத்து இவை கட்டுவிடப்பெற்று பெருநடுக்க முற்றவனாய், சிறிது நேரம் அறிவும் சிறிதுநேரம் அறிவழிவும் உள்ளவனாய், மனைவி-மக்கள்-வீடு-மற்ற சொத்துக்கள் இனி எப்படிப் போகுமோ என்று கலங்கியவனாய், கொடிய வியாதியாகிற யமபாணங்களால் உயிர்பெயர, கண்கள் சுழல, கை கால்கள் உதறிக்கொண்டு, நாக்கும் உதடும் உலர, உதான வாயு எழும்பித் துன்புறுத்த, கண்டம் அடைத்து குருகுருவென்று சப்திக்க, பெருந்தாபம்-பெரும்பசி-பெருந்தாகம் இவை ஏற்பட்ட நிலையில் யமகிங்கரர்களால் பீடிக்கப்பட்டு வெகு பிரயாசைப் பட்டுத் தன் உடலை விட்டுக் கிளம்பி யாதனா தேஹத்தை அடைகிறான்.

(iv) இறந்த பின்னர் நரகில் படும் அவஸதை: யமகிங்கரர்கள் பாசத்தால கட்டுவர்; தடியால் அடிப்பர்; வாளால் அறுப்பர்; புலிவாயில் இடுவர்......பாபத்தின் பயனாய் மனிதர்கள் நரகத்தில் படும் துன்பங்களை இவ்வளவுதான் என்று சொல்லிவிட முடியாது.

புண்ணியம் செய்தவர்கள் சுவர்க்கம் சென்று அங்கு ஸுகாநுபவம் செய்தாலும், "புண்ணியம் க்ஷயித்து இனி நாம் விழப் போகிறோம்" எனற நினைப்பினால் பயம் உண்டாகும் போது, மனதில் பெருந்துக்கம் உண்டாகும்

இவ்வாறு நரகத்துன்பங்களை அநுபவித்து, மீண்டும் கர்பத்தில் பிரவேசித்து மீண்டும் பிறக்கிறான். பிறந்த உடனேயோ குழந்தப் பருவததிலோ, வாலிபப் பருவத்திலோ, நடுவயதிலோ, முதுமையிலோ நிச்சயமாக இறக்கிறான். பிழைத்திருக்கும்போது பொருள் சம்பாதிப்பதிலும், அதைக் காப்பதிலும், அதன் அழிவிலும், இஷ்டமானவர்களுக்குத் துன்பம் நேரும்போதும் இவனுக்குப் பல துன்பங்கள் ஏற்படுகின்றன.

எந்தெந்தப் பொருள் மனிதனுக்கு இன்பமாக இருக்கிறதோ அதுவே துன்பம் என்னும் மரத்திற்கு வித்தாகிறது. மனைவி, மக்கள், நண்பர், பொருள், வீடு, நிலம் முதலியவற்றால் எத்தனை துக்கம் உண்டாகிறதோ அந்த அளவுக்கு அவற்றால் சுகம் உண்டா

கிறதில்லை. இவ்வாறு ஸம்ஸாரத்தின் துக்கமாகிய வெயிலால் தகிக்கப்பட்டு அலையும் ஜீவர்களுக்கு பகவத்ப்ராப்தியே அழியாததும் துக்க ஸம்பந்தமற்றதுமான ஸுகத்தைத் தரவல்லது.

## (B—53)—498 : இட்டபடை கற்படை

கருங்கல்லால் அஸ்திவாரம் போட்டு விட்டால், பிறகு காலம் கழித்து கட்டடம் கட்டுவதானாலும், முன்விட்ட இடத்திலிருந்து கட்ட ஆரம்பிக்கலாம்; செய்தவரையில் வீண் இல்லை. அதுபோல செய்யப்பட்ட அம்சத்திற்கு லோபம் இல்லாமல் வெகுகாலம் கழித்து மறுபடியும் செய்யத் தொடங்கினாலும், முன் செய்ததற்கு மேலே தொடர்ந்து ஆரம்பிக்கக்கூடியது நிவ்ருத்தி தர்மம்.

## (B—54)—508 : அதிகாரிக்ருத்யம் — அதிகாரி விசேஷணம்—விளக்கம்

ஒரு பயனை விரும்பி அதைப் பெறுவதற்கு ஏற்ற ஸாதனத்தை அநுஷ்டிப்பவன் அதிகாரி. அவன் அநுஷ்டிப்பதே அதிகாரிக்ருத்யம் எனப்படும். உதாஹரணம்—ஸ்வர்க்கத்தை விரும்பி யாகத்தைச் செய்பவன் அதிகாரி. அவனுடைய யாகாநுஷ்டானமே அதிகாரிக்ருத்யம்.

யாகத்தைப் போல் ஒரு அதிகாரியானவன் செய்து ஸம்பாதிக்க வேண்டியிராமல் அவனிடம் ஏற்கனவே ஸித்தமாய் விசேஷணமாக இருப்பது அதிகாரி விசேஷணம் எனப்படும். உதாஹரணம் — யாகத்தைச் செய்யும் ப்ராஹ்மணனிடம் இருக்கும் ப்ராஹ்மண்யம் என்னும் தன்மை; இத்தன்மை பிறவி முதலே இவனிடம் உள்ளபடியால் இதை இவன் புதிதாகச் செய்து கொள்ள வேண்டியதில்லை.

## (B—55)—532: मधुविद्या-न्यायம்

முப்பத்திரண்டு உபாஸநங்களில் மதுவித்யை ஒன்று. இந்த வித்யையை அநுஷ்டிப்பவர் அந்த உபாஸநத்தின் மகிமையினால் அஷ்டவஸுக்களில் ஒருவனாக இருந்து அவர்கள் போகத்தையெல்லாம் அநுபவித்து பிறகு அங்கேயிருந்து மோக்ஷத்தைப் பெறுவர். (கருத்து—மதுவித்யைக்குச் சொல்லியது எப்படி

அந்த வித்யையை அநுஷ்டிப்பவனை மாத்திரம் பற்றியதோ, அதைப் போல ப்ரஹ்மகாய - நிஷேவணுதிகளும் ஒரு வித்யா நிஷ்டனைப் பற்றியது.)

ப்ரஹ்மகாய நிஷேவணம்—ப்ரஹ்மலோகம் சென்று ப்ரஹ்மாவின் சரீரத்தில் புகுந்து, அவர் அநுபவிக்கும் ஸுகங்களையெல்லாம் அவரோடொக்க அநுபவித்தல். இதன் பிறகு மோக்ஷமடைய விரும்புவோருக்கு இந்த மார்க்கம்.

## (B—56)—532 . शिशुपाल-आयोध्यकादि-मुक्तिक्रमम्

சிசுபாலனுக்கு அங்கே ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருவடிகளில் லயித்து முக்தி உண்டாயிற்று. அயோத்யா வாஸிகள் ஸாந்தானிக லோகமடைந்து அங்கிருந்து மோக்ஷம் போனூர்கள். இவ்வாறு சிசுபாலனும் அயோத்யா வாஸிகளும் முக்தி பெற்றது விசேஷவிஷயமே தவிர பொதுவானது அல்ல.

## (B—57a)—532 : ஆவரண—சப்தகங்கள்

ஆவரணம்—ஒன்றைச் சுற்றியிருப்பது. அண்டத்தைச் சுற்றியுள்ள ஏழு ஆவரணங்களாவன: அண்டத்தைச் சுற்றி அதைப் போல பதின்மடங்கு பெரிதான ஜலாவரணமும், அதைச் சுற்றி ஆகாசாவரணமும், அதைச் சுற்றி அஹங்காராவரணமும், அதைச் சுற்றி பதின்மடங்கு பெரிதான மஹதாவரணமும், அதைச் சுற்றி ப்ரதான (ப்ரக்ருதி) ஆவரணமும் உள்ளன.

## (B—57b)—534 : வைதிகன் புத்ரர்களை பரமபதத்திலிருந்து க்ருஷ்ணன் மீட்ட வரலாறு:

பாகவதம் (ஸ்கந்தம்: 10-அத். 89) — வைகுண்ட நாதனை பகவான், பூமியில் அவதரித்து இருக்கும் நரநாராயணர்களான அர்ஜுனன் கிருஷ்ணன் இருவரையும் தன் நாட்டிற்கு வரவழைத்துப் பார்க்க விரும்பி ஒரு உபாயம் செய்தார். த்வாரகையிலுள்ள ஒரு பிராம்மணனின் குழந்தைகளை எல்லாம் அவை பிறந்தவுடனேயே தன் லோகத்திற்கு எடுத்துக் கொண்டு வரும்படி செய்துவிட்டார். அந்த பிராம்மணன் கிருஷ்ணனிடம் முறையிட பக்கத்திலிருந்த அர்ஜுனன் தான் இனிப் பிறக்கும் குழந்தையை ரக்ஷித்துத் தருவதாகவும் தவறினுல் அக்னியில் விழுந்து இறப்பதாகவும் பிரதிக்ஞை செய்தான். ஆனுல் பத்தாவது குழந்தை பிறந்ததும் மறைந்துவிட்டது. ஸகல லோகங்களிலும் தேடியும் அதைக் காணுதவாறே அர்ஜுனன் உயிரைவிட

